# சதகத் திரட்டு

## தொகுதி - 1

பதிப்பாசிரியர்

முனைவர் த. இராசேசுவரி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
தரமணி, சென்னை - 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Catakattiraṭṭu Part - 1 |
| Editor | : | Dr. T. Rajeswari |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| Publication No | : | 407 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2001 |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xlii + 334 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 80/- (Rupees Eighty Only) |
| Printed by | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Mylapore, Chennai - 14.<br>PH: 4984693, 4661807. |
| Subject | : | Bhakthi Literature |

தமிழ் வளர்ச்சி இயக்ககம் வழங்கும் அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற்று இந்நூல் வெளிவருகிறது.

# உள்ளே

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று சதகம். இவ்விலக்கிய வகை வடமொழித் தொடர்பால் தமிழில் தோன்றியது. பாட்டியல் நூல்கள் சதகம் நூறு செய்யுள்களால் அமையும் என்று பகர்கின்றன. இலக்கண விளக்கம் நூறு செய்யுள்களால் அமையும் என்றும் முத்து வீரியம், அகப்பொருள், புறப்பொருள் இவற்றில் ஏதாவதொன்று பாடுபொருளாக அமையும் என்றும் பிரபந்த மரபியல், வெண்பா,, கலித்துறை ஆகிய யாப்பு வகைகள் பயின்று வரும் என்றும் கூறுகின்றன. எனினும் காலப்போக்கில் பாடல் எண்ணிக்கை, பாடுபொருள், யாப்பமைதி ஆகியவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பது சதக நூல்களை நோக்கும் போது புலனாகின்றது.

இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கும் சதக நூல்கள் நூறு பாடல்கள் பெற்றும் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் கொண்டும் விளங்குகின்றன. நூல்களின் பாடுபொருள் பாட்டியல் நூல்கள் குறிப்பிடுவது போலன்றி இறைவனையும், சிவன் அடியார்களையும் போற்றும் வகையிலும், உலகில் மக்கள் சிறப்புற்று வாழத் தேவையான நெறிமுறைகளைக் கூறும் நிலையிலும் அமைந்துள்ளன. இவை, புலவர்கள் சமுதாயத் தேவைக்கேற்பத் தங்கள் விருப்பத்திற்கிணங்க சதக நூல்கள் இயற்றும் விதிமுறைகளை அகலப்படுத்திக் கொண்டதை உணர்த்துகின்றன. சதக இலக்கியத்தின் தோற்றுவாயாக விளங்குவது மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சதகம். இக்காலச் சதக அமைப்பு அதில் இல்லை. இன்றைய சதக அமைப்பில் முதலில் எழுந்த நூல் அவிநாசி ஆறைகிழார் இயற்றிய கார்மண்டலச் சதகம்.

திருத்தொண்டர் புராணம் விரிவாக உரைக்கும் சிவனடியார்களைப் பற்றிய செய்திகளைத் திருத்தொண்டர் சதகம் கூறுகின்றது. அவையாம்பிகை சதகம் இறைவி பார்வதியை முன்னிலைப் படுத்தியும் கயிலாசநாதர் சதகம், செயங்கொண்டார் சதகம் ஆகியவை சிவபெருமானை முன்னிலைப் படுத்தியும் பாடப்பட்டுள்ளன. உலக மக்கள் மக்களாக வாழவேண்டிய நல்ல நெறிகளைப் பற்றிக் கயிலாசநாதர் சதகம் கூறுகின்றது.

அவையாம்பிகையைப் பல மணிகளாவும், பழங்களாகவும், கிளிகளாகவும் விளித்துப் பாடியிருப்பது சொல்நயத்துடன் நேர்த்தியாக விளங்குகிறது.

மக்கள் வாய்மொழியாக வழங்கும் நூறு பழமொழிகளைக் கொண்டு இதிகாச, புராண, சரித்திரக்கதைகளில் உள்ள மாந்தர்களோடு தொடர்புபடுத்தி ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும் ஒரு பழமொழியுடன் நீதியைப் புகட்டும் வகையில் செயங்கொண்டார் சதகம் பாடப்பட்டுள்ளது.

முருகப்பெருமானிடம் உதவி கேட்டு வந்த புலவனிடம் முருகப் பெருமான் தன் தாய், தந்தை, தமயன், மாமன் போன்றோர் பற்றிக் கூறுவதை நகைச்சுவை இழையோட ஆசிரியர் பாடியிருப்பது அவர் கற்பனைத் திறனைக் காட்டுகின்றது. மேலும் தாம் கூற வந்த கருத்தை இயல்பாக, பொருத்தமாக அமைக்கச்

'சாகரந்தான் சுட்டால் கலக்கச் சலமுண்டோ'

என்பது போன்ற பழமொழியை ஆசிரியர் பயன்படுத்தியிருப்பது சிறப்பாக உள்ளது. இந்நூலில் இடம்பெற்றுள்ள திருத்தொண்டர் சதகம், கயிலாசநாதர் சதகம், அவையாம்பிகை சதகம், செயங்கொண்டார் சதகம், திருமுக விலாசம் ஆகிய நூல்களுக்குப் பதிப்பாய்வும், பாடலுக்கு அருஞ்சொற் பொருளும் பொழிப்புரையும் முனைவர் த. இராசேசுவரி எளிமையாகவும், சிறப்பாகவும் எழுதியுள்ளார்.

முனைவர் த. இராசேசுவரி அவர்கள் ஆய்வுத் திறனும், உழைப்பில் சலிக்காத மனத்திண்மையும் உடையவர். அவர் மேன்மேலும் சிறக்க வாழ்த்துகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத்தலைவர் மாண்புமிகு கல்விஅமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி இயக்ககம் வழங்கும் அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தின் கீழ் இந்நூல் வெளியிட நிதியுதவி வழங்கிய தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கு நன்றி.

**இயக்குநர்**

# என்னுரை

பண்டைய தமிழ் இலக்கியங்கள் சுவடிகளில் எழுதப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன. அவை செல்லரித்துச் சிதைந்து காலத்தால் அழிந்து விடாமல் இருக்கப் பல நூல்கள் உரையின்றி மலிவுப் பதிப்பாக அச்சிடப்பட்டுள்ளன.

செய்யுள் வடிவில் உள்ள நூல்களைப் படிப்பவர் எண்ணிக்கை அருகி வருவதால் வருங்காலத் தமிழர் இந்நூல்களைப் படித்துப் பயன் அடைய வேண்டும் என்ற நோக்கில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் (திரு) ச.சு. இராமர் இளங்கோ அவர்கள் இந்தச் சதக நூல்களுக்குப் பொருளும் பொழிப்புரையும் எழுதிப் பதிப்பிக்குமாறு பணித்தார். பதினொரு நூல்களடங்கிய இந்தச் சதகத் திரட்டைக் குறித்த காலத்தில் என்னால் முடிக்க இயலுமா என்று மலைப்பாக இருந்தது. இயக்குநர் ஊக்கப்படுத்தியதாலும், எனக்குச் சுவடியியல் கற்பித்த ஆசிரியர் திரு. மு.கோ. இராமன் (ஓய்வு - சுவடிக் காப்பாளர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்) அவர்கள் பழைய சுவடிகளை அச்சில் வெளிக்கொணர வேண்டும், அச்சிட்ட நூல்களையும் நன்கு ஆராய்ந்து பிழையின்றிப் பதிப்பிக்க வேண்டும் என்று நேரம் கிட்டும் போதெல்லாம் கூறியதை மனம் கொண்டதாலும் இவ்வரிய பணியை ஏற்று, இயக்குநர் கூறிய வண்ணம் செய்யுள் மட்டுமே இருந்த நூல்களுக்கு அருஞ்சொற்பொருள், பொழிப்புரை முதலியவற்றுடன் இயன்ற அளவு பிழைகளைக் களைந்து நூல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. காலக்குறுக்கத்தின் பொருட்டு விரிவாக ஆராய இயலவில்லை. இத்தொகுதியில் இருந்த தொண்டைமண்டலச் சதகம் தஞ்சை சரசுவதிமகால் நூல் நிலையத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளதால் அதைத் தவிர ஏனைய பத்து நூல்களும் பதிப்புக்குரியனவாகக் கொள்ளப்பட்டன. அவற்றை இரு தொகுதிகளாகப் பிரித்து முதல் தொகுதியில்

*1.* திருத்தொண்டர் சதகம், *2.* கயிலாச நாதர் சதகம், *3.* அவையாம்பிகை சதகம், *4.* செயங்கொண்டார் சதகம், *5.* திருமுக விலாசம் ஆகிய நூல்களும்

இரண்டாம் தொகுதியில்

*1.* கோகுலச் சதகம், *2.* வடவேங்கட நாராயண சதகம், *3.* அண்ணாமலை சதகம், *4.* அருணாசல சதகம், *5.* குருநாத சதகம் ஆகிய நூல்களும் வைக்கப்பட்டுள்ளன.

முதல் தொகுதியில் உள்ள ஐந்து நூல்களுள் திருமுக விலாசம் என்னும் நூல் சீட்டுக்கவி போன்றது. செயங்கொண்டார் சதகம் இயற்றிய ஆசிரியரே இந்நூலையும் இயற்றியுள்ளதால் திருமுக விலாசம் இத்தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. பெரும்பான்மை கருதிச் 'சதகத் திரட்டு' தொகுதி - *1* என்று நூலுக்குத் தலைப்பு வழங்கப்பட்டது.

முதல் தொகுதியிலுள்ள நூல்கள் அனைத்தும் சைவமதச் சார்புடையன. இந்நூல்களை ஓதுங்கால் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமான் திருவருளும், அன்னை அவையாம்பிகையின் கருணையும், கலியுகக் கடவுள் முருகப் பெருமானின் மனம் கனிந்த அருளும் பெற்று விடும் உணர்வு தோன்றும் வகையில் பாடல்கள் பக்திச் சுவையுடன் சிறப்பாகவும், எளிமையாகவும் உள்ளன.

என்னால் இவ்வரிய பணியைச் செய்ய இயலும் என்று கருதி இயக்குநர் அவர்கள் இந்நூல்களைப் பதிப்பிக்கும் வாய்ப்பினை எனக்கு நல்கியதை எண்ணிப் பேருவுவகை எய்துகிறேன்.

சென்னை **த. இராசேசுவரி**

*03-10-2001*

# நன்றியுரை

சிற்றிலக்கியங்களைப் படிப்பாரும் பாராட்டுவாரும் அருகி வரும் இக்காலத்தில் அவற்றின் அருமையைப் பலரும் அறிய வேண்டும் என்று எண்ணிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் (திரு) ச.சு. இராமர் இளங்கோ அவர்கள் விருப்பத்தை உணர்ந்து இப்பணியை மேற்கொண்டேன். செய்யுள்களுக்கு அருஞ்சொற்பொருள், பொழிப்புரை முதலியவை எழுதப்பட்டுள்ளன. இவ்வாய்ப்பை எனக்கு வழங்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் (திரு) ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்விக்கடல் எனப் போற்றப்படும் கம்பராமன் (திரு) எஸ்.கே. இராமராஜன் (ஓய்வு - அகராதித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்) அவர்களால் இன்றைய உலகின் நச்சினார்க்கினியர் என்று பாராட்டப்படும் நூற்கடல் பேராசிரியர் (திரு) தி.வே. கோபாலையர் (பிரெஞ்சு இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி) அவர்கள் செய்யுள்களுக்கு அருஞ்சொற்பொருள், பொழிப்புரை, குறிப்புரை முதலியவற்றை எழுதுங்கால் ஏற்பட்ட ஐயங்களை நீக்கி, அமிர்தயோகம், பஞ்சாங்கம் இவை பற்றிய செய்திகளை விளக்கி, இந்நூல் உரையுடன் வெளிவர அனைத்து உதவிகளையும் இன்முகம் காட்டிச் சிரமம் பாராது தள்ளாதவயதிலும் இதைத் தள்ளாது மனம் கொண்டு மனமுவந்து செய்தார்கள். அப்பெருந்தகையாருக்குச் சிரம் தாழ்த்தி இருகரம் கூப்பி என்றென்றும் என் நன்றியையும் வணக்கத்தையும் உரித்தாக்குகிறேன்.

இந்நூலைக் கணிப்பொறியில் இட்டு நல்லமுறையில் அச்சிட்டு வழங்கிய திருமதி இரா. வெண்ணிலா, கணிப்பொறி இயக்குபவர் அவர்களுக்கும் என் அன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# பதிப்பாய்வு

'சதகம்' என்ற சொல் வடமொழிச் சொல்லாகும். 'சதக' என்பது 'சதம்' என்ற அடிச்சொல்லில் இருந்து வந்தது. 'சதம்' என்னும் வடசொல் 'நூறு' என்று பொருள்படும். அது 'க' என்ற பிரத்தியயம் சேரச் சதகம் என்றாயிற்று. தமிழ் மொழியில் சதக இலக்கியம் தோன்றாத காலத்திலேயே வடமொழியில் சதகம் என்ற பெயரில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலே சதக இலக்கியத்தின் வளர்ச்சி காணப்படுகிறது. 'பர்த்ருஹரி எழுதிய நீதி சதகம், வைராக்கிய சதகம் ஆகியவை கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்' என்று ப. பழனியம்மாள் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். (தமிழில் சதக இலக்கியங்கள் பக். 7.)

'சதகம் என்ற சொல்லை சத்+அகம் எனப் பிரித்து உண்மைப் பொருளைக் கூறும் இலக்கியம் என்பர் சிலர். சதம் என்பதற்கு நிலைத்திருப்பது, இறுதியானது என்றும் பொருள் கூறுவர்' என்று சதகம் என்ற சொல்லுக்கு விளக்கம் தருகிறார் செ. இராசு (சோழமண்டலச் சதகம், பக். V).

### 1. சதகம் என்னும் சொல் அறிமுகம்

தொல்காப்பியர் காலம் முதல் மாணிக்கவாசகர் காலம் வரை சதகம் என்ற பெயர் தமிழில் காணப்படவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் முதன் முதலாக மாணிக்கவாசகர் பாடலில்தான், 'திருச்சதகம்' என்ற பெயர் தலைப்பாக வந்துள்ளது. ஆகையால் திருச்சதகத்தைச் சதக இலக்கியத்தின் தோற்றுவாய் எனலாம். மாணிக்கவாசகர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு. எனவே, தமிழிலக்கியத்தில் சதகம் என்ற சொல்லின் தோற்றமும். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம்.

திருச்சதகம் நூறு பாடல்களால் ஆனது. இந்த நூறு பாடல்களும் ஒரே வகை யாப்பில் அமையாமல் பத்துப் பத்துப் பாடல்கள் ஒவ்வொரு யாப்பு வகையில் அமைந்துள்ளன. ஆனால் இக்காலச் சதகத்தின் பொருளோ, அமைப்போ அதில் இருப்பதாகத் தெரியவில்லை.

### 2. எண்ணிக்கை அடிப்படையில் பெயர்

நூல்களுக்கு எண்ணிக்கை அடிப்படையில் பெயர் வழங்குவது பண்டைத் தமிழர் மரபு. அகநானூறு, புறநானூறு, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, திணை மொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்துப் போன்ற நூல்கள் பாடல்களின்

எண்ணிக்கை அடிப்படையில் பெயர் பெற்றனவேயாகும். ஏரெழுபது, முத்தொள்ளாயிரம், நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்பனவும் எண் குறித்த பெயர்களையுடைய நூல்களே. மும்மணிக்கோவை, மும்மணிமாலை ஆகிய நூல்கள் *30* பாடல்களைக் கொண்டவை. இரட்டை மணிமாலை, இணை மணிமாலை, இருபா இருபஃது என்பன *20* பாடல்கள் கொண்டவை. ஒரு பா ஒரு பஃது *10* பாடல்களையும், நவமணிமாலை *9* பாடல்களையும், அட்டமங்கலம் எட்டுப் பாடல்களையும் கொண்டமைந்த அந்தாதி இலக்கியங்கள் ஆகும். ஆனால், 'சதகம்' என்னும் சிற்றிலக்கிய வடிவம் வடமொழி மரபையொட்டி அமைந்ததால் தமிழ் மரபுக்கேற்ப நூறு என்ற சொல்லால் அமையாமல் சதகம் என்றே பெயர் பெற்றுள்ளது.

**21 திருச்சதகம்:**

மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சதகம் சதக இலக்கியங்களின் அமைப்புடையதன்று. பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. திருச்சதகம் தனி நூலாகப் பாடப்படாமல் திருவாசகத்தின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. ஆயின், சதக நூல்கள் தனி நூல்களாகப் பாடப்பட்டுள்ளன. மாணிக்க வாசகரின் திருச்சதகத்திற்கும் பிற சதக இலக்கியங்களுக்கும் எண், பெயர் ஆகிய இரண்டில் மட்டுமே ஒற்றுமை உள்ளதேயன்றிப் பிற அமைப்புக்களில் எவ்வித ஒற்றுமையும் காணப்படவில்லை.

**3. சதக இலக்கிய வகையின் தோற்றம்**

"சங்ககாலத்திற்குப் பின் தமிழகத்தில், காப்பியங்கள் தோன்றின, பின்பு நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் பக்திப்பாடல்கள் பாடப்பட்டன. அவற்றையடுத்து, இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களைச் சிறப்பித்துப் பாடும் மரபைப் பின்பற்றிச் 'சதகம்' என்ற பெயரில் ஒரு சிற்றிலக்கியவகை தோன்றியது. முதலில் தோன்றியது அவிநாசி ஆறைகிழார் என்பவர் இயற்றிய 'கார்மண்டல சதகம்' எனவும் கி.பி. *17,18, 19* ஆகிய மூன்று நூற்றாண்டுக் காலத்தையும் சதக இலக்கியத்தின் பொற்காலம்' எனவும் ந.வி. ஜெயராமன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் *(சதக இலக்கியங்கள், பக்: 15,16)*

**4. சதக இலக்கியத்தின் பாடுபொருள்**

சதக இலக்கியவகை தோன்றிய காலத்தில் மண்டலங்களைச் சிறப்பித்துப் பாடும் நோக்கில்தான் பாடல்கள் பாடப்பட்டன. 'கார்மண்டலச் சதகம்' கார்மண்டலத்தில் வாழ்ந்த வேளாளர் பெருமை, ஆட்சி செய்த அரசர்கள், புலவர்கள், வள்ளல்கள், ஞானியர் ஆகியோர் வரலாறுகளை **விரிவாகக்**

கூறுகின்றனது. இதன் அடிப்படையில் கார்மண்டலச் சதகம் தோன்றிய பின் சோழமண்டலச் சதகம், ஈழமண்டலச் சதகம், தொண்டைமண்டலச் சதகம், மிழலைச் சதகம், பாண்டிமண்டலச் சதகம் எனப் பல்வேறு மண்டலச் சதகங்கள் தோன்றின. இங்ஙனம் மண்டல வரலாறுகளைச் சிறப்பித்துக் கூறும் முறையில் ஆரம்பகாலச் சதக இலக்கியங்களின் பாடுபொருள் அமைந்திருந்தது.

காலப்போக்கில் பாடுபொருளில் மாற்றம் நிகழ்ந்தது. மண்டலச் சதகங்களைப் பாடிய படிக்காசுப்புலவர் நீதிக்கருத்துக்களைப் பாடலாகக் கொண்டு 'பழமொழி விளக்கம்' என்ற தண்டலையார் சதகத்தைப் பாடினார். இச்சதகத்தில், ஆசிரியர் தாம் விரும்பி வழிபடும் இறைவனான தண்டலை நாதரை முன்னிலைப் படுத்தி மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான அறங்களையும், நீதிநெறிகளையும் பாடிப், பேச்சுவழக்கில் உள்ள பழமொழிகளைச் செய்யுள்தோறும் தொடர்பு படுத்தியுள்ளார். இதை அடியொற்றி *18*-ஆம் நூற்றாண்டில் பல நீதிச்சதகங்கள் தோன்றின. அவை அறப்பளீசுரச் சதகம், குமரேச சதகம், திருவேங்கட சதகம் என்பவனவாகும். ஆனால் இந்நீதிச் சதகங்களில் தண்டலையார் சதகம் போல் நீதிக்கருத்துக்களை விளக்கப் பழமொழிகள் கையாளப்படவில்லை. 'கோவிந்த சதகம்' 'செயங்கொண்டார் சதகம்' இவற்றில் மட்டுமே பழமொழிகள் அமைந்துள்ளன.

நாளடைவில் இறைவனைத் துதிக்கும் வகையில் பல சதகங்கள் தோன்றின. கிபி. *19*-ஆம் நூற்றாண்டில் இறைவனைத் துதிக்கும் அடிப்படையில் தில்லைநடராஜ சதகம், தில்லைசிவகாமசுந்தரி சதகம், சிவகுரு சதகம், எம்பிரான் சதகம் போன்ற துதிச்சதகங்கள் பாடப்பட்டன. காசிவிசுவநாத சதகத்தில் பெரும்பாலான பாடல்கள் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களின் சிறப்பைப் புகழ்ந்து பாடும் வகையில் விளங்குகின்றன. மஸ்தான் சாகிப் முகமதுநபியை இறைவனாகக் கருதி 'முகயித்தீன் சதகம்' பாடியுள்ளார். இதைப் பின்பற்றி ஆதிமூலப் பெருமாள் சைவ சமய அடியவராகிய முத்துக்குமார ஞானியரை இறையென எண்ணி, 'முத்துக்குமார ஞானியார் சதகத்தைப் பாடியிருக்கின்றனார்.

கி.பி. *20*-ஆம் நுற்றாண்டில் பல்வேறு சதக இலக்கியங்கள் தோன்றியுள்ளன. புலவர்கள் தாங்கள் விரும்பிய வாறெல்லாம் பல்வேறு கருத்துக்களைப் பாடுபொருளாகக் கொண்டு சதக நூல்களைப் பாடியிருப்பது புலனாகின்றது. மகாபாரதக்கதைகள் சுருக்கமாக, 'ஸ்ரீமந் நடராஜாங்கித மகாபாரதச் சதகம்' என்ற பெயரில் பாடப்பட்டுள்ளன. பெரியபுராணக் கதைகளின் சுருக்கமாகத் 'திருத்தொண்டர் சதகம்' அமைந்துள்ளது. கருத்துக்கள் பலவாயினும் பாடல்களின் எண்ணிக்கை *100* என்னும் வரையறை எல்லோராலும்

கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. இவ்வடிப்படையில் 'மதீனாமாநகர் தோத்திரச் சதகம்', 'முதல்வர் திருச்சதகம்', போன்ற சதக நூல்கள் இக்காலத்தில் தோன்றிய சதகங்களாகும். இதுவரை தமிழில் மொழிபெயர்ப்பு சதகம் நீங்கலாக *207* சதகங்கள் வெளிவந்துள்ளன என்பதைத் தமிழ்ச் சதக இலக்கியம் *(பக். 151-168)* என்ற நூல் வாயிலாக அறியலாம்.

இவற்றை நோக்கும்போது, சதக இலக்கியத்தின் பாடுபொருள் சமுதாயத் தேவைக்கேற்பவும் புலவரின் விருப்பத்திற்கேற்பவும் காலப்போக்கில் மாறியுள்ளது புலனாகின்றனது.

### 5. சதக இலக்கியத்தின் வகை

சதக இலக்கியங்கள் எல்லாம் பல்வேறு சூழ்நிலைகளில் பல்வேறு நோக்கங்களின் அடிப்படையில் பாடப்பட்டுள்ளன. இவற்றை ஐந்து வகையாகப் பாகுபடுத்தலாம். அவை

1. மண்டலச் சதகங்கள்
2. நீதிச் சதகங்கள்
3. துதிச் சதகங்கள்
4. காப்பியச் சதகங்கள்
5. பதிகச் சதகங்கள்

என்பனவாகும்.

#### 5.1 மண்டலச் சதகங்கள்

புலவர்கள் தாம் வாழ்ந்த நாடுகளைச் சிறப்பித்து மண்டலச் சதகங்களைப் பாடினார்கள். இம்மண்டலச் சதகங்கள் அந்தந்த மண்டலத்தில் வாழ்ந்த மக்கள், புரவலர், புலவர், வள்ளல் ஆகியோரின் வரலாறுகளை விளக்கும் நூல்களாக உள்ளன. மண்டலச் சதகங்கள் யாவும் கார்மண்டல சதகத்தின் பொருளமைதியை அடியொற்றிப் பாடப்பட்டுள்ளன.

#### 5.2 நீதிச் சதகங்கள்

ஒரு தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனை முன்னிலைப்படுத்தி உலக மக்கள் மனித நேயத்துடன் நெறி தவறாது நல்வாழ்வு வாழ்வதற்கு வேண்டிய அறநெறிக் கருத்துக்களைப் பாடுபொருளாகக் கொண்டு நீதிச் சதகங்கள் தோன்றின. இச்சதகங்களில் கூறப்பட்டுள்ள அறக்கருத்துக்கள் இதிகாசப் புராணங்களின் கதைகள், பழமொழிகள் முதலியவற்றின் வாயிலாக விளக்கப்பட்டுள்ளன.

### 5.3 துதிச் சதகங்கள்

புலவர்கள் தாம் விரும்பி வழிபடும் இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவன் பெருமையைப் பகரும் வண்ணம் பாடிய பாடல்களே துதிச் சதகங்கள். இவற்றில் இறைவன் திருக்குணங்கள், அருள் சிறப்புக்கள் முதலியவை இடம் பெற்றிருக்கும்.

### 5.4 காப்பியச் சதகங்கள்

மிக விரிவான கதைகளைச் சுருக்கிக் கூறும் நிலையில் பாடப்பட்டவையே காப்பியச் சதகங்கள். பெரியபுராணத்தின் சுருக்க நூலாகத் திகழ்வது 'திருத்தொண்டர் சதகம்'. இதை இயற்றியவர் மலைக்கொழுந்து நாவலர். இவர் சிவபெருமானை முன்னிலைப்படுத்தி நாயன்மார், சிவனடியார் முதலியவர்களின் வரலாறு, பெருமை, சிறப்பு இவற்றைப் பாடியுள்ளார். மகாபாரதக் கதையின் சுருக்கநூலாக 'ஸ்ரீமந் நடராஜாங்கித மகாபாரதச் சதகம்' விளங்குகின்றனது. இதன் ஆசிரியர் கிருட்டிணமூர்த்தி ஐயர். இவர் தாம் விரும்பி வழிபடும் தில்லை நடராசப்பெருமானை முன்னிலைப்படுத்தி மகாபாரதக் கதைகள் வாயிலாகப் பல நீதிக்கருத்துக்களை விளக்கியுள்ளார் என்று குறிப்பிடுகின்றனார் ப. பழனியம்மாள் *(தமிழில் சதக இலக்கியங்கள்: பக். 12)*

### 5.5 பதிகச் சதகங்கள்

இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களின் சிறப்பு, பெருமை இவைகளைப் பகரும் வகையில் அமைந்த நூல்களைப் பதிகச் சதகங்கள் எனக் கொள்ளலாம். என். கனகராச ஐயர் இயற்றிய 'காசிவிசுவநாத சதகம்' பதிகச் சதகமாக விளங்குகிறது. ஆசிரியர் சிவபெருமானை முன்னிலைப்படுத்திக் காசியில் தொடங்கிச் சமய வேறுபாடின்றிச் சைவ, வைணவ, சமணத் திருத்தலங்களைப் பாடிப் போற்றியிருக்கின்றார். பதிகச் சதகமும் இத்தகையதே. அந்நூல் அச்சாகவில்லை.

### 6. சதக இலக்கியத்தின் அமைப்பு

சதக இலக்கியங்களை நோக்கும்போது இவை,

1. நூறு பாடல்களால் பாடப்பட்டிருப்பது.
2. புலவர், தம் விருப்பத்திற்கேற்ப மண்டலத்தைப் பற்றியோ, நீதியைப் பற்றியோ, இறைவனைத் துதித்தோ பாடியிருப்பது.
3. பாடல்களில் ஒரே விதமான யாப்புப் பயின்று வருவது.
4. ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும் மகுடம் பெற்று முடிவது.

ஆகிய நான்கும் பொதுவான இன்றியமையாத அடிப்படை அமைப்பாக விளங்குகின்றன என்பது புலப்படும். சதக இலக்கியம் பற்றிப் பாட்டியல் நூல்கள் விதி வகுத்துள்ளன.

'விளையும் ஒருபொருள் மேலொரு நூறு
தழைய வுரைத்தல் சதக மென்ப' *(இலக்கண விளக்கம் - 847)*

பயிலும் ஓர் பாட்டால் நூறு உரைப்பது சதகம் *(சுவாமிநாதம். 168)*

சயமாம் மிகுபொருள் ஒன்றின்
பாநூறு சதகமதே *(நவநீதப் பாட்டியல் - 10)*

நூறான வெண்பாக் கலித்துறையின்
ஆதல் சதகம் *(பிரபந்த மரபியல் - 16)*

சதகம் என்பதுவே சதச் செய்யு ளாலே
அகப்பொருள் புறப்பொருள் இரண்டில் ஒன்று அறைதலே
*(பிரபந்த தீபம். 81)*

'அகப்பொருள் ஒன்றன் மேலாதல் புறப்பொருள்
ஒன்றன் மேலாதல் கற்பித்து ஒரு நூறு,
செய்யுள் உரைப்பது சதகமாம் என்ப' *(முத்து வீரியம்: 56)*

என்பன அவை. சதக இலக்கியம் ஒரு பொருள் கருதி அமைதல் வேண்டும். வெண்பா அல்லது கலித்துறைச் செய்யுளால் இயற்றப்பட வேண்டும். அகப்பொருள், புறப்பொருள் பற்றி அவை அமைய வேண்டும். நூல் முழுவதும் ஒரே செய்யுள் வகையால் பாடப்பெறல் வேண்டும் என்பன சதக இலக்கண விதிகளாக வகுக்கப்பட்டுள்ளன.

பிற்காலத்தில் இவ்விதிமுறைகளைப் புலவர்கள் பின்பற்றவில்லை என்பது சதக இலக்கிய நூல்களிலிருந்து புலப்படுகின்றது. அவை புதியன புகுதல் என்னும் விதிப்படியும், காலத்திற்கேற்ற வண்ணம் பாடுபொருளில் ஏற்பட்ட மாற்றம் எனவும் கொள்ளலாம். பக்தி, நீதி, வாழ்வியல், மண்டலம் முதலிய பொருள்களைப் பற்றியே மிகுதியான சதக நூல்கள் எழுந்துள்ளன எனலாம். பெரும்பாலும் சதகம் என்ற சிற்றிலக்கிய வகையில் நூலின் தலைப்பில் சதகம் என்ற பெயரும் இடம் பெற்றிருக்கும்.

### 7. சதக நூல்களின் எண்ணிக்கை வரையறை

சதக இலக்கியங்களின் பாடல்களின் எண்ணிக்கை வரையறை நூறு எனக் குறிப்பிடப்பட்டிருந்தாலும், சில சதகங்கள் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டும் விளங்குகின்றன. சான்றாக.

| | |
|---|---|
| அருணாசல சதகம் | - *101* பாடல்கள் |
| கயிலாசநாதர் சதகம் | - *101* பாடல்கள் |
| கொங்குமண்டலச் சதகம் | - *101* " |
| தொண்டைமண்டலச் சதகம் | - *101* " |
| தண்டலையார் சதகம் | - *102* " |
| திருவேங்கடச் சதகம் | - *102* " |
| அண்ணாமலை சதகம் | - *103* " |
| கோகுல சதகம் | - *103* " |
| திருத்தொண்டர் சதகம் | - *103* " |
| காசிவிசுவநாத சதகம் | - *108* " |

முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

**8. யாப்பு அமைதி**

ஒரு சதகத்தில் உள்ள பாடல்கள் யாவும் ஒரே யாப்பில் அமைந்திருக்கும் சதக இலக்கியங்களில், ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை போன்ற யாப்பு வகைகள் பயின்று வருகின்றன. பெரும்பான்மையான சதகங்களில் ஆசிரிய விருத்தமே கையாளப்பட்டுள்ளது.

**9. மகுடம் அமையும் முறை**

சதக இலக்கியங்கள் பிற இலக்கிய வகைகளில் இல்லாத புதுவகை, அமைப்பைக் கொண்டுள்ளன. சதக நூலிலுள்ள ஒவ்வொரு பாடலும் இறுதியில் ஒரே வகையான முடிவு பெற்றுப் பாடலின் ஈற்றுத் தொடர் மகுடமாக அமைகிறது. சான்றாகக் கார்மண்டல சதகம், 'காராளர் மண்டலமே*!* என்றும் கயிலாசநாதர் சதகம், 'கயிலை யங்கிரி வாசனே*!*' என்றும் காசிவிசுவநாத சதகம், 'காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள் காசிவிசு வேச சிவமே*!*' என்றும் மகுடங்கள் பெற்று விளங்குகின்றன.

மகுட அமைப்புப் பல முறைகளில் காணப்படுகின்றது. அவை.

*1.* மண்டலத்தின் பெயரில் மகுடம் அமைதல்.
*2.* இறைவன் பெயரில் மகுடம் அமைதல்.
*3.* ஒற்றைச் சொல்லில் மகுடம் அமைதல்.
*4.* அடுக்குத் தொடரில் மகுடம் அமைதல்.
*5.* இறைவன் பெயருடன் வள்ளல் பெயரும் இணைந்து மகுடம் அமைதல்.
*6.* ஈற்றடி மாறி மகுடம் அமைதல்.
*7.* நூலின் தலைப்பும் மகுடமும் மாறி அமைதல்.

என்ற மகுட அமைப்பில் காணப்படும் வேறுபாடுகளைப் ப. பழனியம்மாள் தம் நூலில் விளக்கியுள்ளார். *(மேற்படி பக். 18)*

### 10. மகுடம் அமையாதவை

மகுடம் அமையாத சில சதகங்களும் காணப்படுகின்றன. அவை சிவகுரு சதகம், முதல்வர் திருச்சதகம், மழவைச் சிங்கார சதகம் முதலியனவாகும்.

### 11. மொழிநிலை

சதக இலக்கியங்கள் பிற்காலத்தில் எழுந்ததால் அவற்றின் மொழிநடை எளிய நடையில் அமைந்திருக்கின்றது. பேச்சுவழக்குச் சொற்களும் வடமொழிச் சொற்களும் சதகங்களில் ஓரளவு இடம் பெற்றுள்ளன.

### 12. மறுபதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நூல்கள்

நூல்கள் மிகவும் பழுதடைந்து இருந்தமையால் மறுபதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. சதகத் திரட்டு என்ற நூலில் பதினொரு நூல்கள் இருந்தன. அவை

1. கயிலாசநாதர் சதகம் - 101 பாடல்கள்.
2. செயங்கொண்டார் சதகம் - 100 " + பாயிரம் 4 பாடல்கள்.
3. திருமுக விலாசம் - 237 கண்ணிகள்
4. குருநாத சதகம் - 103 பாடல்கள்
5. அவையாம்பிகை சதகம் - 100 "
6. அருணாசல சதகம் - 101 "
7. அண்ணாமலை சதகம் - 103 "
8. வடவேங்கட நாராயண சதகம் - 100 "
9. தொண்டைமண்டலச் சதகம் - 100 "
10. கோகுல சதகம் - 103 "
11. திருத்தொண்டர் சதகம் - 103 "

என்பனவாகும்.

இவற்றுள் வடவேங்கட நாராயண சதகத்திற்கு மட்டுமே மூலத்துடன் உரை காணப்படுகிறது. 'தொண்டைமண்டலச் சதகம்', தஞ்சை சரசுவதிமகால் நூல்நிலையத்தினரால் ஏற்கெனவே வெளியிடப்பட்டுள்ளதால் மறுபதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஆகவே தொண்டைமண்டலச் சதகம் நீங்கலாக உள்ள ஒன்பது சதகங்களும், திருமுகவிலாசமும் மறுபதிப்புக்குரியனவாகக் கொள்ளப்பட்டன. 'திருமுக விலாசம்' சதக இலக்கியமன்று. சீட்டுக்கவி போன்றது.

இருப்பினும் இந்நூலாசிரியர் செயங்கொண்டார் சதகம் பாடியிருப்பதால் செயங்கொண்டார் சதகத்தையடுத்துத் திருமுகவிலாசம் இணைக்கப்பட்டுள்ளது. மேலே கூறப்பட்டுள்ள நூல்கள் யாவும் மதராஸ் ரிப்பன் அச்சு இயந்திர சாலையில் மலிவுப்பதிப்பாகப் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளன. அண்ணாமலை சதகம் கி.பி. *1908*-ஆம் ஆண்டிலும், கோகுலச் சதகம் கி.பி. *1914*-ஆம் ஆண்டிலும், ஏனைய சதகங்களும், திருமுகவிலாசமும் *1913*-ஆம் ஆண்டிலும் அச்சிடப்பட்டுள்ளன.

மறுபதிப்புக்கு உரியனவாக உள்ள பத்துச் சதகங்களும் இரு தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு சதகத் திரட்டு தொகுதி - *1*, சதகத் திரட்டு தொகுதி - *2* எனத் தலைப்பிடப்பட்டுள்ளது. முதல் தொகுதியில்,

*1.* திருத்தொண்டர் சதகம்.
*2.* கயிலாசநாதர் சதகம்.
*3.* அவையாம்பிகை சதகம்.
*4.* செயங்கொண்டார் சதகம்
*5.* திருமுகவிலாசம் என்ற கண்ணி ஆகிய ஐந்து நூல்கள் உள்ளன.

இரண்டாம் தொகுதியில்

*1.* கோகுலச் சதகம்
*2.* வடவேங்கட நாராயண சதகம்
*3.* அண்ணாமலை சதகம்
*4.* அருணாசல சதகம்
*5.* குருநாத சதகம்

என்னும் ஐந்து நூல்கள் அமைந்துள்ளன. முதல் தொகுதியில் திருமுக விலாசம் என்னும் கண்ணி இடம் பெற்றிருப்பினும் பெரும்பான்மை கருதி சதகத் திரட்டு தொகுதி - *1* என்றே பெயர் வழங்கப்பட்டுள்ளது. முதலில் இருந்த வைப்பு முறையில் இல்லாமல் நூலின் சிறப்பை மனம் கொண்டு வைப்புமுறை மாற்றி வரிசைப் படுத்தப்பட்டுள்ளது.

**13. பதிப்பு முறை**

செய்யுளில், பொருள் புரியக் கடினமாக இருக்கும் இடங்கள் மட்டுமே சீர்பிரித்து இடப்பட்டுள்ளன. ஏனைய இடங்கள் அச்சுப் பிரதியில் உள்ளது போல் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இக்காலத்தில் செய்யுள்நடை அருகி உரைநடை பெருகிக் காணப்படுகிறது. பாடல்கள் உரையின்றியிருப்பதால் எல்லோரும் எளிதில் படித்துப் பொருள் உணர்வது கடினம். ஆகவே, வருங்காலத் தமிழ்ச் சந்ததியினர்

படித்துப் பயன் அடைய வேண்டும் என்ற நோக்கில் பாடலுக்குப் பொழிப்புரையும், அரிய பதங்களுக்குப் பொருளும் எழுதப்பட்டிருக்கின்றன. திருமுக விலாசம் கண்ணியாக இருப்பதால் அரிய சொற்களுக்குரிய பொருள் அடிக்குறிப்பாக அமைக்கப்பட்டுப் பொழிப்புரை நூலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. இறுதியில் செய்யுள் முதல்குறிப்பு அகரவரிசை இணைக்கப்பட்டுள்ளது.

### 13.1. பிழைத்திருத்தம்

நூலைப் படிஎடுக்குங்கால் நேர்ந்த பிழையினாலோ, அச்சுப் பிழையினாலோ, யாப்பு அடிப்படையிலோ, பொருள் அடிப்படையிலோ, ஓசை குறைவினாலோ, ஏற்பட்டிருந்த பிழைகள் இயன்ற அளவு செப்பம் செய்யப்பட்டு நூல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அடி மடக்கி எழுதியதில் ஏற்பட்ட பிழைகளும் சரியாக மாற்றி இடப்பட்டுள்ளன. வழங்கி வரும் அச்சுப்பிரதியில் செய்யுள்களின் தலைப்பு எளிமை கருதி இப்பதிப்பில் மாற்றப்பட்டுள்ளன.

### 13.2. பாடல்களுக்கு எண் இடப்பட்ட முறை

இப்பதிப்பில் உள்ள சதகச் செய்யுள்கள் அனைத்திற்கும் பாடல் தொடக்கத்தில் தொடர்ச்சியான எண் (அரேபிய எண்ணில்) கொடுக்கப்பட்டு, ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அந்தந்த நூலில் அது எத்தனையாவது பாடல் என்பது தமிழ் எண்ணால் சுட்டப்படுகிறது. ஐந்தாவது இடம்பெறும் திருமுக விலாசம் என்னும் நூல் கண்ணியாக அமைந்திருப்பதால் கண்ணியின் தொடக்கத்தில் ஒவ்வொரு கண்ணிக்கும் அரேபிய எண்ணும் பத்துக் கண்ணிகள் முடியும் இடத்தில் தமிழ் எண்ணும் கொடுக்கப்பட்டுள்ளது. நூலின் இறுதியில் முதல் நான்கு சதகங்களுக்கும் செய்யுள் முதல்குறிப்பு அகரவரிசை இணைக்கப்பட்டுள்ளது. இறுதி நூல் ஒரே பாடலாகக் கண்ணியாக இருப்பதால் அதற்குச் செய்யுள் முதல்குறிப்பு அகரவரிசை கொடுக்கவில்லை.

### 14. திருத்தொண்டர் சதகம்

இச்சதகம் திருத்தொண்டர் புராணத்தில் இடம் பெறும் திருத்தொண்டர்களைப் பற்றிக் கூறித் 'திருத்தொண்டர் சதகம்' என்னும் பெயரிலேயே அமைந்துள்ளது. ஆசிரியர் ஆனைமுகனை வணங்கி நூலைத் தொடங்கி, வயிரப்பெருமாள் என்ற அடியவருக்குச் சிவபெருமான் காட்சியளித்து அருள்பாலித்த செய்தியுடன் நூலை நிறைவு செய்துள்ளார்.

### 14.1 ஆசிரியர்

ஆசிரியர் பெயர் மலைக்கொழுந்து நாவலர். இவர் முன்னோர்கள் திருப்பாண்டிக் கொடுமுடியைச் சேர்ந்தவர்கள். இவர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்தவர்.

ஆசிரியர் முந்துநூல் புலமை மிக்கவர். இவர் சைவசமய நூல்களைக் கற்றுத் துறை போகியவர் என்பதற்கு இச்சதகமே தக்க சான்று. 'நாவலர்' என்ற பெயரே இவர் புலமையைப் புலப்படுத்துகிறது. இவரைப் பற்றித் திருநெல்வேலியிலிருந்த வித்வான் அழகிய சொக்கநாத பிள்ளை அவர்கள் இயற்றியுள்ள சிறப்புப் பாயிரப் பாடல்கள் வாயிலாக இவ்வாசிரியர் பலராலும் பாராட்டத்தக்க வகையில் தமிழ்அறிவும், சிறப்பும், புகழும் வாய்ந்தவர் என்பதனை அறியலாம்.

### 14.2 பாடுபொருள்

நூலின் முதல்பாடல் 'திருத்தொண்டர் புராணம்' தோன்றுவதற்குக் காரணமாக அமைந்த சூழலைப் பகரும் நிலையில் அமைந்துள்ளது. பாடல்களின் ஈற்றடி, 'மாணிக்க மலை நாதனே!' என்று முடிவதாலும் நாயன்மார்களைப் பற்றிப் பாடல்கள் விளக்குவதாலும் இந்நூல், 'திருமாணிக்க மாமலை திருத்தொண்டர் சதகம்' என்று பெயர் பெற்றுள்ளது.

ஆசிரியர் நாயன்மார்களின் தொகையும் திருமரபும் முதலில் கூறிப் பின்னர் குரு அருளால் வீடுபேறு உற்ற நாயன்மார்கள், இலிங்க வழிபாட்டால் வீடுபேறு உற்ற நாயன்மார்கள், இயல் இசைத் தமிழில் சிறந்து விளங்கிய நாயன்மார்கள் என்பவர் பெயர்களைப் பட்டியலிட்டுத் திருத்தொண்டத்தொகையில் குறிப்பிடப்பட்டுச் சேக்கிழாரால் விரித்துரைக்கப்பட்ட தனியடியார், தொகையடியார்களைப் பற்றி விளக்கிப், பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் என்பவர்களுக்குத் தனிப்பாடல் அமைத்து, நாயன்மார்க்குக் குருபூசை விபரம், அடியவரின் திருக்கூட்டம், நைமிசாரணியம், மாணிக்கமலையின் தோற்றம் - சிறப்பு, ஆரிய மன்னன் பூசனை, ஆதிசேடன் பூசை செய்தது, இந்திரனின் சாபம் தீர்ந்தது, இடி பூசனை புரிந்தது, அகத்தியர் பூசனை, உரோமச முனிவர் அர்ச்சனை, வாயு பூசனை செய்தது, ஆனாயர் பூசனை செய்தது, வயிரப் பெருமாள் பணிவிடை முதலிய செய்திகளை நூலில் இடம்பெறச் செய்துள்ளார்.

ஆசிரியர் நாயன்மார்களைப் பற்றி சிறப்பாகப் பாடிச் சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார். நூல் முழுவதையும் படித்து முடித்தால் 'திருத்தொண்டர் புராணத்தைப் படித்து முடித்தது போன்ற உணர்வு மேலிடும் வண்ணம் இச்சதகம் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

### 14.3 மகுடம்

ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும்,

கயிலை, வாசனே! இராசலிங்கேசனே!
சிவதை நகர் மாணிக்க மலை நாதனே!

என்ற மகுடம் பெற்றுத் திகழ்கின்றது.

**14.4 யாப்பு**

இச்சதகத்தில் காப்புச் செய்யுள் நீங்கலாக *103* பாடல்கள் உள்ளன. காப்புச் செய்யுள் நேரிசை வெண்பாவிலும் எஞ்சிய *103* பாடல்களும் பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்திலும் அமைந்துள்ளன.

**14.5 பிழைத்திருத்தம் பெற்ற இடங்கள்**

| பாடல் | அடி | | |
|---|---|---|---|
| *3* | *2* | ஈழுவர் | - ஈழவர் |
| *8* | *1* | அதிபத்தர் | - எறிபத்தர் |
| *34* | *1* | நிரம் அமுதூட்டி | - நிரம்ப அமுதூட்டி |
| *36* | *2* | மற்றதும் | - மற்றவும் |
| *38* | *2* | புத்தர் | - அமணர் |
| *39* | *3* | நம்பியாண்டார் | - நம்பாண்டார். |
| *42* | *2* | புத்தர் | - அமணர் |
| *43* | *2* | பணிகுறைபடாப் | - பணிகுறைபடா அப் |
| *53* | *1* | ஆலையங்கள் | - ஆலயம் |
| *69* | *3* | விபாகங்கள் | - விவாகங்கள் |
| *76* | *1* | திருநின்றியூர் | - திருநின்ற ஊர் |
| *79* | *3* | சிவாலையம் | - சிவாலயம் |
| *98* | *1* | விட்டிராங்கி | - விட்டிறங்கி |

**15. கயிலாசநாதர் சதகம்**

'கயிலாசநாதர் சதகம்' சேலம் மாவட்டத்தில் உள்ள இராசிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன் சிவபெருமான் பெயரில் பாடப்பட்டுள்ளது. ஆசிரியர் ஆனைமுகனை வணங்கி நூலைத் தொடங்கிக் கடவுள் வாழ்த்தில் சிவபெருமானைப் பாடிப் பரவி நூல் இறுதியில் விண்ணிலுள்ளோர், மண்ணிலுள்ளோர், இந்நூலைக்கற்றோர், கேட்டோர் அனைவரும் வாழி என வாழ்த்துப் பாடி நூலை நிறைவு செய்துள்ளார்.

**15.1 ஆசிரியர்**

ஆசிரியர் பெயர், அவர் தந்தை பெயர், ஊர், காலம், சமயம் ஆகியவை பற்றிய விவரம் நூலில் அகச்சான்றாகக் காணப்படுகிறது.

இவற்றை,

'ஆதிகலி நாலாயி ரத்துத் தொள்ளாயிரத்
தாகும்முப் பானி ரண்டில்

ஆயிரத் தெழுநூற் றைம்பத்து மூன்றுவரு
டஞ்சகாப் தம்விகுர் தியா
நீதிசே ராண்டுமே டத்திங்கள் குருவாரம்
நேர்ந்தபனி ரண்டாந் தினம்
நிறைகன்னி திதியைந்தி னோடமிர்த யோகமிவை
நீடி ரேவதி நாளினிற்
சாதியில் வீரசைவன் விசுவ லிங்கன்பர்
தருசிதம் பரவாணன் யான்
சதகமெனு மிப்பநுவல் நின்னடிக் கன்புகொடு
சாற்றின னுவந்தா ளுவாய்
காதலுட னடியர்தொழு கறைமிடற் றண்ணலே
கற்பக விராச மேவும் . . . . . . *(203)*

என்ற பாடல் வாயிலாக அறிய முடிகிறது.

ஆசிரியர் பெயர் சிதம்பரம். தந்தை பெயர். விசுவலிங்கம், ஆசிரியர் வாழ்ந்த ஊர் சேலம் மாவட்டத்திலுள்ள இராசிபுரம் என்பதாகும். ஆசிரியருடைய ஊர், இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம் போன்றவை பற்றிய செய்தியை,

'சோலைவளர் சேல நகரைச் சார்ந்த
கற்பக விராச மேவுங்___ *(122)*

என்ற பாடலும் பகர்கின்றது.

நூலாசிரியர் வீர சைவ சமயத்தைச் சார்ந்தவர். என்பதை, 'வீர சைவ விதிமுறை வழாது' *(126)* என்ற பாடலடி உணர்த்துகின்றது. ஆசிரியர், சிவபெருமானிடம் மிகுந்த பற்றுக் கொண்டவர் என்பது கடவுள் வாழ்த்தில் அவரை வழுத்துவதிலிருந்து புலனாகின்றது. நூல் இயற்றப்பட்ட காலம், கலி வருடம் *4932*-இல் சாலிவாகன ஆண்டு *1753*-இல் விகுர்தி ஆண்டு சித்திரை மாதம் *12*-ஆம் நாள் பஞ்சமியும் அமிர்தயோகமும் கூடிய ரேவதி நட்சத்திரமாகும். அஃதாவது இன்றைக்கு *169* ஆண்டுகளுக்கு முன்னால் *(*கிபி. *1852)* எனக் கொள்ளலாம்.

### 15.2 பாடுபொருள்

இச்சதகத்தின் பாடுபொருள் *105*-ஆம் பாடலில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அவை, நால்வகை குலம், பலவகை நீதி, கவிஞர், வள்ளல், உலோபி, பண்டிதர் முதலியோருடைய இயல்பு, செல்வத்தால் வரும் உயர்வு, சிறப்பு, கல்விச் சிறப்பு, குருவின் இயல்பு, வைத்தியர் இயல்பு, கலிகால இயல்பு, நோய் உண்டாகக் காரணம், திருமகள், மூதேவி, ஆகியோர் இருக்கும் இடங்கள்,

கருட தரிசன பலன், இராகங்கள், புராணங்கள், கலிகாலத்தில் ஆண்ட மன்னர்கள், பஞ்சாங்கம் பற்றிய செய்திகள், சகுன சாத்திரச் செய்திகள், நால்வகை மகளிர் இயல்பு, சாமுத்திரிகா இலட்சணம், கர்ப்போட்டம் முதலியனவாகும். உலகியல் வாழ்க்கைக்குத் தேவையான பல செய்திகள் நூலில் இடம் பெற்றுள்ளன. ஆசிரியர் உலகியல் செய்திகளை இயல்பாகத் தருவதற்குப் பேச்சுவழக்குச் சொற்களைக் கையாண்டுள்ளார். அவை வெள்ளுள்ளி *(140)*, உத்திரட்டாதி *(160)*, கெருவி *(130)* முதலியனவாகும்.

ஆசிரியர் தமிழ்ப் புலமை மட்டுமன்றி உலகியல் அறிவு, சோதிட அறிவு, உ்றுப்பு நூல் அறிவு, குதிரை பற்றிய அறிவு, சகுன சாத்திர அறிவு, ஆகிய அனைத்தும் நிரம்பப் பெற்றவர். இந்நூல் அக்காலத்தில் வாழ்ந்த மக்களின் பழக்கவழக்கம், நம்பிக்கை, சமூக வாழ்க்கை முதலியவற்றைத் தெளிவாகக் காட்டும் காலக்கண்ணாடியாக விளங்குகிறது. இப்போது குதிரைகள் பயன்படுத்தப் படாமையால் அவற்றைப் பற்றி அறிய இயலவில்லை.

## 15.3 மகுடம்

ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும் சிவபெருமானைப் பாடிப்பரவித் துதிக்கும் நிலையில் 'கற்பக விராச மேவுங், கங்கைபுனை ஈசனே! மங்கை மகிழ் நேசனே! கயிலை யங்கிரி வாசனே! என மகுடம் பெற்றுத் திகழ்கின்றது.

## 15.4 யாப்பு

இந்நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக *101* பாடல்கள் உள்ளன. காப்புச் செய்யுள் நேரிசை வெண்பாவிலும் ஏனைய செய்யுள்கள் பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்திலும் அமைந்துள்ளன. ஒவ்வோர் அடியும் நான்காக மடக்கி எழுதப்பட்டுள்ளது. பாடல்கள் எளிமையாக உள்ளன.

## 15.5 பிழைத் திருத்தம் பெற்ற இடங்கள்

| பாடல் | அடி | | |
|---|---|---|---|
| *140* | *2* | கொடிய கேட்டை | - கொடிய சேட்டை |
| *156* | *1* | பரா பவமுத | - பிரபவமுத |
| *160* | *2* | உத்திராடம் | - உத்தராடம் |

பதினான்கு சீர் கொண்ட ஓர் அடியை நான்காக மடக்கி எழுதும்போது முதலடியிலும் மூன்றாமடியிலும் நான்கு சீர்களும் இரண்டாம் அடியிலும் நான்காம் அடியிலும் மூன்று சீர்களும் அமைப்பது வழக்கம்.

*127*-ஆம் பாடலின் மூன்றாம் அடியில் ஐந்து சீர் அமைந்திருந்தது. ஐந்தாம் சீரான 'நிகண்டு பனி' என்றசீர் அதற்குக் கீழ் வரும் அடியில் இணைக்கப்பட்டுள்ளது. *186*-ஆம் பாடல் மூன்றாம் அடியில் இறுதிச் சீர் 'மாயுமென்' என அமைந்திருந்தது. 'மென்' என்ற சொல் மோனை நோக்கி அதற்கடுத்த அடியில் 'மென்றியம்பினார் எனச் சேர்க்கப்பட்டுள்ளது. சிலச் செய்யுள்களின் தலைப்புக்கள் எளிமை கருதி மாற்றப்பட்டுள்ளன. அவை

| | |
|---|---|
| கௌளி சொல் | - பல்லி சொல் *(173)* |
| ஸ்ரீகளுக்கு இந்திரிய நிலை | - பெண்களுக்கு உணர்ச்சி மிகும் நிலைகள் *(194)* |
| மனுஷ கணம் | - மனித கணம் *(174)* |
| போகிக்கு நாள் | - போகம் நுகரும் நாள் *(195)* |
| பல்லி முதலிய வீழ்ற் பலன் | - பல்லி நம் உடல் மேல் விழுவதன் பலன் *(169)* |
| உயிர்விட நாளின் தோஷம் | - உயிர்விடும் நாளின் தோஷம் *(185)* |
| அசுவலட்சணம் | - குதிரைகளின் லட்சணம் *(199)* |
| அசுவத்திற்கு ஆகாத சுழிகள் | - குதிரைக்கு ஆகாத சுழிகள் *(200)* |
| ஆடு மாடு கொள்ளாத நாள் | - ஆடு மாடு வாங்குவதற்கு ஏலாத நாள் *(186)* |

முதலியனவாகும்.

## 16. அவையாம்பிகை சதகம்

'அபயாம்பிகை' என்ற பெயர் தமிழில் 'அவயாம்பிகை' என வழங்கப்படுகிறது. அவயாம்பிகை என்பது செய்யுளின் ஓசை இனிமை குறித்து 'அவையாம்பிகை' என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும். ஆசிரியர் விநாயகப் பெருமானை வணங்கி நூலைத் தொடங்கி, அவயாம்பிகையைப் பலவாறு விளித்துச் சிவபெருமான் உயிருக்கு உயிராய் ஒன்றாகியும் திருமால் தங்கையாகியும் இருக்கும் சிறப்பை உரைத்து நூலை நிறைவு செய்கிறார். பாடல்களின் பெரும்பகுதி இறைவியின் விளியாயுள்ள பாடல்கள். ஒவ்வொன்றன் உட்கருத்தாம் ஆசிரியரின் வேண்டுகோளை வெளிப்படையாகவும் குறிப்பெச்சமாகவும் கண்டு இப்பாடல்களின் கருத்து வரையப்பட்டுள்ளது.

### 16.1 ஆசிரியர்

ஆசிரியர் பெயர் கிருஷ்ணையர். மாயூரத்தைச் சுற்றிச் சேந்தங்குடி முதலாகப் பல சிற்றூர்கள் உள்ளன. அவற்றுள் நல்லதுக்குடி என்ற சிற்றூரைச் சார்ந்தவர் ஆசிரியர். இவர் *19*-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். ஆசிரியர் அவயாம்பிகையின் திருவடிகளில் மிகுந்த ஈடுபாட்டோடு பாடியுள்ளார்.

### 16.2 பாடுபொருள்

பாடல்கள் பெரும்பாலும் இறைவியை விளிக்கும் நிலையில் அமைந்துள்ளன. அங்ஙனம் அமைந்திருப்பதால் அவை நீங்கலாக எஞ்சிய பாடற்செய்திகள் அடிக்குறிப்பாகத் தரப்பட்டுள்ளன. பாடல்களிலுள்ள அருஞ்சொற்பொருள்களும் குறிக்கப்பட்டுள்ளன. இறைவியைக் கிளியாகவும், பலவிதமான மணிகளாகவும் ஆசிரியர் பாடியிருப்பது படித்து இன்புறற்குரியது. இவர் அவயாம்பிகையைப் பாடியிருப்பதால் சைவ சமயத்தைச் சார்ந்தவர் எனக் கொள்ளலாம். பாடல்கள் விளியாக அமைந்துள்ளமையின் பாடல்களுக்குத் தலைப்பு வழங்கப்படவில்லை.

### 16.3 மகுடம்

பாடல்கள்

'மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத் தாயே!

என மகுடம் வைத்துப் பாடப்பட்டுள்ளன.

### 16.4 யாப்பு

இச்சதகத்தின் காப்புச்செய்யுள் நேரிசை வெண்பாவில் அமைந்துள்ளது. ஏனைய நூறு பாடல்களும் அறுசீர் ஆசிரிய விருத்தத்தால் ஆனவை. இறைவியை விளிக்கும் தொடர்கள் மிகுதியாக இருப்பதால் பாடல்கள் பாராயணம் செய்தவற்கு ஏற்ற வகையில் எளிமையாக விளங்குகின்றன.

### 16.5 பிழைத் திருத்தம் பெற்ற இடங்கள்

| பாடல் | அடி | | |
|---|---|---|---|
| *211* | *3* | கொளிவா | - கொளியா |
| *219* | *2* | துலையாது | - தொலையாது |
| *250* | *1* | திருவருளத்தாதி | - திருவருளந்தாதி |
| *256* | *3* | துடங்கும் | - தொடங்கும் |
| *257* | *2* | ஈசர் | - ஈனர் |
| *269* | *1* | அருளுங்கறிவா | - அருளுக்கறிவா. |

### 16.6 அவையாம்பிகையை விளித்த திருநாமங்கள் (எண் - பாடல் எண்ணைக் குறிக்கும்)

என அவையாம்பிகை ஆயிரம் போற்றி அமைக்கும் வண்ணம் இறைவியை விளிக்கும் தொடர்கள் திகழ்கின்றன.

## 17. செயங்கொண்டார் சதகம்

இச்சதகம் உலகில் மக்களிடையே வழங்கப்படும் பழமொழிகளைப் பற்றிக் கூறுகின்றது. ஆசிரியர் வெயிலுகந்த கணபதியின் திருவடிகளை முதலில் வழுத்தி, பின்னர் முருகப்பெருமான், கலைவாணி ஆகியோரைத் துதித்து, அவையடக்கம் பாடி இறுதியில் வரரிஷியின் கதையை விளக்கி நூலை நிறைவு செய்துள்ளார்.

### 17.1 ஆசிரியர்

இந்நூலை இயற்றியவர் முத்தப்பச் செட்டியார். இவர் தந்தை பெயர் அழகப்பச் செட்டியார். ஆசிரியருடைய ஊர் மதுரைச் சீமை சிவகங்கை சமஸ்தானம் கீழைச் சேவற்பட்டு இடையாற்றங்குடி என்று சொல்லப்பட்ட நேம நகரம். இந்நூலை முத்தப்பச் செட்டியார் முதலில் பதிப்பித்துள்ளார். அதன் படிகள் கிட்டாமையால் *1913*-இல் மீண்டும் இந்நூல் பதிப்பிக்கப்பட்டது. எனவே முதல்பதிப்பு நாற்பது ஆண்டுகளுக்கு முற்பட்டிருக்கலாம். அதனைப் பதிப்பித்தவர் நூலாசிரியர் பெயரர் நாராயணஞ் செட்டியார். எனவே நூல் இயற்றப்பட்ட காலம் அதனைப் பதிப்பித்ததற்குச் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் இருக்கலாம். இவற்றையெல்லாம் நோக்க ஆசிரியர் இச்சதகத்தை இயற்றிய காலம் *19*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தது என முடிவு செய்யலாம். சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இந்நூல் பாடப்பட்டிருப்பதால் ஆசிரியர் சைவ சமயத்தவர் என்பது புலனாகின்றது. ஆசிரியர் தமிழ்ப் புலமை மிக்கவர். இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கும், 'திருமுக விலாசம்' என்ற நூலையும் இவ்வாசிரியரே இயற்றியுள்ளார். இதன் வாயிலாக நூலாசிரியருடைய கவிபாடும் திறனும் தெய்வபக்தியும் புலனாகின்றன.

### 17.2 பாடுபொருள்

நூலின் பாட்டுடைத்தலைவர் நேமநகரச் சிவபெருமானாகிய செயங்கொண்டார். மக்களிடையே வழங்கப்படும் நூறு பழமொழிகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. அவற்றை விளக்க இராமாயணத்திலிருந்து இராமன், சீதை, வாலி, இராவணன், வீடணன், இந்திரசித்து, அநுமன், குசலவர் முதலியவர் பற்றிய செய்திகளும், மகாபாரதத்திலிருந்து தருமன், அர்ச்சுனன், துரியோதனன் கர்ணன், கண்ணன் ஆகியோர் பற்றிய செய்திகளும், விநாயகர், முருகப் பெருமான், கருடன், விஷ்ணு முதலிய தெய்வம் பற்றிய கதைகளும், கந்தபுராணம், திருவிளையாடல் புராணம் பற்றிய செய்திகளும், வால்மீகர், மார்க்கண்டர்,

விசுவாமித்திரர், மிருகண்டர், வசிட்டர், துர்வாசர், வரரிஷி, துரோணர், தக்கன், சுக்கிரன் என்னும் முனிவர் பற்றிய செய்திகளும், அரிச்சந்திரன், நளன், உருக்குமாங்கதன், மனுநீதிச் சோழன், சீவகன், விக்கிரமாதித்தன், சகரர்கள், இரணியன், சூரபதுமன், மகாபலி, வரகுண பாண்டியன், சேதுபதி இவர்கள் பற்றிய செய்திகளும், சுவாகா, அருந்ததி, ரேணுகா தேவி, அகலிகை, அமராவதி, பிரகற்பதி தேவி தாரை, சீதேவி, மூதேவி ஆகிய மகளிர் பற்றிய விவரங்களும், காளிதாசன், நக்கீரன், நிரம்ப அழகியர், செந்நாப்புலவர், அம்பிகாபதி, சத்தி முற்றப்புலவர் முதலிய புலவர் பற்றிய செய்திகளும், சிவனடியார் பற்றிய குறிப்புக்களும், இராக்கதன், காந்தக்கல் கோட்டையை வென்றவன், அரசன் மனைவி குட்டரோகி, பொய்த்தவ ஒழுக்கத்தினர், மானமுள்ள மாபுருடன், விறகு தலையன், பஞ்சதந்திரக் கதை, அச்சுதவாணன் சிறப்பு முதலிய செவிவழிச் செய்திகளும் பழமொழி வாயிலாகச் சதகத்தின் ஒவ்வொரு பாடலிலும் விளக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் குறிப்பிடும் சில செய்திகள் இக்காலத்து நமக்குப் புதுமையாக உள்ளன. சில பழமொழிகளின் பொருளைக் காலவேறுபாட்டால் உள்ளபடி உணர முடியவில்லை.

இந்நூலில் நூறு பழமொழிகள் கூறப்பட்டாலும் சில பழமொழிகளுக்கு எடுத்துக்காட்டுக்கள் அவ்வளவு பொருத்தமாக இல்லை.

பாடல்கள்: *305, 308, 312, 316, 322, 327, 330, 341, 347, 354, 367, 370, 371, 375, 379, 384 = 16.*

சில பழமொழிகளின் பொருள் நன்கு விளங்கவில்லை. இவை வட்டார வழக்காக இருக்கலாம்

பாடல்கள்: *356, 362, 372, 392, 397 = 5*

மக்களிடையே வழங்கப்படும் பழமொழிகள் பற்றிக் குறிப்பிடுவதால் நூலில் பேச்சுவழக்குச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவை

நிசம் - *349*
குமுணராசன் - *371*
வதிஷ்டர் - *356*
வாலகிருஷ்ணன் - *369*

முதலியனவாகும்.

### 17.3 மகுடம்

இந்நூலின் பாடல்கள் யாவும் ஈற்றடியில் ஒரு பழமொழியைக் கொண்டு முடிவடைகின்றன. ஆசிரியர் தென்நேமம் ஊரில் கோயில் கொண்டிருக்கும்

செயங்கொண்ட சோழீசர் திருப்பெயரை 'செயங்கொண்டார், செயங்கொண்டாரே' என இருவிதமாக ஈற்றயலடியில் இடம் பெறச் செய்துள்ளார். எனினும் இதையே மகுடமாகக் கொள்ளலாம் சதக இலக்கிய வகையில் பெரும்பான்மையான சதக நூல்கள் மகுடம் பெற்றே முடிகின்றன.

### 17.4 யாப்பு

நூலின் பாயிரமாக விளங்கும் காப்புச் செய்யுள், முருகப்பெருமான், கலைவாணி ஆகியோர் துதி, அவையடக்கப் பாடல் என்பனவும் ஏனைய நூறு பாடல்களும் அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ளன.

### 17.5 பிழைத் திருத்தம் பெற்ற இடங்கள்

| பாடல் | அடி | | |
|---|---|---|---|
| 368 | 1 | தாயபர | - தயாபர |
| 339 | 1 | முரித்தான் | - முறித்தான் |
| 383 | 2 | குசன் | - குசலன் |
| 400 | 3 | விரைத்த | - விதைத்த |

### 17.6 நூலில் இடம்பெறும் பழமொழிகள்

| வ.எண் | | பாடல் எண். |
|---|---|---|
| 1. | அஞ்சி நல்ல வார்த்தை சொன்னால் பொல்லாப்பு வருவதில்லை | - 347. |
| 2. | அயல் வீட்டான் மகன் ஆபத்துக்கு உதவான் | - 331 |
| 3. | அனுபோகம் தொலைந்திடும் போது அவிழ்தமும் சித்திக்கும் | - 348 |
| 4. | ஆற்றோடே மூடர் நேர்போனாலும் போறதல்லால் ஓடக்காரனுக்கு அரைக் காசும் கொடுக்கப் பொருந்திடார் | - 365. |
| 5. | இச்சையுள்ள காமுகர்க்குக் கண் கண்ட இடத்தில் | - 382. |
| 6. | இடுவது பிச்சை பின்பு பெறுவதுவே மோட்சம் | - 402. |
| 7. | இதசாணி ஒரு கூடை மிக்க சவ்வாது ஓர் பணத்திடை | - 394. |
| 8. | இலங்காபுரி ராமராண்டால் என்ன வேச்சிலரக்கர்காளண்டால் என்ன | - 374 |
| 9. | உடை கலைந்த பின்பு சொந்த முறைகள் கொண்டாடுவாரே | - 320 |
| 10. | உண்டென்ற பேர்க்கு உண்டு இல்லையென்ற பேர்க்கு இல்லை | - 333 |
| 11. | உயரத்தான் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகா | - 344 |
| 12. | உறவுதனைப் போலிருந்தும் குளவியைப்போல் கொட்டுவர் | - 353. |
| 13. | உனக்கு மழை பெய்யும் இப்போது எனக்கு இறவை நீர்தா | - 346 |
| 14. | ஊரிரண்டு பட்டதென்றால் கூத்தாடிக்கே லாபம் | - 313 |

80. பெருமரத்தைச் சுற்றி நின்ற வல்லியுங் சாகா - 306
81. பேருலகில் மனங்கலங்கிப் பிரியாமற் பிடித்தவர்க்குப் பேறுண்டு - 385
82. மந்திரங் கால் மதி முக்கால் - 378
83. மலை பெரிதானாலும் என்ன சிற்றுளிக்குப் பயம் சனிக்கும் - 369
84. மன்னவ னெப்படியோ மன்னுயிரு மப்படி - 360
85. மாமதலை மேற் கையும் வேலிபுறத்தினிற் கண்ணும் வைத்தவாறு - 363
86. மானமிழந் துயிர் காப்ப தென்ன - 375
87. முகடுமுட்ட வரும் கோபம் துரும்பு குத்த வேலை - 356
88. முள்ளாலே எடுக்க வேண்டியதைக் கோடாலியால் எடுக்க வந்த முறைமை - 318
89. மூத்ததுவே மோழை இளையதுவே காளை - 389
90. யானை நிழல் பார்க்கையிலே தவளை வந்து கலக்கிவிடும் - 311
91. ருசியும் பசியும் பார்க்கும் ஊணரும் தம் கருமம் இழந்திடுவர் - 345
92. வஞ்சம் நெஞ்சைப் பிளக்கும் - 309
93. வல்லார்க்குப் புல்லும் ஓர் ஆயுதம் - 326
94. வலியார்க்கு வலியாரு மிருப்பர் - 395
95. வாற விதி வந்ததென்றால் வளைந்தாடும் பானை - 392
96. வித்துவான் மத யானை யிரண்டும் ஒப்பு - 381
97. வெண்ணீறே வினையகற்றும் தரிப்பவர்க்குச் சிவகதியும் மேவும் - 317
98. வெண்ணெய் படும் வேளையிலே தாழி உடைந்திடுதல் முன் செய்வினை - 335
99. வெள்ளம் வரும்முன் அணையைக் கோலிவைப்போர் காரியங்கள் மிக நன்று - 358
100. வேணுமென்று நூற்றால் மெல்லிய நூலாய் நூற்றிடுவர் - 398.

என்று மக்கள் பேசும் பழமொழிகள் கையாளப்பட்டுள்ளன.

**17.7 சிவபெருமானுக்குரிய அடைமொழிகள்**
**(எண் - பாடல் எண்ணைக் குறிக்கும்)**

| | |
|---|---|
| அழலுமழு வணிகரத்தார் | 323 |
| ஆதவன் எயிற்றைப் பறித்தார் | 341 |
| இண்டைபுனை சடையார் | 319 |
| கங்கை திங்கள் அரவமொடு கொன்றை அணி செயங்கொண்டார் | 384 |
| கைத்திகிரியோன் பணியும் செயங்கொண்டார் | 321 |
| கொன்றை அணி செயங்கொண்டார் | 362 |
| சடைக்கு இதழி மாலை அணிந்தார் | 312 |

எனச் சிவபெருமான் பெருமைகள் இச்சதகத்தில் எஞ்சாமல் கூறப்பட்டுள்ளன.

## 18. திருமுக விலாசம்

இந்நூல் சிகண்டி மலையில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் பெயரில் பாடப்பட்டுள்ளது. ஆசிரியர் விநாயகரை வணங்கி நூலைத் தொடங்கி

நூலுள் தாம் குறித்த செய்திகளை விளக்கி, உலகை ஆளும் இறைவனாம் முருகப்பெருமான் வாழி என்று வாழ்த்தி நூலை முடித்துள்ளார்.

### 18.1 ஆசிரியர்

இந்நூலை இயற்றியவர் அழகப்பச் செட்டியார் மகன் முத்தப்பச் செட்டியார். இவர் ஊர் மதுரைச் சீமை சிவகங்கை சமஸ்தானம் கீழைச் சேவற்பட்டு இளையாற்றங்குடி எழு நகரம் என்று சொல்லப்பட்ட நேம நகரம் ஆகும். முத்தப்பச் செட்டியார் இந்நூலைப் பாடி, அருணை நகர் வீரபண்டாரம் குமாரர் சுப்பிரமணிய பண்டாரத்துக்கு அளிக்க, இவர் பெயரர் நாராயணஞ் செட்டியார் கேட்டுக் கொண்டபடி, பதிப்பித்த பதிப்பிற்கு இணங்க *1913*-இல் இந்நூல் பதிப்பிக்கப்பட்டது என்ற முகப்புச் செய்தியை நோக்க இந்நூல் *19*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பாடப்பட்டதாதல் வேண்டும். இவர் 'செயங்கொண்டார் சதகம்' என்னும் நூலையும் இயற்றியுள்ளார். ஆசிரியர் கவிபாடும் ஆற்றல் மிக்கவர். சிவபெருமானிடமும் முருகப்பெருமானிடமும் மிகுந்த ஈடுபாடுடையவர்.

இந்நூலை முத்தப்பச் செட்டியார் இயற்றினார் எனினும் சுப்பிரமணிய பண்டாரத்தின் பெயரே இவ்விலாசத்தில் இடம் பெறுகிறது.

> "விற்பனம் சேர்அருணை வீரபண்டா ரத்தின்மகன்
> சுப்பிர மண்யனென்று சொன்னேனா__"

என்ற *87*-ஆம் கண்ணியை நோக்குக.

### 18.2 பாடுபொருள்

'திருமுக விலாசம்' என்பது *96*-வகைச் சிற்றிலக்கியங்களில் கணக்கிடப்படாத பல சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. பதினோராம் திருமுறையில், 'திருமுகப் பாசுரம்' என்பது இடம் பெற்றுள்ளது. 'திருமுகம்' என்பது, 'செய்தி எழுதி அனுப்பப்பட்ட ஓலை'. அவ்வோலைச் செய்தியோடு தொடர்புடைய பிற செய்திகளையும் அழகுற அமைத்துப் பாடப்பட்ட நூல் திருமுக விலாசம். இந்நூல் முருகப்பெருமான் பிறப்பும், பெருமையும் பற்றிக் குறிப்பிடுகிறது. புலவன் சிகண்டி மலையிலுள்ள முருகப்பெருமானைப் போற்றிய வண்ணம் அவனைத் தரிசிக்கச் செல்லுதல், முருகப்பெருமான் அவனை வரவேற்று வந்த காரியம் வினவுதல், புலவன் தன் வறுமை நிலையை எடுத்துரைத்து அதனைப் போக்குமாறு முருகப்பெருமானை வேண்டுதல், முருகப்பெருமான் தன் தந்தை, தாய், தமயன், மாமன் ஆகியோர் செய்திகளையும், தன்னைப் பற்றிய செய்திகளையும் கூறல், முருகப்பெருமான் தன் துயர் போக்க வேண்டும் என்று புலவன் முருகப்பெருமானை வேண்டுதல், முருகப்பெருமான் எழு நகரத்தாருக்குத்

திருமுகம் எழுதிப் புலவனிடம் கொடுத்து அனுப்புதல், எழு நகரத்தார் புலவனுக்குச் செய்த சிறப்புக்கள் என்பன பற்றி *237* கண்ணிகளில் அமைக்கப் பெற்றுள்ளது.

**18.3 யாப்பு**

காப்புச்செய்யுள் நேரிசை வெண்பாவால் ஆனது. இந்நூல் கலிவெண்பாவாய் *237* கண்ணிகளைக் கொண்டது.

**18.4 பிழைத் திருத்தம் பெற்ற இடங்கள்**

| | | | |
|---|---|---|---|
| *3* | சுராரிடுக்கம் | - | சுராரிடுக்கண் |
| *96* | கண்டிரங்கா லுத்த | - | கண்டிரங்கா உலுத்த |
| *115* | கண்ணினார் | - | கன்றினார் |
| *104* | பரதவித்து | - | பரிதவித்து |
| *141* | நாடரிய | - | நாடறிய |

இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கும் நூல்களை இயற்றிய ஆசிரியர்கள் அனைவரும் சைவ சமயத்தைச் சார்ந்தவர் எனக் கொள்ளலாம். எல்லா நூல்களிலும் காப்புச்செய்யுள் விநாயகப்பெருமானை வழுத்துவதாக அமைந்துள்ளது. செயங்கொண்டார் சதகத்தில் பாயிரம் காணப்படுகிறது. கயிலாசநாதர் சதகம் வாழியுடன் நிறைவு பெறுகிறது. நான்கு சதக நூல்களும் ஆசிரிய விருத்தத்தால் ஆனவை. திருமுக விலாசம் என்னும் சீட்டுக்கவி கலிவெண்பா யாப்பில் பாடப்பட்டுள்ளது.

விருத்தங்கள் ஓசை நயத்துடன் மேம்பட்டு விளங்குகின்றன. திருத்தொண்டர் சதகம் இறைவன் அருள் பெற்ற அடியார்கள் வாழ்ந்த உயர்ந்த நிலையைக் காட்டுகிறது.

கயிலாசநாதர் சதகத்தில்

சீர்மேவு திங்களணி தேவனே*!* வண்மைபெறு
தில்லை வளர்நட ராசனே*!*
செங்கண்மா லயனுநின் னடிமுடிகள் காணாமல்
தேடிய மஹாதேவனே*!*
தார்மேவு பொங்கர வணிந்தசிவ சம்புவே*!*
சங்கரா*!* கங்காதரா*!* . . . . . . . . . . . . . . *(104)*

என்ற பாடல் ஓசை நயமுடையதாய் விளங்குகிறது.

அவயாம்பிகையைப் பலவாறு பாராட்டி விளிக்கும் பாடல் இயைபுத் தொடையில் மிகச் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளது.

அஞ்சு முகத்தி! நலமுகத்தி! யாறு
முகத்தி! சதுர்முகத்தி!
யலையின் றுயிலு மான்முகத்தி! யருணை
முகத்தி! பரம்பரத்தி!
பஞ்சா க்ஷரத்தி! பரிபுரத்தி! பாசாங்
குசத்தி! நடுவனத்தி!
பதுமா சனத்தி! சிவபுரத்தி! பாரத்
தனத்தி! திரிகுணத்தி! . . . . . . . . . (206)

அவயாம்பிகையைப் பல கிளிகளாகவும், மணிகளாகவும், பழங்களாகவும் உருவகிக்கப்பட்டுப் பாடியுள்ள பாடல்கள் சுவையாக உள்ளன.

உச்சிக் கிளியே! யருட்கிளியே! யுணர்வுக்
குணர்வா யுயிர்க்குயிராய்
உதித்த கிளியே! பரவெளியி லொளிவான்
பழத்தை யுன்னிவரும்
நற்சொற் கிளியே! கதம்பவன நகரில்
வாழும் பரைக்கிளியே!
ஞானக்கிளியே! மறைவனத்தி நடனக்
கிளியே! சிவக்கிளியே! (207)

எங்கும் நிறைந்த அருள்மணியே! யேக
மணியே! யொளிர் மணியே!
இறையோ னிடத்தி னடனமிடு மிமைய
மணியே! நவமணியே! . . . . . . . . (211)

பண்டு மறையின் முடிவினுள்ளே பழுத்த
பழமே! யருட்பழமே!
பரிபா கத்துப் பத்தர்நெஞ்சிற் படர்ந்த
பழமே! நவமுடிமேல்
என்றுங் கனிந்த திருப்பழமே! யிமையோர்
தேடித் தேடியுமே
யெட்டாப் பழமே! காசினியி லெவர்தாந்
தன்னயே யுணர்ந்தோர்கள்
கண்டு புசிக்கும் பதிப்பழமே! கருணைப்
பழமே! சிவப்பழமே! . . . . . . (208)

செயங்கொண்டார் சதகத்தின் அவையடக்கப் பாடல் மிகுந்த கற்பனை நயத்துடன் விளங்குகிறது. இச்சதகத்துடன் தண்டலையார் சதகத்தை ஒப்பிட்டுப் பார்ப்பின், மதயானைக்கு முன்னர் ஒரு சிற்றெறும்பு நடந்தது போலத் தோன்றும் என்பதை,

பத்தருளத் தினிற்சூரி தண்டலையென் றெமக்குரைத்த
பரமர் மீதில்
வித்தகர்முன் னுலகவழக் கத்தையெடுத் தொருநூறு
விருத்தஞ் செய்தா
ரத்தைநிக ரெனச்செயங்கொண் டார்மீதின் முத்தையன்சிற்
றறிவி னாலே
மத்தகயந் தனக்குமுன்னே சிற்றெறும்பு நடந்ததென
வசனித்தேனே ................. *(4)*

இதிலிருந்து செயங்கொண்டார் சதகம் தண்டலையார் சதகத்தைவிடக் காலத்தால் பிற்பட்டது என்பதை உணரமுடிகிறது. இச்சதகத்தில் புராண, இதிகாச, வரலாற்று நிகழ்ச்சிகளைப் பின்புலமாக அமைத்து மக்களிடையே பேசப்படும் பழமொழி வாயிலாக நீதிக் கருத்துக்களைக் கூறியிருக்கும் விதம் அருமையாக உள்ளது.

திருமுக விலாசத்தில், முருகப் பெருமான் தன்னிடம் உதவி நாடி வந்த புலவனிடம், தன்னைப் பற்றிய செய்திகளைக் கூறும் இடம் நகைச்சுவையுணர்வு மேலிடும் வகையில் அமைந்துள்ளது.

"கோழி பிடித்தேன் குறத்திதனை மாலையிட்டேன்
பேழை வயிற்றனுக்குப் பின்னானேன் *(-156)*

"வேலொழிய வென்கையில் வேறுபொரு ளுண்டானாற்
சாலவுரைப் பாய்நான் றருகிறேன்"......... *(170)*

இந்நூல்கள் அனைத்தும் இறைவனையும், அடியார்களையும் துதிக்கும் நிலையிலும், அறக்கருத்துக்களை அறிவுறுத்தும் வகையிலும் அமைந்திருப்பதால் வருணனைப் பகுதிகள் மிக அருகியே உள்ளன. இவ்விலக்கியங்கள் பிற்காலத்தில் தோன்றியதால் எளிய நடையில் அமைந்துள்ளன. மக்கள் மனத்தைப் பிணிக்கும் வண்ணம் ஆசிரியர்கள் பேச்சு வழக்குச் சொற்களைக் கையாண்டிருப்பது இயல்பாகவும் சிறப்பாகவும் உள்ளது. உலக வழக்கங்களை அறிந்தமைத்தது போலவே உலக வழக்குச் சொற்களையும் ஏற்புடைய இடங்களில் அமைத்துள்ளனர்.

அவையாம்பிகை சதகத்தில் தமிழ் எழுத்தில் பல வடமொழிச் சொற்கள் வரையப்பட்டுள்ளன.

**பேச்சுவழக்குச் சொற்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| பாரி | - *331* | வாலகிருஷ்ணன் | - | *369* |
| அவிழ்தம் | - *348* | குமுணராசன் | - | *371* |
| அழகுதுரைச்சி | - *243* | ரத்தச்சோரி | - | *371* |
| நிசம் | - *349* | பிரட்டும் | - | *371* |
| கைக்கூலி | - *351* | பற்றாதென | - | *396* |

முதலியன சதக நூல்களிலும்

காய்த்து - *105*

சாரமில்லை - *108*

போன்றவை திருமுக விலாசத்திலும் கையாளப்பட்டுள்ளன.

இவற்றுள் பாரி, சாரமில்லை என்பன இன்று மலையாள வழக்காக உள்ளன.

**வடசொல்**

| | | | | |
|---|---|---|---|---|
| விருக்ஷம் | - *222* | சதுர்கோணம் | - | *264* |
| வருஷம் | - *255* | பத்மாசனி | - | *272* |
| சனனம் | - *256* | நவபீடாசனி | - | *276* |
| கிர்பை | - *256* | சதுர்க்கரணம் | - | *292* |
| சென்மம் | - *219* | சேஷாபரணி | - | *295* |
| துவாத சாந்த நிலையாளே | - *231* | பூரணி | - | *293* |
| அக்ஷரத்தி | - *248* | பவிஷு - திருமுக விலாசம் | - | *178* |

முதலிய வடசொற்களும் காணப்படுகின்றன.

செயங்கொண்டார் சதகத்தில் திருப்பதி வேங்கட சதகம் *(376)*, கூளேந்திரன் விறலி விடு தூது *(367)* இவற்றில் உள்ள நிகழ்ச்சியும், வரகுணப் பாண்டியன் கதை *(364)*, நந்தி மன்னன் - கல்விக்காக உயிர்த்தியாகம் செய்தது *(391)*, பட்டினத்து அடிகளுக்கு அவர் தமக்கை நஞ்சு கலந்த பலகாரம் கொடுத்தது *(377)*, பாண்டிய மன்னன் குதிரைகளை வாங்கியது *(396)*, இளங்குமணன் முன் குமணன் தலையைப் போலச் செய்து கொடுத்தது *(371)* போன்ற வரலாற்றுச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

இங்ஙனம் கற்போரும் கேட்போரும் இறைவனருள் பெற்று இருவினை நீங்கி என்றும் இன்புற்று வாழ வழிகோலும் வண்ணம் இந்நூல்கள் அமைந்துள்ளன.

உ

சிவமயம்

திருப்பாண்டிக் கொடுமுடி

மலைக்கொழுந்து நாவலரவர்கள்

இயற்றிய

திருமாணிக்கமாமலை

# திருத்தொண்டர் சதகம்

குருவே துணை

நூலாசிரியர் மீது

திருநெல்வேலி புதுத்தெருவிலிருந்த ம-ள-ள-ஸ்ரீ, வித்வான்
அழகிய சொக்கநாதபிள்ளையவர்கள் இயற்றிய

## சிறப்புப் பாயிரம்

### கொக்கசக் கலிப்பா

பொன்னிநதிச் சோணாட்டிற் காவிரிப்பூம் பட்டினத்துச்
சென்னியென மன்னிகலாற் சிந்தனைநொந்து சார்வணிகர்
முன்னியவா றாதரித்துத் தில்லைமூ வாயிரர்போற்
பன்னிருவ ரெனவவரைப் பார்சொலச்சேர்ந் துறைபரமன். (க)

தோட்போக்கி வாணனைமாய்த் தவன்றுருவப் பாதலக்கீழ்த்
தாட்போக்கி நின்றபிரான் றனிநுதற்கட் டழற்படையால்
வேட்போக்கி மலைமகளை மணந்தருணை வெற்பனைய
வாட்போக்கி சிவதையெனு மாணிக்க மலையமர்ந்தோன். (உ)

அலைக்கொழுந்து முடங்குகங்கை யாற்றினொடுங் கீற்றுமதிக்
கலைக்கொழுந்து படருமுடித் தழும்பர்திருக் கழலிணைக்கே
யிலைக்கொழுந்து மலரின்வகை புலருமென வெழிற்கச்சி
மலைக்கொழுந்து நாவலன்பா மாலைதொடுத் தணிந்தனனால்
(ங)

சாத்திடுமம் மாலிகைப் பேர் திருத்தொண்டர் சதகமஃ
தேத்திடுநல் லடியரகத் திருளகற்றி யெப்பற்று
நீத்திடுமெஞ் ஞானநல்கி நிமலனடி நிழலிருத்திக்
காத்திடுநிச் சயமதனைக் கரதல ஆமலகமென. (ச)

தேர்ந்துருக்க மிகலானு மகிலமெங்குஞ் சிறக்கவுள்ளங்
கூர்ந்துமேற் கூறியபன் னிருவரெனுங் குழுவினரு
நேர்ந்துசில பத்தர்களும் வேண்டுநிமித் தமதானு
மோர்ந்து பெருங் கல்வியறி வொழுக்கமதா லுயரொருவன்.
(ரு)

## அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இந்திரை யரன்றாள் பூசித் தின்னருள் பெற்ற நீராற்
செந்திரு வாரூ ரென்னத் திகழ்தலத் துதித்த செல்வன்
மந்திராக் கரங்க ளஞ்சும் வைகலுஞ் சிந்தை செய்வோன்
தந்திர மதியி னான்செந் தமிழ்வளங் கொழிக்கும் வாயன்.
(சா)

சிவனடி யார்க டம்மை யவனெனப் பேணுஞ் சீலன்
றவமரு ளுருத்தி ராக்க நீற்றணி தழைக்கு மெய்யன்
கவர்புறச் சமைய மேற்கொள் கண்டகர்க் கசனி போல்வான்
அவனியிற் பொறையு ளானென் னணையவர்க் குயிரே
யன்னான் (எ)

அப்பர்சுந் தரர்சம் பந்த ரருட்டிருப் பாட லெல்லாந்
துப்பவிர் சடையான் காதிற் றும்புரு வெனவே பாடு
மொப்பருஞ் சொக்க லிங்க வோதுவா மூர்த்தி யென்னச்
செப்பபி தானம் பெற்ற செகப்பிர சித்த னானோன். (அ)

### ஷ வேறு

கருதுபல் பிரதிகளைக் கொண்டுநன்கு பார்வையிட்டுக்
கமழுந் தென்றன்
மருவுமலைக் குறுமுனிவன் கமண்டலோ தகப்பொருநை
வளப்பந் தன்னாற்
பருவரலி னெல்லைநகர் முத்தமிழ்அகர அச்சிற்
பதிப்பித் தும்பர்
இருசுடர்க ளுள்ளமட்டும் பெருகுபுகழ்ப் பயிரைவளர்த்
திட்டான் மன்னோ. (கூ)

குருவே துணை

# திருத்தொண்டர் சதகம்

இச்சதகம் காஞ்சிபுரத்தில் வாழ்ந்த கச்சிமயேசுர திலகராகிய திருப்பாண்டியக் கொடுமுடி மலைக்கொழுந்து நாவலரால் இயற்றப்பட்டது. இந்நூல் காப்புச்செய்யுளாம் வெண்பா நீங்கலாகப் பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் அமைந்த *103* பாடல்களை உடையது. ஒவ்வொரு பாடலும், 'கயிலை, வாசனே*!* இராசலிங் கேசனே*!* சிவதை நகர் மாணிக்க மலை நாதனே*!* என மகுடம் வைத்துப் பாடப்பட்டுள்ளது.

இந்நூல் நாயன்மார் தொகை, திருமரபு, குரு அருளால் வீடுபேறு பெற்ற நாயன்மார், இலிங்க வழிபாட்டால் வீடுபேறு பெற்ற நாயன்மார் அடியார்க்கு அடியராய் வீடுபேறு பெற்ற நாயன்மார், இயல் இசைத் தமிழில் சிறந்து வியங்கிய நாயன்மார், திருத்தொண்டர் புராணத்தில் வரிசையாக இடம் பெற்றிருக்கும் நாயன்மார்கள் முதலியோரைப் பற்றி மிகச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றது. நூல் இறுதியில் சிவபெருமானை வழிபட்டுப் பேறுபெற்ற சான்றோர்கள் பிறரைப் பற்றிய செய்திகளும் உள்ளன.

திருமாணிக்கமாமலை

# திருத்தொண்டர் சதகம்

## கணபதி காப்பு

### நேரிசை வெண்பா

**மாதின்ஒரு பாகர்திரு மாணிக்க மாமலையார்**
**மீதில்அன்பர் பேறுகொண்ட மெய்ச் சதகம் - ஓதிடவே**
**தந்தனக்கும் எட்டாத சங்கரிதான் பெற்று உகந்த**
**கந்தனுக்கு முன்உதித்தோன் காப்பு.**

***பொழிப்புரை:*** பார்வதியை ஒப்பற்ற இடப்பாகமாகக் கொண்டவராய், மாணிக்க மலையாம் சிவதைப்பதியில் உகந்தருளியிருக்கும் இராசலிங்கேசப் பெருமான் பெயரால் நாயன்மார்கள் இறைவன் அருள் பெற்ற உண்மை வரலாறு ஆகிய நூறு பாடல்கள் கொண்ட இப்பிரபந்தத்தை அடியேன் இயற்றுவதற்கு ஐம்பொறிகளையும் வென்ற தவயோகியாலும் முழுமையாக உணர இயலாத உமாதேவி தன் மூத்த மகனாகப் பெற்று மகிழ்ந்த முருகனுக்கு முன் தோன்றியவனாகிய கணபதி பாதுகாவல் அருளுவான்.

***அருஞ்சொற்பொருள்:*** தாந்தன் - ஐம்பொறி புலன்களை வென்றவர்,அச்சொல் எதுகைக்காக முதல் குறுகித் தந்தன் என நின்றது. வெண்பா ஆதலின் பாகர்திரு என்ற சீரில் ரகர ஒற்று கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படாமல் 'பாகதிரு' என்பது போலக் கொள்ளப்பட்டது.

## அவையடக்கம்

### பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

1. **பூமேவு வன்தொண்டர் கருணைகூர்ந்து எழில்பெற,**
**புகல்திருத் தொண்டத் தொகை,**
**பொற்புஉலவு நம்பியாண் டார்கலித் துறைவகைப்,**
**பொருள் கொண்டு சேக்கிழார்சொல்**
**நாமேவு தொண்டர்கள் புராணவிரி, கொற்கையார்**
**நவிலும் புராண சாரம்,**

நாடித் திருத்தொண்டர் சதகம்அதை நாயினேன்
நாவலர்முன் ஓது பான்மை
தூமேவு சோலையில் சோனைமுகில் கண்டுகளி
சூழ்ந்து விளையாடல் புரியும்
தோகைமயில் கண்டு,தன் சிறகரை விரித்துஆடு,
சூட்டு வான்கோழி ஒப்ப,
மாமேவு வெள்ளைவிடை மீதுஏறி, அன்பர்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** நூல் அரங்கேற்றம் நிகழ்த்தும் சபையோர்க்கு முன் நூல் செய்த ஆசிரியன் தான் பணிவோடு நூலில் அடங்கி இருக்கும் செய்தியைக் கூறுதல்.

சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் புராணம், கொற்றையார் அருளிய புராணசாரம் இவற்றின் அடிப்படையில் கான மயிலாடக் கண்ட வான்கோழி தானும் ஆடுவது போல அடியேன் இந்தத் திருத்தொண்டர் சதகத்தைக் கயிலாச வாசனாகிய சிவதை என்னும் இரத்தினிகிரி பெருமானின் அருளினால் பாடுகின்றேன்.

**அ.பொ:** சோனை முகில் - மழை பெய்யும் மேகம்; தோகை மயில் - ஆண் மயில்; சிறகர் - சிறகு; சூட்டு - உச்சிக் கொண்டை; மா - பெருமை; வாசன் - வசிப்பவன்; லிங்க ஈசன் - லிங்கேசன்; ஈசன் - அடக்கி ஆள்பவன். **(க)**

## திருத்தொண்டர் நூல் சிறப்பு

2. படிஇலகு மனுநெறி நடத்திவரும் உத்தமப்
பல்லவன் எனும் சோழன்முன்
பைந்தமிழ்ச் சீவகச் சிந்தாமணிக்கு இனிமை
பகர்பொழுது, சேவை வேளாண்
குடிபெறும் அமைச்சர்என வருசேக்கி ழார்மடக்
குண்டர்பொய்ந் நூல்இரு மையும்
குணம்கொடாது; இருமைக்கும் உறுதிநூல் வேறுஎனக்
கூற'அந் நூல்யாது?' என,
'அடிகள்புகழ்' ஆரூரர் தொண்டத் தொகைப்பதிகம்;
அதன்பொருளை ஆனை முகனால்
அறிந்துஇனிது நம்பிசொலும் அந்தாதி வகை;'என்ன,
அரசன்'விரி பகர்க' எனவே,

வடிதமிழ்ச் சேக்கிழார்க்கு, 'உலகுஎலாம்' என்றுமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மனுவின் நீதி முறையிலே நாட்டை ஆளும் உத்தமப் பல்லவன் என்னும் சோழன் சீவக சிந்தாமணியின் இனிமையைப் புகழ்ந்தபோது, அவன் அமைச்சராகிய சேவையர் குலத்து வேளாளர் ஆகிய சேக்கிழார் அது இருமைக்கும் உறுதி தாராத பொய்ந்நூல் என்று கூற உறுதி தரும் தொகை நூலாகிய திருத்தொண்டத் தொகை, வகை நூலாகிய விநாயகன் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருவந்தாதி இவற்றின் விரியாகிய நூல் ஒன்றைப் பாடுக என்று அரசன் வேண்ட, அதற்கு ஏற்பத் திருத்தொண்டர் புராணம் பாடச் சேக்கிழாருக்குக் கயிலை வாசனாகிய இரத்தினகிரிநாதன் 'உலகெலாம்' என்று அடி எடுத்துக் கொடுத்த சிறப்பினைப் போற்றுவோமாக.

**அ.பொ:** படி - உலகம்; உத்தமப் பல்லவன் - உத்தமச் சோழப் பல்லவன் என்ற சிறப்புப் பெயர் உடைய இரண்டாம் குலோத்துங்கன் *(கிபி. 1136-46)*; சேவை- சேவையர் என்ற குடும்பம்; குண்டர் - பருத்த உடலுடைய சமணர்; இருமை - இம்மை, மறுமை; அடிகள் - அடியார்கள்; வடி தமிழ் - பிழை நீக்கிய தூய தமிழ். **(உ)**

## நாயன்மார் தொகை

3. **வேதியர்கள் பதின்மூவர், சைவமறையோர் நால்வர்;**
**மிகுமருத் துவரில் ஒருவர்;**
**வேந்தர்களில் அறுவர்,குறு நிலமன்னர் ஐவர்புகழ்**
**விரவுதன வணிகர் ஐவர்;**
**தீதுஇல்வே ளாளர்பதின் மூவர்குய வர்நல்வேடர்,**
**திகழ்பாணர், கடைஞர், செக்கார்,**
**செய்யஈழ வர்தூசர், பரதர்சா லியர்தமில்**
**செப்பும்ஒ ரொருவர்; மிக்க**
**நீதிசெறி இடையர்களில் இருவர்மர புஅறியார்**
**நிகழ்ந்தபதின் மூவர் என்று**
**நீள்நிலம் மகிழ்ந்துகொண் டாடஅழி யாதபுகழ்**
**நித்திய ஆனந்த சைவ**

மாதவர் பணிந்திடப் பாதமலர் தந்துமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** அந்தணர்கள் பதின்மூவர், சிவாச்சாரியார்கள், நால்வர், மருத்துவர் ஒருவர், அரசர்கள் அறுவர், சிற்றரசர் ஐவர், தன வைசியர் ஐவர், வேளாளர் பதின்மூவர், குயவர், வேடர், பாணர், பறையர், செக்கார், ஈழவர், வண்ணார், செம்படவர், சாலியர் (ஆடை நெய்பவர்) ஆகியவர் ஒவ்வொருவர், இடையர்கள் இருவர், மரபு தெரியாதவர்கள் பதின்மூவர் ஆகிய புகழ்மிக்க சைவ நாயன்மார்கள் வழிபடும்படி அவர்களை அடிமையாகக் கொண்டவன் மாணிக்கமலை இராசலிங்கேசன் ஆவான்.

**அ.பொ:** சைவமறையோர் - சிவாசாரியார்கள்; கடைஞர் - பறையர் குலத்தவர்; செக்கார் - செக்கில் எண்ணெய் ஆட்டி விற்பவர்; ஈழவர் - மரமேறி ஆகிய சாணார்; தூசர் - வண்ணார்; பரதர் - செம்படவர்; சாலியர் - துணி நெய்வோர்.

(ந)

## நாயன்மார் திருமரபுகள் - 1

4. மோனம்மிகு தில்லைஅந் தணர்ஞான சம்பந்தர்,
முருகன்தண் டேசர், நக்கர்,
முறைமைபெறு சோமாசி மாறர்கண நாதர்மென்
மொழிசிறப் புலியர், கலயர்
ஞானம்மிகு பூசலையர், அப்பூதி, பசுபதியர்,
நமிநந்தி வேத மறையோர்;
நவிலும்வன் தொண்டர்இசை ஞானியர், புகழ்த்துணையர்
நற்சடையர் சைவ மறையோர்
போனகம் தருசிறுத் தொண்டர்நன் மருத்துவர்;
புகல்இடங் கழியார் சேரர்,
பொன்புகழ்ச் சோழர்நெடு மாறர்மங் கையர்க்குஅரசி
போற்றுகோச் செங்கண் வளவர்
மாநிலம் புகழ்வேந்தர், தாள்பணிந் திடவும்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** தில்லை வாழ் அந்தணர், ஞானசம்பந்தர், முருகர், சண்டேசர், திருநில நக்கர், சோமாசி மாறர், கணநாதர், சிறப்புலியார், கலயனார், பூசலார், அப்பூதி அடிகள், உருத்திரப் பசுபதியார், நமிநந்தியடிகள், ஆகியவர்கள் அந்தணர், சுந்தரர், சடையனார், இசைஞானியார், புகழ்த்துணையார் ஆகியவர்கள் சைவ மறையோர்.

சிறுத்தொண்டர் மருத்துவர், இடங்கழியார், சேரமான் பெருமான், புகழ்ச் சோழர், நெடுமாறர், மங்கையர்க்கரசியார், சோக்செங்கட்சோழர், இவர்கள் அரசர்கள். இவர்களை இராசலிங்கேசனாகிய சிவபெருமான் அடிமை கொண்டான்.

**அ.பொ:** மோனம் - பிறரொடு உரையாடாமை; தண்டேசர் - சண்டேசுவரர்; நக்கர் - திருநீல நக்கர்; பூசலையார் - திருநின்றவூர்ப் பூசலையார்; பசுபதியார்- உருத்திர பசுபதியார்; சேரர் - சேரமான் பெருமாள் நாயனார். **(ச)**

## நாயன்மார் திருமரபு - 2

**5.** **திருஉலவு கூற்றர்நர சிங்கர்சே தித்தலைவர்,**
**செய்யகா டவர்கோன் கழற்**
**சிங்கர்குறு நிலமன்னர்; அமர்நீதி, மூர்த்தியார்,**
**திகழ்இயற் பகைஅும் மையும்**
**தருஉயர் கலிக்கம்பர், வணிகர்திரு நாஅரையர்,**
**சாக்கியர், கலிக்கா மனார்,**
**சாத்தியார் விறல்மிண்டர், மூர்க்கர், கோட்புலியர்**
**எழில்சாற்றும் அரிவாள்தா யனார்;**
**கருணைஇளை யான்குடிப் பதிமாறர், வாயிலார்,**
**கருதுமுனை யடுவர், மானக்**
**கஞ்சாற னார்செருத் துணைநாய னார்எனக்**
**கழறும் வேளாளர் தொல்சீர்**
**மருவும்மனத் துஅன்பினில் திருவருள் புனைந்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** களந்தை நகர் அரசராகிய கூற்றுவ நாயனார், நரசிங்க முனையரையர், சேதிநாடு ஆண்ட மெய்ப்பொருள் நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், கழற்சிங்க நாயனார் என்ற ஐவர் குறுநில மன்னர்.

அமர்நீதி நாயனார், மூர்த்தி நாயனார், இயற்பகை நாயனார், காரைக்கால் அம்மையார், கலிக்கம்ப நாயனார், என்பவர் வணிகர்.

திருநாவுக்கரசர், சாக்கியர், கலிக்காமர், சத்தியார், விறல் மிண்டர், மூர்க்கர், கோட்புலியார், அரிவாட்டாயர், இளையான்குடி மாறர், வாயிலார், முனை அடுவார், மானக் கஞ்சாறர், செருத்துணையார் என்பவர் வேளாண் மரபினர். இந்நாயன்மார்களை இராசலிங்கேசன் தன் அடிமைகளாகக் கொண்டான்.

**அ.பொ:** கூற்றர் - கூற்றுவ நாயனார்; சேதித்தலைவர் - மெய்ப்பொருள் நாயனார்; காடவர் கோன் - ஐயடிகள் காடவர்கோன் நாயனார். **(ரு)**

## நாயன்மார் திருமரபு - 3

6. **செப்பஅரிய திருநீல கண்டர்குய வர்வேடர்**
**செம்மல்கண் ணப்பர்; பாணர்**
**செய்யதிரு நீலகண்டப் பாணர்கடை ஞர்நாட்**
**செல்வர்; செக்கார் கலியனார்;**
**ஒப்புஇல் ஈழக்குலத்து ஏனாதியார்; வண்ணார்**
**உயர்குறிப் புத்தொண்டர்; மெய்**
**ஓங்குபர தவரில்அதி பத்தர்சாலி யர்குலத்து**
**உற்றசிவ நேசர்; இடையர்**
**தப்புஇலாத் திருமூலர், ஆனாயர்; மரபுஇலார்**
**தண்டிஎறி பத்தர், புல்லர்,**
**தருகுலச் சிறைகாரி ஒப்பிய குறும்பர்அடி**
**சார்ந்தஅடி யாருள் மற்றும்**
**மைப்புயல் எனும்கருணை உற்பனம் நிறைந்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** திருநீலக்கண்டர் குயவர். கண்ணப்பர் வேடர். திருநீலக்கண்ட யாழ்ப்பாணர் பாணர். திருநாளைப் போவார் பறையர். கலியர் எண்ணெய் ஆட்டும் செக்கார். ஏனாதி நாதர் சான்றார். திருக்குறிப்புத் தொண்டர் வண்ணார். அதிபத்தர் செம்படவர். நேசனார் துணி நெய்யும் சாலியர். திருமூலரும் ஆனாயரும் இடையர். தண்டியார், எறிபத்தர் கணம் புல்லர், குலச்சிறையார், காரியார்,

பெருமிழலைக் குறும்பர், தில்லைவாழ் அந்தணர் நீங்கலான ஏனைய தொகை அடியார்கள் ஆகியவர்கள் இன்ன மரபினர் என்று அறிய இயலாதவர்கள். இவர்களை எல்லாம் இராசலிங்கேசன் கார்மேகம் போன்ற கைமாறு கருதாத கருணையால் அடிமைகளாக ஏற்றுக் கொண்டான்.

**அ.பொ:** நாட்செல்வர்- திருநாளைப்போவார் நாயனார்; பரதவர்- செம்படவர்; சிவநேசர் - நேசனார்; புல்லர் - கணம்புல்லர்; மைப்புயல் - கார்மேகம்; உற்பனம்- உத்தமப் பண்பு. **(௬)**

## குரு அருளால் வீடுபேறு உற்ற நாயன்மார்கள்

7. **பூமருவு தெய்வமலை மாமகள் தனத்திருப்**
**பொற்கிண்ண அமுதுஉண்டு, மெய்ப்**
**போதம்மிகு தமிழ்மாலை ஓதுசம் பந்தர்பொய்ச்**
**சமணர்வலை நீத்து நின்தாள்**
**நே(ம்)மருவு நாஅரையர் திருமூலர் நின்றசீர்**
**நெடுமாறர் அப்பூ தியார்,**
**நேயம்உறு சோமாசி மாறர்மங்கை யர்க்கரசி**
**நீலகண்டப் பாணர், பண்**
**பாமருவு மிழலைக்குறும் பர்கண நாதரொடு**
**பகரஅரிய சைவ நெறியே**
**பற்றிய குலச்சிறையும் ஆனஇப் பதினொருவர்**
**பாங்குஉலகம் ஓங்க நான்கு**
**மாமறை பராவும்உப தேசகுரு வாகமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** ஞானப்பால் உண்ட சம்பந்தர், சமணத்திலிருந்து சைவத்துக்குத் திரும்பிய திருநாவுக்கரசர், திருமூலர், நின்றசீர் நெடுமாறர், அப்பூதியார், சோமாசிமாறர், மங்கையர்க்கரசியார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், பெருமிழலைக் குறும்பர், கணநாதர், குலச்சிறையார் என்ற பதினொருவரும் குரு அருளால் இராசலிங்கேசனுடைய அடிமைகளாகி வீடுபேறு உற்றவர்கள்.

**அ.பொ:** மெய்ப் போதம் - உண்மை ஞானம். **(௭)**

## இலிங்க வழிபாட்டால் வீடுபேறு உற்ற நாயன்மார்கள்.

8. புகழ்பெறும் கலயர், எறிபத்தர், கூற்றுவனார்,
புகழ்த்துணை யார்,கண்ணப் பர்,கோட்
புலியர்,ஆ னாயர்,பசு பதியர்,சாக் கியர்,விறல்
பூசலார், புல்லர், முருகர்,
அகம்மறுஇல் சண்டீசர், நமிநந்தி, வாயிலார்,
அருள்சேரர், தண்டி யடிகள்,
எறிபத்தர், கலியர்,வாள் தாயர்,காரி யார்,தக்க
ஐயடிகள், நீல நக்கர்,
திகழ்பெற வரும்சிறப் புலியர்,திரு நாள்போவார்,
செய்யசெங் கட்சோழ னார்,
செப்பிய கலிக்காமர், பொன்கழல் சிங்கர்,வான்
செருத்துணையார், மூர்த்தி யாராய்
மகிழும்ஆ றைந்துஅடியர் பணிலிங்க வடிவுஎனமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** கலயனார், எறிபத்தர், கூற்றுவர், புகழ்த் துணையார், கண்ணப்பர், கோட்புலியார், ஆனாயர், உருத்திரப் பசுபதியார், சாக்கியர், பூசலார், கணம்புல்லர், முருகனார், சண்டீசர், நமிநந்தியார், வாயிலார், சேரமான் பெருமாள், தண்டியார், அதிபத்தர், கலியர், அரிவாட்டாயர், காரியார், ஐயடிகள், நீலநக்கர், சிறப்புலியார், திருநாளைப்போவார், கோச்செங்கட் சோழர், கலிக்காமர், கழற்சிங்கர், செருத்துணையர், மூர்த்தியார் என்ற முப்பதின்மரும் இலிங்க வழிபாடு செய்து இராசலிங்கேசனுக்கு அடிமையாய் வீடுபேறு உற்றவர்.

**அ.பொ:** வாய்தாயர் - அரிவாள் தாய நாயனார்; ஆறைந்து அடியர் - அடியார் முப்பதின்மர். **(அ)**

## அடியார்க்கு அடியராய் வீடுபேறு உற்ற நாயன்மார்கள்.

9. கணிதம்மிகு திருநீல கண்டர்,விறல் மிண்டர்,படை
கற்றுவல்ல ஏனாதி யார்,
கஞ்சாற னார்,சிறுத் தொண்டர்,நர சிங்கர்,பொய்
கடிகலிக் கம்பர், மூர்க்கர்,

பணிதன்இறை சத்தியார், அமர்நீதி யார்,மிகப்
பரவிய புகழ்ச்சோ ழனார்,
பண்புஉறை திருக்குறிப்புத் தொண்டர், சிவநேசர்,
பகரும்மெய்ப் பொருள்,மா றனார்,
அணிதரும் போரின்முனை அடுவர்,கா ரைக்காலில்
அம்மையும், இடங்கழியர், சீர்
ஆகிய இயற்பகையர் மேயபத் தொன்பதுஅடி
யார்கள்மனத்து அன்பின் மிக்க
மணிதரும் பூதிசா தனவேட வடிவுஎனமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** திருநீலகண்டர், விறல் மிண்டர், ஏனாதிநாதர், மானக்கஞ்சாறர், சிறுத்தொண்டர், நரசிங்க முனையரையர், கலிக்கம்பர், மூர்க்கர், சத்தியார், அமர்நீதியார், புகழ்ச் சோழனார், திருக்குறிப்புத் தொண்டர், நேசனார், மெய்ப்பொருள் நாயனார், இளையான்குடி மாறனார், முனை அடுவார், காரைக்கால் அம்மையார், இடங்கழியார், இயற்பகையார் ஆகிய பத்தொன்பதின்மரும் திருநீற்றையும் உருத்திராக்கத்தையும் அணிந்தவரான சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து இராசலிங்கேசன் அடிமைகளாகி வீடுபேறு உற்றவர்கள்.

**அ.பொ:** கணிதம் - கணக்கிடுதல்; பொய்கடி - பொய்யான வாழ்வை நீக்கி; தன் இறைபணி - தம் தலைவரான சிவபெருமானையே வழிபடும்; பூதி - திருநீறு; சாதனம் - உருத்திராக்கம் முதலியன. **(௯)**

## இயல் இசைத்தமிழ் நாயன்மார்களும் ஆச்சிரமும்.

10. தனிமைபெறு திருஞான சம்பந்தர், நாஅரையர்,
தக்கபே யார்இயல் இசைத்
தமிழ்மூவர் ஆயர்திரு நாள்போவார், பாணர்சொல்
தருபர மனைப்பாடு வார்
ப(ன்)னும்இசைத் தமிழ்நால்வர் ஐயடிகள், திருமூலர்
பயில்காரி யார்சேர னார்,
பண்புபெறு பொய்யடிமை இல்லாத புலவர்இயல்
பகர்வ(ல்)லோர் ஐவர்; மறுஇல்

புனிதம்உறும் இல்லறம் திருநீல கண்டனார்
பொரும் இயற்பகை உள்ளிட்டார்;
புகல்அரையர், மூர்த்தியார் துறவறம்; சண்டீசர்
புகல்பிரம சாரியர் உளோர்;
மனவாக்குடன் காயம்ஒரு மையுற்ற அடியவர்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், காரைக்கால் அம்மையார் என்ற மூவரும் இயலிசைத் தமிழால் இறைவனை வழிபட்டவர்கள். ஆனாயர், திருநாளைப் போவார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், பரமனையே பாடுவார் ஆகிய நால்வரும் இசைத்தமிழால் இறைவனைப் போற்றியவர்கள். ஐயடிகள், திருமூலர், காரியார், சேரமான் பெருமான், பொய்யடிமை இல்லாத புலவர் என்ற ஐவரும் இயற்றமிழால் இறைவனைப் போற்றியவர்கள். திருநீலகண்டர், இயற்பகையார் இவர்களை உள்ளிட்ட அடியவர் பலர் இல்லறத்தைச் சார்ந்தவர்கள். திருநாவுக்கரசர், மூர்த்தியார் இவர்கள் துறவறம் சார்ந்தவர்கள், சண்டீசர் பிரமசாரியாய் வாழ்ந்தவர். இவர்கள் மனம், மொழி, மெய்கள் ஒன்றி வழிபட்டு இராசலிங்கேசனால் வீடுபேறு உற்றவர்கள்.

**அ.பொ:** பொரும் - உறவினரோடு போரிட்ட. **(௧0)**

### சுந்தரமூர்த்தி நாயனார்

11. பண்குலவு கயிலையில் பணிவிடை அகன்றுதென்
பால்நாவ லூர்ச்சடை யனார்
பாலர்என உற்றுஅருள் துறைமணம் முடிக்கும்முன்,
பரமனுக்கு அடிமை யாகி,
விண்குலவும் அதிகைசேர்ந்து, ஆரூரில் அருள்புரிய
மென்பரவை தோள் புணர்ந்து
விறல்மிண்டர் ஊடிஅரு ளால்தொண்டர் புகழ்பாடி,
வெண்குண்டை யூர்நெல் அழைத்து,
தண்புக லூர்ச்செங்கல் பொன்செய்து, முதுகுன்றர்
தந்தபொருள் ஆற்றில் இட்டுத்
தடம்எடுத்து, எழில்சங்கி லிக்குஉரிமை யாய்த்தூது
சாற்றஒரு தனைஅ ழைத்து,

மண்குலவு சேரனொடு வெண்கய மதில்செலமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** கயிலையில் சிவபெருமானுக்கு அணுக்கத் தொண்டு செய்யும் செயலை விடுத்துப் பாரதத்தின் தென்பகுதியிலுள்ள நாவலூரில் சடையனார் மகனாராய்த் திருமணம் முடிக்கும் முன் திருஅருள் துறையில் கோயில் கொண்ட திருவெண்ணெய் நல்லூர் இறைவனுக்கு அடிமையாகி, திரு அதிகையை வழிபட்டுச் சிவபெருமான் அருளால் பரவை நாச்சியாரை மணந்து, விறல் மிண்டர் கோபம் கொள்ள அவர் கோபத்தைப் போக்கச் சிவபெருமான் திருவருளால் திருத்தொண்டத்தொகை பாடி, குண்டையூரில் செங்கற்களைப் பொன்கற்களாக்கி, திருமுது குன்றத்தில் இறைவன் தந்த பொருளை மணிமுத்தாற்றில் இட்டுத் திருவாரூரில் உள்ள கமலாலயம் என்னும் குளத்திலிருந்து எடுத்து, சங்கிலியாரை மணந்து, அதனால் பரவையாருக்கு ஏற்பட்ட ஊடலைப் போக்கிச் சிவபெருமானைத் தூதராக அழைத்துப் பணிகொண்டு சேரமான் பெருமாளோடு நட்புச் செய்து, சிவபெருமான் அனுப்பிய வெள்ளையானை மீது இவர்ந்து கயிலையை அடையுமாறு இராசலிங்கேசனாகிய சிவபெருமான் சுந்தரருக்கு அருள் செய்தான்.

**அ.பொ:** தென்பால் - தென்பகுதி; பாலர் - மகனார்; அருள்துறைப் பரமர் - திருவெண்ணெய் நல்லூர்க்கோயிலிலுள்ள இறைவன்; விண்குலவும் - வானளாவிய புகழுடைய; தடம் - குளத்திலிருந்து; ஒருதனை - ஒப்பற்ற இறைவனை; வெண்கயம் - வெள்ளை யானை. **(கக)**

## தில்லைவாழ் அந்தணர்கள்

12. சொல்உலவு சொர்ணமய மன்றுஉளார் திருவடித்
தொண்டின்மனம் வைத்த பெரியோர்
தூயநான் மறைகள்ஆறு அங்கம்வல் லார்கள்முத்
தீஉளார், அறுதொழிலி னார்,
இல்லறந் தனில்வழார், கருணை,தவம், அறிவு,பொறை
எழில்,சீலம், மிக்க புகழார்,
இனியகண் டிகைபூதி சாதனத் தோர்பணிந்து,
ஏவரும் இறைஞ்சு செல்வத்

தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயி ரத்தொகைத்
தெய்வமறை யோர்கள் மகிமை
செப்பஎவர் வல்லுநர் எனப்புவனி ஓதவே,
'தில்லைவாழ் அந்தணர் என'
வல்லவன் தொண்டரைப் 'பாடுநீ' என்றுமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** பொற்சபையில் திருக்கூத்து நிகழ்த்தும் சிவபெருமான் திருத்தொண்டில் ஈடுபட்டு, நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள் இவற்றில் வல்லவராய், மூவகை அக்கினிகளை ஆராதித்து, ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழில்களைச் செய்பவராய், இல்லறத்தை நிகழ்த்திக் கருணை, தவம், அறிவு, பகைவர்களையும் பொறுத்துக் கொள்ளும் பொறுமை, மேம்பட்ட ஒழுக்கம் இவற்றில் மிக்க புகழ் உடையவராய், திருநீறு, உருத்திராக்கம் அணிந்து, பிறரால் வணங்கத் தக்க சிவானுபூதிச் செல்வமுடைய தில்லை மூவாயிரவர் அந்தணர் பெருமையைச் சொல்லுதல் எளிதன்று. சுந்தரர் பாடிய திருத்தொண்டர்த் தொகைக்குத் 'தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடி எடுத்துக் கொடுத்து அந்த அந்தணர்களை இராசலிங்கேசனாகிய சிவபெருமான் ஆட்கொண்டான்.

**அ.பொ:** சொல் - வேதம்; ஆறு அங்கம் - நிருத்தம், வியாகரணம், சிட்சை, கற்பம், சந்தம், கணிதம் என்பன. வேதத்தின் வடிவிற்குக் கற்பம் கை, சந்தம் கால், கணிதம் கண்; நிருத்தம் செவி, சிட்சை மூக்கு, வியாகரணம் முகம் (மணிமேகலை - *27 - 100 - 2*); கண்டிகை - உருத்திராக்க மாலை; புவனி - உலகம்.

**(கஉ)**

## திருநீலகண்ட நாயனார்

13. கழனிசெறி தில்லைநகர் வேட்கோவர் திருநீல
கண்டர்மிகு காத லோடும்
கருணைஅடி யார்க்குஅமுது செய்வதற்கு இனியமண்
கலம்அளித் திடுவர், அன்பால்
இழைதனப் பொதுமாதர் பால்அணைய, அதுதெரிந்து,
இல்லவள் பொறாது ஊடிநீர்
எமைத்தொடில் திருநீல கண்டம்என, வஞ்சியர்
இன்பம்துறந் துஇளமைப் போய்ப்

பழையவயது உற்றவர்முன், நற்றவர் எனத்தமது
பாத்திரம் தந்து ஒளித்து,
பலநாள்அகன்று கேட்பஅவர் காணாமை, மறு
பாத்திரம் தர வெறுத்து,
வழுவில்தடம் மூழ்குவித்து அவர்இளமை பெற்றிடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வயல்வளம் நிறைந்த தில்லை என்னும் சிதம்பரத்திலே குயவர் மரபிலே தோன்றிய திருநீலகண்டர் மிக்க விருப்பத்தோடு அடியார்களுக்கு அமுது செய்வதற்கு இனிய திரு ஓடுகளை அளித்து வாழும் நாளில், விருப்பத்தோடு பொதுமகள் ஒருத்தியை அணைய, அதனை அறிந்த தம் மனைவி ஊடலில், 'திருநீலகண்டத்தின் மீது ஆணையாக எம்மைத் தீண்டாதீர்' என்று கூற, அன்றே மகளிர் இன்பத்தைத் துறந்து, இளமை நீங்கி மூப்பு வந்தடைந்த நிலையில், அடியவர் ஒருவர் தம் திரு ஓட்டினைப் பாதுகாவலாக வைத்திருக்குமாறு அவரிடம் கொடுத்துப் பின் அதனை மறைத்து, பலநாள் கழிந்தபின் வந்து கேட்க, திருஓடு காணாமல் போனமையால், திருநீலகண்டர் வேறு ஒரு திருஓடு தர முற்பட, அதனை விரும்பாது அவரை மனைவியோடு குளத்தில் மூழ்கச்செய்து, அவ்விருவரும் பழைய இளமை பெற்றிடுமாறு செய்து, அந்நிலையிலேயே அவர்களை அடிமை கொண்ட இராசலிங்கேசனாகிய கயிலைவாசன் அவர்களுக்கு வீடு பேறு அளித்தான்.

**அ.பொ:** வேட்கோவர் - குயவர்; மட்கலம் - திருவோடு; பொதுமாதர் - பரத்தையர்; ஊடி - கோபம் கொண்டு; வஞ்சியர் - மகளிர். **(கங)**

## இயற்பகை நாயனார்

14. போதுஅமரும் மருதநீர் நாட்டினில் காவிரிப்
பூம்பட்டி னத்தினில், வணிகர்
புகழ்இயற் பகையார்அடி யவர்கள்வேண் டியஎலாம்
பொருந்தக்கொ டுக்கும் நாளில்,
காதல்பெறு தூர்த்தமறை யோர்எனச் சென்று'நின்
காதலி தனைத்தருக' எனக்
கழறஅப் படிதந்து அனுப்பவே, தமர்எலாம்
கருதியே தடைகள் செய்ய,

ஓதுபழி ஈதுஎன்று வந்தவரை வீட்டி,இடை
யூறுஎலாம் விலக்கி, ஆங்கே
உற்றதுணை யாகிவரு மற்றுஅவர்தம் நிலைமையினை
உலகுஎலாம் அறிய வேண்டி,
மாதுஉமையி னோடுவிடை ஏறிஎதிர் நின்றுமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வயல்வளம் செறிந்த சோழநாட்டில் காவிரிப்பூம் பட்டினத்து வணிகராகிய கொடைத்தொழிலால் புகழ்பெற்ற இயற்பகையார், அடியவர் வேண்டியவற்றை எல்லாம் அவர்கள் மனம் பொருந்துமாறு கொடுத்து வந்த காலத்தில், காமுகராகிய அந்தணர் வடிவில் சென்று, சிவபெருமான், 'உன் காதலியை எனக்குத் தொண்டு செய்யத் தருக' என வேண்ட, இயற்பகையாரும் அவ்வாறே தந்து தம் மனைவியை அந்தணருடன் அனுப்ப, அதனைப் பொறாது உறவினர்கள் வந்து தடை செய்ய, அவர்களை எல்லாம் அழித்து, இடையூறுகளை நீக்கித் தாமே துணையாக வந்து அந்தணரை வழி அனுப்ப, அவ்வியற்பகையாரின் மனநிலையை உலகம் எல்லாம் அறிதற்காகச் சிவபெருமான் உமாதேவியோடு காளை வாகனத்தில் ஏறி வந்து, அவருடைய அடிமையை ஏற்று, வீடு பேறு அளித்தான்.

**அ.பொ:** அமரும் - விரும்பத்தக்க; மருதம் - வயல்வளம் பொருந்திய பகுதி; தூர்த்தர் - காமுகர்; தமர் - உறவினர்; வீட்டி - அழித்து. **(கச)**

## இளையான்குடி மாற நாயனார்

15. பாரின்வளம் உழவுத்தொழில் ஆரும்இளை யான்குடிப்
பதிமாறன், ஏரின் மிக்க
பாக்கியம் நிறைந்துஅடியர் உண்டிஅறு சுவைநல்கு
பண்பினர், செல்வம் குறைந்து
காரின்மழை சாடநடு யாமம்ம னைமுடிக்
கடும்பசி பெறுங் காலையில்,
கடிந்தோர்எனச் செல,கண்டு அமுதுசெய அன்பர்
காதலியை வினவ, அவள்'இவ்
ஊரில்ஆர் தருவார்இவ் வேளை?வேறு இல்லைவயலில்
உண்டுநெல் முளைகள்' எனவே

ஓதவயல் சென்றுஅரித்து இல்லில்அக் கால்சமைத்து
உறுபயிர் கறிசெய்து அன்பால்
'வாரிர்அமுது உண்க'என, அழல்உருவ மாகிமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வளம் உடைய உழவுத்தொழில் செய்த, இளையான் குடியில் வாழ்ந்த மாறனார், செல்வத்தால் நிறைந்து அடியார்களுக்கு அறுசுவை உணவுகளை வழங்கிவரும் நாளில், செல்வம் எல்லாம் குறையுமாறு இறைவன் திருவருள் செய்ய, கார்காலத்து மழைபெய்த ஒருநாள் இரவில் மாறனாரும் அவர் மனைவியும் பட்டினியாகத் தம் இல்லத்துக் கதவை மூடிக்கொண்டு தங்கி இருக்கையில், கடும்பசியோடு அன்பர் ஒருவர் அவர் இல்லம் அடைய, அவருக்கு அமுது செய்விப்பதற்கு அவ்வூரில் அந்நேரத்தில் கடன் தருவார் ஒருவரும் இன்மையால் காலையில், வயலில் விதைத்த நெல்முளைகள் மழையில் ஒதுங்கிய வற்றை வயலில் சென்று அரித்துக் கொண்டு வந்து வறுத்துக் குற்றிச் சமைத்து வீட்டுக் கொல்லையில் சிறிதளவு வளர்ந்திருந்த கீரையைப் பறித்துக் கறி செய்து, அடியவரை, 'அமுதுண்ண வருக', என்று அழைக்க, அடியவர் வடிவில் வந்த சிவபெருமான் ஒளி உருவமாகக் காட்சி தந்து அவ்விருவரையும் அடிமை கொண்டு வீடுபேறு வழங்கினான்.

**அ.பொ:** அறுசுவை - கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு; சாட - மிகுதியாகப் பெய்ய; கடிந்தோர் - பிறரால் புறக்கணிக்கப்பட்டவர். **(கரு)**

## மெய்ப்பொருள் நாயனார்

16. நன்னயம் மிகும்சேதி நாட்டினில் கோவலூர்
நற்குடி மலாடர் மன்னர்
நம்புதிரு வேடம்மெய்ப் பொருள்கொண்ட சிந்தைஎந்
நாளும்முறை நெறிவழா தார்
பின்னைமறு மன்னர்சமர் உன்னிவலி தோற்றுஅடல்
பெறல்அரிது என,தீது அகம்
பெற்றுமிக் கவரென, கைப்படை கரந்தஒரு
புத்தகக் கவளி ஏந்தி,
உன்னிவாயிற் கடைவிலக்கி, மாதொடு மன்னன்
உறுதுயில் கூர்இடம் சென்று

**உபசாரம் உற'ஞானம் மொழிகுவென்' என,பணி**
**வுற,வஞ்ச நினைவு செய்ய,**
**மன்னன்மெய்ப் பொருள்என்று நன்னெறி புரிந்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

***பொழிப்:*** சேதி நாட்டில் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு மலாடர் குடியில் பிறந்த மன்னராய் அடியார்களுடைய திருவேடத்தையே உண்மைப் பொருளாகக் கொண்ட உள்ளத்தால் ஒரு நாளும் அம்முறை தவறாது வாழ்ந்தவர் மெய்ப்பொருள் நாயனார். அவரிடம் போரிட்டுத் தோற்று, நேரிய முறையில் அவரை வெல்ல இயலாது என்று வஞ்சகம் கொண்டு, அடியவர் வேடத்தில் படையை மறைத்து வைத்த புத்தகக் கட்டினை ஏந்தி வந்து 'இறைவரைப் பார்க்க இது சமயம் அன்று' என்ற வாயில் காவலன் தடையையும் விலக்கி, தேவியோடு அரசர் உறங்கிக் கொண்டிருந்த இடம் அடைந்து, விழித்து எழுந்த அரசரால் உபசரிக்கப் பெற்றுத் தான் ஞானம் மொழிவதாகக் கூற, அரசர் பணியத் தன் வஞ்சக நினைவை நிறைவேற்றிய பகைவனுடைய வேடத்தையும் மன்னர் மெய்ப்பொருள் என்று போற்றி அவனைப் பாதுகாக்கச் செய்ய, அரசர் உயிர் பிரியும் முன் அவருக்குக் காட்சி அளித்து அடிமை கொண்டு சிவபெருமான் வீடுபேறு அளித்தான்.

**அ.பொ:** நன்னயம் - நல்ல வளப்பம்; மலாடர் - மலைநாட்டவர்; நம்பு - விரும்பு; சமர் - போர்; அடல் - வெல்லுதல்; அகம் - மனம்; புத்தகக் கவளி - ஏட்டுச்சுவடிக் கட்டு; வஞ்ச நினைவு செய்ய - வஞ்சனை நினைவைச் செயற்படுத்திக் கொல்ல. **(௧௬)**

## விறல் மிண்ட நாயனார்

17. **விந்தைபெறு மலைநாடு உயர்ந்த செங்குன்றூரில்**
**வேளாளர் தொல்கு லத்தில்,**
**விறல்மிண்டர்; சிவசமய நெறிகொண்டு, பலபதிகள்**
**மேவிஅடி யார்க ளோடு**
**பந்தம்அற மகிழ்வினொடும் ஆரூரில் மேவும்நாள்,**
**பரவையார் தோள் மணந்த**
**பாங்கர்வன் தொண்டர்வந்து, அடியார்கள் திருவடி**
**பணிந்தி டாதுஏக, அதனால்**

சிந்தைமிக ஊடியது கண்டுவண் தொண்டரைத்
திருவருளி னால் நிறைந்த
சீர்பெறும் தொண்டர்தொகை ஒதுகஎன, வன்தொண்டர்
செந்தமிழ்ப் பதிகம் ஒதி
வந்தனை மொழிந்துஅன்பர் புந்திமகிழ் வாகமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வியக்கத்தக்க வளம் பொருந்திய மலைநாட்டுச் செங்குன்றூரில் வேளாளர் மரபில் உதித்த விறல் மிண்டர் சைவசமயத்தை மேற்கொண்டு, பல திருத்தலங்களைத் தரிசித்து, அடியார்கள் பலருடன் கலந்து பழகி, உலகப்பற்று அறுத்து மகிழ்வோடு திரு ஆரூரில் தங்கி இருந்த காலத்தில், பரவை நாச்சியாரை மணந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூர்ப் பூங்கோயிலுக்கு வந்து அடியார்களை வணங்காது இறைவனை வணங்கச் செல்ல, அது கண்டு விறல் மிண்டர் கோபிக்க, அதனைக் கண்ட சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருத்தொண்டத்தொகை பாடுமாறு பணிக்க, அவர் அப்பதிகம் ஓதியதால் விறல்மிண்டர் கோபம் நீங்கி மகிழ்ச்சி உற, அவரிடம் ஈடுபட்டுச் சிவபெருமான் அவரை அடிமையாகக் கொண்டான்.

**அ.பொ:** விந்தை - வித்தை, கல்வி அறிவு; பந்தம் - உலகப்பற்று; பாங்கர் - உறவு உடையவர்; புந்தி - மனம். **(கஎ)**

## அமர்நீதி நாயனார்

18. அருள்பெறும் பொன்னிநாடு இலகுபழை யாறைஊர்
அதன்வணிகர், ஆடை, மாடை
அளவுஇல்ஒண் நிதியைஉடைய அமர்நீதி யர்அடியர்
அன்புவைத்து, உடைகோ வணம்
தருவர்திரு நல்லூர்விழா வின்மடம் உறைபொழுது,
தக்கசிறு முனிவர் பொற்கைத்
தண்டில்இரு கோவணம் கொண்டுசென் றிடஅன்பர்
தாம்'அமுது கொள்க' என்ன,
'உருவநீர் தோய்வம்'என்று ஒருகோவ ணம்தந்து,
ஒழித்துவந்து ஈரம் மாற்ற'எம்

முடைக்கோவ ணம்தன்னைத் தா'என, 'காணவிலை;
வேறுஒன்று தருவல்' எனநேர்
மருவுநிறை தா'எனத் தொண்டர்நிறை கோல்உறமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சோழநாட்டுப் பழையாறையுள் வணிகர் மரபில் தோன்றிய அமர்நீதியார், அறுவை வாணிபத்தால் நிறைந்த செல்வம் உடையவர். அவர் திருநல்லூர் விழாவின்போது தாம் அமைத்த திருமடத்தில் அடியார்களுக்கு இனிய உணவு அளித்து, உடையும் கோவணமும் தருவார். ஒரு நாள் பிரமசாரி ஒருவர் தம் கையிலிருந்த பலாசக்கோலில் இரு கோவணங்களைச் சுற்றி வர, அவரை அமுது செய்யுமாறு அமர்நீதியார் வேண்ட, அவர் ஒரு கோவணத்தை அவரிடம் வழங்கி, மறு கோவணத்தோடு ஆற்றில் நீராடி வரச் செல்ல, நீராடி வந்தபின் தம் கோவணத்தைக் கேட்க, அது காணாமல் போனமையால் அமர்நீதியார் வேறு ஒரு கோவணம் தருவதாகக் கூற, பிரமசாரி தம்மிடம் இருந்த கோணத்தின் நிறை அளவு தமக்குத் தருமாறு கூற, அக்கோவணத்தின் நிறையாகத் தொண்டருடைய செல்வம் முழுவதும் வைக்கவும் போதாததாகத் தொண்டர், அவர் மனைவியார், மகனார் மூவரையும் நிறைகோல் சமமாகுமாறு ஏற்று அவர்களுக்கு வீடுபேறு அளித்தான் சிவபெருமான்.

**அ.பொ:** மாடை - செல்வம்; உருவ நீர்தோய்தல் - நல்ல நீரில் நீராடுதல்; நிறைகோல் - தராசு. **(கஅ)**

## எறிபத்த நாயனார்

19. சீதவயல் நீடுகரு வூரில்எறி பத்தர்'மெய்ச்
சிவனடியார் துயர மெல்லாம்
சிதைப்பல்'என் றேபரசு எடுத்திடும் திறலினார்
சிவகாமி யார்வை கறைப்
போதுகொய்து, ஆன்நிலையர் மீதுபுனை மலரைப்
புகழ்ச்சோழர் கைம்மா மதம்
பொழிந்துசிதற, தொண்டர் 'சிவதா' எனும்சொல்
பொறாமல், எறிபத்தர் ஊடி
மோத,வய மாவீரர் மாய,வேந் தன்கண்டு,
முன்புநின்று' என்உயிரை நீர்

முடியும்'என வாள்ஈய, வாங்கிவாள் தம்கண்டம்
மூட்டி,அரி பொழுது விரைவால்
மாதங்க மொடுபாகர் உய்யஅருள் செய்து,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வயல் வளம் மிக்க கருவூரில் எறிபத்தர் என்ற சிவனடியார் அடியார்களின் துயரத்தைப் போக்கக் கையில் கோடரியை ஏந்தியவர். சிவகாமியாண்டார் என்ற அடியார் அத்தலத்துத் திரு ஆனிலை மகாதேவருக்குச் சாத்துவதற்காக வைகறைப் பொழுது கொய்து வந்த மலர்களை அவ்வூர் அரசர் புகழ்ச் சோழனின் மதயானை சிதற, அவ்வடியவர் 'சிவதா' என்று புலம்பி வருந்த, எறிபத்தர் செய்தி அறிந்து யானையையும் அதனொடு வந்த வீரரையும் அழிக்க, அதனை அறிந்து வந்த அரசன் மலர் சிதறிய செயலுக்குத் தான் ஆதி காரணம் ஆதலின் தன்னையும் கொல்லுமாறு எறிபத்தரிடம் தன் வாளினை வழங்க, அத்தகைய நல்ல மன்னனைத் தவறாக நினைத்த தம் கழுத்தினை அரிந்து கொள்ள எறிபத்தர் முற்பட, அரசன் அவர் கையைப் பிடித்துக் கொண்டு அவர் செயலைத் தடுக்க, இறைவன் அருளால் இறந்த யானையும், வீரரும் உயிர்த்து எழ, இறைவன் அனைவரையும் அடிமையாகக் கொண்டு அருள் செய்தான்.

**அ.பொ:** பரசு - மழு என்ற ஆயுதம்; ஆன்நிலை - கருவூரிலுள்ள சிவாலயத்தின் பெயர்; கைம்மா - துதிக்கையை உடைய யானை; சிவதா - சிவபெருமானே அருள்புரிக; கண்டம் மூட்டி - கழுத்தில் பொருத்தி; மாதங்கம் - யானை.

(கசு)

## ஏனாதி நாத நாயனார்

20. சாற்றுசோ ணாட்டுஎயி னனூரில்ஈ ழக்குலச்
சான்றார்ஏ னாதி நாதர்,
தலைவர்,எழில் வாள்படைத் தொழில்விஞ்சை புரிதிறமை
சார்ந்து,வெண் ணீற்றுஅன் பினார்,
தோற்றம்மிகு தாயத்தில் அதிசூரன் வாட்படைத்
தொழில்கண்டு, மிதம் மிஞ்சியே
சொல்சபத மொடுகங்குல் புலர்காலை சென்றுஅணி
தொடுத்துஅமர் இழைத்து, வஞ்சத்

தேற்றமனத் தொடுநீறு சாத்திமறை வாய்அயலர்
செல்லாமல் இருவோர் செருச்
செய்ய,நுதல் நீறுகண் டுஏழை போல்நிற்க,
சினந்துஅவன் அடர்ப்ப, அன்பர்
மாற்றாரெனும், திருவெண்ணீற் றார்எனத் தொழமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சோழநாட்டு எயினனூரில் ஈழக்குலத்தில் தோன்றிய சான்றார் மரபினர் ஏனாதிநாதர், அவர் வில், வாள் முதலிய படைகளை அரசக்குலத்தார்க்குப் பயிற்றும் திறமை மிக்க ஆசிரியராய், வெண்ணீற்றின் அன்பினோடு வாழ, அவர் தாயத்தாருள் ஒருவனாகிய அதிசூரன் பொறாமை கொண்டு அவரை ஒழிப்பதாகச் சபதம் செய்து, அதிகாலையில் அவரோடு ஒருவருக்கு ஒருவர் தனித்துப் போர் செய்ய அழைத்து, வஞ்ச மனத்தோடு வெண்ணீறு நெற்றியில் அணிந்து, அதனைக் கேடயத்தால் மறைத்துக் கோபத்தோடு, அவரிடம் போரிட, போரிடும்போது அவன் நெற்றியில் திருநீற்றைக் கண்டு, அடியவர் தாம் போரிடுவதை நிறுத்தி, அவனைத் தொழ, அவன்தான் நினைத்தவாறு ஏனாதி நாதர்பால் தன் செயலை நிறைவேற்ற, சிவபெருமான் அவ்வடியவரை அடிமை கொண்டு வீடுபேறு அளித்தான்.

**அ.பொ:** ஈழக்குலம் - தென்னை மரம் ஏறும் சாணார் குலம்; கங்குல் - இரவு; புலர்காலை - விடியும் நேரம்; தேற்ற - உறுதியாகக் கொண்ட, மாற்றார் - பகைவர்.

(உ0)

## கண்ணப்ப நாயனார்

21. கான்இலகு பொத்தப்பி நாட்டுஉடுப் பூர்வேடர்
காவலவர் எனும் நாகனார்
காதல்உற் றிடுதிண்ண னார்வேட்டை சென்றுதென்
காளத்தி மலைநாத ருக்கு
ஊனில்அறு சுவைபெறும் இறைச்சி,வாய் மஞ்சனமும்,
உச்சிமலர் தந்து அறுதினம்
உகந்திடக் கண்டமெய்ச் சிவகோச ரிக்குமனத்து
உறுதுயர் அகற்ற, விழிநீர்

தான்இலங் கியஅருவி ஓடவும், மருந்திடத்
தான்அடங் காத போது
தன்கண்இ டந்துஅப்ப நிற்க,மறு கண்குருதி
சாயஅது நீக்கும் போது,
மாநிலம் தன்னில்'என் கண்ணப்பன்' எனவும்,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** காடுகள் விளங்கும் பொத்தப்பி நாட்டு உடுப்பூரில் வாழ்ந்த வேடர்குலத் தலைவராம் நாகனாருடைய அன்புக்குரிய புதல்வராம் திண்ணனார் வேட்டைக்குச் சென்று அழகிய காளத்திமலை நாதருக்கு அறுசுவை இறைச்சியைச் சுமந்து திருமஞ்சன நீரை வாயிலும், சாத்தும் பூக்களைத் தம் தலையிலும் சுமந்து வந்து மதுவோடு ஆறுநாள் வழங்கிட அதனைக் கண்ட சிவகோசரியார் மனத்தில் துயருற, அத்துயரைப் போக்க இறைவன் தன் வலக்கண்ணில் குருதிநீர் அருவிபோல் பெருகச் செய்ய, அக்கண்ணுக்குத் திண்ணனார் மருந்து இடவும் குருதி வடிவது நில்லாத போது திண்ணனார் தம் வலக்கண்ணைப் பெயர்த்து அப்ப, அக்கண்ணில் குருதி வடிவது நீங்க, மற்றைக் கண்ணில் குருதி பெருக அதனைப் போக்கத் திண்ணனார் தம் மறுகண்ணையும் பெயர்க்க முற்பட்டபோது, "என் கண்ணப்பனே!" என்று திண்ணனாரை அழைத்துத் தன் அடிமையாகக் கொண்டு கயிலை வாசனாம் சிவபெருமான் அவருக்கு வீடுபேறு அளித்தான்.

**அ.பொ:** மஞ்சனம் - குளிக்கும் நீர்; இடந்து - பெயர்த்து எடுத்து; குருதி - இரத்தம்.

**(உக)**

## குங்குலியக்கலய நாயனார்

22. காஉறைந் திடுபொன்னி நாடுஅதன் தென்திருக்
கடவூரின் மறையோர் தமிழ்க்
கலயர்குங் குலியவெண் புகைநறும் பணிவிடைக்
காதலார்; கலியினால் மான்
மேவுமனை யாள்தாலி கொண்டுநெல் கொளஎன்று
மிக்கருங் குலியம் வாங்கி,
வேண்டுபணி விடைஅன்பு பூண்டுஅமர்ந் திடஇல்லின்
மிகசெல்வம் நிலவ அருளால்

ஏவிஅடி யார்அமுது பாலுடன் அருந்தவும்,
இயல்பனந் தாளில் அரசன்
எண்ணம்முடி வாகவும், வாகீசருக் கும்வினை
ஈரும்ஒரு பிள்ளை யார்க்கும்
மாவளத் துடன்அமுது தான்அளித் திடவும்,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சோழநாட்டில் சோலைகள் நிறைந்த அழகிய திருக்கடவூரில் அந்தண குலத்தில் தோன்றிய இனிய கலயானர், இறைவன் கோயிலில் குங்குலியம் புகைக்கும் திருத்தொண்டினில் விருப்புடன் ஈடுபட்டவர். வறுமை வந்திட, மான் போன்ற தம் மனைவியின் தாலியைக் கொண்டு நெல் வாங்கச் சென்று, குங்குலியம் வாங்கி அன்போடு குங்குலியம் புகைக்கும் தொண்டில் ஈடுபட, அப்போது அவர் இல்லத்தில் மிக்க செல்வம் நிறைய எம்பெருமான் அருள் செய்து, அவருக்குப் பாலோடு அமுதம் உண்ணும் வாய்ப்பினை நல்கினார். அவ் அடியவர் மூலம் திருப்பனந்தாளில் அரசன் எண்ணம் நிறைவேறும் வகையில் சாய்ந்த இலிங்கத்தை நிமிர்க்கச் செய்தார். தம் இருப்பிடத்துக்கு வந்த நாவுக்கரசருக்கும், ஞானசம்பந்தருக்கும் கலயனார் வளமாக விருந்திட்டார். இவ்வாறு கலயனாரைக் கயிலை வாசன் அடிமை கொண்டான்.

**அ.பொ:** கா - சோலை; தமிழ்க் கலயர் - இனிமை உடைய கலய நாயனார்; வாசீசர் - திருநாவுக்கரசர்; பிள்ளையார் - திருஞானசம்பந்தர். **(உஉ)**

## மானக் கஞ்சாற நாயனார்

23. கன்னல்வயல் சூழ்கஞ்சை நன்னகர்க் குடிஇலகு
காராளர் என்னும் மானக்
கஞ்சாற னார்தொண்டர் நெஞ்சுஆரும் இனியபணி
காதலொடு தருபண் பினார்;
தன்அமைவு டன்பெற்ற கன்னிஏ யற்குஉரிமை
சாற்றும்மண வதுவை கேட்டுத்
தக்கமா விரதர்போல் இற்குள்வர, அன்பர்,பெண்
தன்னைஅடி பணிவித் திட,
அன்னமின் குழல்நமது பஞ்சவடி செய்வதற்கு
ஆம்என, மகிழ்ந்து, புதல்வி

**அளகம்அது சுரிகையின் அரிந்துஅருள, வாங்கிமறை**
**வாய்விண் எழுந்த வாக்கின்,**
**மன்னிய கலிக்காமர் நன்மணம் செய்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** கரும்பு வளரும் வயல்கள் சூழ்ந்த கஞ்சாறூரில் வேளாளர் குடியை விளங்க வைத்த மானக்கஞ்சாறனார் அடியார்கள் விரும்பிய பணிகளை விருப்பத்தோடு நிறைவேற்றும் இயல்பினர். தம் அருமை மகளை ஏயர்குலத்துக் கலிக்காமருக்கு மறுநாள் மணம் செய்யப்போவது கேட்டுச் சிவபெருமான் மாவிரத அடியவர் வேடத்தில் கஞ்சாறருடைய வீட்டுக்கு வர, கஞ்சாறர் தம் மகளை அவ் அடியவரை வணங்குமாறு செய்ய, அவ் அடியவர் அப்பெண்ணின் கூந்தல் தம் பஞ்சவடிக்கு மிகவும் ஏற்றது என்று சொல்ல, கஞ்சாறர் மகிழ்ச்சியோடு புதல்வியின் தலைமயிரைத் தம் வாளால் அரிந்து அடியவர் முன் நீட்ட, இறைவன் மறைந்து அசரீரியாய் அரிந்த கூந்தல் வளர்ந்த கன்னியைக் கலிக்காமர் மணம் செய்து கொள்ளுமாறு அருளிக் கஞ்சாறரை அடிமை கொண்டு அவருக்கு வீடுபேறு அளித்தார்.

**அ.பொ:** கன்னல் - கரும்பு; கஞ்சை - கஞ்சாநகர், இன்று அனைதாண்டவ புரம் என்று வழங்கும் ஊர் என்ப; ஏயர் - ஏயர்கோன் கலிக்காமர்; மாவிரதர் - சிவனடியாருள் ஒருவகையினர்; இற்குள் - வீட்டிற்குள்; மின் - மின்னல்போல ஒளிவீசும் பெண்; பஞ்சவடி தலை மயிரினால் அமைக்கப்பட்ட பூணூல்; அளகம்- மயிர்முடி; அரிகை - கத்தி. **(உரு)**

## அரிவாள் தாய நாயனார்

24. **தழைத்தவயல் நீர்நாட்டு உயர்ந்தகண மங்கலம்**
**தன்னில்வரு பின்னவர் குலத்**
**தாயனார், எந்தைதிரு நாயனார் மாவடு,**
**தக்கசெந் நெல்கீரை யும்**
**செழித்திடத் திருஅமுது அளிப்பவர்க் கேவறுமை**
**சேர்ப்பவயல் சென்று கூலி**
**செய்து,கரு நெல்தங்கள் தமதுஉண்டி யாகவே**
**செந்நெல்பணி குறையாது கண்டு**

இழைத்திட, கருநெல்தவிர்த் தும்உணவு இல்லாதது
எனினும்மனை யவளும் முன்போல்
இடுபரிசு கொடுவரக் கமரில்வீ ழக்களத்து
ஈட்டும்வாள் பூட்ட எதிராய்
வழக்கிய கமர்க்குள்நன் மாவடு விடேல்என,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வயல்வளம் நிறைந்த சோழநாட்டில் கணமங்கலம் என்னும் தலத்தில் வேளாளர் குலத்தில் தோன்றிய தாயனார், சிவபெருமானுக்கு நாள்தோறும் மாவடு, செந்நெல் அரிசி, கீரை என்பனவற்றைக் கொண்டு திருஅமுது அளிக்கும் வழக்கத்தினராய் வாழ்ந்தவர். தமக்கு வறுமை வரவும் கூலிக்கு நெல் அறுத்துக் கருநெல்லைத் தமது உணவுக்கும், செந்நெல்லைச் சிவபெருமான் நிவேதனத்துக்கும் பயன்படுத்தினார். ஊர் முழுதும் செந்நெல்லே பயிரிடப்படத் தமக்கு உணவு இல்லாத போதும் மனைவியோடு இறைவனுக்கு நிவேதனப் பொருளைக் கொண்டு செல்லக் கால் தளர்ந்து நிவேதனப் பொருள்கள் பள்ளத்தில் வீழ, அதனைக் கண்டு வருந்தித் தம் உயிரைப் போக்கத் தம் அரிவாளைக் கழுத்தில் பூட்டப் பள்ளத்திலேயே சிவபெருமான் நிவேதனத்தை ஏற்று மாவடுவினைத் தாம் கடிக்கும் 'விடேல்' என்ற ஓசையை வெளிப்படுத்தி, அவ் அடியவரையும் அவர் மனைவியாரையும் ஆட்கொண்டார்.

**அ.பொ:** கருநெல் - தரக்குறைவான் நெல்; பரிசு - தன்மை, கமர் - பிளப்பிடம், பள்ளம்; களம் - கழுத்து; விடேல் - மாவடுவைக் கடிக்கும் ஓசை. **(உச)**

## ஆனாய நாயனார்

25. நண்ணும்மழ நாட்டின்மங் கலநகரில் இடையர்குலம்
நண்ணும்ஆ னாயர், சிந்தை
நந்திநம் பர்க்குஅடிமை என்றுநிறை மேய்ப்பர்எழில்
நவில்துளைக் கருவி நெறியின்
புண்ணியம் மிகுந்ததிரு வெண்ணீறு படிவம்
பொலிந்துபூங் கொன்றை நீழல்
போந்துதிரி கண்குழலில் அஞ்சுஎழுத் துஅமுதம
புகட்டிஆ னந்தம் ஊறும்

பண்இலக, ஆயிரம்கண் ணன்உல கோர்முதல்
பயில்சரா சரம் உருக்க,
பைங்குழை பெருக்கவந்து 'அன்ப!நீ தினமும்இப்
படிஊது' எனப் புகன்று,
வண்ணம்மிகு மலர்மாரி விண்ணவர் பொழிந்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இடசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மழநாட்டு மங்கல நகரின் இடையர் குலத்தில் தோன்றியவர் ஆனாயர். அவர்தம் உள்ளத்தைச் சிவபெருமானுக்கு அடிமையாக அமைத்துப் பசுக்கூட்டங்களை மேய்க்கும் போது, வெண்ணீற்றை அணிந்தவராய்க் கையில் வேய்ங்குழலைக் கொண்டு, பூக்கள் நிறைந்த கொன்றை மரத்தின் நிழலை அடைந்து, தாம் குழல் ஊதிய இன்னிசை அமுதத்தில் தேவர் முதல் இவ்வுலகிலுள்ள சராசரங்கள் உள்பட யாவும் உருகுமாறும், தாவரங்களின் இளந்தளிர்கள் பெருகுமாறும் செய்ய தேவர்கள் பூமாரி பொழிந்திடச் சிவபெருமான் அவர் ஒவ்வொரு நாளும் இவ்வாறே வேய்ங்குழல் ஊதுமாறு குறிப்பிட்டு அவரை அடிமையாகக் கொண்டான்.

**அ.பொ:** ஆனாயர் - பசுக்களைக் மேய்க்கும் ஆயர்; நந்தி நம்பர் - விரும்பத்தக்க சிவபெருமான்; துளைக்கருவி - வேய்ங்குழல்; திரிகண் - பலவாக அமைக்கப்பட்ட துவாரங்கள்; ஆயிரம் கண்ணன்- இந்திரன்; சராசரம் - இயங்கும் பொருளும் நிலைத்த பொருளும்; குழை - தளிர். **(உரு)**

## மூர்த்தி நாயனார்

26. தாட்டிகம் மிகும்பாண்டி நாட்டினில் தென்மதுரை
தனில்வணிகர் மூர்த்தி யார்நல்
சந்தனக் காப்புஇடும் புந்திமற வாதபணி
தருநாளில், மறுமன்னர் போர்
நாட்டிமா றன்படையை வீட்டிஉலகு ஆண்டுஅமணர்
நாவின்மொழி பொய்உ கந்து,
நாயனார் பணிவிடைக்கு இடையூறு இடும்பொழுது,
நன்முழங் கைகள் கல்லில்
தீட்டிஉதி ரம்தசை சிதைந்துஎன்பு கரையமெய்ச்
சிந்தைகண்டு, இரவில் அவ்வூர்ச்

செங்கோல்நடாத் தும்என்று ஒதியமன் வீழ்ந்திட,
சிந்துரம் பிடரில் வைப்ப,
வாட்டம்இல் லாமும்மை காட்டிஉலகு ஆண்டுமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** பெருமை மிகுந்த பாண்டிய நாட்டினில் அழகிய மதுரைமா நகரில் வணிகர் மரபில் தோன்றிய மூர்த்தி நாயனார் சிவபெருமானுக்குச் சந்தனக் காப்பு சார்த்துவதற்காகச் சந்தனக் கட்டையைக் கல்லில் அரைத்துச் சந்தன விழுதினை வழங்கும் திருப்பணியில் நாள் தவறாது ஈடுபட்டிருந்த காலத்தில், வடுகக் கருநாட மன்னனாகிய வேற்று மன்னன் போரிட வந்து, பாண்டியன் படையை வென்று, பாண்டி நாட்டைக் கைப்பற்றி ஆளத்தொடங்கிச் சமணர்கள் கூறிய பொய்ச் சொற்களை விரும்பி மூர்த்தி நாயனாருடைய திருப்பணிக்கு இடையூறாகச் சந்தனக் கட்டையே அவருக்குக் கிட்டாதபடி செய்திடத் தாம் சந்தனம் அரைத்து இறைவனுக்குச் சார்த்த வழங்கும் திருப்பணி இடையூறு உறத் தன் முழங்கைகளையே சந்தனக் கட்டைகளாகக் கொண்டு நாயனார் கல்லில் தேய்க்கச் சதைகள் சிதைய, இரத்தம் ஒழுக, எலும்புகள் கரைய அந்நிலையிலும் அவர் செயற்பட்டமை கண்டு இறைவன் அவருக்கு அருள் செய்ய, கையில் ஏற்பட்ட ஊறுகள் மறைய, அன்று இரவில் மதுரையை ஆண்டு வந்த சந்ததியில்லாத அந்த வேற்று மன்னன் இறக்க, மன்னனைத் தேர்ந்தெடுக்குமாறு கண்ணைக்கட்டி மாலையுடன் அனுப்பப்பட்ட யானை, மூர்த்தி நாயனாருக்கு மாலையிட்டு அவரைத் தன் பிடரியில் ஏற்றிவர, நாயனார் திருநீறு, சடைமுடி, உருத்திராக்கம் என்ற மூன்றையும் தரித்து, வேறு மணிமுடி தரியாமல் சிவனடியாராகவே பல்லாண்டு பாண்டிய நாட்டில் செங்கோல் செலுத்த, அவர் வாழ்வின் இறுதியில் கயிலை வாசனாம் மாணிக்கமலை நாதனாகிய இராசலிங்கேசன் அவருக்கு முன் வந்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** தாட்டிகம் - பெருமை; நீட்டி - தேய்த்து; என்பு - எலும்பு; சிந்துரம் - யானை; மும்மை - சடைமுடி, திருநீறு, உருத்திராக்கம். **(உசா)**

## முருக நாயனார்

27. தேன்குலவு பொன்னிநாட் டுஒங்குபூம் புகலூர்
செழிக்கும்மறை யோர்முருக னார்,
செங்கதிர் உதிக்கும்முன் எழுந்துபுனல் மூழ்கிவண்
செறிகாவி னில்சென்று, தேன்

பாங்குபெறு கோட்டின்மலர், நீண்டகொடி மலர்திரைப்
பாணிமலர், ஞாலம் மலரும்
பறித்தபின் பிணைபல தொடுத்துநல் செவ்விவிரை
பயில்காலை, தினமும் அன்பாய்
நீங்கஅரிய வர்த்தமா னீச்சர்திரு முடிசூட்டி,
நேயஆ னந்தம் ஊட்டி,
நிகர்இலா அஞ்செழுத்து ஓதிஉமை அமுதுஉண்ட
நேயர்மணம் அதுவி ருப்பின்,
மாங்குயில் பெறுஞ்சோலை சூழ்பெருமணம் தன்னில்,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** இனிமை மிக்க காவிரி பாயும் சோழநாட்டு வளம் மிக்கு ஓங்கும் திருப்புகலூரில் மேம்பட்ட அந்தணர் மரபில் தோன்றிய முருக நாயனார், கதிரவன் உதிக்கும் முன் நாடோறும் விழித்தெழுந்து நீரில் மூழ்கி, வளம் மிக்க நந்தவனம் சென்று, தேன் செறிந்த கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, தரையில் படரும் நிலப்பூ இவற்றைப் பறித்துப் பலவகை மாலைகளாகத் தொடுத்து, நன்கு மலர்ந்து நறுமணம் செறிந்த நிலையில் நாடோறும் அம்மாலைகளைத் திருப்புகலூர் வர்த்தமானீச்சுரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய திருமுடியில் சூட்டி, எம்பெருமானுக்குத் தம் அன்புச் செயலால் மகிழ்ச்சியை உண்டாக்கி, ஒப்பற்ற திருவைந்தெழுத்தை ஓதி, உமாதேவியார் அளித்த சிவஞானப்பாலைப் பருகிய அன்புடையவரான திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருமணத்தைக் காண விருப்புற்று நல்லூர்ப் பெருமணம் என்ற திருத்தலத்தை அடைந்து குயில்கள் நிறைந்த மாமரங்கள் சூழ்ந்த சோலைகளை உடைய அத்தலத்தில் திருமணம் நிகழ்ந்தபின் தோன்றிய சோதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப் பட்டார்.

**அ.பொ:** வண் - வளப்பம்; கோட்டின் மலர் - மரக்கிளைகளில் உள்ள பூக்கள்; திரை - அலை; பாணி - நீர்; ஞாலம் - தரை; பிணை - மாலை; உமை அமுது உண்ட நேயர் - திருஞானசம்பந்தர்; பெருமணம் - நல்லூர்ப் பெருமணம் என்ற தலம். **(உஎ)**

## உருத்திர பசுபதி நாயனார்

28. கங்குல்எழு மதிஎனச் சங்கவெண் திரையின்ஒலி
காட்டும்நீர்ப் பொன்னி நாட்டில்,

கலைநீடு தென்திருத் தலையூரில், அறுதொழில்
கற்றபசு பதியார், மெய்ம்மை
தங்குநால் வேதம்ஆறு அங்கம்சட் கருமநெறி
தவறாமல், இரவு பகலும்
தன்புனல் மடுக்குள்நின்று, உச்சிமிசை அங்கைஅஞ்
சலியொடு மகிழ்ச்சி சார்ந்து,
அங்கணர் எனப்பஞ்ச அட்சரம் உருத்திரம்
அறைந்திடும் திறமை அதனால்,
அன்பினொடு சடைநதி இலங்க,மழு மான்கரம்
அலுங்க, சுரும்புஆர் குழல்
மங்கையுடன் மிகுதிருச் செங்கண்மழ விடையின்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** இரவில் தோன்றும் முழுநிலாப் போல ஒளி வீசும் சங்குகள் தண்ணீர் அலைகளில் ஒலி செய்யும், காவிரி பாயும் சோழநாட்டில் பல கலைகளும் செழித்த திருத்தலையூர் என்னும் திருத்தலத்தில் அந்தணருக்கு வகுக்கப்பட்ட ஆறு தொழில்களிலும் பயின்ற பசுபதி நாயனார் நான்கு வேதங்களும் ஓதி, ஆறு அங்கங்களும் பயின்று தம் ஆறு தொழில்களையும் தவறாமல் செய்து, இரவும் பகலும் தண்ணீர் செறிந்த மடுவில் கழுத்து வரை நீரில் அமிழ்ந்து நின்று கைகளைத் தலைமீது குவித்து மகிழ்ச்சியோடு, சிவபெருமானுடைய திருவைந்தெழுத்தையும் ஸ்ரீருத்ரம் என்ற வேதப் பகுதியையும் ஓதிய மேம்பட்ட செயலால், சிவபெருமான் அன்போடு தம் சடையில் கங்கை விளங்க, கைகளில் மழுவும் மானும் பொருந்த, வண்டுகள் பொருந்திய கூந்தலை உடைய பார்வதியோடு, சிவந்த கண்களை உடைய இளமை காளை மீது இவர்ந்து பசுபதி நாயனாருக்குக் காட்சி வழங்கி அவரை ஆட்கொண்டார்.

**அ.பொ:** சட்கருமம் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு தொழில்கள்; அஞ்சலி - கை கூப்பு; பஞ்ச அட்சரம் - திருவைந்தெழுத்து; சுரும்பு - வண்டு; செங்கண் விடை- திருமாலாகிய காளை.

(உஅ)

## திருநாளைப் போவார் நாயனார்

29. காமலர் நிறைந்தமேற் கானாட்டில் ஆதனூர்க்
கடைஞர்குல நந்தர், திருமுக்

**கண்ணார்பதி பலஎனப் பண்ஒலி முழக்குமுக்**
**கருவிசெய் புறத்தொண்டி னார்;**
**பூமருவு புன்கூர்த் திருக்கோயில் மதில்வலம்**
**புரியஅடல் ஏறு விலகப்**
**புரிந்துபூம் பொய்கைசெய்து, அம்பலம் தொழுதிடப்**
**புகலும்மொழி நாளை என்பர்;**
**ஏமமறை யோர்தொழும் தில்லைசென்று எய்தி,'நாம்**
**இப்பிறவி தீரும்வகை' என்று**
**எண்அகம் கண்டுஅந்த ணர்க்குஇரவு கனவுதந்து,**
**எரியிடும் புனல் மூழ்கியே**
**மாமுனிவர் ஆகிமறை யோர்போற்ற மன்றுள்முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** சோலைகளில் மலர்கள் நிறைந்த மேற்கா நாட்டின் ஆதனூரிலே கீழ்க்குலத்தில் தோன்றிய நந்தனார் சிவபெருமான் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்கள் பலவற்றினுக்கும் இசைக்கருவிகளுக்கு உரிய தோல், வார், நரம்புக் கருவிகளுக்கு உரிய நரம்பு இவற்றைச் செப்பனிட்டு உதவும் வெளித்தொண்டு செய்பவர். பொலிவு பொருந்திய திருப்புன்கூர்க் கோயிலை வலம் வந்து சந்நிதி முன் நின்றபோது அவர் சிவபெருமானைக் காண இயலாதவாறு மறைந்திருந்த நந்தி தேவர் விலகி அவருக்குத் தம்மைக் காணும் வாய்ப்பு ஏற்படுமாறு சிவபெருமான் செய்தார். அத்தலத்தில் தூர்ந்திருந்த குளத்தை இவ்வடியார் கல்லித் திருத்தினார். தில்லைச் சபையைத் தொழ நாளை செல்வோம் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்த இவ்வடியவர் வேதங்களைப் பாதுகாக்கும் அந்தணர்கள் வழிவரும் தில்லை நகரைச் சென்று அடைந்து இவ்விழி பிறவி நீங்கி நாம் தில்லை கூத்தப்பிரானை எப்படிக் காண்பது என்று இவ்வடியார் எண்ணுவதனை உட்கொண்டு சிவபெருமான் தில்லைவாழ் அந்தணருக்கு இரவு கனவில், தீக்குழி மூட்டி அதன்கண் நந்தனார் மூழ்கி வருமாறு குறிப்பிட்டவாறே, நந்தனார் தீக்குழியில் மூழ்கி, சிறந்த முனிவர் வடிவு கொண்டு அந்தணர்கள் போற்றப் பொன்மன்றின் முன் வந்து நிற்க, அவரைச் சிவபெருமான் ஆட்கொண்டார்.

**அ.பொ:** கடைஞர்குலம் - கீழ்க்குலம்; முக்கருவி - தோற்கருவி, நரம்புக்கருவி என்பன; அடல்ஏறு - வலிமை மிக்க நந்தி தேவர். **(உகூ)**

## திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

30. தண்தமிழ் மிகும்தொண்டை நாட்டினில், கச்சிநகர்
தன்னில்ஏ காலி மரபில்,
தழைக்கும் திருக்குறிப் புத்தொண்டர்; அடியார்
சடங்கள்பணி செய்யும் நாளில்,
கொண்டல்மலி காலைஆ துலரின்மா தவர்எனக்
கூறைமா சொடும் இளைத்த
கோலம்என வும்தொண்டர் முன்புசென் றிட,அன்பு
கூர்ந்து,மாசு உறை கூறையைக்
கண்டுஅயர் வின்உடை ஒலித்திட அருள்'எனச்சீத
காலம்உடல் குளிர் பொறாது
காணும்என்று ஓத'இப் பகல்அளிப் போம்'எனக்
கைக்கொண்டு, ஒலித்து வரும்முன்
மண்டிய பெருந்தூறல் கண்டுமுடி மோதமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** தமிழ் வளம் செறிந்த தொண்டை நாட்டிலே காஞ்சிமா நகரில் வண்ணார் மரபில் சிறப்பாக வாழ்ந்த திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அடியவருடைய ஆடைகளைத் துவைத்துத் தூய்மையாக்கிக் கொடுக்கும் திருப்பணி செய்து வந்த காலத்தில், மழை பெய்யும் கார்காலத்தில் உடல் நலம் குன்றிய தொண்டராக அழுக்குப் படிந்த ஆடை அணிந்து, இளைத்த உடம்புடன் அவ்வடியார் முன் வந்து சேர, திருக்குறிப்புத் தொண்டர் அன்போடு அவ்வடியவரின் அழுக்குப் படிந்த ஆடையைத் துவைத்துத் தருவதற்கு இசையுமாறு வேண்ட அவ்வடியார் 'இது குளிர்காலம். உடம்பு குளிரைத் தாங்காது' என்று கூற அடியார் அன்றைப் பகலே ஆடைகளைத் துவைத்து உலர்த்தித் தருவதாகக் கூறி ஆடைகளைப் பெற்றுக் கொண்டு, ஆடைகளை நீரில் நனைத்துத் துவைக்கும் முன் மழை தொடங்கி விடாது பெய்யத் தாம் கூறியபடி அந்த அடியார் ஆடையைப் பகல் முடியும் முன் துவைத்து உலர்த்திக் கொடுக்க முடியாத தாம் உயிர் வாழ்வதனைவிட இறத்தலே சிறந்தது என்று தொண்டர் தம் தலையைத் துணி துவைக்கும் கல்லில் மோத அந்நிலையில் சிவபெருமான் வந்து அவரைத் தடுத்து ஆட்கொண்டார்.

**அ.பொ:** ஏகாலி - வண்ணார்; சடங்கள் - ஆடைகள்; ஆதுலர் - நோயுற்றவர்; கூறை - ஆடை; ஒலித்து - துவைத்து; தூறல் - மழை; முடி மோத - தலையைக் கல்லில் மோத. **(௩௰)**

## சண்டேசுர நாயனார்

31. **மெய்அகம் பெறுதிருச் சேய்ஞ்ஞலூர் மறையோரின்**
**வீறுகா சிபகோத் திரம்**
**விளங்கஎச்ச தத்தர்மனை யாள்பவித் திரைசேய்**
**விசாரச ருமர்அறிவி னில்**
**பொய்இகழ்ந் தோர்கள்நிரை மேய்க்கும்ஆ யன்பிழை**
**பொறாதுதான் மேய்த்து விரிநீர்ப்**
**பொங்கும்மண் ணியின்ஆர நீழல்மணல் மேல்,பால்**
**பொழிந்துஆட்டி, அர்ச்சனை தினம்**
**செய்யஅந் தணர்தமக்கு அயலினோர் கூறஅச்**
**செய்கைதந் தைக்கு உரைப்ப,**
**தேடிமறு நாள்கண்டு அடித்துஉதைத் தவர்களால்**
**தெறிப்பமழு எறிய, வான்பால்**
**வையகம் அதில்தாமம் உண்கலம் தந்துமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** உள்ளத்தில் சத்தியத்தையே பின்பற்றிய அந்தணர்கள் வாழும் திருச்சேய்ஞ்ஞலூரில் மேம்பட்ட காசிப கோத்திரம் விளங்கத் தோன்றிய எச்ச தத்தருக்கு அவருடைய மனைவி பவித்ரையிடம் தோன்றிய விசார சருமர், பொய் கடிந்த அந்தணர்களுடைய உடைமையான பசுக்கூட்டங்களை மேய்த்த ஆயன் பசுக்களை அடித்துத் தவறு செய்ய, அதனைக் காணப்பொறாமல் அப்பணியினைத் தாமே மேற்கொண்டு தாமே பசுக்களை மேய்த்து வந்த காலை, நீர் வெள்ளமாக வரும் மண்ணியாற்றங்கரையில் அத்திமர நிழலில் மணலால் இலிங்கம் அமைத்து அந்த இலிங்கத்துக்குப் பசுக்கள் தாமே பொழிந்த பாலினை நிரப்பி அபிடேகம் செய்து அருச்சனை புரிய, இச்செய்தியை அயலான் ஒருவன் சிறிது திரித்துப் பசுக்களை உடைய அந்தணர்களுக்குத் தெரிவிக்க, அந்தணர்கள் விசாரசருமரின் செயலை அவன் தந்தையார் எச்ச தத்தரிடம்

உரைப்ப, தந்தை மகன் இருந்த இடம் மறுநாள் தேடிவந்து மகனை அடித்துப் பால் நிரம்பியிருந்த குடத்தை உதைப்ப, உதைத்த தந்தையின் கால் துண்டாகுமாறு விசாரசருமர் மழுவை எறிய, இறைவன் அசரீரியாக 'யாம் உண்ட பரிகலமும் சூடியமாலையும் உனக்குத் தந்து உனக்குச் சண்டீசபதம் அளித்தோம்' என்று தெரிவித்துக் காட்சி கொடுத்து விசாரசருமரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** பிறழ - தவறு செய்ய; மண்ணி - மண்ணியாறு; ஆரநீழல் - அத்திமர நிழலிலே; மணல் - மணலால் ஆகிய இலிங்கம்; ஆட்டி - அபிடேகம் செய்து; தெறிப்ப - துண்டாகுமாறு; தாமம் - மாலை; வான்பால் - அசரீரியாக.

**(௩௧)**

## திருநாவுக்கரைய நாயனார்

32. **திருமுனைப் பாடிநாட்டு உரியதிரு வாமூர்,**
**செழித்தவே ளாண்கு லத்தில்,**
**திகழ்குறுக் கையர்அதிபர் புகழனார் மனைவிமா**
**தினியார்பால் திலகவ திபின்**
**மருள்நீக்கி என்றுபா டலிபுரத்து அமணர்**
**மார்க்கம்உற, திலக வதியின்**
**வருசூலை யால்அதிகை சேர்ந்துவண் தமிழின்நோய்**
**மாற்றி'வாக் குஇறை' என்றுமெய்**
**வெருவுநீற் றறைநஞ்சு, வேழம்உய்ந்து, அலைநீந்தி**
**வெண்பொடிச் சூலம் இடபம்**
**வேண்டி,அப் பூதிசேய் விடம்நீக் கியே,காசு**
**வேண்டிமறை கதவு நீக்கி,**
**மருவுதாள் முடிகொளப் பூம்புகலூர் தனில்,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** சோழநாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் இடைப்பட்ட திருமுனைப்பாடி நாடு என்னும் நடுநாட்டில் திருவாமூர் என்ற தலத்தில் வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் செல்வராக விளங்கிய புகழனார் தம் மனைவியார் மாதினியார்பால் திலகவதி என்ற மகளையும் அடுத்து மருள்

நீக்கி என்ற மகனையும் பெற்றாராக, இளமையில் பெற்றோரை இழந்த மருள்நீக்கியார் பாடலிபுரத்தை அடைந்து சமண சமயத்தைத் தழுவி வாழ, திலகவதியார் திருவதிகை இறைவனை வேண்டியதால் ஏற்பட்ட சூலைநோய் தீர வேண்டி மருள்நீக்கியார் திருவதிகைத் தலத்தைச் சார்ந்து இறைவனைத் தமிழ்ப்பாவினால் துதிக்க, இறைவன் சூலை நோயைப் போக்கி அவருக்கு நாவுக்கரசர் என்ற சிறப்புப் பெயரை நல்க, சமண சமயத்தை விடுத்துச் சைவ சமயத்தைச் சார்ந்த மருள்நீக்கியாரைச் சமணர்கள் கொடிய நீற்றறையில் இடல், கொடிய விடம் அருத்தல், யானைக்காலால் தாக்கச் செய்தல், கல்லொடு கட்டிக் கடலில் இடல் முதலிய தீச்செயல்களால் நலியச் செய்ய, அவற்றிலிருந்து மருள்நீக்கியார் உய்ந்து திருநீறு பூசி, சிவபெருமானை வேண்டிச் சூல முத்திரையும் இடப முத்திரையும் பொறிக்கப் பெற்று, அப்பூதி அடிகளின் மகனைப் பாம்பு தீண்டிய விடத்தை நீக்கி, திருவீழி மிழலையில் பஞ்சத்திலிருந்து அடியார்களை உணவளித்துக் காக்கப் பொற்காசு வேண்டிப்பெற்று, திருமறைக்காட்டில் வேதங்கள் அடைத்திருந்த கோயில் கதவினைத் திறப்பித்து, சிவபெருமான் திருவடிகளைத் தம் முடிமேல் விரும்பிப் பெற்று இறுதியாகப் பூம்புகாரில் இருந்தபோது சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்றார்.

**அ.பொ:** குறுக்கையர் - வேளாண் குலத்தில் ஒரு குடி; வாக்கு இறை - திருநாவுக்கரசர்; தாள்முடி கொள - இறைவன் திருவடிகளைத் தம் தலையின் மேற்கொள்ள.

**(௩௨)**

## குலச்சிறை நாயனார்

33. **பாட்டுஇசை தரும்பாண்டி நாட்டின்மண மேற்குடிப்
பதிக்குலச் சிறையர், அமணின்
பந்தம்உறு தென்னர்கோ மந்திரி கள்மேலாம்
படிக்குஇசைந் திடுவர் அடியார்
தாட்டொழும் பெருமைபெறு மரபினார்; மேம்படும்
சாதியார் அல்லர் எனினும்,
தண்பூதி சாதனம் அணிந்தவர்கள் ஆயிடின்,
தாழ்ந்துஎழும் காதல் உடையார்;
சேட்டுஅலர் திருஎனும் பாண்டிமா தேவியார்
திருக்குறிப்பு ஏவல் புரிவார்;
செய்யசம் பந்தர்வாதில் தோற்ற குண்டரைத்
திகழ்கழுவில் ஏற்று புகழோர்;**

வாட்டம்இல் ஆலவாய் போற்றிஅருள் வீடுஉறமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** தமிழ்ப் பாடல்கள் முழங்கும் பாண்டிய நாட்டின் மணமேற்குடி என்ற ஊரில் தோன்றிய குலச்சிறையார் சமண சமயச் சார்புடைய பாண்டிய மன்னனின் தலைமை அமைச்சராய், சிவனடியார் திருவடிகளை வணங்கும் வழக்கத்தினராய், திருமகளை ஒத்த பாண்டிமா தேவியார் குறிப்பிட்டபடி செயல்படுபவராய், திருஞானசம்பந்தரிடம் அனல்வாதம், புனல்வாதம் என்ற இரண்டு வாதங்களிலும் தோற்ற சமணரை அச்சமணர் முன்பு கூறியபடியே கழுவில் ஏற்றிய புகழுக்கு உரியவராய், மதுரைத் திருவாலவாய்க் கோயிலிலுள்ள சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டு அப்பெருமான் தன் அருளால் காட்சிதர வீடுபேறுபெற்றவர்.

**அ.பொ:** அமணின் பந்தம் – சமணர்கள் தொடர்பு; சேட்டு அலர் – பெருமை பொருந்திய செந்தாமரை; ஆலவாய் – மதுரைச் சொக்கநாதர் கோயிலின் பெயர்.

**(௩௩)**

## பெருமிழலைக் குறும்ப நாயனார்

34. **மேதினியில் வரும்மிழலை நாட்டுஉயர்ந் திட்டபெரு**
**மிழலைக் குறும்பர், அன்பர்**
**விரும்புதிருப் பணிநிரம்ப, அமுது ஊட்டிநிதி**
**வேண்டுவது அளிப்பர்; தினமும்**
**தீதிலா வன்தொண்டர் பாதமலர் கைதொழுது,**
**செய்யவாய் வாழ்த்த, மனத்துச்**
**சிந்திப்ப, எந்தைஅருள் சந்திப்பது எனஅஞ்சு**
**எழுத்துஉணர்ந்து, எண்சித்தி யால்**
**நாதம்உறு கரணம்ஒன் றாய்அறிவு மேற்கொண்டு**
**நாடிவழி புந்தி உறவே,**
**நாடும்கபா லம்நடு மீதில்மூ லம்குவிய**
**நாட்டிவன் தொண்டர் வெள்ளி**
**மாதிரம் பெறுவதுஅறி வால்தெரிந்து அடிதொழமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** மிழலை நாட்டில் மேம்பட்ட ஊராகிய பெருமிழலையில் தோன்றியதால் பெருமிழலைக் குறும்பர் என்ற பெயருடைய அடியவர் அன்பர்கள் விரும்பும் திருப்பணிகளை நிரம்பச் செய்து அடியவர்களுக்கு நாடோறும் உணவளித்து வேண்டிய செல்வமும் வழங்கும் இயல்பினர். அவர் மாசற்ற வன்தொண்டர் எனப்படும் சுந்தரருடைய திருவடிகளை மனத்தால் சிந்தித்து, வாயால் வாழ்த்திக், கைகளால் தொழுது எம்பெருமான் திருவருள் பெறுவதற்குத் திருவைந்தெழுத்தை எப்பொழுதும் ஓதியவராய் அட்டமா சித்திகளையும் பெற்றுத் தம் உள்ளம் நாதத் தத்துவமான சிவபெருமானிடம் ஒன்றுபட, ஞானம் பெற்று, மண்டை ஓட்டின் நடுவில் தம் ஞானம் குவியுமாறு நாட்டி, சுந்தரர் கயிலையை அடையப் போகும் நாளினைத் தம் யோகம் பழகிய அறிவினால் தெளிவாக உணர்ந்து, அவர் திருவடி வணங்கி அவரை வரவேற்க, அவர் (சுந்தரர்) கயிலை யடைவதற்கு முதல் நாளே கயிலையை அவர் அடையுமாறு இறைவன் அவரை முன் வந்து ஆட்கொண்டான்.

**அ.பொ:** எண் சித்தி - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்; நாதம் உறுகரணம் - நாத தத்துவத்தில் தோய்ந்த செயல்; கபாலம் - மண்டை ஓடு; வெள்ளி மாதிரம் - கயிலை மலை. **(௩௪)**

## காரைக்கால் அம்மையார்

35. தாரணி பராவும் காரைக்காலின் வணிகர்தன
தத்தர்பெறு புனித வதியார்,
தமர்எனும் கடல்நாகை நிதிபதி மகன்பரம
தத்தன்மணம் உற்றும் அடியார்
சீர்அணி அமுதுஇடும் மின்னாளிடம் கொழுநன்தரு
செங்கனி அறிந்து, அன்பராய்ச்
சென்றுஅமுது கொண்டபின், கணவர்உண் டிக்குஅருள்
செங்கனி அழைப்ப, வெருவி
ஏர்அணியும் மறுதேசம் எய்திவேறு இல்தெரிந்து,
ஏகஅடி தொழ, மறுத்தும்
எழில்உடல் குறைந்துமுடி யால்கயிலை கண்டு,அம்மை
என,அப்பன் என்று பாடி,
வார்அணி தனக்காளி ஆடுகாட்டு இலக,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை

**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** உலகம் போற்றும் காரைக்காலில் தனதத்தர் என்ற தன வைசியர் மகளார் புனிதவதியார் தம் இனத்தவரான, கடற்கரையை அடுத்த நாகப்பட்டினத்திலிருந்த நிதிபதி என்பார் மகன் பரமதத்தனை மணந்து, அடியவர்களுக்குச் சிறப்பான உணவிடும் பழக்கத்தைத் தொடர்ந்து கொண்டாராக, ஒரு நாள் பரமதத்தன் புனிதவதியாரிடம் இரண்டு மாங்கனிகளை அனுப்ப, அதனை அறிந்த சிவபெருமான், அடியார் வேடத்தில் வந்து அம்மாங்கனிகளுள் ஒன்றனை உணவோடு பெற்று உண்டு சென்ற பின், கணவன் உணவு உண்டபோது, தன் கலத்திலடப்பட்ட ஒரு மாங்கனியோடு மற்ற மாங்கனியையும் இடுமாறு கூற, மாங்கனி இல்லாத நிலையில் புனிதவதியார் இறைவனை வேண்டிப் பெற்ற கனியினைக் கணவனுக்கு அளிப்ப, உண்மையை அறிந்த கணவன் மற்றொரு கனி வேண்ட, அக்கனியையும் புனிதவதியார் வரவழைத்துக் காண்பித்தபின் அது மறைய, அவள் கணவன் அவளைக் கண்டு அஞ்சி, அழகிய வேற்றுத் தேயத்தை அடைந்து, அங்கு வேறொரு பெண்ணை மணந்து வாழ, அது கேட்ட புனிதவதியார் அவன் இருப்பிடத்தை அடைய, அவன் அச்சத்தோடு அவரை வணங்க, அவரோடு இனி இல்லறம் நிகழ்த்த இயலாது என்பதனைக் குறிப்பால் தெரிவிக்க, கணவனுக்குப் பயன்படாத உடல் அழகு பிறர் மனத்தைக் கெடுக்கப் பயன்படக்கூடாது என்று உடல் அழகை உகுத்துப் பேய்வடிவான புனிதவதியார் கயிலைமலை மீது தலையினால் நடந்து சென்றதைக் கண்டு, இறைவன் அவரை 'அம்மையே' என்று அழைக்கத் தாம் இறைவனை 'அப்பா' என்று அழைத்துப் பாடி அப்பெருமானால் ஆட்கொள்ளப்பட்டுத் திருவாலங்காட்டில் கச்சணிந்த தனங்களை உடைய காளி காணுமாறு ஆடிய ஊர்த்துவ தாண்டவத்தைப் புனிதவதியார் என்றும் கண்டு கொண்டு களிப்பு எய்துமாறு சிவபெருமான் அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** பராவும் - புகழும்; மின்னாள் - புனிதவதி; வெருவி - புனிதவதியின் தெய்வத்தன்மைக்கு அஞ்சி; அணிய - அண்ணிய, பொருந்திய; ஏர் அணியும்- செழிப்பினால் அழகு பொருந்திய; வேறு இல் - வேறொரு மனைவி; உடல் எழில் - உடம்பின் தசைப்பொதியின் அழகு; வார் அணி தனம் - கச்சு அணிந்த கொங்கை; ஆடுகாடு - கூத்தாடுகின்ற திருவாலங்காடு. **(௩௫)**

## அப்பூதி நாயனார்

36. **துங்கம்மிகும் திங்களூர் வாழும்நான் மறைநெறிச்**
**சொல்பயி லும்அப்பூதி யார்,**

துஞ்சுகொலை களவுகள் காமம் கடிந்துஅறத்
தூயமனை யறம் வழாமல்
தங்குபொருள் இடம்மைந்தர் மேதிநிரை மற்றவும்
தக்கவாக்கு அரசின் நாமம்
சாற்றிமகிழ நாள்அதனில், வாக்குஅரசர் பந்தர்வழி
சார்ந்துபெயர் கண்டு, காதல்
பொங்கமனை சென்றபொழுது, அன்பர்பெயர் வினவிஅடி
போற்றிஅமுது ஆக்கி மூத்த,
புதல்வனைக் 'கதலிஇலை கொடுவா' எனச்சொல்ல,
பொங்குஅரவு தீண்டி வீய,
மங்காத சேயின்விடம் மாற,அமுது இடவும்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** தூய்மை நிறைந்த திங்களூர் என்ற தலத்தில் வாழ்ந்த அப்பூதியார் நான்கு வேதங்களாகிய சிறந்த சொற்களை ஓதும் இயல்பினராய்க் கொலை, களவு, கள், காமம் என்ற தீயனவற்றை நீக்கி இல்லறத்தைத் தூய நல்லறமாக நடத்தி நாவுக்கரசர் திருநாமத்தை நிலங்கள், பொருள்கள், புதல்வர்கள், மாடுகள், அளவு கருவிகள் முதலியவற்றிற்கெல்லாம் பெயரிட்டு மகிழ்வாக வாழ்ந்து வந்த காலத்தில், அப்பூதியார் அமைத்திருந்த 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தல்' வழியே வந்த திருநாவுக்கரசர் தம் பெயரைக் கண்டு, அப்பெயரிட்டவரைத் தரிசிக்க அவர் வீட்டினை அடைந்த பொழுது, அங்கிருந்த அப்பூதியார் தம்மைக் காணவந்தவர் திருநாவுக்கரசர் என்பதை வினவி அறிந்து, அவர் திருவடிகளில் பணிந்து அவருக்கு அமுது படைப்பதற்காக தம் மூத்த புதல்வனை முழுதுமாகப் பிரியாத வாழைக்குருத்துக் கொண்டு வருமாறு கூற, குருத்தை அரிந்த பொழுது, அதன் உள்ளிருந்த சினம் மிக்க பாம்பு தீண்ட அவன் இறக்க, அதனை அறிந்த திருநாவுக்கரசர் இறைவன் அருளால் அந்த விடத்தைப் போக்க, பின் அப்பூதியடிகள் அளித்த உணவை உட்கொள்ள அருள் புரிந்தவன் சிவபெருமான்.

**அ.பொ:** துங்கம் - தூய்மை; சொல் பயிலும் - வேதம் ஓதும்; மேதி - எருமை; நிரை - ஏனைய பசு, காளை இவற்றின் தொகுதி; வாக்கு அரசு - திருநாவுக்கரசர்; கதலி - வாழை; வீய - இறக்க. **(௩௬)**

## நீலநக்க நாயனார்

37. தண்டலை நெருங்குகா விரிநாட்டில் வருதிருச்
சாத்தமங் கையின் மனைஅறம்
தக்கமறை யோர்நீலநக் கர்மனத்து இனிதுஉறச்
சார்ந்தும்ஆ திரைவிரதம் மெய்க்
கொண்டஅய வந்தியார் பூசைசெய்து அன்புமிக்கு
ஊர்ந்துபஞ் சாக்கரம் உருக்
கூறலிங் கத்தில் சிலம்பிவிழ, மாற்றுதம்
கோதைமீது ஊடி, நீத்தல்
கண்டுஅன்று கனவில்அவள் ஊதிஉமி யாமேனி
கன்றியது உரைப்ப, இல்லாள்
காதலாய்ச் சம்பந்தர் உள்மகிழ் வாய்நீல
கண்டயாழ் ப்பாணர் தங்க
வண்திருத் தழல்வேதி தந்திட, பெருமணம்முன்,
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** காவிரி பாயும் சோழ நாட்டில் சோலைகள் செறிந்த திருச்சாத்த மங்கை என்ற திருத்தலத்தில் இல்லறத்தை நிகழ்த்தி வந்த மேம்பட்ட அந்தணரான நீலநக்கர் மனத்தில் சிவபெருமானை இனிமையாகத் தியானித்துத் திருவாதிரை நாளில் விரதம் பூண்டு அவ்வூர்க் கோவிலாகிய அயவந்தியில் உள்ள சிவபெருமானுக்குப் பூசை செய்து அன்பு மிக அங்கேயே திருவைந்தெழுத்தை ஓதியவாறு அமர்ந்திருக்க, அப்பொழுது சிவலிங்கத்தின் மீது சிலந்தி ஒன்று மேலிருந்து விழ, அதனைத் தம் வாயால் ஊதி நீல நக்கருடைய மனைவியார் சிலந்தியை அப்புறப்படுத்த, வாயால் ஊதியதால் சிவபெருமான் மீது எச்சில் தெறித்திருக்கும் என்று கூறி மனைவியை வெகுண்டு அவளை விடுத்துத் தாம் வீடு சென்று படுக்கையில் துயில, இறைவன் அன்று இரவு நீலநக்கர் கனவில் அவர் மனைவி ஊதி சிலந்தியை விரட்டாத தம் உடல் பகுதியைக் காட்ட, உடனே தம் மனைவியார் செயல் ஏற்றதே என்று கருதி அவரைக் கோயிலிலிருந்து வீட்டிற்கு அழைத்து வந்து முன்பு போல இல்லறம் நிகழ்த்தி வந்த நாளில், திருஞானசம்பந்தர் திருநீலகண்ட யாழ்ப்பாணருடன் திருச்சாத்தமங்கைக்கு வர, நீலநக்கர் பாணனார் இரவில் தங்குவதற்கு மேம்பட்ட தம் வேள்வி மேடை அமைக்கப்பட்ட பகுதியைக்

காண்பிக்க, பாணனார் அங்குத் தங்கியதால் வேள்வித் தீ கொழுந்துவிட்டு எரியச் சில நாள்களுக்குப் பின் திருஞானசம்பந்தர் திருமண நாளன்று தோன்றிய சோதியில் நீலநககர் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** தண்டலை - சோலை; அயவந்தி - சாத்தமங்கையில் உள்ள கோயில்; நீத்தல் கண்டு - மனைவியைத் துறக்க முடிவு செய்து; ஊதி உமியா - வாயால் ஊதிக் காற்றால் துரத்தாத; வேதி - யாகம் செய்யும் இடம்; பெருமணம் - திருஞானசம்பந்தர் திருமணம் நிகழ்ந்த ஊர். **(௩௭)**

## நமிநந்தி நாயனார்

**38.** ***ஊக்கம்மிக வருபொன்னி நாட்டில்ஏ மப்பேரை***
***யூர்க்குள்மறை யோர்க்குள் உயர்சீர்***
***உண்மைபெறு நமிநந்தி, அடிகள்சிவ பணிவிடை***
***உகந்தும் ஆரூர் இறைஞ்சி,***
***தேக்கம்உறு திருவிளக்கு ஏற்றநினை வாய்மாலை***
***செல்பொழுது அமணர் மனையில்***
***சென்றநறு நெய்கேட் டிட,தீது உரைத்திட***
***சிந்தையில் துயர்கொண் டதைப்***
***போக்கிவிட நீர்விளக்கு ஏற்றவிண் வாக்குஅருள்***
***புகன்றபடி தீபம் ஏற்றி,***
***புதுமைபெற அன்பருக்கு வேண்டுவன எல்லாம்***
***பொருந்திடச் செய்த படியால்***
***வாக்குஅரசர் தொண்டருக்கு ஆணிஎன ஓதிடமுன்***
***வந்து,அடிமை கொண்ட கயிலை***
***வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்***
***மாணிக்க மலை நாதனே!***

**பொழிப்:** காவிரியில் வெள்ளம் செழிப்புறுத்தும் சோழ நாட்டின் ஏமப்பேரூர் என்ற திருத்தலத்தில் வாழ்ந்த வேதியருக்குள் உயர்ந்த சிறப்பினை உண்மையாகப் பெற்றிருந்த நமிநந்தி நாயனார் சிவத்தொண்டில் ஈடுபட்டுத் திருவாரூர்ப் பெருமானை வழிபட்டு, கோயிலில் திருவிளக்கு இடவேண்டும் என்ற விருப்பத்தோடு மாலைநேரம் வந்தபோது, பக்கத்திலிருந்த சமணர்கள் வீடுகளில் விளக்கு எரிக்க நெய் வழங்குமாறு வேண்ட, அவர்கள் நெய் வழங்காது கொடுஞ்சொற் கூற, அச்சொற் கேட்டு வருந்திக் கோயிலுக்கு மீண்ட நமிநந்தி நாயனார் துயர்கண்டு சிவபெருமான் நீரினால் திருவிளக்கு

எரிக்குமாறு அசரீரியில் குறிப்பிட, அசரீரி குறிப்பிட்டபடியே நீரை ஊற்றி அகல் விளக்குகளை ஏற்றிக் கோயில் முழுதும் ஒளி பரவும் செய்தியை நாயனார் செய்திட, சிவபெருமான் அடியவர் வேண்டுவன எல்லாம் வழங்குவார் என்ற உண்மையை உலகு அறியச் செய்த இந்த நாயனாரைத் 'தொண்டருக்கு உரை ஆணி' என்று தம் பாடலில் போற்றிடுமாறு செய்து சிவபெருமான் இந்த அடியவரை ஆட் கொண்டான்.

'ஆராய்ந்து அடித்தொண்டர் ஆணிப்பொன், ஆரூர் அகத்தடக்கி
பார்ஊர் பரப்பத்தம் பங்குனி உத்தரம் பாற்படுத்தான்
நார்ஊர் நறுமலர் நாதன்அடித் தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக்கு இட்டமை நீள்நாடு அறியும்அன்றோ'

(தேவாரம் IV-*102-2*)

ஆணி – பொன்னின் மாற்றினை அறிதற்குப் பயன்படுத்தும் உயர்ந்த பொன்.

**அ.பொ:** ஏமப்பேறை – ஏமப்பேரூர்; விண்வாக்கு – அசரீரி; ஆணி – வண்டியின் அச்சாணி, பொன் உரைகாண உரைக்கும் ஆணி. **(௩௮)**

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்

39. **சிரபுரம் தனில்மறைச் சிவபாத இதையர்தம்
தேவிபக வதியார் அருள்
செல்வர்,கவு ணியர்நீல வல்லி,அமுது உண்டு,பண்
சேர்ந்துநல் தாளம் ஏந்தி,
தரளநிரை சேர்சிவிகை ஏறி,முய லகன்நோய்
தவிர்த்துஇனிய பந்தல் மேவி,
தக்ககிழி பெற்றுஇசையின் யாழ்முறித் துஆலம்
தவிர்த்துஎழில் கதவு மூடி,
புரவலன் சுரம்விடுத்து, அமணநிலை போக்கி,இடி
புத்தனார் தலையில் ஏற்றி,
பூவாத பெண்ணைகாய்த்து, அங்கம்மங் கையாய்ப்
புகழும்நம் பாண்டார் தரும்
மருமலர்க் குழலிதன் திருமணம் செய்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** சீகாழி என்ற திருத்தலத்திலே, கவுண்டின்ய கோத்திரத்தில் தோன்றி வேதங்களில் வல்ல சிவபாத இருதையருக்கு அவர் மனைவியார் பகவதியாரால் பெறப்பட்ட செல்வராய், உமாதேவியார் அளித்த ஞானப்பாலைப் பருகி, இசைத் தமிழ்பாடும் ஆற்றல் பெற்று, திருக்கோலக் காவில் ஓசை உடைய நல்ல பொன் தாளம் பெற்று, நெல்வாயில் அரத்துறையில் சிவபெருமான் அருளிய முத்துச்சிவிகை பெற்று அதில் அமர்ந்து, திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் மகளுடைய முயலகன் என்ற வலிப்பு நோயினை நீக்கி, திருச்சத்தி முற்றத்தில் முத்துப் பந்தர் பெற்று, திருவாவடுதுறையில் உலவாப் பொற்கிழி பெற்று, திருத்தரும புரத்தில் யாழ்மூரி பாடி, யாழைச் சிறப்பற்ற தாக்கி, திருமருகலில் பாம்பு கடித்த விடத்தைப் போக்கி, திருமறைக்காட்டில் திறக்கப்பட்ட மறைக்கதவினை அடைத்து, பாண்டிய மன்னனுக்கு ஏற்பட்ட வெப்புநோயைப் பதிகம் பாடிப் போக்கி, பாண்டிய நாட்டில் சமணர் நிலைபேற்றினை நீக்கி, போதிமங்கையில் புத்தன் தலையில் இடி விழச் செய்து, திரு ஒத்தூரில் காய்க்காத ஆண்பனையைப் பெண்பனை யாக்கி, மயிலாப்பூரில் பூம்பாவை என்ற வணிகப்பெண் எலும்பினைப் பெண் உருவமாக உயிர் பெறச் செய்து, நல்லூர்ப் பெருமணத்தில் நம்பாண்டார் மகளாகிய சொக்கி என்பவளை மணம் செய்து திருமணம் நிகழ்ந்த அந்த நாளிலேயே திருஞானசம்பந்தர் சிவபெருமானால் சோதி வடிவில் வந்து ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** கவுணியர் - கௌண்டின்ய முனிவர் கோத்திரத்தைச் சார்ந்தவர்; நீலவல்லி - பார்வதி; சிவிகை - பல்லக்கு; முயலகன் - ஒரு வகை வலிப்பு நோய்; ஆலம் - விடம்; பூவாத பெண்ணை - ஆண்பனை; அங்கம் - எலும்பு; நம்பாண்டார் - திருஞானசம்பந்தர் தேவி சொக்கியின் தந்தையார். **(௩௯)**

## ஏயர்கோன் கலிக்காம நாயனார்

**40.** **கோதிலா நீர்நாட்டு உலாவுபெரு மங்கலக்**
**குடிகொள்பின் னவரில் ஏயர்**
**கோன்கலிக் காமர்புன் கூர்தனக்கு ஆம்பணி**
**கொடுப்பர்ஆ ரூர்ப்பர வையார்**
**காதலால் எந்தையைத் தூதுவிடு வோன்முகம்**
**காணஒண் ணாதுஎன்ற சொல்**
**கண்டுவன் தொண்டர்மொழி கொண்டுஏயர் பால்சூலை**
**காட்டி,அடி போற்று அவர்க்கும்**

**ஈதுவன் தொண்டரின் தீரும்என, ஏயர்இசை**
**யாதுஉறவு நம்பி அருளால்**
**ஏய,அது கேட்டுஏயர் குடர்பீறி யிடஅறிந்**
**திடுநம்பி உடல்இகழ், முன்**
**வாதைதீர்ந் தேஎழுந்து ஏயர்தாழ்ந் தேதொழமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** குற்றமற்ற நீர்வளம் பொருந்திய சோழநாட்டில் பெருமங்கலம் என்ற தலத்தில் வாழ்ந்திருந்த வேளாளர் மரபினருள் வாழ்ந்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் திருப்புன்கூர் என்ற சிவத்தலத்தில் திருப்பணிப் பலவும் செய்தவர். திருவாரூரில் பரவை நாச்சியாரின் ஊடலைப் போக்கச் சிவ பெருமானையே தூதாக விடுத்த சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்ணால் காண்பதும் தீவினை என்ற உறுதி கொண்டார். அஃது அறிந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூப் பெருமானிடம் முறையிட, ஏயர்கோனுக்குச் சிவபெருமான் சூலைநோய் உண்டாக்கினார். அது மருந்து முதலியவற்றால் தீராதாகச் சிவபெருமான் தம்மை வழிபட்ட ஏயர்கோனுக்கு அந்நோய் சுந்தரராலேயே நீங்கும் என்று தெரிவிக்க, அதனை ஏயர்கோன் விரும்பாது அவதிப்பட, இறைவன் ஏவலால் சுந்தரர் ஏயர்கோனைக் காணவர, அச்செய்தி கேட்டுச் சுந்தரரைக் காண விரும்பாது ஏயர்கோன் வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிர் துறக்க, ஏயர்கோனைக் காண வந்த சுந்தரர் அவர் நிலைமை கண்டு தாமும் உயிர் துறக்க முற்பட, இறைவன் அருளால் ஏயர்கோன் உயிர்பெற்று வயிற்றுவலி நீங்கி எழுந்து சுந்தரரைத் தொழுது தம் பகைமை நீங்குமாறு வந்து ஆட்கொண்டான் சிவபெருமான்.

**அ.பொ:** பின்னவர் - வேளாளர்; சூலை - வயிற்றுவலி; நம்பி - ஆளுடைய நம்பி என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள்; ஏய்தல் - பொருந்துதல்; வாதை - துன்புறுத்தும் நோய். **(௪௦)**

## திருமூல நாயனார்

41. **சிந்தைஅய ராததிரு நந்திஅருள் அட்டமா**
**சித்திபெறும் மறையவர் எனும்**
**தென்கயிலை உறைசித்தர் வண்தமிழ்ப் பொதியமலை**
**சேரவரு போது பொன்னி**

**அந்தம்மிகு சாத்தனூர் நந்தர்குல மூலனார்**
**ஐயர்நிரை மேய்ப்ப வீய,**
**ஆவின்குழாம் கதறுமாறு கண்டுஅவ் வுடல்தன்**
**ஆசிகொண்டு எழவும், நிரைகள்**
**புந்திமகிழ் வாய்மனைகள் சென்றபின்பு, அவர்இல்**
**புகாமல் துறந்து, ஞானம்**
**புகன்றும்ஆ வடுதண்துறைக் குஎழுந்து, அரசுஅடி**
**பொருந்திஆண்டு ஒருபாத் திரு**
**மந்திரம் தானும் மூவாயிரம் கூற, முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** அழகிய கயிலாய மலையில் தங்கியிருந்த சித்தர் ஒருவர், மனத்தில் மயக்கம் இல்லாத நந்தித்தேவர் அருளினாலே அட்டமாசித்திகளையும் பெற்ற அந்தணராகிய சித்தர் மேம்பட்ட தமிழ் வழங்கும் பொதியமலையை அடைய வடக்கிலிருந்து வந்த பொழுது காவிரிக்கரையில் அழகு மிகுந்த சாத்தனூரில் ஆயர் குலத்தைச் சார்ந்த மூலன் என்பான் பசுக்கூட்டங்களை மேய்த்துக் கொண்டிருந்தபோது உயிர் நீங்க, அது கண்டு பசுக்கூட்டங்கள் கதறுவதனை நோக்கித் தம் உயிரை அம்மூலன் உடலில் பாய்ச்சி எழுந்தவுடன் பசுக்கள் மகிழ்ச்சி கொண்டு தத்தம் இருப்பிடங்களை அடைய, மூலன் உடலில் வந்து தங்கிய சித்தர் மூலனுடைய வீட்டிற்குப் போகாமல் வீட்டினைத் துறந்து ஞானம் தரும் சொற்களைப் பேசி ஆவடு துறையை நோக்கிச் சென்று அங்கு அரச மரத்து அடியில் தங்கி, ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் ஆண்டுகள் திருமந்திரம் என்ற மூவாயிரம் பாடல்கள் கொண்ட நூலினைத் தமிழுக்கு அருளுமாறு அவரைச் சிவபெருமான் ஆட்கொண்டான்.

**அ.பொ:** சுந்தரம் - அழகு; நந்தர் குலம் - இடையர் குலம்; ஐயர் நிரை - அந்தணர்களின் பசுக்கூட்டம்; அரசு - அரசமரம். **(சக)**

## தண்டி நாயனார்

**42. கல்விசெறி ஆரூரின் எல்லைஎந் நாளும்நல்**
**காணிபெற தண்டி அடிகள்**
**கண்ஒளி இலாப்பிறவி நண்ணிமெய்ஞ் ஞானக்**
**கருத்தின்விழி கண்டு, அனுதினம்**

**செல்வம்மிகு நமசிவா யப்பதம் செப்பும்நாத்**
**திறலினர், தனிக்குறி யினால்**
**செய்யநீர்ப் பொய்கைகல்ல அமணர் வந்துகண்**
**தெரியாத அசடன் என்று**
**சொல்லமனம் நொந்திட, கனவில்அரு ளியமுறைமை**
**தோன்றல்பால் கூறி, மறுநாள்**
**தொண்டர்கண் விளங்க,அமண் குண்டர்கண் மழுங்கமிகு**
**துயர்உழந்த அவர் பாழியின்**
**வல்லகல் கொண்டுதன் செய்பணி முடிப்பமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** கல்வியில் மேம்பட்டவர் வாழும் திருவாரூரில் அதன் எல்லைப் புறத்தில் கோவிலில் திருத்தொண்டு செய்வதற்காக நிலத்தை முற்றூட்டாகப் பெற்ற குடும்பத்தில் தோன்றிய தண்டி நாயனார் பிறவிக்குருடராகத் தோன்றி, உண்மையான ஞானம் தரும் அகக்கண் ஒளிவீசப்பெற்று, நாடோறும் திருவைந்தெழுத்தை ஓதும் நாவளம் பெற்று, முளை அடித்துக் கயிறுகட்டி எல்லை கோலித் தூர்ந்த திருக்கோயில் குளத்தைக் கல்லித் திருத்தும் சிவத்தொண்டில் ஈடுபட, அவ்விடத்திற்குச் சமணர்கள் வந்து கண் தெரியாத குருடன் குளத்தைக் கல்லி ஆழப்படுத்துவதைக் கண்டு, தண்டியடிகளை அறிவற்றவன் என்று இகழ, அதனைக் கேட்டுத் தண்டியடிகள் மனம் வருந்த, அன்றிரவு அவர் கனவில் இறைவன் அருளிய செய்தியைத் தண்டியடிகள் ஊர்த்தலைவனிடம் கூறி மறுநாள் தமக்கு, முன்பு குருடாய் இருந்த கண்கள் ஒளி பெற்ற செய்தியையும் உடல் பருத்த சமணர்கள் கண்கள் ஒளி மழுங்கிய செய்தியையும் ஊர்த்தலைவனுக்குக் காட்டி, அவர்கள் இருப்பிடங்களில் இருந்த கற்களைக் கொண்டு தாம் தொடங்கிய குளத்தைக் கல்லும் திருப்பணிக்கு ஏற்ப குளத்துக்குக் கரைக்கட்டி முடிக்குமாறு முன் வந்து அருள் புரிந்தான் சிவபெருமான்.

**அ.பொ:** நால்காணி-கோயில் திருப்பணி செய்பவர் அனுபவிப்பதற்காக விடப்பட்ட நிலம்; கருத்தின் வழி - அகக்கண்; தறிக்குறி - முளை அடித்துக் கயிறு கட்டி அடையாளம் செய்தல்; கல்ல - தூர்ந்த குளத்தை ஆழப்படுத்த; தோன்றல் - ஊர்த்தலைவன்; பாழி - தங்கும் இடம். **(சஉ)**

## மூர்க்க நாயனார்

43. **கொண்டல்மலி தொண்டைவள நாட்டில் வேற்காட்டூர்**
**குலாவும் உழவின் தொழிலினர்,**

குறைவுஇலாச் செல்வம்உற்று இறைவர்அடி யார்தமக்கு
நல்அமுது அளிப்பர், மென்மேல்
பண்டைஉள பொருளும்மற்று உள்ளன எலாம்குறைவு
படினும்செய் பணிகுறைவு படாஅப்
பான்மையில், தாம்கற்ற சூதுபொரு தொழிலினால்,
பரிவுடன் பெற்ற பொருள்கள்
அண்டர்நா யகர்திருத் தொண்டர்உண் டிக்குஇனிமை
யாம்எனப் பலபதி பணிந்து,
அருள்குடந் தைப்பதி உளார்கள்சொல் சூதுபிறழ்
ஆகவும் வெகுண்ட அதனால்
மண்தலம் புகழ்மூர்க்கர் எனும்நாமம் எய்த,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மழைவளம் சான்ற தொண்டை நாடாகிய வளமான நாட்டின் வேற்காட்டூரில் உழவுத்தொழில் செய்யும் வேளாண் மரபில் தோன்றிக் குறைவிலாச் செல்வராய் இறைவனுடைய அடியார்களுக்குச் சிறந்த உணவு அளிக்கும் திருத்தொண்டில் ஈடுபட்ட பெரியவர் ஒருவர்தம் பெருஞ் செல்வம் எல்லாம் குறைந்த காலத்தும் தாம் கற்ற சூதாட்டத்தால் மற்றவரோடு பந்தயம் கட்டி விளையாடி வென்று பெற்ற செல்வத்தால் உலக நாயகனான சிவபெருமானுடைய திருத்தொண்டருக்கு உணவு அளித்துப் பல திருத்தலங்களை வழிபட்டவாறே குடந்தைத் தலத்தை அடைந்து அங்குச் சூதாட்டம் ஆடிய பொழுது, சூதாட்டத்தில் தவறு செய்தவர்களை வெகுண்ட காரணத்தால் உலகம் புகழும் மூர்க்கர் (கோபிப்பவர்) என்ற பெயரால் அழைக்கப்பட்டார். தம் வாழ்க்கை இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** பிறழ் ஆதல் - சொன்ன சொல் தவறுதல்; மூர்க்கர் - கோபம் உடையவர். (சங)

## சோமாசி மாற நாயனார்

44. சூதம்மிகும் அம்பர்ஆர் வேதியர் குலத்தில்வரு
சோமாசி மாறர், கருணைத்
தூயமெய் அடியார்கள் யாரேனும் மிக்கஅறு
சுவைஅமுது தருபெரு மையார்,

**தீதுஅகல வேசகல தேவர்மகிழ் வேள்விபல**
**செய்துசை வத்தின் மூலத்**
**திருஎழுத்து அஞ்சும்மற வாநாவி னார்புகழ்**
**சேரும்ஆ ரூரின் மேவி,**
**போதகப் பண்மாலை ஓதுசுந்த ரர்செய்ய**
**பூங்கழல் பணிந்து போற்றும்**
**புதுமையால் ஓர்ஆறு குற்றமும் தீநெறிசெல்**
**புலன்ஐந்தும் வென்று, புனித**
**மாதவனும் ஓதஅரிய சிவலோகம் மேவிடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** மாமரங்கள் மிகுதியாக உள்ள அம்பர் என்ற திருத்தலத்தில் வேதியர் குலத்தில் தோன்றிச் சோம யாகங்களை மிகுதியாகச் செய்ததனால் சோமயாஜி என்று புகழப்பட்ட சோமாசி மாறனார் சிவபெருமான் கருணைக்கு இலக்கான தூய்மையான உண்மை அடியவர்கள் யாவர் வந்தாலும், மேம்பட்ட அறுசுவை உணவு அளிக்கும் பெருமை உடையவராய், நாட்டில் தீங்கு நீங்க எல்லாத் தேவர்களும் மகிழக் கூடிய வேள்விகள் பலவற்றைச் செய்து, சைவ சமயத்தின் அடிப்படையான திருவைந்தெழுத்தை மறவாமல் ஒலிக்கும் நாவினை உடையவராய், புகழ்மிக்க திருவாரூரை அடைந்து, மேம்பட்ட இசைப்பாடல்கள் பாடிய சுந்தரருடைய திருவடிகளைப் பணிந்து போற்றும் மேம்பட்ட செயலால் காமம் முதலிய ஆறு உட்பகைகளும் நீங்கி, தீய நெறியில் செல்லும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பொறிகளுக்கு உரிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் வென்று, புனிதமாகிய திருமாலாலும் உள்ளவாறு அறிய முடியாத சிவலோகத்தை அடையுமாறு சிவபெருமான் அருள் செய்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** சகல தேவர் - தேவர்கள் யாவரும்; போதக - சிறப்பாக; ஆறு குற்றம் - காமக்குரோத லோப மோக மதமாற்சரியம்; மாதவன் - திருமால். **(சச)**

## சாக்கிய நாயனார்

45. **கார்இலகு தண்பொழில் சங்கமங் கையில்உழவு**
**கருதுவே ளாண்தலை வர்,நூற்**

கலைபயின்றே, பிறவிவலை ஒழிந்து உய்ந்திடக்
கருதியே சென்று, காஞ்சி
ஊர்இலகு சாக்கியர்கள் சீர்இசைந்து, அவர்உண்மை
ஒவ்வாது, சைவ நெறியின்
உட்பொருள் தெரிந்துதுற வாதநெஞ்சத் துஉணர்வின்
உரியசிவ லிங்கம் மீது
தார்இலகு மலர்எனச் செங்கல்அம் கையின்எறிவார்,
சமயம்அறி யார்குறி படும்
தக்கபணி ஒருதினம் மறந்துஉணவு கொள்ள,அது
தான்நினைந்து எறிய மகிழ்வாய்
வாரமுடன் ஓட,நீ மூரிவிடை ஏறிமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மேகங்கள் விளங்கும் குளிர்ந்த சோலைகளால் சூழப்பட்ட சங்கமங்கை என்ற ஊரில் உழவுத்தொழிலில் வல்ல வேளாண் குடித்தலைவராய், பல நூல்களையும் கலைகளையும் முறையாகப் பயின்று பிறவியாகிய வலையிலிருந்து தப்பிப் பிழைத்திட வெளியூர் சென்று காஞ்சிமாநகரில் விளங்கிய பௌத்தர்களின் சிறப்புக்களை மனம் கொண்டு, பின் அவர்கள் கூறும் மெய்ப்பொருள்களில் மனம் பொருந்தாமல், சைவ நெறியின் உள்ஆர்ந்த பொருள்களை ஆராய்ந்து, மனத்தில் சைவப் பற்று நீங்காது நாடோறும் சிவலிங்கத்தின் மீது மலர்போலக் கருதி ஒரு செங்கல்லை எடுத்து எறியும் பழக்கத்தை உணவு உண்பதற்குமுன் மேற்கொண்டு, நேரம் அறியாமல் ஒருநாள் தாம் குறிக்கொண்ட தக்க செயலை மறந்து உணவு உண்ண அமர்ந்த நேரத்தில், தம் கடமை நினைவில் வர உணவு உண்ணாது கல்லெறிய எழுந்த அவர் திறம் கண்டு அச்சாக்கியருக்குச் சிவபெருமான் அருள்செய்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** கார் - கருமேகம்; தார் - மாலை; குறிபடும் - இலிங்கத்துக்கு அர்ப்பணிக்கும்; வாரம் - அன்பு; மூரிவிடை - வலிமை உள்ள காளை வாகனம்.

(சரு)

## சிறப்புலி நாயனார்

46. பொன்னிநீர் நாட்டுவளம் மன்னும்திரு ஆக்கூர்
பொருந்து மறையவர் திறம்பாப்

புகழ்பெறு சிறப்புலியார், மிகவும்அடி யார்திருப்
பொன்னடி பணிந்து, தாழ்ந்து,
செந்நெல்அமு தொடுகறிகள் கன்னல்அறு சுவையுடன்
செம்பொன்இன் பத்து அளிக்கும்
செய்கைஉடை யார்,அஞ்சு எழுத்துஓதி, அன்புடன்
தீவேட்டு, வேள்வி எல்லாம்
உன்னஅரிய உன்னுடைய பாதமலர் தன்னில்இட
உள்ளன்பு செய்து, நாளும்
உள்ளவள் ளன்மைநீங் காது,மிக ஓங்கிட,
உகந்துநீ கருணை செய்ய,
மன்னும்நின் பாதபங் கயநீழல் மருவிட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** காவரியின் நீர்வளம் சிறக்கும் சோழ நாட்டில் திரு ஆக்கூரில் அந்தணர் மரபில் தோன்றிய புகழுடைய சிறப்புலியார் அடியார்கள் திருவடிகளில் பணிவோடு வணங்கி அவர்களுக்கு அறுசுவை அடிசில் செந்நெல் அரிசிச்சோறு, கறிகள், இவற்றோடு, செல்வத்தையும் மகிழ்வோடு வழங்கும் செயல் உடையவர். திருவைந்தெழுத்தை ஓதி, அன்போடு அக்கினி காரியம் செய்து, தாம் செய்த வேள்விப் பயனைச் சிவபெருமானுடைய திருவடிகளில் உள்ளன்போடு சமர்ப்பிப்பவர். இறுதிவரை தம் வள்ளன்மை குணம் நீங்காமல் மிகச் சிறப்பாக வாழ இறைவன் கருணை செய்ய இறுதியில் சிவபெருமானுடைய திருவடி நீழலைச் சிறப்புலியார் பொருந்துமாறு சிவபெருமான் அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** உன்னல் - நினைத்தல். **(சசா)**

## சிறுத்தொண்ட நாயனார்

47. குறைவிலாப் பொன்னிநாட் டுஇலகு செங்காட்டங்
குலாவும்உழ வின்தொழி லினர்,
கொற்றவர், படைத்தொழிலும், மற்றும்உள கலைகளும்
கூர்ந்துஉணர் பரஞ்சோ தியார்,
இறைவர்புக ழத்திறைகொ ணர்ந்துவெண் காட்டம்மை
இல்உகந்து, இனிய கணபதி
ஈச்சரம தில்பிள்ளை யார்க்குஇனிமை யாம்அடியர்
எழிலின்சிறுத் தொண்டர் சீர்

**உறையுள்மின் காணவயி ரவர்ஆகி, ஆரம்நீழல்**
**உற,வினவி அன்பர்தொழ, நாம்**
**உத்தரா பதி,விரதம், மகவுகறி உண்பதுஎன,**
**உண்மைக்கு இசைந்து அமைப்ப,**
**மறைவாகி, நற்புதல்வர் தமைஅருளி உமையொடுமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** செல்வ வளம் குறையாத காவிரிபாயும் சோழநாட்டுள் விளங்கும் செங்காட்டங்குடி என்னும் திருத்தலத்தில் மாத்திரர் என்னும் மருத்துவர் குலத்தின் தலைவராய், படைத்தொழிலையும் மற்றும் உள்ள கலைகளையும் கூர்மையாக அறிந்த பரஞ்சோதியார் தம் அரசர் புகழுமாறு பகைவரிடமிருந்து கப்பப் பொருளைப் பெற்று வந்து, போர்த்தொழிலிலிருந்து ஓய்வு வழங்கப்பெற்றுத் திருவெண்காட்டினைச் சேர்ந்த திருவெண் காட்டம்மை என்று வழங்கப்படும் பெண்ணை மணந்து, இனிய கணபதியீச்சரத்திலுள்ள நாயகப்பெருமானுக்கு இனிய அடியாராம் அழகில் மேம்பட்ட சிறுத்தொண்டர் என்றும் பெயர் பெற்றவராகி, தம் சிறப்பான வீட்டில் தம் மனைவி காணுமாறு வயிரவக்கோலத்து அடியவராக வந்து தாம் ஆத்தி மர நிழலில் தங்கியிருப்பதாகக் கூறிச் செல்ல, மனைவி வாயிலாக வயிரவ அடியவரின் வருகையை அறிந்து வந்து சிறுத்தொண்டர் அவரைத் தொழ, வயிரவர் 'நாம் வடநாட்டினேம் விரதம் உடையேம்' மனிதக் குழந்தையின் கறியையே உண்பேம்' என்று கூற அவர் கூறியவாறு செய்தவற்கு இசைந்து, சிறுத்தொண்டர் தன் மகனையே கறி சமைத்துப் படைக்க, இலையில் அமர்ந்திருந்த வயிரவர் மறைய, கறி சமைக்கப்பட்ட புதல்வனைப் பழைய உருவுடன் உயிரோடு வழங்கி உமாதேவியோடும் சிறுத்தொண்டர் தம்பதிகளுக்குக் காட்சி வழங்கி அவர்களைச் சிவபெருமான் ஆட்கொண்டான்.

**அ.பொ:** மாத்திரர் - மருத்துவத் தொழில் செய்பவர்; திறை - கப்பப்பொருள்; இல் - மனைவி; உறையுள் இல் - வீட்டிலுள்ள மனைவி; ஆரம் - ஆத்தி; உத்தராபதி - வடநாட்டைச் சேர்ந்தவர். **(சஎ)**

## சேரமான் பெருமாள் நாயனார்
## (கழறிற்று அறிவார் நாயனார்)

48. **சீலம்மிகு மலைநாடு வாழ்கொடுங் கோளூர்**
**சிறந்தசெங் கோல்கோதை யார்**

செல்வர்திரு வஞ்சைஇறை மெல்லடி பணிந்திட,
செய்யபொறை யன்தவம் உற,
ஞாலம்மிகு முடிசூட வேண்டும்என மந்திரிகள்
நவில்பரமன் அருளின் உலகின்
நண்ணியன யாவையும் அறிந்துவண் ணான்அடி
நயந்துநற் பாண பத்ரன்
சீலம்மிகு திருமுகம் தரநிதி அளித்துஒசை
செய்யாத நாளில், நம்பி
செயல்அறிந்து ஏகிஅவர் அடிபணிந்து, அந்தாதி
செப்பி,ஒலி கண்டுஇரு வரும்
மால்உறவில் யானைமுன் கோணம்விடு சேரன்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** ஒழுக்கம் மேம்பட்ட மலைநாட்டில் வாழ்ச்சி மிக்க கொடுங்கோளூரிலே செங்கோல் செலுத்திய கோதையார் என்ற பெயருடைய சேரகுலச் செல்வர் திருவஞ்சைக் களம் என்ற அத்திருத்தலக் கோவிலிலே இறைவன் திருவடிகளைப் பணிதலையே தம் தொழிலாகக் கொண்டவர். ஆட்சி செய்து கொண்டிருந்த மன்னனாகிய பொறையன் ஆட்சியை விடுத்துத் தவம் செய்யக் கானகம் சேரவே, அமைச்சர்கள் கோதையாரைத் தாங்களே ஆட்சிப் பொறுப்பினை ஏற்க வேண்டும் என வற்புறுத்த, இறைவன் அருளினால் ஆட்சிப் பொறுப்பினை ஏற்று, உலகில் எந்த உயிரும் பேசும் எந்தப் பேச்சினையும் அறியும் ஆற்றல் பெற்று, உவர்மண் கரைந்து பின் உலர்ந்ததால் உடல் முழுதும் வெளுத்துக் காணப்பட்ட வண்ணானை உடல் முழுதும் திருநீறு பூசிய சிவனடியாராகக் கொண்டு அவன் அடியில் வணங்கி, பாணபத்திரன் மதுரைச் சொக்கநாதப் பெருமாள் வழங்கிய திருமுகத்தைத் தர, அவனுக்கு வேண்டிய பொன் அளித்து, நாள்தோறும் பூசனை முடிவில் தம் செவிக்குக் கேட்கும் கூத்தப் பிரானின் சிலம்பின் ஒலி ஒருநாள் கேட்கப்படாமல் போக வருந்தி உயிரைத் துறக்க முற்பட்டபோது சிலம்பின் ஒலி கேட்கப் பெற்று, சுந்தரர் தில்லை மன்றிற்கு வந்து தமிழ்ப்பாடல் பாடியதில் ஈடுபட்டுச் சிலம்பொலி செய்யக் காலம் தாழ்ந்ததாக அசரீரி கூறியது கேட்டு, சுந்தரரைச் சென்று தரிசித்து வணங்கித் தில்லையை எய்தி, பொன் வண்ணத் தந்தாதி பாடிச் சிவபெருமான் செலம்பொலி கேட்டு, சுந்தரருடன் நண்பராகி, நட்பின் உறவினால் சுந்தரரை

ஏற்றிச் சென்ற வெள்ளையானைக்கு முன் அதனை வலம் செய்து குதிரை மீது இவர்ந்து கயிலை அடைந்த சேரமான் பெருமாள் நாயனாரின் முன் வந்து அவரை அடிமை கொண்டவன் சிவபெருமான்.

**அ.பொ:** மாத்திரர் - பொறையன், முன்னர் ஆண்ட சேர அரசன் பெயர்; ஓசை செய்யாத - சிவபெருமான் சிலம்பொலி கேட்காத; அந்தாதி - பொன் வண்ணத்து அந்தாதி; கோணம் - குதிரை; மால் உறவு - மிக்க நட்பு. **(சஅ)**

## கணநாத நாயனார்

**49.** **ஊழிகா லத்தில்எழும் ஆழியின் மிதந்தபெயர்**
**உண்மைசெறி காழிநகர் வாழ்வு**
**உற்றவை திகமரபு பெற்றுநால் வேதநெறி**
**ஓதுகண நாதர், சண்பை**
**யாழுடைய ஈசர்திரு ஆலயப்பணி விடைகள்**
**அன்பினொடு உவந்து புரிவோர்,**
**அவ்வகைப் பத்தர்வந்து எய்திடின், பண்புடன்**
**அவர்குறை முடித்து, நாணாம்**
**ஏழிசையின் அமுதுஉண்ட பிள்ளையார் தாள்இணை**
**இறைஞ்சிஅர்ச் சனைபு ரிந்தும்**
**இடையறா நெஞ்சினுக்கு உடையராய் மனைஅறத்து**
**ஏற்கைபெறு மார்க்கம் அதனால்,**
**வாழியக ணங்களுக்கு நாதர்என வாழ்ந்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** ஊழிக்காலத்தில் கடல் பொங்கிவர அக்கடல் வெள்ளத்தில் மிதந்து தோணிபுரம் என்ற பெயர்பெற்ற சீகாழித் திருத்தலத்தில் நல்வாழ்வு வாழ்ந்த வைதிக மரபில் உதித்து நான்கு வேதங்களும் வகுத்த நெறியிலே வேதத்தை ஓதிக் கொண்டிருந்த கணநாதர் என்னும் அடியவர், சீகாழியிலுள்ள யாழுடைய ஈசர் திருக்கோயிலில் பணிவிடைகளை அன்பினோடு மகிழ்ந்து செய்பவர், ஆதிசைவர் முதலிய அறுவகைப் பக்தர்கள் வந்தால் பண்போடு அவர்களுக்குத் தேவையானவற்றை வழங்கி, நாள்தோறும் திருஞானசம்பந்தர் திருவடிகளை வணங்கி அருச்சித்து, இடையறாத பக்தி பூண்ட நெஞ்சினை உடையராகி இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்த காரணத்தால் அடியார்களாகிய

கணங்களுக்குத் தலைவராய் வாழ்ந்து தன் திருவடிகளை அடையுமாறு சிவபெருமான் அவருக்கு அருள் புரிந்து அவரை ஆட்கொண்டான்.

அறுவகைப் பத்தர் - ஆதிசைவர், மகா சைவர், அனு சைவர், அவாந்தர சைவர். பிரவர சைவர், அந்திய சைவர் என்போர். இவர்கள் சிவதீட்சைப் பெற்றுச் சிவனை வழிபடுவோர்.

**அ.பொ:** சண்பை - சீகாழி; யாழ் உடைய ஈசர் - சிவபெருமான் திரு நாமங்களுள் ஒன்று; குறை - தேவை; பிள்ளையார் - திருஞானசம்பந்தர். **(சகோ)**

## கூற்றுவ நாயனார்

**50.** **குன்றாத கீர்த்திஉறை தென்களந் தைப்பதிக்**
**கொற்றவரில் உற்ற தொல்பேர்**
**கூற்றனார், அருளுண்மை சாற்றி,அடி யார்க்குஅன்பு**
**கொண்டுநல் தொண்டு புரிவோர்;**
**துன்றுபகை மன்னர்போர் வென்று,திறை கொண்டுளார்**
**துகள்இலாத் தில்லைநகர் வாழ்**
**தூயமறை யோர்தமை முடிசூட்ட வேண்ட,அவர்**
**சோழனுக்கு அன்றி யாங்கள்**
**வென்றிமுடி சூட்டுவது செய்யோம் எனக்கழறி,**
**வேண்மலை யன்நாடு செல்ல,**
**மிகமனம் தளர்வாகி, நின்அடிக் கமலங்கள்**
**வேண்டவே, கனவில் வந்து,**
**மன்றுஆடு பூங்குழல் சூட்டிஅரசு ஆளமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** குறைவில்லாத பெரும்புகழ் பொருந்திய அழகிய களந்தை நகரில் வாழ்ந்த அரசர்களில் பெரும் புகழுடைய கூற்றனார், அருளோடு இன்சொல் பேசி, அடியவரிடம் அன்பு பூண்டு நல்ல தொண்டு புரிபவர். அவர் தம்மைத் தாக்கிய பகை மன்னரை வென்று அவர்களிடம் கப்பப் பொருள் பெற்றவர். குற்றமற்ற தில்லை நகரில் வாழ்ந்த அந்தணர்களிடம் தமக்கு முடிசூட்டுமாறு வேண்டியும் அவர்கள், 'சோழ மன்னனுக்கு அன்றி மற்றவர்களுக்கு நாங்கள் முடி சூட்ட மாட்டோம் என்று கூறிப் பெரும்பான்மையோர் தில்லையை விடுத்து, மலையாள நாட்டிற்குச் சென்று விட, கூற்றனார் மனம் நொந்து சிவபெருமான்

திருவடித் தாமரைகளில் வேண்டவே, சிவபெருமானே கூற்றனார் கனவில் வந்து அரங்கத்தில் கூத்து நிகழ்த்தும் தம் திருவடிக் கமலங்களை அவருடைய முடியில் சூட்ட, அதனால் தில்லைவாழ் அந்தணர்கள் தமக்கு முடி சூட்டாத குறை நீங்கிக் கூற்றனார் அரசாளுமாறு அருள் செய்து இறுதியில் சிவபெருமான் அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** மலையன் நாடு - மலையாள நாடு. **(ரு0)**

## பொய் அடிமை இல்லாத புலவர்

51. எழுத்துஅசை சீர்பந்தம் அடிதொடைகள் பாஇனத்து
ஏற்றஇயல், சொல்பொருள், பாட்டு,
எழில்அலங் காரம்என்று உரைபெறும் இலக்கியத்து
எண்ணும்,இயல் இசை நாடகம்
செழித்தமுத் தமிழில்தழைத்து, ஆசுமது ரம்மிகு
சித்ரவித் தாரம் நான்கும்,
செப்பிடக் கவிகமகன் வாதி,வாக் கியன்எனத்
தேர்ந்தபல கலைகள் ஆய்ந்து,
பழுத்தகனி யின்சுவை மொழிக்குஇனிய செந்தமிழ்ப்
பாடல்சொல் லவும்வல்ல ராய்,
பாரினில் பொய்இலாப் புலவர் என்றே பெயர்
படைத்தும், அனுதினம் மனத்தில்
வழுத்திடச் சிவம்என்ற உயர்ந்தபண் மொழிந்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, பாவினங்கள் இவற்றை ஏற்ற இயற்றமிழ்ச் சொற்களில் அகப்பொருள், புறப்பொருள் பற்றிய பாடல்கள், பொருளணி, சொல்லணிகள், இலக்கணம் இவற்றை உடைய இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழிலும் துறைபோய், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளும் பாடுவதில் வல்லவராய், கவிகமகன் வாதி வாக்கி என்ற நால்வகைப் புலமையராய் மேம்பட்ட பலகலைகளையும் ஆராய்ந்து, பழுத்த கனி போன்று இனிய செந்தமிழ்ப் பாடல்கள் சொல்லுவதிலும் வல்லவராய் உலகில் பொய் இலாத புலவர் எனப் போற்றப்படுபவராய், நாளும் சிவபெருமானை மனத்தில் தியானித்து உயர்ந்த பாடல்கள் பாடும் பண்புடைய அத்தகைய அடியவர்களைச் சிவபெருமான் முன் வந்து ஆட்கொண்டான்.

**அ.பொ:** பந்தம் - தளை, ஆசு கவி - சொன்ன அளவில் பாடுபவன்; மதுரகவி- சொல்லழகு, பொருளழகு, அணி அழகு தோன்றப் பாடுபவன்; சித்திரகவி - கோமூத்திரி முதலிய சித்திரம் அமையப் பாடுபவன்; வித்தார கவி - காவியம், பிரபந்தங்கள் பாடுபவன்; கமகன் - நன்கு பாடம் சொல்லுபவன்; வாதி - நன்கு வாதாடும் ஆற்றலுடையவன்; வாக்கி - ஞான நூல்களை உபதேசிப்பவன்; பண் - பாடல். **(ருக)**

## புகழ்ச் சோழ நாயனார்

52. *சிறைபடு புனல்பொன்னி உறையூரின், மனுநெறி*
*செலுத்திய புகழ்ச் சோழனார்,*
*சீர்உலவு கருவூரில், ஆன்நிலையர் புனையும்மலர்*
*சிந்துகரி பாகர் வீழ,*
*எறிபத்தர் முன்புதம் தலைஅரியும் என்னவாள்*
*ஈந்துமறு வேந்தர் தலைகள்*
*இலக,மலை யாளமதில் அதிகனே திறைகொடாது*
*இருந்துஉரை கேட்ட பொழுதே,*
*குறிபெறும் படைவிடுத்து அமர்தொடுத்து, எழில்வெற்றி*
*கொண்டுமுடி யின்குவை எலாம்*
*கொடுவர, முடிக்குள்அழல விரியும்ஓர் சடையினைக்*
*கூர்ந்துகண்டு, அடி வணங்கி,*
*மறிமழுக் கையர்முடி எனஎரியின் மூழ்க,முன்*
*வந்து,அடிமை கொண்ட கயிலை*
*வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்*
*மாணிக்க மலை நாதனே!*

**பொழிப்:** நீர் வெள்ளத்தைத் தடுத்துப் பயன்படுத்தும் காவிரிக் கரையிலமைந்த உறையூரில் நீதிநெறி செலுத்திய புகழ்ச் சோழனார், முன்பு ஒருகால் கருவூரிலிருந்தபோது அங்குள்ள திருஆனிலைப் பெருமானுக்குச் சாத்தக் கொண்டு வரப்பட்ட பூக்களைத் தன் பட்டத்து யானை சிதறியதற்காக யானையையும் பாகரையும் கொன்று வீழ்த்திய எறிபத்தர் முன்பு தம் தலையையும் அரியுமாறு வாளினை வழங்கிய பெருமைக்குரியவர். மன்னர் பலரும் தம் திருவடிகளில் விழுந்து வணங்க ஆட்சி செலுத்திய காலத்தில் மலையாள மன்னன் அதிகனே தமக்குக் கப்பப்பொருள் செலுத்தவில்லை என்ற செய்தியைக் கேட்டபொழுதே அவனை அழிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டு படையை அனுப்பிப் போர் தொடுத்து வெற்றி பெற்றுப் பகைவர் முடித்தலைகளைக்

கொண்டு வந்தபோது, அத்தலைகளில் ஒன்றில் செந்நிறச் சடைமுடி காணப்படக் கூர்ந்து நோக்கி, அத்தலை சிவனடியார் ஒருவருடைய தலை என்று அதனை வணங்கி, அந்தச் சிவனடியாரைக் கொன்ற தீவினை தொலைய, அத்தலையைத் தம் கையில் ஏந்தி எரியில் புகுந்து தீவினையின் நீங்கிச் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** ஆன் நிலையர் - கருவூர் கோயிலிலுள்ள பெருமான்; பாகர் - யானையைச் செலுத்துவோர்; தலைகள் இலக - தலைகள் தன் பாதங்களில் வணங்குதலால் விளங்க; குறி - குறித்த இலக்கு; மறி மழுக்கையர் - மான் குட்டியையும் மழுவையும் கையில் ஏந்திய சிவபெருமான்; அழல - நெருப்புப் போல ஒளிவீச. **(ருஉ)**

## நரசிங்க முனை அரைய நாயனார்

53. **நாடுபுகழ் திருமுனைப் பாண்டிநாடு அரசுபுரி**
**நரசிங்கமுனை யரையர் சீர்**
**நல்குபுவி நெறிவளமை மல்கிவெண் ணீற்றுஅன்பு**
**நாடி,மிக ஆலயங் கள்**
**தேடுபொருள் பணிசெய்து நீடுதிரு வாதிரைத்**
**தினம்அதனில் அன்பர் மகிழச்**
**செம்பொன்நூறு உதவிஅவர் உண்ணஅமு திடுவர்ஒரு**
**தினம்அதில் தூர்த்த வேடம்**
**கூடும்உட லினர்வரக் கண்டவர் ஒதுங்க,மெய்**
**கூர்ந்து,வெண் ணீற்றில் உண்மைக்**
**குறியினர் எனப்பொருள் இரண்டுபங்கு ஈந்துஇனிய**
**கூறியே விடைகொ டுத்து,**
**வாடுதுயர் நீங்கி,உன் பாதமலர் மேவிட,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** நாட்டு மக்கள் புகழுமாறு திருமுனைப்பாடி நாடு எனப்படும் நடுநாட்டிலே ஆட்சி செய்து வந்த நரசிங்க முனையரையர் என்னும் சிற்றரசர் தம் நாட்டில் சிறப்பு மிக்க வளமைக்கு வேண்டிய எல்லா நலன்களையும் செய்து, சிறந்த ஆலயத் திருப்பணிகளில் தாம் தேடிய பொருளைச் செலவிட்டு, திருவாதிரை நட்சத்திரம் வரும் நாள்கள் தோறும் அன்பர்கள் மகிழுமாறு

நூறு பொன் வரையில் அவர்களுக்கு நல்ல உணவு அளிப்பதனோடு பணமாகவும் வழங்கி வந்த காலத்தில், ஒரு சமயம் நெறி பிறழ்ந்த காமத்தால் ஏற்பட்ட தொழுநோய்ச் சுவட்டுடன் ஒருவர் அடியவர் கூட்டத்திடையே வர, அவரைக் காண மற்றவர் ஒதுங்க, அவர் அணிந்திருந்த திருநீற்றுக்கு மதிப்புக் கொடுத்து அவருக்கு மற்றவருக்குக் கொடுப்பதன் முன்னரே இரு மடங்கு பணம் ஈந்து, இன்மொழி பேசி அவரை முன்னர் அனுப்பிப் பின் மற்ற அடியார்களுக்குப் பொருள் வழங்கி, அவ்வடியவர்களை மற்றவர்கள் இகழும் வாய்ப்பு ஏற்பட்டு விடுமோ என்று வாடிய துயர் நீங்கப் பெற்று இறைவன் அடி வணங்கி இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** தூர்த்த வேடம் - காமுகர் உடல்நிலை. அஃதாவது நெறியில்லாக் காமத்தால் வந்த குட்ட நோய். **(ருங)**

## அதிபத்த நாயனார்

**54.** **அலைநீடு பொன்னிநாடு உலவுகடல் நாகைநகர்**
**அழகுபெறு நுளையர் தலைவர்**
**அதிபத்தர், வலையின்மீன் விலைவளத் தொழிலினார்,**
**அடியவர்க்கு அன்பு புரிவோர்,**
**சலம்மேவு கடலிலே வலையிட, அகப்படு**
**தலைமைசெறி மீன்கலை முடித்**
**தாணுவின் கழலினுக்கு ஆம்என விடுப்பவர்,வலை**
**வீச,மறு மீன்ப டாமல்**
**பலகாலும் உணவுகிடை யாமல்மெலி வாய்க்கிளைஞர்**
**பகரினும் பக்தி மறவாப்**
**பான்மைகண்டே செம்பொன் மேனிமீன் வலைஅகப்**
**படுநாள், விடுத்த அன்பால்**
**மலைமாது பாகம்உற விடைஏறி அன்பர்முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** அலைகள் மிக்க காவிரி பாயும் சோழநாட்டில் கடற்கரையை அடுத்த நாகப்பட்டின நகரில் வனப்புடைய செம்படவர் தலைவராய் வாழ்ந்த அதிபத்தர் வலையால் மீன்பிடித்து விற்பதனால் செல்வம் மிகுதியாகத் தரும் வளமான தொழிலை உடையவர். கடலில் வலைவீசி அகப்படும் மீன்களில் மிகச் சிறந்த

மீனினைக் கலைகளின் உச்சியில் உள்ளவராம் என்றும் நிலைபெற்றிருக்கும் சிவபெருமான் திருவடிகளுக்கே இந்த மீன் அர்ப்பணம் என்று கடலில் அதனை விட்டு விடும் வழக்கம் உடையவர். பல நாள்கள் ஒரே மீன் கிடைக்க, அதனையும் இறைவனுக்கு என்று அர்பணித்து விட்டுப் பல நாள்கள் உணவின்றி உடல் மெலிய, உறவினர் எவ்வளவு கூறினும், தம் பக்தியை மறவாமல் வழக்கப்படி இறைவனுக்கு அர்ப்பணம் செய்து வருகையில் ஒருநாள் விலை மதிக்க முடியாத செம்பொன் மயமான உடலை உடைய மீன் அகப்பட, அதனையும் சிவபெருமானுக்கு அர்ப்பணம் என்று கடலில் விட அவர் அன்பு கண்டு, பார்வதி பாகரான சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** நுளையர் - செம்படவர்; சலம் - நீர்; கலை முடித்தாணு - கலைகளின் உச்சியாக உள்ள நிலைபெற்ற சிவபெருமான்; பான்மை - இயல்பு. **(ருச)**

## கலிக்கம்ப நாயனார்

**55.** **தண்நாறு மேல்கரைப் பெண்ணாக டத்துஊர்**
**தழைத்ததன வைசியர் முதன்மை**
**தங்கிய கலிக்கம்பர், பொங்குமனை வாழ்க்கைநிலை**
**சார்ந்து,தூங் கானை மாடத்து**
**அண்ணல்அடி போற்றிஅடி யார்க்குஅடி மையாய்,மனத்து**
**அன்பினொடும் அமுது செம்பொன்**
**அளிப்பர்;முன் ஏவல்புரி பவர்நீங்கி, அருள்உருவின்**
**அடியார் உடன்வரக் கண்டு,**
**எண்அரிய மகிழ்வின் அடியார்தாள்வி ளக்குதற்கு**
**இசையாத மனைவி யின்கை**
**எறிந்துஅடி யார்தாள்இணை விளக்கிஅறு சுவையினோடும்**
**இனிதுஅமுது அளிக்கும் அன்பால்,**
**மண்நாடர் பணியமிகு விண்நாடர் புகழுமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** குளிர்ச்சி பொருந்திய பெண்ணை ஆற்றின் மேல் கரையில் அமைந்த பெண்ணாகடம் என்ற திருத்தலத்தில் தனவைசியர் மரபில் மேம்பட்ட கலிக்கம்பர் சிறந்த இல்லற வாழ்க்கையில் பொருந்தி, பெண்ணாகடத்துத் தூங்கானை மாடப்பெருமானுடைய திருவடிகளை வழிபட்டு அடியார்களுக்கு அடியவராய்

உள்ளன்போடு அவர்களுக்கு உணவும் பொன்னும் அளிக்கும் இயல்பினராய் வாழ்ந்த காலையில், அதற்கு முன் அவரிடம் பணிபுரிந்து பின் அவரை விடுத்து நீங்கியவர் ஒருவர் அடியவர் கூட்டத்தில் தாமும் அடியார் ஒருவராய் வர, மகிழ்ச்சியோடு அடியார்கள் திருவடிகளை நீரினால் கலிக்கம்பர் கழுவுவதற்கு மனைவியார் இசையாராக, அவருடைய நீர் ஊற்ற வேண்டிய கையை ஊறு செய்து அடியவர்கள் திருவடிகளைத் தாமே நீர் ஊற்றி விளக்கி அவர்களுக்கு அறுசுவை அமுதினை அன்போடு வழங்கிய செயலால் மண்ணும் விண்ணும் போற்றுமாறு சிவபெருமான் முன்வந்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** தண்நாறு - குளிர்ச்சி தோன்றிய; எறிந்து - வெட்டி. **(ருரு)**

## கலிய நாயனார்

**56.** **தலம்உயர்ந் திடுதொண்டை நாட்டில்வரும் ஒற்றியூர்ச்**
**சக்கர பாடி யாரில்,**
**சார்ந்தகலி நீதியார் வேண்டுசெல் வத்துஉரிய**
**தன்மையினர், அண்ணல் கோயில்**
**பலதினமும் இரவுபகல் ஒளிவிளக்கு இடுபணியர்,**
**பைம்பொன் மெலிய, கிளைஞர்**
**பக்கல்விலை கொண்டு,பிற செக்குஊர்ந்து, கூலியின்**
**படிஇன்றி, மனையி னாளை**
**விலைகூற அதுமாறி எந்தைபணி குறையஉயிர்**
**விடுவல்என அகல் நிறைத்து,**
**மிக்கதிரி யிட்டு,உரிய கைக்கருவி யால்மணி**
**மிடற்றுஅரிய, அன்பு கூர்ந்து**
**மலர்செறி கரத்தினில் பிடிசெய்து, கழல்பெறமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** நல்ல திருத்தலங்கள் மிக்க தொண்டை நாட்டில் செல்வம் வளரும் ஒற்றியூரில் வாணியர் சேரியைச் சேர்ந்த கலிநீதி எனப்படும் கலியனார் போதிய செல்வ வளம் உடையவராய்ப் பல நாள்கள் ஒற்றியூர்ச் சிவபெருமான், திருக்கோயிலில் அல்லும் பகலும் ஒளிவிளக்கு இடும் தொண்டில் ஈடுபட்டுச் செயல் பட, செல்வ வளம் குறைய, செக்கு ஊர்ந்தும், உறவினரிடம் எண்ணெய் விளக்கு வாங்கி வாணிபம் செய்தும் தம் திருப்பணியைச் செய்ய, அந்த வாய்ப்பும் கிட்டாதாக, வேறு வழியின்றி மனைவியை விற்றாவது கோயிலுக்கு விளக்கிட வேண்டும் என்ற முடிவுக்கு வர, அவரை விற்க இயலாது போகவே,

திருத்தொண்டு தவறுவதனை விட உயிரை விட்டு விடுதல் நன்று என்று அகல்களை வரிசையாக வைத்துத் திரியிட்டுத் தம் கழுத்தை அறுத்து அந்த இரத்தத்தால் விளக்கெரிக்கக் கழுத்தை அறுத்துக் கொள்ளும் நேரத்தில் இறைவன் அன்பு கூர்ந்து பூக்கள் நிறைந்த தம் கைகளால் கலியனார் கைகளைப் பிடித்துக் கொண்டு அவர் தம் திருவடிகளைப் பெறுமாறு அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** சக்கரப்பாடி - செக்குகள் தொழிற்படும் வாணியர் சேரி; படி - ஊதியம்; மாறி - மாற இயலாதாக; மிடற்று அரிய - கழுத்தின் கண் வெட்ட; பிடி செய்து - பிடித்துக் கொண்டு. **(ருசா)**

### சக்தி நாயனார்

57. **விளங்குகா விரிநாட்டு இலங்கிய விரிஞ்சையூர்,**
**வேளாண்குடித் தலைமை யின்**
**வித்தகம் மிகுத்துவரும் சத்தியார், மெய்த்திரு**
**எழுத்துமற வாத நாவர்,**
**உளம்களி துளங்கசி வானந்த வாரிஅமுது**
**உண்டு,சுக மான பண்கள்**
**ஓதும்அடி யார்க்குஅடியர், நீதிநூல் மாறுபாடு**
**உற்றவர் கள்நா ஒடுங்கத்**
**துளங்குதண் டாயத்து இழுத்துஒளி ரும்வாள்கொண்டு**
**துண்ணென அரிந்து விடுவோர்,**
**சோதிமணி மன்றில்நட மாடும்சே வடிகளைத்**
**தொழுதுமகிழ் பத்தி அதனால்,**
**வளம்குலவு மேலாம் தலம்குடியி ருப்பு,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** காவிரி பாயும் சோழநாட்டில் சிறப்பாக விளங்கிய விரிஞ்சையூரில் வேளாளர் மரபில் தலைவராய்ப் பெரிய புத்தி கூர்மை உடையவராய் வாழ்ந்த சத்தியார், உண்மையான திருவைந்தெழுத்தை ஒரு போதும் மறவாத மனத்தினராய், மனத்தில் மகிழ்ச்சி பொங்க, சிவத்தை வழிபடும் ஆனந்த வெள்ளமாகிய அமுதத்தை உண்டு இனிமையான பண்கள் பாடும் அடியவர்களுக்கு அடியவராய், நெறிமுறை திறம்பிப் பேசுவார் நாவினைத் தம் வளைந்த கருவியால் இழுத்துக் கத்தியினால் திடுக்கிடுமாறு அரிந்து விடும்

இயல்பினராய், ஒளிவீசும் மன்றில் கூத்து நிகழ்த்தும் சிவபெருமான் திருவடிகளைத் தொழுது அதனால் மகிழ்ந்த பக்தியினால் மேம்பட்ட வீடுபேற்றுலகத்தில் வந்து தங்குமாறு சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** வித்தகம் - ஆற்றல்; திருஎழுத்து - திருவைந்தெழுத்து; தண்டாயம்- பிறபொருளை இழுப்பதற்கு உதவும் கருவி; மேலாம் தலம் - வீடுபேறு.

**(ருஎ)**

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

**58.** **குவலயம் மதித்தபல் லவர்தம் குலத்துஇனிமை**
**கொண்டுமா நிலம்முழு வதும்**
**கூர்ந்துசெங் கோல்முறைகள் தேர்ந்துவலி பகைஒளி**
**குறைத்துவெண் குழையர் பதியில்**
**சிவநெறி தழைத்திடும் படிஅரசு அளிப்ப,மெய்த்**
**திருவருளின் மிக்க ஞானச்**
**செய்யஐ யடிகள்கா டவர்கோன் எனப்பெருந்**
**தெய்வமொடு தென்த மிழ்ச்சொல்**
**தவம்மிகும் கலைகள்தேர்ந்து, உடல்வாழ்க்கை பொய்எனத்**
**தான்அறிந்து அம்ப லத்துள்**
**சார்ந்துவெண் பாநடனர் திருவடிகள் முதல்மிக்க**
**தலம்எங் கணும் புகன்று,**
**மவுன!நின் திருவடிப் பணிவிடை மகிழ்ந்திட,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** உலகம் பாராட்டும் பல்லவர் குலத்தில் இனிமையாகத் தோன்றி நாடு முழுதும் இனிய செங்கோல் முறையை ஆராய்ந்து செலுத்தி, பகைவர் வலிமையைக் குறைத்து, காதுகளில் சங்குகளைக் குழைகளாக அணிந்த சிவபெருமான் திருத்தலங்களில் சிவநெறி தழைக்கும்படி ஆட்சி செய்து எம்பெருமான் திருவருளை மிகப்பெற்ற ஐயடிகள் என்ற பல்லவ மன்னர் சிவபெருமானே பெருந்தெய்வம் எனத் தெளிந்து, தமிழும் கலைகளும் நன்கு உணர்ந்தவராய், இவ்வுடல் வாழும் வாழ்க்கை நிலையற்றது என்று உறுதியாக அறிந்து, பொற்சபையை அடைந்து சிவபெருமான் திருத்தலங்கள் பலவும் யாத்திரை செய்து, ஒவ்வொரு தலத்துக்கும் வெண்பா பாடி, மவுனமாக இருக்கும் சிவபெருமானுடைய திருவடிகளில் பாமாலையாலும் பணிவிடை செய்திட அதனைக் கண்டு மகிழ்ந்து சிவபெருமான் அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** குவலயம் - உருண்டை வடிவான உலகம்; வலி பகை ஒளி - வலிமை மிக்க பகைவரின் ஆற்றல்; வெண்குழையர் - காதுகளில் சங்குகளை அணிந்த சிவபெருமான்; நடனர் - கூத்தபிரான்; முதல் - காரணம்.

**குறிப்பு:** ஐயடிகள் காடவர் கோன் பாடிய பிரபந்தம் க்ஷேத்திர வெண்பா. அது முழுமையாகக் கிட்டவில்லை. அப்பிரபந்தத்தில் 24 பாடல்களே நமக்குக் கிட்டுகின்றன. அது பதினோராம் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளது. **(ருஅ)**

## கணம் புல்ல நாயனார்

**59.** **எள்ளாத திரையின்வட வெள்ளாறு தென்கரை**
**இருக்குவே ளூர்க்குஇறை வனார்,**
**எண்ணில்செல் வத்தின்வளம் நண்ணிஅறி வின்பெருமை**
**வெள்ளமுடி யார்தமையும் உள்ளம்மற வாத்திரு**
**விளக்கிடும் பணிவிடை யினார்**
**மெய்யர்தில் லைப்பதி பணிந்துபுலி யீச்சுரம்**
**விரும்புபணி மேவும் நாளில்**
**தள்ளஅரும் பொருள்மாறி, இல்லாமை கொண்டுபின்**
**தாம்கணம் புல்விலை யிடும்**
**தக்கபொருள் நெய்விளக் கிட்டும்,புல் விலையிலாத்**
**தருணம்மற வேன் என்திரு**
**வள்ளல்பணி எனமுடி மீதுஎரி மடுத்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** குறைபாடில்லாத அலைகள் மோதும் வடவெள்ளாற்றின் தென்கரையில் அமைந்த இருக்கு வேளூர் என்ற தலத்தின் தலைவராய்ச் செல்வவளம் சிறந்து அறிவினும் மேம்பட்டவராய், கங்காதரராகிய சிவபெருமானை எப்பொழுதும் தியானம் செய்து திருக்கோயில்களில் திருவிளக்கிடும் திருப்பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில், வறுமை எய்தி புல்லை அறுத்து விற்று வரும் பொருளில் கோயிலுக்கு நெய் விளக்கிட்டுப் புல் விலைபோகாத நாளில் திருப்பணி தவறாது நிகழத் தம் முடியின் மீது தீயை வைத்துக் கொள்ளச் சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** இறைவனார் - தலைமை நிலையிலிருந்த செல்வர்; வெள்ள முடியார்-கங்காதரராகிய சிவபெருமான்; புலியீச்சுரம் - தில்லையில் வியாக்கிரபாதர் அமைத்த கோயில்; மாறி - விற்று; எரி மடுத்திட - தீ வைத்துக் கொள்ள. (ருகூ)

## காரி நாயனார்

60. **கடல்செறி புவிக்குள் வளமுடைய திருநற்பதிக்**
**கடவூரின் இடம் உதித்துஅக்**
**காரியார் எனவரும் பேரின்உர வோர்தமிழ்**
**கற்றுச்சொற் பயன் விரித்து,**
**திடம்உலவு செந்தமிழ்க் கோவைதம் பெயரால்**
**சிறப்புடன் உரைத்து, வெற்றி**
**சேர்க்கும்நெறி மூவேந்தர் பால்பயின்று அவர்தாங்கள்**
**சிந்தைம கிழ்வுடன் அளித்த**
**அடல்நிதிக் குவைகொண்டு, வடிவுஆல யம்பல**
**அமைத்தும், அடியார் தமக்கும்**
**அன்புபெற வேதக்க செம்பொன்கொ டுத்தும்,மனத்து**
**அயராத கயிலை உற்று,**
**மடல்பெறு திருக்கமல அடியினைத் துதிப்ப,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** கடலால் சூழப்பட்ட உலகில் வளமுடைய திருப்பதியாகிய கடலூரில் காரியார் என்ற பெயரில் வாழ்ந்து வந்த அறிஞர் தம் பெயரால் பொருட் செறிவுடைய கோவைப் பிரபந்தங்களைத் தமிழ் மூவேந்தர் மீது பாடி, அவர்கள் மகிழ்ந்து அளித்த மேம்பட்ட செல்வக் குவியல்களைக் கொண்டு பல ஆலயங்களை அமைத்து, அடியார்களுக்குப் பொருள் கொடுத்து உதவிக் கயிலையங்கிரியை அடைந்து சிவபெருமான் திருவடிகளைத் துதிக்கச் சிவபெருமான் காட்சி தந்து அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** உரவோர் - கல்வி அறிவு ஒழுக்கங்களால் மேம்பட்டவர்; பயின்று - பழகி; அடல் நிதிக்குவை - ஆற்றல் மிக்க செல்வக் குவியல். (சூ0)

## நின்றசீர் நெடுமாற நாயனார்

61. **தடுமாறு நெறியினைத் தவமானது என்றுஅரிய**
**தம்உடலை வீணில் மாய்த்த**

**சமணப்பேய் கள்தம்பொய் மாயவ லையிடைத்**
**தாம்அகப் பட்டு உலைந்தே**
**விடுமாறு தமிழ்விரகர் பாதார விந்தங்கள்**
**மெய்அன் பினால் அடைந்து,**
**மேன்மையுடை யார்மங்கையர்க் குஅரசி யார்களப**
**மென்முலை திளைக்கும் மார்பின்**
**நெடுமாற னார்கன்னி நாடுசிவம் ஓங்கவே,**
**நீடுசெங் கோல் செலுத்தி**
**நிகழும்நாள், அமர்வேண்டி வந்துஏற்ற தெவ்வரை**
**நெல்வேலி தன்னில் வென்றோர்,**
**வடுமாறு சிவலோக பதவியது பெற்றிடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** தடுமாறும் வழிகளையே தவநெறி என்று கைக்கொண்டு அருமையான தம் உடல்களை வீணே கெடுத்துக் கொள்ளும் சமணப் பேய்களின் பொய் மாயவலையில் அகப்பட்டு வெப்பு நோயால் வருந்திப் பின் சமண நெறியைக் கைவிடுமாறு திருஞானசம்பந்தர் திருவடிகளை உண்மை அன்போடு அடைந்து, மேன்மையுடைய மங்கையர்க்கரசியாரின் மெல்லிய முலைகளைத் தழுவிய மார்பினை உடைய நெடுமாறனார் என்ற பாண்டிய மன்னர் பாண்டிய நாட்டில் சைவ சமயம் தழைக்கச் செங்கோல் செலுத்தி வந்த காலத்தில் தம்மிடம் போரிட வந்த பகைவர்களை நெல்வேலி என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் வென்று, குற்றமற்ற சிவலோக பதவி பெறுமாறு தம் வாழ்க்கை இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** பாதாரவிந்தங்கள் - திருவடித்தாமரைகள்; கன்னி நாடு - பாண்டிய நாடு; தெவ்வர் - பகைவர்; வடுமாறு - பிறவியாகிய குற்றம் மாறுவதற்குக் காரணமான. **(சுக)**

## வாயிலார் நாயனார்

62. **பொன்நீடு தொண்டைவள நன்நாட்டின் மயிலா**
**புரிக்குள் வேளாண் குடிக்குள்**
**பொற்புஉடைய வாயிலார், நற்றவர்க்கு இன்பம்**
**புரிந்திட விரும்பி, மிகவும்**

பன்னாளும் மறவாமல் உன்னுசெம் பொன்திருப்
பணிமனத் திடத்து அமைத்துப்
பார்க்கஞா னதீபம் ஏற்றிஆ னந்தவழி
பாராட்டி நீராட்டி யும்,
சொல்நீடு அன்புஅமுது அமைத்துச் சிவார்ச்சனைத்
தோற்றமொடு தேற்றம் உற்றுஅத்
தொண்டர்இப் படிநெடு நாளும்அர்ச் சனைசெய்து,
தூயதாம் மனம் மகிழ்ந்து,
மன்நீடும் உனதுபத நீழல்வாழ்வு உற்றிடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** செல்வ வளம் மிக்க தொண்டை நாட்டில் மயிலாப்பூரில் வேளாளர் மரபில் வந்துதித்த வாயிலார் நாயனார் தம் வாழ்நாளில் பல நாள்கள் சிவபெருமானுடைய திருப்பணிகளை மனத்திலேயே அமைத்து மனத்தாலேயே செய்பவராய் ஞானமாகிய தீபத்தை ஏற்றச் சிவபெருமானைத் தரிசித்து, ஆனந்த மான வழியினால் அவருக்கு அபிடேகம் செய்து, அன்பாகிய உணவை அவருக்கு நிவேதனம் செய்து, சிவபெருமானை அர்ச்சிப்பதில் தெளிவு பெற்று, இம்முறையிலேயே பலகாலம் சிவபெருமானை அர்ச்சனை செய்து, தம் தூய மனம் மகிழ்ந்து, வாழ்நாள் இறுதியில் சிவபெருமான் திருவடி நீழலில் நிலைத்த நல்வாழ்வினைப் பெற்றார்.

**அ.பொ:** தேற்றம் உற்று - மனத்தில் தெளிவு பெற்று. (சூஉ)

## முனை ஆடுவார் நாயனார்

63. செம்பியன் புகழ்பெற்ற தண்பொன்னி வளநாடு,
சேரும்நீ டூர்க்குடி மிகும்
செல்வம்நிறை வேளாளர் தொல்குலத் தினில்,நலம்
செய்யும்முனை யடுவர் என்னும்
தம்பெயரி னால்சிறந்து, அம்புவி யின்மாற்றார்
தமக்குஅமர் இளைத்திடும் பேர்
தங்களில் வெற்றிபெற வும்செய்வீர் எனுமவர்
தருபொன்நடு வைத்து, மனத்தில்

நம்புசிவன் அடிமலர் போற்றி,மாற் றார்மீது
நாடிஅவ ரோடு எதிர்ந்து
நவில்வென்றி செய்துவரு பொருள்கொண்டு, தொண்டரை
நன்றுஅமுது அருத்தி, நிகழ்வார்
வம்புஉலவு சோலைதிகழ் சிவலோகம் எய்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சோழ மன்னர் ஆட்சியில் புகழ்பெற்ற குளிர்ந்த காவிரி பாயும் சோழ நாட்டில் அமைந்த நீடூர் என்ற தலத்தில் செல்வம் நிறைந்த வேளாளர் குலத்தில் முனையடுவார் என்ற பெயரோடு சிறப்புற்று வாழ்ந்த அடியவர், பகைவரோடு போரிட்டுப் போரில் தோற்றவர்கள் தாம்; பகைவர்களை வெல்வதற்குத் தமக்கு உதவவேண்டும் என்று கூறிக் கொடுக்கும் பொருளை மத்தியஸ்தர் வசம் ஒப்படைத்து, மனத்தில் சிவபெருமான் திருவடிகளைத் தியானம் செய்து பகைவரை நாடிச் சென்று அவரை எதிர்த்து வெற்றி பெற்றுப் பின்னரே மத்தியஸ்தரிடம் வைத்திருந்த பொன்னைப் பெற்று அச்செல்வத்தால் சிவனடியார்களுக்குச் சிறந்த உணவு வழங்கித் தம் வாழ்நாள் இறுதியில் சிவலோகம் அடைந்து சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** மாற்றார் - பகைவர்; அமர் இளைத்தல் - போரில் தோற்றல்; நடு வைத்து - வெற்றி பெற்றுச் செயலை நிறைவேற்றிய பின் தாம் கைக்கொள்வதாக இடையே ஒருவரிடம் ஒப்படைத்து; நம்புதல் - விரும்புதல்; நன்று - நல்ல பொருள்களால்; வம்பு - நறுமணம். **(௬௩)**

## கழல் சிங்க நாயனார்

64. செகத்தில்உயர் பல்லவர் குலத்தில்வரு கோக்கழற்
சிங்கர்,சிவன் அன்றி மற்றோர்
சிந்தைபற் றார்,படையின் வெஞ்சமர் புரிந்து,வட
திசைகவர்ந்து, அரசிய லும்நாள்,
மிகுத்திடும் பலபதி துதித்தும், ஆரூர்இறைவர்
மெல்லடி தொழும்போது, தான்
மேவுதாமத் தின்மணி மாடம்உற்றி டும்மனைவி
மென்மலர் எடுத்து மோந்தது

அகத்தில்பொ றாமல்,செருத் துணைவர் தாம்மூக்கு
அரிந்திடக் கண்டு வினவி,
'அவ்வகைக் குத்தண்டம் ஈதுபோ தாது'எனவும்
அரிவைகைம் மலரை வெட்டி,
மகத்துவம் பெற்று,நின் பாதமலர் எய்திட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** உலகில் மேம்பட்ட பல்லவர் குலத்தில் தோன்றிய கழற் சிங்கர் சிவ்பெருமானைத் தவிர மற்ற தெய்வங்களைத் தியானம் செய்யாதவராய், படை எடுத்துப் போர் புரிந்து, வடதிசைப் பகைவரை வென்று, ஆட்சி செய்து வந்த காலத்தில் பல திருத்தலங்களுக்கு யாத்திரை சென்று, திருவாரூரில் சிவபெருமான் திருவடிகளை வணங்க வந்தபோது, பூத்தொடுக்கும் மாடத்தி லிருந்த மலர் ஒன்றினை அவர் தேவி எடுத்து மோந்திட, அத்தவறான செயலை மனம் பொறுக்க முடியாமல் செருத்துணையார் அத்தேவியின் மூக்கினை ஊறு செய்ய, அச்செய்தி கண்டு காரணம் வினவிய கழற்சிங்கர் 'அத்தவற்றுக்கு இத்தண்டனை போதாது' என்று தம் தேவியாரின் கைகளையும் ஊறு செய்து அதனால் உலகில் மக்களிடையே பெருமை பெற்றுத் தம் வாழ்நாள் இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** செகம் - உலகம்; வடதிசை - வடதிசையிலுள்ள தேயங்கள்; அரசு இயலும் நாள் - ஆட்சி செய்த காலத்தில்; தாமத்தின் மணிமாடம் - பூமாலை தொடுக்கும் மண்டபம்; அரிவை - இளம் பருவத்தினளாகிய தேவி. **(௬௪)**

## இடங்கழிநாயனார்

65. **தேன்ஆடு சோலைசெறி கோனாடு வாழுந்**
**திருக்கொடும் பாளூர் மனுச்**
**செங்கோல் புரிந்திடு மிடங்கழியர் கொங்கிலுயர்**
**செம்பொனா லம்ப லத்துள்**
**தானாடு சேவடியர் மேனீடு மணிமுகடு**
**தான்வேய்ந்த பானுகுல நற்**
**றலைவர்சிவ சமையநெறி யிலகிட விளங்கும்நாள்**
**தனிலொருவர் தொண்டர் மகிழக்**

**கான்நீடு கனிகள்தயிர் பால்நீடும் அமுதிடக்**
**காணா திருட்டின் எல்லைக்**
**கவர்ந்திட, காவலர் கொணர்ந்துமுன் விட'வன்பர்**
**காணும்நம் பொருள்க' ளென்று**
**மான்ஆடும் கையர்அடி யார்க்கென வழங்கிடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** தேன் துளிக்கும் சோலைகளை உடைய கோனாட்டில் மேம்பட்ட கொடும்பாளூரில் நெறிமுறைப்படிச் செங்கோல் செலுத்தி வந்த இடங்கழியார், கொங்கு நாட்டிலிருந்து கவர்ந்து வந்த செம்பொன்னினால் தில்லையம்பலத்தில் கூத்தாடும் திருவடிகளை உடைய சிவபெருமானுடைய மேல் கூரைப் பகுதிக்கு அழகிய உச்சியை வேய்ந்த சூரியகுல மன்னவரின் சிறந்த தலைவராய், சிவசமய நெறி சிறக்க ஆட்சி செய்து வந்த நாள்களில், அடியவர் ஒருவர் ஏனைய அடியவர்கள் மகிழுமாறு நறுமணம் கமழும் கனிகள், தயிர், பால் இவற்றோடு உணவிடுவதற்கு உரிய செல்வம் அன்று தமக்குக் கிட்டாமையால் இரவு இருளில் அரண்மனைக் களஞ்சியத்திலிருந்து தானியத்தைக் கைப்பற்ற, அது கண்ட காவலர் இடங்கழி நாயனார் முன் அவ்வடியவரைக் கள்வர் என்ற பெயரில் நிறுத்த, அவர் களவாடியதன் காரணத்தை உணர்ந்த இடங்கழியார் நமக்குச் செல்வம் இறைவன் அடியவர்களே என்று கூறித் தம் செல்வங்களை அடியவர்களுக்கு வழங்கி மனநிறைவோடு இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** மணி முகடு - அழகிய விமானத்தின் உச்சி; மேய்ந்த - வேய்ந்த; பானுகுலம் - சூரிய குலம்; கவர்ந்திட - திருடிக் கொள்ள; மான் ஆடு கையர்- சிவபெருமான். **(சாரு)**

## செருத்துணை நாயனார்

66. **செயமிகும் பொன்னிநாடு உயர்மருத நாடுபுகழ்**
**செஞ்சொல்நிறை தஞ்சை நகரிற்**
**சேரும்வே ளாண்குலத் தாகுஞ் செருத்துணையர்**
**சிந்தைதனி லந்தி பகலுந்**

**தயவுற்ற அடியருக்கு அயலுற்ற எமனையுதை**
**தந்தசெம் பங்கயப் பொன்**
**தாளைமற வாமலெந் நாளுமா, ரூரிறை**
**தனைப்பணிந் திடஅந் நாளிற்**
**புயலுறு கழற்சிங்கர் மயல்பெறுந் தேவிமென்**
**போதுமோந் திடுதல் கண்டு,**
**புனிதர்முடி யணியும்மல ரெனமூக் கரிந்த,டற்**
**பூண்டதொழில் வேண்டு மன்பால்**
**வயம்மிகுந் திடுநடன மியல்வருங் கழலுற,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** வெற்றி மிக்க காவிரி பாயும் சோழநாட்டில் மருத நாட்டைச் சார்ந்த தஞ்சை நகரில் யாவரும் புகழும் வேத ஒலி நிறைந்திருக்கும். அத்தகைய ஊரில் வேளாளர் மரபில் உதித்த செருத்துணையார் இரவும் பகலும் மார்க்கண்டேயனுக்காக யமனை உதைத்த சிவபெருமானுடைய திருவடிகளை மறவாமல் வாழ்ந்த காலையில், ஒருநாள் திருவாரூர்ப் பெருமானைத் தரிசிக்க வந்த பொழுது கார்மேகம் போலும் கொடைத்தொழில் மிக்க கழற்சிங்கர் என்ற பல்லவ மன்னருடைய தேவி அறிவு மயக்கத்தால் சிவபெருமானுக்கு அர்ப்பணிக்க இருந்த மலர்களில் ஒன்றனை எடுத்து மோந்திட, அதனைத் தவறான செயலாகக் கருதிச் செருத்துணையார், அரசியின் மூக்கிற்கு ஊறு செய்து, சிவத்திருப்பணியிடத்து அன்போடு வாழ்ந்து இறைவனுடைய திருக்கூத்து நிகழ்த்தும் திருவடிகளைத் தம் வாழ்நாள் இறுதியில் சார்ந்து சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** புகழ் செஞ்சொல் - புகழப்படும் வேதம்; தயவுற்ற - இறைவன் அருளுக்குப் பாத்திரர் ஆன; மயல் - அறிவின் மயக்கம்; போது - அலரும் பருவத்து மொட்டு; வயம் - வலிமை, ஆற்றல். **(சாசா)**

## புகழ்த்துணை நாயனார்

67. **செய்யபுத் தூரிலகு சைவமறை யோர்நலந்**
**திகழ்புகழ்த் துணையர், வேதச்**
**செங்கண்விடை யார்தம்மை யாகமப் படிபூசை**
**செய்யுநன் னியம முடையார்**

துய்யஉல கத்தின்மழை பெய்யாமல் வெம்பசித்
துன்பத் துழன்று அயர்ந்து
சோர்ந்திடினும் நல்தொண்டு சார்ந்துமட்டு அலருடன்
தூயநீ ராட்டு பொழுதின்
மெய்யின்நீர்க் குடமையர் கைதளர்ந் தேமுடியில்
வீழப் பொறாமல் அடியில்
வீழ்ந்திட,த் துயிலுறக் கனவின்கண் அருளியே
வியன்படிக் காசு தினமும்
வையமது புகழவே தந்தன்பர் போற்றிட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மேம்பட்ட அரிசிற்கரைப் புத்தூரில் சைவ மறையவர் மரபில் உதித்த புகழ்த்துணை நாயனார் வேதம் ஓதுபவரும் சிவந்த கண்களை உடைய திருமாலாகிய இடபத்தை வாகனமாக உடையவரும் ஆகிய சிவபெருமானை ஆகம முறைப்படி பூசை செய்து வாழும் குலத்தொழிலை உடையவராய், உலகில் மழைவளம் மாறவே மக்கள் உணவின்றிப் பசி துன்பத்தில் உழன்று அயர்ந்து சோர்ந்திட்ட போதும் தம் ஆலய வழிப்பாட்டினைக் குறைவறச் செய்து வந்த காலத்தில், ஒரு நாள் அவர் இறைவனுக்கு அபிடேகம் செய்து கொண்டிருந்த போது அபிடேகக் குடம் கை தளர்ந்து இறைவன் மேல் விழ, அச்செயல் கண்டு புகழ்த்துணையார் மயங்கி விழுந்த இடத்துத் துயிலுற இறைவன் கனவில் அவருக்குப் பஞ்சம் நீங்கும் வரை நாடோறும் படியில் ஒரு காசு வழங்குவதாகக் கூறியபடியே நாளும் படிக்காசு பெற்று இறைவனைப் போற்றி வழிபட்டுத் தம் வாழ்நாள் இறுதியில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** நியமம் - வரையறுத்த செயல்; ஐயர் - சிவாசாரியார் ஆகிய புகழ்த்துணையார். **(சாஎ)**

## கோட்புலி நாயனார்

68. வேதமலி சோணாட்டு நாட்டியத் தான்குடியின்
வேளாளர் கோட்புலி யர்மால்
வேந்தர்தந் திரியராய்ப் பாந்தள்அணி வார்க்கமுது
வேண்டுமென நெற்குவை மிகப்
போத,மனை யவர்தமக்கு ஓதிநாட் டார்கள்வெம்
போரின்மேற் செல்ல வுலகிற்

பொங்கும்வற் காலங்கள் வந்திடத் தாம்பசி
பொறாமலுண் டிடவும், மாற்றார்
மீதுஅடற் கொண்டுவரு போதறிந்து ஆணைமொழி
மீறுஇளை ஞர்க்கினிய சொல்
வினவி,த் தடிந்திட, பிள்ளையையும் வாளினால்
வீசிடக் கண்டு உகந்தே
மாதகவின் 'இந்நிலையி னுடன்அணைக' வென்றுமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வேதஒலி சிறந்து விளங்கும் சோழநாட்டு நாட்டியத்தான் குடியில் வேளாளர் மரபில் உதித்த கோட்புலியார், மேம்பட்ட அரசருடைய சேனாபதியாய், பாம்பினை அணிகலனாக அணியும் சிவபெருமானுடைய நிவேதனத்துக்கு வேண்டும் நெல்லினைச் சேமித்து வைத்து, அதனைப் பாதுகாத்து இறைவன் நிவேதனத்துக்கு வழங்குமாறு 'திருவரையாக்கவி' என்று வேதத்தின் மீது ஆணையிட்டு வைத்துப் பகைவர் மீது போரிடுவதற்கு வேற்று நாட்டுக்குச் செல்ல, அப்பொழுது மழையில்லாமல் உணவுப் பஞ்சம் ஏற்பட இறைவனுக்கு வைத்திருந்த தானியத்தை உறவினர் பசி பொறுக்க முடியாமல் பின் திருப்பிக் கொடுத்து விடலாம் என்று கருதி எடுத்து உண்டிட, பகைவர்களை வென்று மீண்ட கோட்புலியார் அச்செயலை அறிந்து ஆணையை மீறி உணவினைக் கவர்ந்த உறவினர்களை இன்சொல் கூறி அழைத்து, அவர்களை ஒரு குழந்தையைக் கூட விடாமல் வெட்டித் தள்ள, அவருடைய ஆழ்ந்த பக்தியைக் கண்டு உவந்த சிவபெருமான் அந்நிலையிலேயே அவர்தம் திருவடிகளை அடையுமாறு அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** தந்திரி - படைத்தலைவர்; பாந்தள் - சர்ப்பம்; வற்காலம் - பஞ்சகாலம்; தாம் - உறவினர்கள் தாம்; அடல் கொண்டு - தாக்கி வெற்றி கொண்டு; ஆணைமொழி - சிவபெருமான் மீது ஆணையிட்டுச் சொல்லிய சொற்கள்; தடிந்திட - வெட்டி வீழ்த்த. **(சூஅ)**

## பத்தராய்ப்பணிவார் நாயனார்

69. ஈசன்அடி யவரெனுங் காசனியி லுற்றவர்க்கு
இன்பமொடு தொண்டு புரிதல்
ஏற்கைபெற நாளுஞ்சி வார்ச்சனைகள் செய்திடுதல்
எண்ணுசிவ நியம நண்ணல்

தேசுபெறு வேள்விமன நேசமோ டியற்றல்நல்
சிவகதை மகிழ்ந்து கேட்டல்
செப்புமா னந்தமொடு மெய்ப்புளக முறமயிர்
சிலிர்ப்பவிழி நீர்கள் மல்கி
ஆசைகொள் திருப்பணி விவாகங்கள் காட்டிவரும்
அப்பணி மகிழ்ந்து கொள்ளல்
அவியாதுசெவி னுங்குழைக் காதருக் கெனமொழிந்து
ஆராத காதல் கூர்ந்து
வாசமிகு பத்தராய்ப் பணியுமடி யார்கள்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** உலகில் உள்ள சிவனடியார்களுக்கு மகிழ்ச்சியோடு தொண்டு செய்தல், நெறிமுறைப்படி நாடோறும் சிவார்ச்சனை செய்தல், சிவனடியார் களுக்கு உரிய ஒழுக்க முறைகளைக் கடைப்பிடித்தல், சிறப்புத்தரும் உயிர்க்கொலை இல்லாத வேள்விகளை அன்போடு இயற்றுதல், சிவகதைகளை மகிழ்ந்து கேட்டல், ஆனந்தமோடு மெய் பூரிப்ப மயிர்க்கூச்செரியக் கண்கள் நீர் சொரியச் சிவத்திருப்பணிகளையும் சிவபெருமான் திருக்கல்யாண விழாக்களையும் பிறர் கண்டு மகிழும்படி இடையறாது நிகழ்த்துதல் மனத்துக்குத் திருப்தி என்பதே இல்லாமல் இடையறாமல் சிவனிடத்து அன்பு பூண்டு பத்தராய்ப் பணியும் அடியவர்களைச் சிவபெருமான் ஆட்கொண்டான்.

**அ.பொ:** ஏற்கை பெற - சான்றோர் ஏற்றுக் கொள்ளும் ஒழுக்கம் அமைய; சிவநியமம் - சிவத்தியானம் செய்யும் அன்றாடச் செயல்; விவாகங்கள் - சிவபெருமானின் திருக்கல்யாண உற்சவங்கள்; வாசம் - சிவத்தலங்களில் வசித்தல்; அவி - வேள்வி. **(சாக்ஸ)**

## பரமனையேபாடும் நாயன்மார்

70. சீலமிகு தெய்வமொழி நூலுநற் கலசமுனி
செய்தவண் டமிழின் நூலுந்
தேசிகத் தொடுநவில் சிவாகமச் சொற்கள்வகை
தேர்ந்துபல கலைக ளாய்ந்து
ஞாலமதின் மிக்குமெக் காலையினும் மெய்உவகை
நண்ணியெழின் மன்று ளாடும்

நாத!வே தாந்த!பரி பூரணா னந்தமெஞ்
ஞான!மோ னந்த ரூப!
பாலம்உறை செங்கர!திரி சூல!கங் காதர!
பராபர! சிவாய முக்கட்
பரம!னென் றேபாடு மடியார்கள் கதிபெறப்
பார்விண் புகுந்து ஏறியும்
மாலயனு மறியாத சேவடிகள் தொழுதிடமுன்
வந்து,அடிமை கொண்ட கபிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** ஒழுக்கம் மிகுந்த வடமொழி நூல்களும் அகத்தியர் அருளிய வளமான தமிழ் நூலும் நாட்டு மக்கள் பேசும் மொழியும், சிவ ஆகமங்களிலுள்ள மரபுச் சொற்களும், பல கலைகளும் ஆராய்ந்து, உலகில் மேம்பட்டவராய், எப்பொழுதும் மன மகிழ்ச்சியோடு சிவபெருமானை, 'பொற்சபையில் ஆடும் கூத்தப்பிரானே! நாத தத்துவனே! வேதத்தின் முடிவே, நிறைந்த ஆனந்த வடிவே! உண்மை ஞான வடிவினனே! பேசாமல் செயற் படுபவனே! மேலார்க்கும் மேலாயவனே! மங்களத்தின் பொருட்டு அமைந்த முக்கண் பெருமானே! என்று பாடும் அடியார்கள் நற்கதி அடைய திருமாலும் பிரமனும் காணமுடியாத திருவடிகளைத் தொழுது உய்ந்திடச் சிவபெருமான் அருள் செய்து ஆட்கொள்கிறான்.

**அ.பொ:** தெய்வ மொழி - வடமொழி; தேசிகம் பேச்சு வழக்கில் உள்ள சொற்கள், நாத-நாத தத்துவனே; வேதாந்த - வேதத்தின் இறுதியாவனே; பரிபூரணம் - முழு நிறைவு; மோனந்தம் - பேசாத நிலையாகிய இறுதி நிலை; பாலம் - முதற் குறை; கபாலம் - மண்டை ஓடு; சிவாய - மூன்றெழுத்து மந்திரம். **(எ0)**

## சித்தத்தைச் சிவன்பால் வைத்தநாயன்மார்

71. பார்அணவு சுவையொளி யூறோசை நாற்றமாம்
பான்மைபெறு புலனு மனமும்
பயில்புத்தி யோடகங் காரம்அலை சித்தமும்
படர்ந்து நடு நாடியிற்
சீரணவு நாதமும் பங்கயன் முதலான
தேவர்தம் பதமு நீங்கித்
திகழ்கின்ற பரஞான மெய்ப்பரஞ் சோதியின்
தேசுபெறு பொலிவு நோக்கிப்

பூரண சிவானுபவ போகஆ னந்தமாம்
பொருதிரைக் கடலின் மூழ்கும்
புண்யபரி பாகரே தங்கள்சித் தத்தினைப்
பொருந்தநின் பாலின் வைத்தோர்
வாரணியு மொளிர்கனக கலசநகில் மாதினொடு
மால்விடையின் மீது தோன்றி
மற்றுஅவர்கள் கண்டுனது பாதமல ரெய்திட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சுவை முதலிய ஐம்புலனும், மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கும் இறைவனிடம் ஈடுபட, சுழிமுனை நாடியில் நாத தத்துவம் அமைய, பிரமன் முதலிய பத முத்திகளை விடுத்து மேம்பட்ட ஞான ஒளியான சிவபெருமானுடைய பொலிவையே மனக்கண்ணால் நோக்கி முழுமையான சிவானுபவமாகிய இன்பம் தரும் கடலில் மூழ்கும் அடியார்களே புண்ணியத்தால் பக்குவம் உற்றவர்கள். அவர்கள் தங்கள் மனத்தைச் சிவபெருமானிடத்திலேயே ஈடுபடுத்தியவர்கள். அவர்களுக்குச் சிவபெருமான் கச்சணிந்த ஒளிவீசும் பொன்மயமான கலசம் போன்ற தனங்களை உடைய பார்வதியோடு பெரிய காளை மீது அமர்ந்து காட்சி வழங்கி, அக்காட்சியால், அவர்கள் மகிழ்ந்து தன் திருவடிகளை அடையுமாறு ஆட்கொள்கிறான்.

**அ.பொ:** நடுநாடி - சுழிமுனை நாடி; பரிபாகர் - பக்குவம் உற்றவர். **(எக)**

## திருவாரூர்ப்பிறந்த நாயன்மார்

72. கார்கொண்ட மேனிவண் டுளபமணி மார்பனுங்
கமலா சனத்தில் வாழுங்
கருணையுறு நான்முகக் கடவுளு மாயிரங்
கண்கொண்ட மேனி யானுஞ்,
சீர்கொண்ட ஏனையநல் முப்பத்து முக்கோடி
தேவர்களு முனிவர் குழுவுஞ்
சிந்தைமெய் யன்பினொடு தொழுதுமுக் காலமுஞ்
சேர்ந்தினி திருக்கு மிடமாம்
ஏர்கொண்ட வூழிதோ றூழிதோ றோங்கல்பெற்று,
எந்தைதிரு நந்தி காவல்
என்றைக்கு மகலாத வெள்ளியங் கிரியில்வாழ்
எண்சிவ கணங்க டாமே,

வார்கொண்ட வாரூர்ப் பிறந்தார்க ளுய்ந்திட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** திருத்துழாய் அணிந்த கார்மேக வண்ணனான திருமாலும், தாமரையில் வாழும் கருணையுடைய பிரமனும், ஆயிரங் கண்ணனாகிய இந்திரனும், ஏனைய முப்பத்து மூன்று வரிசையராகிய தேவர்களும் அன்போடு தொழுது முக்காலமும் சேர்ந்திருக்கும் இடம் திருவாரூர். ஊழிகள் தோறும் உயர்ந்து நந்தி தேவருடைய காவல் என்றைக்கும் நீங்காத கயிலாய மலையில் வாழும் சிவகணங்களே திருவாரூரில் மக்களாகப் பிறந்தார்கள். அவர்கள் உய்யுமாறு சிவபெருமான் முன் வந்து அவர்களை ஆட்கொள்கிறான்.

**அ.பொ:** கமலாசனம் - தாமரையாகிய இருப்பிடம்; முப்பத்து முக்கோடி - முப்பத்து மூன்று வரிசை - ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், அசுவினி தேவர் இருவர், ஆக முப்பத்து மூவர்; வார் கொண்ட - நேர்வும் நெடுமையும் கொண்ட. (எஉ)

## முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார் நாயனார்

73. கருதரிய ஞானகாண் டத்தினொடு உபாசனா
காண்டம்நற் கசடில் கிரியா
காண்டமெனு முப்பகுதி யானபல வாகமக்
கலையெலாம் நன்கு ணர்ந்தே
பெருமைபெறு முப்பொருளி னுண்மைதெரி வுற்றவர்
பெருந்திருச் சைவ மறையோர்
பேசுமுப் போதும்நிகழ் காலமெதிர் காலமும்
பேணுமெதிர் கால மதிலும்
ஒருமையுடன் விதிவழியி னர்ச்சனைத் தொண்டினை
உஞற்றுதற் குரிய பெரியோர்
உள்ளன்பு மாறாது சிவசாத னங்களே
உற்றபெரு வாழ்க்கை யுடையோர்
மருவுமா லறியாத நின்னடி யடைந்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** ஞான காண்டம், உபாசனா காண்டம், கிரியா காண்டம், என்ற மூன்று பகுதிப்பட்ட ஆகமங்களின் கலைகளை எல்லாம் நன்கு உணர்ந்து,

பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களின் உண்மையை நன்கு தெளிந்தவர்களாய் முக்காலமும் முறைப்படிச் சிவபெருமானை அர்ச்சிக்கும் தொண்டினைச் செய்தவற்கு உரிமையுடைய பெரியோராய், உள்அன்பு மாறாமல் விபூதி, உருத்திராக்கம் என்பனவற்றையே கைக்கொண்ட பெருவாழ்வு வாழ்பவராய்த் திருமாலும் அறிய முடியாத சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்து அவனால் ஆட்கொள்ளப்பட்டவர்கள் முப்பொழுதும் திருமேனி தீண்டுவோர் ஆவர்.

**அ.பொ:** முப்பொருள் - பதி, பசு, பாசம் என்ற என்றும் அழியாப்பொருள், நிகழ்காலம் எதிர்காலம் - நிகழ்காலத்தைத் தன்னுடைய எதிர்காலமாகக் கொண்ட இறந்தகாலம்; பேணும் காலம் - செயற்படும் நிகழ்காலம்; ஒருமை - மனம், மொழி, மெய் ஒரே பொருளில் ஈடுபட்டிருத்தல்; சிவ சாதனங்கள் - திரு நீறு, உருத்திராக்கம் முதலியன; மால் - திருமால். **(எங)**

## முழுநீறு பூசிய முனிவராம் நாயன்மார்

74. **ஆதிவேத ஆகம புராணசாத் திரமுறைக்**
**கனுபூதி யெனும் விபூதி**
**அனுகற்பம் உபகற்ப முயர்கற்ப நெறியறிந்து**
**ஆசானு ரைத்த படியே**
**காதலொடு சிரநெற்றி மார்புந்தி யுடன்முழங்**
**கால்தோள் மணிக்கட்டு முன்**
**கைஇடைப் பின்புற மெழில்காது தண்கண்டங்**
**கருதுதிரி புண்டர மதாய்ப்**
**போதகம் பெறுசங்கி தாமந்தி ரங்களிற்**
**புகல்கிழக் குடன் வடக்கின்**
**பொற்புறுந் திசையிற் பொலிந்துபஞ் சாக்கரம்**
**புகன்று கண்மணி புனைந்து**
**மாதவர்கள் முழுநீறு பூசுமுனி வோர்கள்முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** வேதம், ஆகமம், புராணம், சாத்திரங்கள் இவற்றால் சிவானுபவத்தைத் தருவது என்று போற்றப்படும் திருநீற்றை அனுகற்பம் முதலிய முறைகளை அறிந்து ஆசிரியர் அறிவித்த முறையில் அன்போடு தலை, நெற்றி, மார்பு,

கொப்பூழ், முழங்கால், தோள், மணிக்கட்டை, முன்கை, இடுப்பின் பின்புற முதுகுப் பக்கங்கள், காது, கழுத்து, இவற்றில் திருநீற்றை அணிந்து, அறிவு தரும் சம்ஹிதை மந்திரங்களால் கிழக்கோ வடக்கோ நோக்கித் திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டே அணிந்து, உருத்திராக்கம் தரித்துச், சிறந்த தவத்தோராக விளங்கும் முழுநீறு பூசிய முனிவர்களைச் சிவபெருமான் ஆட்கொள்கிறான்.

***அ.பொ:*** அநுபூதி - சிவானுபவம் தருவது; அனுகற்பம், உபகற்பம் - திரு நீறு அமைக்கும் முறைகள்; இடை பின்புறம் - இடுப்பின் பின்புற முதுகுப் பக்கம்; கண்மணி - உருத்திராக்கம். **(எச)**

## அப்பாலுமடிச்சார்ந்த நாயன்மார்

75. **வெள்ளநீர் சூழுநான் கெல்லைசெறி நாட்டின்மூ**
**வேந்தர்தமிழ் சேர்ந்த நாட்டின்**
**மேலு,மிப் பாலுமெக் காலு,நற் றவநெறியின்**
**மெய்த்தொண் டிசைத்த பேருந்;**
**தெள்ளுசெந் தமிழிசைகள் விள்ளுமா ரூரர்முன்**
**திறமைவிறல் மிண்டர் மகிழத்**
**திருவருள் புரிந்திடும் பரிவிற் றிருத்தொண்டர்**
**சீர்பெறுந் தொகையெனும் பா**
**உள்ளியலும் வைப்பின்மொழி கொள்ளுமிக் கோரதில்**
**உறாதபெரி யோரு முன்பின்**
**உற்றுமப் பாலுமடி சார்ந்தவடி யாரென்னும்**
**உத்தமர்கள் சித்த மகிழ**
**வள்ளையிற் பணிலமணி வள்ளலென வாழ்த்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

***பொழிப்:*** கடலால் சூழப்பட்டு, நான்கு எல்லைகள் வரையறுக்கப்பட்டுள்ளதாய் மூவேந்தர்களால் ஆளப்பட்ட தமிழ்நாட்டினைக் கடந்தும் எந்தக் காலத்தும் நல்ல தவநெறியைப் பின்பற்றி உண்மைத் தொண்டு செய்தவர்களும், தெளிந்த செந்தமிழிலே இசையோடு கூடிய பாடல்களைப் பாடிய சுந்தரர் இல் - முகப்பில் தங்கியிருக்கும் விறல்மிண்டநாயனார் மகிழும்படியாக அவருக்குச் சிவபெருமான் திருவருள் புரியச் சுந்தரரால் திருத்தொண்டத்தொகை பாடப்பட, அப்பாடலில்

தம் காலத்துக்கு முன்னும் தம் காலத்துக்குப் பின்னும் உள்ள அடியார்களைப் பற்றி 'அப்பாலும் அடி சார்ந்தார்' என்று சுந்தரரால் குறிப்பிடப்படும் சான்றோர்கள் மனம் மகிழக் காதுகளில் சங்குகளை அணிந்திருக்கின்ற வள்ளல் என அடியார்கள் சிவபெருமானை வாழ்த்த அவர்களை ஆட்கொள்ளும் கயிலைவாசன்.

***அ.பொ:*** இப்பாலும் - இந்தத் தமிழ் நாட்டிலும் ; எக்காலும் - எந்தக் காலத்திலும்; இசைகள் - பாடல்கள்; வள்ளையில் பணிலம் அணி - காதுகளில் சங்குகளை அணிந்த.

**(எரு)**

## பூசலார் நாயனார்

**76. பொங்கமுறை தொண்டைநா டொன்றுதிரு நின்றவூர்ப்**
**பூசுரரில் வாச முற்ற**
**பூசலார் கங்கையணி நேசரென மெய்ப்பணிப்**
**புந்திமற வாமல் நாளுந்**
**துங்கமுறை கோயில்செய வுங்கையிற் பொருளிலாத்**
**துயர்கொண் டயர்ந்து சிந்தைத்**
**தோற்றத்தி னாற்பொருள்கள் சேர்த்துகற் காலந்**
**தொடுத்தும் ஆலய மெடுத்தும்**
**இங்கிதப் பிரதிட்டை பண்ணுநாட் கச்சிதனில்**
**இப்பணி செய்காட வர்க்கும்**
**இம்மொழிகள் சொலவந்த வாக்கிது விளம்பவடி**
**யிணைதொழுது பின்பு நெஞ்சின்**
**'மங்கைபங் கா'வென்று பூசனை புரிந்திடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

***பொழிப்:*** ஒழுக்கத்துக்கு இருப்பிடமான தொண்டை நாட்டில் பொருந்திய திருநின்றவூரில் அந்தணர் மரபில் வசித்து வந்த பூசலார், கங்கையைத் தரித்த சிவபெருமானுக்குத் திருப்பணி செய்ய வேண்டும் என்ற மனக்கருத்து மறவாமல், நாள்தோறும் தூய்மைக்கு இருப்பிடமான கோயில் எடுப்பிக்க மனத்தால் எண்ணிக் கையில் பொருள் இல்லாததால் துயர் கொண்டு வருந்தி, மனத்தாலேயே ஆலயம் எடுப்பித்தற்கு வேண்டிய பொருள்களையெல்லாம்

தொகுத்து, கல் அத்திவாரம் எடுத்து ஆலயத்தை முழுமையாக எடுப்பித்து இறைவனைப் பிரதிட்டை செய்யும் நாளினையும் நேரத்தையும் குறித்தாராக, காஞ்சியில் பெருங்கோயில் எடுத்து அந்த நாளிலே பிரதிட்டை அமைத்திருந்த பல்லவ மன்னனுக்குச் சிவபெருமான் இச்செய்தியை அசரீரியாக குறிப்பிட, அரசன் நின்றவூர் வந்து பூசலார் என்ற அவ்வடியவரை வணங்க, அடியவர் இறைவன் அருளை வியந்து, பிரதிட்டையை முடித்து இறைவனை 'மங்கை பங்கா' என்று போற்றிட, அவர் வாழ்நாள் இறுதியில் சிவபெருமான் அவரை ஆட்கொண்டான்.

**அ.பொ:** பொங்கம் - மகிழ்ச்சி, ஒழுக்கம்; ஒன்று - பொருந்திய; வாசம் உற்ற- வசித்த; துங்கம் - தூய்மை; கற்காலம் - கருங்கல்லால் அஸ்திவாரம்; இங்கிதம்- மனக்குறிப்பு; காடவர் - பல்லவ மன்னர்; வாக்கு - அசரீரி. **(எசா)**

## மங்கையர்க்கரசியார்

77. **தரணிபுகழ் மணிமுடிச் சோழன்மக ளாய்த்தென்னர்**
**தம்குடி விளங்கி மாதர்**
**தனியரசி நாமம் புனைந்துமடி யார்பணிகள்**
**தலைகொண்டு காழி நாட்டின்**
**சிரபுரப் பிள்ளையார் தமிழ்மாலை வைப்பின்**
**சிறப்பினிதுஉ வப்ப வோங்கித்**
**தீதுரைத் திடுசமணர் வாதுதீர்த் துத்திருத்**
**தென்பாண்டி நாடு வாழப்**
**பரசமய நெறிகெடும் படிபூதி சாதனம்**
**பயிலக் குலச்சிறை மனப்**
**பண்புபணி யின்பமுற் றன்புபெறு தம்கொழுநர்**
**பாசவினை யுந்து றப்ப**
**வரமிகுந் தடியர்பணி விடைமிகுந் திடவுமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** உலகம் புகழும் மணிமுடிச் சோழன் மகளாராய்ப் பாண்டியர் குடி விளங்கப் பாண்டிய மன்னன் நெடுமாறனை மணந்த மங்கையர்க்கு அரசியார், அடியார்களுக்குப் பணி செய்தலை மேற்கொண்டு சீகாழியில் தோன்றிய திருஞானசம்பந்தருடைய தமிழ்ப் பாசுரத் தொகுதியில் சிறப்பாகப் பாடப்பெறும்

வாய்ப்பினைப் பெற்றுத் தீயவற்றையே பேசிய சமணர்கள் செய்த வாதங்களால் அவர்கள் அழிய வாய்ப்பு அளித்து, பாண்டிய நாடு சைவ நெறியைப் பின்பற்றி வாழவும், ஏனைய சமய வழிகள் கெடவும் யாண்டும் திருநீறும் உருத்திராக்கமும் சிறப்புறவும் குலச்சிறையார் அரசியராகிய தம்முடைய மனப்பண்புகளுக்கு ஏற்பச் செயற்பட்டமையால் சிறப்பினைப் பெற்று, அன்பு மிக்க தம் கணவரான நெடுமாறர் தம்மைப் பற்றிய பாசங்களின் தீவினைகள் நீங்கவும், சிறப்பினைப் பெறவும், அடியார்கள் பணிவிடைகள் சிறக்கவும் வாழ்ந்து இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** மாதர் தனி அரசி - மங்கையர்க்கு அரசி; சிற்புரப் பிள்ளையார் - சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தர்.

**குறிப்பு:** 'மங்கையர்க்கு அரசி வளவர்கோன் பாவை வரிவளக்கை **மடமானி** பங்கயச் செல்வி பாண்டிமாதேவி' - III *120 -1.* 'செந்துவர் வாயாள் சேல் அன கண்ணாள் சிவன் **திருநீற்றினை வளர்க்கும்** பந்து அணை விரலாள் பாண்டிமா தேவி' - III *120 - 3* 'செய்ய தாமரை மேல் அன்னமே அன்ன சேயிழை, **திருநுதல் செல்வி** பையரவு அல்குல் பாண்டிமாதேவி' - III *120 - 5* 'முத்தின் தாழ் வடமும் சந்தனக் குழம்பும் நீறும் தன் **மார்பினில் முயங்க** பத்தி ஆள்கின்ற பாண்டிமாதேவி' - III *120 - 7.* 'மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும் மணிமுடிச் சோழன் தன் மகளாம் பண்ணின் நேர் மொழியாள் பாண்டிமாதேவி'- III *120 - 9.* 'பல் நலம் புணரும் பாண்டிமாதேவி' - III *120 - 11* என்ற திருஞானசம்பந்தர் தேவார அடிகளைக் காண்க. **(எஎ)**

## நேச நாயனார்

78. **தேம்பொழில் வருந்திருக் காம்பீலி மாநகர்ச்**
**சீலமிகு சாலியர் குலச்**
**செயலினரர் சிவபணிச் செல்வனா ரினிமைபெறு**
**தேசமதில் நேச ரென்பது**
**ஆம்பெயர் மனச்செய்கை பூங்கழற் காகநெறி**
**சாற்றுவாக் கின்செய்கை மெய்த்**
**தக்கபஞ் சாக்கர மனுவினுக் காகவெழில்**
**தருகரத் தொழில் செய்கைசீர்**
**மேம்படுஞ் சிவயோகி பூண்பணிக் காகவென**
**மெல்லுடைக் கோவண மிக**
**வேண்டியது செய்துதின மீந்துமுறை வழுவாத**
**மெய்ம்மை யதினாலு நீலம்**

**ஆம்பணி யணிந்திருவர் காண்பரிய கழல்பெறமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** இனிய பொழில்கள் வளரும் காம்பீலி மாநகரில் ஒழுக்கம் மிகுந்த நெசவாளர் குலத்தில் தோன்றியவராய் நெசவுத் தொழில் புரிபவராய்ச் சிவத்தொண்டு செய்யும் செல்வராய், தம் இனிய பண்பினால் எல்லோரிடமும் அன்பு பாராட்டிய காரணத்தால் மக்களால் நேசர் என்று அழைக்கப்பெற்ற சிவனடியார் தம் உள்ளம் இறைவன் திருவடிகளில் பொருந்த, நா திருவைந்தெழுத்தை இடையறாது ஓத, சிவனடியார் அணிவதற்காக மெல்லிய உடைகளையும் கோவணங்களையும் நெய்வதில் கைகள் ஈடுபட மனம், மொழி, மெய் மூன்றானும் சிவத்தொண்டில் ஈடுபட்டு, ஆடைகள் நெய்து நாடோறும் சிவனடியார்களுக்கு அளித்து, முறை தவறாத உண்மையே பேசும் வாழ்க்கையைப் பின்பற்றி, கருநாகங்களை அணிந்து அரி, அயன் இருவராலும் காணமுடியாத படி விளங்கிய சிவபெருமானுடைய திருவடிகளைப் பெறுமாறு தம் வாழ்க்கை இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** சாலியர் - ஆடைநெய்வோர்; மனு - மந்திரம்; நீலம் ஆம் பணி - கருநாகம். **(எஅ)**

## கோச்செங்கட்சோழ நாயனார்

79. **சோழநாடு உரியவெண் ணாவன்மா நகரில்**
**துலங்குஞ் சிலம்பி வாய்நூற்**
**சுற்றிமேற் பந்தரிட் டர்ச்சனைகள் புரியவெண்**
**தும்பிகண் டனுசித மென்று**
**வீழவே செய்தகர மீதிற் கடிப்பவுயிர்**
**வீய்ந்துஇ ரவிகுல வேந்தனார்**
**மேவிடுஞ் சுபதேவன் மாதெனுங் கமலவதி**
**மின்னினொடு தில்லை தொழுது**
**தாழவும்தம் வயிற்றிற் பிறந்துகோச் செங்கண்ணர்**
**தானாகி முடியின் மகுடஞ்**
**சாற்றியே தந்தைதவ முறவுஞ் சிவாலயத்**
**தக்கபணி செய்து தில்லை**

வாழுமறை யோர்க்கம்பொன் னீடிலஞ் செய்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** சோழநாட்டில் வெண்ணாவல் மரத்தைத் தல விருட்சமாகக் கொண்ட பெரிய கோயிலில் விளங்கிய சிலந்தி தன் வாய் நூலினால் சிவபெருமான் இருப்பிடத்தின் மீது பந்தர் அமைத்துச் சிவபெருமானை வழிபடவும், வெள்ளையானை சிலந்தி நூல்பந்தரைக் கண்டு அது ஏற்றதன்று என்று அதனை அழிக்கவும், அதனால் வெகுண்டு சிலந்தி யானையின் துதிக்கையுள் புகுந்து அதனைத் துன்புறுத்தவும், யானை துதிக்கையைத் தரையில் மோதியதால் இறந்த சிலந்தி, சூரிய குல மன்னனாக விளங்கிய சுபதேவனுக்கு அவன் தேவி கமலவதியிடம் தில்லை பெருமானை வழிபட்ட வரத்தினால் மகனாராகப் பிறந்து, கோச்செங்கட் சோழன் என்ற பெயர் பூண்டது. தந்தையார் நாட்டைத் துறந்து தவம் செய்யச் சென்றபோது கோச்செங்கட் சோழர் தாம் மணிமுடி புனைந்து பல சிவன் கோயில்களை எடுப்பித்துத் தக்க சிவத்தொண்டுகள் செய்து, தில்லையில் வாழ்ந்த அந்தணருக்கு அழகிய செல்வம் மிக்க இல்லங்களைக் கட்டி வழங்கி இறுதியில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** வெண்நாவல் மாநகர் - வெண் நாவலைத் தல விருட்சமாகக் கொண்ட திருவானைக்காவில் உள்ள கோயில்; அனுசிதம் - ஏலாதது; வீழவே செய்த - சிதைந்த; தாழவும் தம் வயிற்றில் பிறந்து - நல்ல நேரம் வரும் அளவும் வயிற்றிலிருந்து சிறிது காலம் தாழ்த்திப் பிறந்து. **(எகூ)**

## நீலகண்டப்பாண நாயனார்

80. நேயமிக வருமெருக் கத்தமாம் புலியூரின்
நீலகண்டப் பாண னார்
நீடுபல பதிபணிந் தாலவாய் சேர்ந்துபண்
இயற்றவடி யாரை யேவத்
தூயதிரு ஆலவாயின்முன் கொண்டுசெல நின்றிசைச்
சுருதிக ளியற்ற விண்ணிற்
சுந்தரப் பொற்பலகை தந்திட மொழிந்தருள்
சுரந்துமகிழ் வாய் அகன்று

**மேயஆ ரூர்த்திருக் கோயில்வந் தியாழிசை**
**விளம்ப,வட திசை பணிந்து**
**மேவுசம் பந்தர்சொற் பாடலியாழ் இட்டெழில்**
**விளங்குபெரு மணம் உகந்து**
**மாயனிறை தேடுபொற் சேவடி பராவ,முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** அன்பு மிக வளரும் எருக்கத்தப் புலியூரில் வாழ்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் பல திருத்தலங்களையும் வழிபட்டு, மதுரை சேர்ந்து, இறைவனால் ஏவப்பட்டு யாழில் பண்பாடுவதற்கு அடியார்களால் திருவாலவாய்க் கோயில் முன் கொண்டு செல்லப்பட்டு, நின்றவாறே யாழில் இசைக்க, அவர் அமர்ந்து வாசிப்பதற்கு அசரீரியாக அழகிய பொற்பலகை தருமாறு இறைவன் அருள் சுரந்து பொழிய, அப்பலகையில் இருந்து யாழை எழுப்பிப் பின் மகிழ்வோடு மதுரையிலிருந்து திருவாரூருக்கு வந்து யாழ் வாசிக்க, வடதிசையை வணங்க வந்த திருஞானசம்பந்தர் திருக்கலியாணத்தைக் காணும் பேறு பெற்றுத் திருமாலாகிய பெருந்தெய்வம் தேடும் சிவபெருமான் திருவடிகளைப் போற்றி அவரால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** ஆலவாய் - மதுரைத் திருக்கோயில்; விண்ணில் - அசரீரியால்; மாயன் இறை - திருமாலாகிய தெய்வம். **(அ0)**

## சடைய நாயனார்

81. **சுதிபரவும் முமைதிருப் பணிவிடைக் கன்னியர்கள்**
**கமலிகம லினி வைகறை**
**காலைமலர் கொய்துவரு காலை,தன் றாள்பணிக்**
**காமலர் கொய்தி டச்சென்று;**
**எதிர்கண்ட வர்க்குஅவர்க ளிச்சைகொண் டே,மல**
**ரெடுத்துவர, விதுசெய லறிந்து**
**இனியமல ரனுசித மெனப்புவியி லவதரித்து**
**இன்புற் றிருந்து நம்பாற்**
**சதிர்பெறும் பணிபுரியு மென்று,கண் ணாடிநிழல்**
**தன்னையொளிர் சுந்தர மெனத்**

தானழைக் திடவந்து, பரவைசங் கிலிமணஞ்
சார்ந்தவன் றொண்டர் தம்மை
மதலையென வேபெற்ற சடையனார் தொழுதிடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** நற்கதி பெறுவதற்காக அடியார்களால் போற்றப்படும் உமாதேவியாரின் பணிவிடைக்கு அமைந்த கமலி, கமலினி என்ற கன்னியர் இருவர், விடியற்காலையில் மலர் கொய்து வந்த போது, சிவபெருமானை அர்ச்சிப்பதற்கு மலர்கள் கொய்திடச் சென்றவராய் அவர்களை எதிரே கண்ட சுந்தரரிடம் இச்சை கொண்டு மலர் எடுத்து வர, அச்செயலை அறிந்த பெருமான், இனிமேல் அம்மலர்கள் புனிதம் இழந்தன என்று கூறித் தன் கண்ணாடி நிழலான சுந்தரனையும் அழைத்து அம்மகளிரோடு புவியில் அவதரித்து இன்புற்றிருந்து பின் தம் பால் வருமாறு ஆணையிட, அம்மகளிர் பரவை எனவும் சங்கிலி எனவும் பெயர் பூண்டு உலகில் பிறந்து வளர, சுந்தரர் அவ்விருவரையும் வன்றொண்டர் என்று சிவபெருமானால் அழைக்கப்பட்ட பெயர் பூண்டு மணக்க, அவ்வன்றொண்டரை மகனாராகப் பெற்ற பெருமை உடைய சடையனாரை, வன்றொண்டர் திருமணத்துக்கு முன்னரே வந்து சிவபெருமான் ஆட்கொண்டான்.

**அ.பொ:** கமலி, கமலினி - கமலினியும், அநிந்திதையும்; காமலர் - சோலையில் உள்ள பூக்கள்; அனுசிதம் - தக்கவை அல்ல; சதிர் - சிறப்பு; கண்ணாடி நிழல் - சிவபெருமான் கண்ணாடியில் கண்ட நிழலே வடிவெடுத்த ஆலால சுந்தரர்; மதலை - பற்றுக் கோடாகிய மகன். **(அக)**

## இசைஞானியார்

82. ஒழியாத பெருமையுள சடையனார் காதல்பெற
வோங்குநற் செய்கை யுடனே
உற்றநற் பண்புடைய ராயில்ல றத்தினுக்
குரியநற் றுணை யாயினார்,
அழியாத முப்புரமு மொருநொடியி லெய்தாரை
அன்பினோ டுவந்து பாடி,
ஆனதொரு முதலைவாய்ப் பிள்ளைதனை யன்றழைத்து
ஆற்றினிடை யிட்ட பொருளைக்

குழியார் குளத்தெடுத் தே,பரவை யில்லிட்ட
கோதிலா ரூரர் தம்மைக்,
குணமிகுந் தமிழ்நாடு சைவநெறி தழையவே
குமர னெனவே பயந்த,
மழைமதர் நெடுங்கணிசை ஞானியார் தொழுதிட,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** நீங்காத பெருமை பெற்ற சடையனார் விரும்புமாறு நல்ல செயல்களும் பண்புகளும் உடையவராய் அவர் நடத்திய இல்லறத்துக்கு நல்ல துணையாக விளங்கிய இசைஞானியார், எளிமையில் அழிக்க முடியாத திரிபுரங்களை ஒரே நொடியில் அம்பு எய்து அழித்த சிவபெருமானை அன்போடு விரும்பிப் பாடி, திருப்புக் கொளியூரில் முதலை உண்ட சிறுவனை மீண்டும் உயிரோடு அழைப்பித்து, திருமுதுகுன்றில் மணிமுத்தாற்றில் இட்ட பொன்னைத் திருவாரூர்க் கமலாலயம் என்ற குளத்தில் இருந்து எடுத்துப் பரவையார் இல்லத்தில் சேர்ப்பித்த குற்றமற்ற ஆரூரர் என்ற பெயருடைய சுந்தரரை நற்குணம் மிக்க தமிழ்நாடும் சைவ சமயமும் தழைக்குமாறு மகனாராகப் பெற்று, இறைவனைத் தொழுது அவனால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** குழி ஆர்குளம் - ஆழமான திருவாரூரின் கமலாலயம் என்னும் திருக்குளம். **(அஉ)**

## பரவைநாச்சியார்

83. காலைமலர் கொய்துவரு காலை,மனது இச்சையைக்
கண்டுஉமை களித்திடு மெனக்
கருணைதர வாரூர் உருத்திரக் கணிகையார்
காதலி யெனப் பிறந்து
வேலைவிடம் உறழ்விழிப் பரவையென் றேபெயர்
விளங்கியதி ரூப வதியாய்,
வேற்றொருவர் மால்மனத் தோற்றமில் லாது,முன்
வேண்டி,யா ரூர்க்கோ விலுள்
சோலைப் பசுங்கிளி யெனப்பணிய வரவும்,வன்
தொண்டர்கண் டாசை தீர,ச்
சொற்றமிழ்க் குஇரவிலவன் இல்தூது சென்று,சுப
சோபனஞ் செய்து மகிழ்வாய்

வாலையுமை யாள்பணிக் கோலமிசை வாக,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** காலையில் வழக்கம் போல மலர்களைப் பறித்து வந்தபோது ஒரு நாள் மனத்தில் ஏற்பட்ட விருப்பத்தை அறிந்து உமாதேவி, 'இல்லற இன்பத்தில் திளைத்திடுக' என்று கருணையோடு வரம் தர, திருவாரூரில் உருத்திர கணிகையின் மரபில் பிறந்து, ஆலகால விடம் போன்ற கண்களை உடைய பரவை என்று பெயரிடப்பட்டுப் பேரழகியாய் மற்ற எந்த ஆடவரிடமும் தன் மனம் ஈடுபடுதல் இல்லாது இறைவனை வேண்டத் திருவாரூர்க் கோயிலுக்குள் சோலைப் பசுங்கிளி போன்ற பரவை வர, சுந்தரர் அவளைக் கண்டு பின் அவளை ஆசைதீர மணந்து, அச்சுந்தரரின் தமிழ்ப் பாடலுக்காகச் சிவபெருமான் பரவையின் ஊடலைத் தீர்க்க இரவில் அவள் வீட்டிற்குச் சுந்தரருடைய தூதராய்ச் சென்று நன்மையை உண்டாக்கச் சிலநாள் மகிழ்வாய்க் களித்தபின், உமாதேவிக்குத் தொண்டு செய்யும் திருப்பணியைப் பெறுவதற்கு ஏற்ற வகையில் பரவையார் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார்.

**அ.பொ:** களித்திடும் - விருப்பம் போல மகிழ்வாய் இருங்கள்; காதலி - மரபில் தோன்றியவள்; ஊழ் - ஒத்த; மால் - காம மயக்கம்; சுபசோபனம் - மகிழ்வான நன்மை. **(அங)**

## சங்கிலிநாச்சியார்

84. வெற்றிபெறு கயிலையுமை நற்பணி குறைந்தபின்
மிக்கதிரு வொற்றி யூரில்
வேளாளர் தலைவர்ஞா யிறுகிழான் புதல்வியென
மேதினி விளங்க மகிழ்வாய்ப்
பெற்றதாய் தந்தைதம் சுற்றத்தின் மன்றல்வினை
பேசப் பொறாத வதனாற்
பெம்மான்ப ணிக்கெனக் கன்னிமா டஞ்செய்து
பேதைபணி மேவு நாளிற்
கற்றவன் றொண்டர்வந் துற்றுமின் னாள்மீது
காதல்தீர்த் தருளு மென்னக்
கன்னிமனத் திசையமகி ழின்கீழ்முன் நம்பிமெய்க்
கட்டுரைப்பவு, மொற்றி யூர்
மற்றவர்க ளறிய,மண முற்றபொற் கொடிதொழ,முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை

**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** வெற்றி பெறுவதற்குரிய கயிலையில் உமாதேவிக்குச் செய்து வந்த தொண்டு இடையறவு பட்டபின் மேம்பட்ட திருவொற்றியூரில் ஞாயிறு கிழவர் என்ற வேளாளர் மகளாய் உலகம் விளங்க மகிழ்வாய் வளர்ந்து, பெற்றோரும் மற்றோரும் தன் திருமணம் பற்றிப் பேசிய சொற்களைக் கேட்கச் சகியாமல் சிவபெருமான் திருப்பணிக்கே தன்னை அர்ப்பணித்துக் கன்னி மாடத்தில் தங்கி தனக்குரிய பூமாலை தொடுக்கும் சிவப்பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில், சுந்தரர் திருவொற்றியூருக்கு வந்து சிவபெருமானிடம், 'தமக்குச் சங்கிலியாரிடம் ஏற்பட்ட காதலைத் தீர்த்து அருளுமாறு' வேண்ட, சிவபெருமான் அருளால் சங்கிலியும் சுந்தரரை மணப்பதற்கு இசைய, சுந்தரர் அவளைப் பிரிவதில்லை என்று மகிழ மரத்தடியில் உறுதிமொழி கூற, ஒற்றியூரில் மற்றவர்கள் அறிய சுந்தரரை மணந்த சங்கிலி என்ற பொற்கொடி தொழச் சிலகாலம் கழிந்தபின் சிவபெருமான் அவள் தன் பழைய தொண்டில் ஈடுபடுமாறு ஆட்கொண்டான். **(அச)**

## நாயன்மார்க்குப் பூசை விபரம்
## சித்திரை – வைகாசி

**85.** **செஞ்சொன்மிகு சித்திரைத் திங்கள்பர ணியினாட்**
**சிறுத்தொண்ட ரோகணி தனிற்**
**செல்வமங் கைக்கரசி யாதிரையில் விறன்மிண்டர்**
**சித்திரையி லிசை ஞானியார்**
**தஞ்சமிகு மகுவதியின் மெய்க்குறிப் புத்தொண்டர்**
**சதையமதி னாவரையர் சீர்**
**சார்ந்தவை காசிமூ லத்தினிற் சம்பந்தர்**
**தருபாணர் முருகர் நக்கர்**
**துஞ்சாத சோமாசி மாறரா யிலியந்**
**துணைக்கழற் சிங்கர் பரணி**
**சொற்றபுனர் பூசத்தி னம்பியாண் டாரெழில்**
**தூயநமி நந்தி பூசம்**
**மஞ்சுலவு குன்றையா ரம்பரஞ் சென்றிடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்: சித்திரை மாதம்:** பரணி நட்சத்திரத்தில் சிறுதொண்டர், உரோகணி நட்சத்திரத்தில் மங்கையர்க்கரசி, ஆதிரை நட்சத்திரத்தில் விறல் மிண்டர், சித்திரை நட்சத்திரத்தில் இசை ஞானியார், அசுவதி நட்சத்திரத்தில் மெய்க்குறிப்புத் தொண்டர், சதயம் நட்சத்திரத்தில் திருநாவுக்கரசர் ஆகியோருக்கும்,

**வைகாசி மாதம்:** மூலம் நட்சத்திரத்தில் திருஞானசம்பந்தர், திருநீலக்கண்ட யாழ்ப்பாணர், முருகனார், திருநீலநக்கர் ஆகியோருக்கும் ஆயிலியம் நட்சத்திரத்தில் சோமாசி மாறர், பரணி நட்சத்திரத்தில் கழற் சிங்கர், பூசம் நட்சத்திரத்தில் நந்திநாயனார் ஆகியோருக்கும் பூசை நடைபெறும். **(அரு)**

## ஆனி, ஆடி.

**86.** **ஆனிமதி தன்னிலா யிலியம் புகழ்த்துணைவ**
**ரன்பின்மகம் வாத வூரர்**
**அருள்பெறும் பூரமமர் நீதியா ரேவதியில்**
**ஆர்கலிக் கம்ப ராடி**
**தானிலகு மசுவதியின் மூர்த்தியார் சித்திரை**
**தழைத்த மிழலைக்கு றும்பர்**
**சாற்றுமா திரையினிற் கூற்றரா யிலியந்**
**தனிற்புகழ்ச் சோழர் சோதி**
**ஞானமிகு வன்றொண்டர் நேயமுறை சேரர்கோன்**
**நவில்விசா கத்தி லினிய**
**நண்புபெறு பரவைசங் கிலிநாச்சி யார்கேட்டை**
**நாள்கலிக் காமர் புலியர்**
**வானநா டெய்திமெய்ஞ் ஞானவீ டிலகமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்: ஆனி மாதம்:** ஆயிலியம் நட்சத்திரத்தில் புகழ்த்துணையார், பூரம் நட்சத்திரத்தில் அமர் நீதியார், இரேவதி நட்சத்திரத்தில் கலிக்கம்பர் இவர்களுக்கும்,

**ஆடி மாதம்:** அசுவதி நட்சத்திரத்தில் மூர்த்தியார்; சித்திரை நட்சத்திரத்தில் மிழலைக் குறும்பர்; ஆதிரை நட்சத்திரத்தில் கூற்றுவ நாயனார்; ஆயிலியம் நட்சத்திரத்தில் புகழ்ச் சோழர்; சுவாதி நட்சத்திரத்தில் சுந்தரர், சேரமான் பெருமாள் ஆகியோருக்கும், விசாகம் நட்சத்திரத்தில் பரவையார், சங்கிலியார் இவர்களுக்கும், கேட்டை நட்சத்திரத்தில் கலிக்கம்பர், கோட்புலியார் ஆகியோருக்கும் பூசை நடைபெறும். **(அசா)**

## ஆவணி, புரட்டாசி, ஐப்பசி

87. ஆவணி மதிக்குள்வரு பூசஞ் செருத்துணைவ
ராயிலிய மதிபத்தர் சீர்
ஆனமக நாளிலிளை யான்குடியர் மூலநா
ளார்கலையர் வாணிச்சி யும்
பாவியல் புரட்டாசி யசுபதி யுருத்திரப்
பசுபதி யுரோகணி தனில்
பணியுநாட் போவருத் திராடமே னாதியார்
பகர்சதையம் நரசிங்கர் பேர்
மேவுமைப் பசிமாத வசுபதியின் மூலனார்
மீறுபர ணியின் மாறனார்
மிக்ககார்த் திகையிடங் கழியர்பூ சஞ்சத்தி
மேவுமனு டம்பூச லார்
மாவுலவு மூலநா ளையடிகள் வானுறமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்: ஆவணி மாதம்:** பூசம் நட்சத்திரத்தில் செருத்துணையார்; ஆயிலியம் நட்சத்திரத்தில் அதிபத்தர்; மகம் நட்சத்திரத்தில் இளையான்குடி மாறனார்; மூலம் நட்சத்திரத்தில் குங்கிலியக் கலயர் ஆகியோருக்கும்,

**புரட்டாசி மாதம்:** அசுபதி நட்சத்திரத்தில் உருத்திர பசுபதியார்; உரோகணி நட்சத்திரத்தில் திருநாளைப் போவார்; உத்தராடம் நட்சத்திரத்தில் ஏனாதி நாதனார்; சதயம் நட்சத்திரத்தில் நரசிங்க முனையரையர் ஆகியோருக்கும்,

**ஐப்பசி மாதம்:** அசுவதி நட்சத்திரத்தில் திருமூல நாயனார்; பரணி நட்சத்திரத்தில் நின்ற சீர் நெடுமாற நாயனார்; கார்த்திகை நட்சத்திரத்தில் இடங்கழியார்; பூசம் நட்சத்திரத்தில் சத்தியார் ஆகியோருக்கும் பூசை நடைபெறும்.

**குறிப்பு:** பிட்டு வாணிச்சியாகிய வந்தியின் வரலாறு பெரியபுராணத்தில் இடம் பெறவில்லை. **(அஎ)**

## கார்த்திகை, மார்கழி

88. கார்த்திகை யின்வரு திருக்கார்த்திகை யினாளிற்
கணம்புல்ல ருத்திர மதிற்
காட்டுமெய்ப் பொருணாயர் அத்தமா னாயர்சொற்
கனிமூல மூர்க்கர் வாய்மை

பூர்த்திபெறு பூராட மேற்றிடு சிறப்புலியர்
போதமார் கழிமதி யினிற்
பொங்குமா திரையினார் டில்லையந் தணர்சடையர்
புகழ்பரவு சோதி நாளின்
சீர்த்திகழ் சிறந்தகஞ் சாறனார் ஞானஞ்
செழித்தபூ ராட மதனிற்
செய்யசாக் கியர்தருண முற்றவுத் திராடத்
தினத்திலியற் பகைஇ ரேவதி
வார்த்தைமிகும் வாயிலா ரேற்றசொர்க் கம்பெறமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்: கார்த்திகை மாதம்:** கார்த்திகை நட்சத்திரத்தில் கணம்புல்லர்; உத்தரம் நட்சத்திரத்தில் மெய்ப்பொருள் நாயனார்; அத்தம் நட்சத்திரத்தில் ஆனாயர்; மூலம் நட்சத்திரத்தில் மூர்க்கர்; பூராடம் நட்சத்திரத்தில் சிறப்புலியார் ஆகியோருக்கும்,

**மார்கழி மாதம்:** ஆதிரை நட்சத்திரத்தில் தில்லைவாழ் அந்தணர், சடையனார் என்போருக்கும், சுவாதி நட்சத்திரத்தில் மானக்கஞ்சாறர்; பூராடம் நட்சத்திரத்தில் சாக்கியர்; உத்தராடம் நட்சத்திரத்தில் இயற்பகையார்; இரேவதி நட்சத்திரத்தில் வாயிலார் ஆகியோருக்கும் பூசை நடைபெறும்.

**குறிப்பு:** சொர்க்கம் பெற என்பது மோக்கம் பெற என்றிருக்க வேண்டும். அடியார்கள் கீழ்நிலையாகிய சொர்க்கத்தைப் பெற விரும்பியவரல்லர். **(அஅ)**

## தை, மாசி

89. கருணைபெறு தைமாத மிருகசீ ரிடமதிற்
கண்ணப்ப ராதிரை யெழிற்
காட்டுமரி வாட்டாய ருத்திராட நாளிற்
கனிந்ததண் டீசர் நீடுந்
தருணமே வியவிசா கத்தினிற் புகழ்பெற்ற
தக்கதிரு நீல கண்டர்
சதையமதி லப்பூதி ரேவதியி லேயர்கோன்
சாற்றுமா சித்திங்க ளிற்
பொருணய முலாவுமத் தந்தன்னி லெறிபத்தர்
பூராட நாட்காரி யார்

பொற்புலவு சதையத்தின் மிக்கசெங் கட்சோழர்
பூவுல ககன்று வாணாள்
வருணநிறை ககனநா டுரியகுடி யாகமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்: தை மாதம்:** மிருகசீரிடம் நட்சத்திரத்தில் கண்ணப்பர்; ஆதிரை நட்சத்திரத்தில் அரிவாட்டாயர்; உத்தரம் நட்சத்திரத்தில் சண்டீசுவர நாயனார்; விசாகம் நட்சத்திரத்தில் திருநீலகண்டர்; சதயம் நட்சத்திரத்தில் அப்பூதி அடிகள்; இரேவதி நட்சத்திரத்தில் ஏயர்கோன் கலிக்காமர் ஆகியோருக்கும்,

**மாசி மாதம்:** அத்தம் நட்சத்திரத்தில் எறிபத்தர்; பூராடம் நட்சத்திரத்தில் காரியர்; சதயம் நட்சத்திரத்தில் செங்கட் சோழர் ஆகியோருக்கும் பூசை நடைபெறும்.

**(அகூ)**

## பங்குனி

**90.** பங்குனித் திங்கள்ரோ கணிதனிற் சிவனேசர்
பரவுதிரு வாதிரை மிகும்
பணிமருவு கணநாதர் பூசமுனை யடுவர்சொற்
பகர்சோதி நாளம்மை யார்
தங்குமனு.டந்தண்டி யடிகண்மூ லத்தில்
தழைத்திடு குலச்சிறையர் சீர்
தருபத்தி யொடுபணிவர் பரமனைப் பாடுவார்
தஞ்சமிகு சித்தம் வைத்தோர்
செங்கண்மால் பணியுமா ரூரிற்பி றந்தார்கள்
திருமேனி தீண்டு மடியார்
செம்மைதரு முழுநீறு பூசுமுனி வோர்பலவர்
செய்யவடி சார்ந்த வடியார்
வெங்கண மிகுந்திருப் பொன்பதி விளங்கிடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்: பங்குனி மாதம்:** உரோகணி நட்சத்திரத்தில் நேசனார்; திருவாதிரை நட்சத்திரத்தில் கணநாதர்; பூசம் நட்சத்திரத்தில் முனையடுவார்; சுவாதி நட்சத்திரத்தில் காரைக்கால் அம்மையார், அனுடம் நட்சத்திரத்தில் தண்டி அடிகள்; மூலம் நட்சத்திரத்தில் குலச்சிறையார் ஆகியோருக்கும்

**வைகாசி மாதம்:** புனர்பூசம் நட்சத்திரத்தில் நம்பியாண்டார் நம்பி, ஆவணி மாதம் மூலம் நட்சத்திரத்தில் பிட்டு வாணிச்சி; வைகாசி மாதம் பூசம் நட்சத்திரத்தில் சேக்கிழார்; ஆடி மாதம் விசாகம் நட்சத்திரத்தில் பரவையார், சங்கிலியார்; ஆனி மாதம் மகம் நட்சத்திரத்தில் மாணிக்க வாசகம் ஆகியோருக்கும் பூசை நடைபெறும்.

**அ.பொ:** பலவர் - அநேகர். **(௯0)**

## திருக்கூட்டம்

91. **மிக்கதென் மதுரைதனி லறுபத்து நான்குதிரு**
**விளையாடல் செய்து காஞ்சி**
**மேவுநாற் பத்தியெண் ணாயிரவ ராயருள்**
**மிகுந்தகா ரோணந் தனில்**
**தக்கநா லாயிரவ ராய்த்தில்லை மாநகர்**
**தழைக்குமூ வாயிரவ ராய்ச்**
**சாற்றுமா ரூரிலறு நூற்றொருவ ராயுண்மை**
**சாரும்பெ ருந்துறை யினிற்**
**பக்குவ மிகுந்தமுந் நூற்றொருவர் காய்வனம்**
**பயில்வீழி மிழலை நகரிற்**
**பண்புபெறு நூற்றொருவ ராய்மிகுஞ் சிவதையிற்**
**பன்னிருவ ராயனு தின**
**மைக்கடல் பெறும்புவியி லென்றுந் துதிப்பமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** சிவபெருமான் மதுரையில் 64 திருவிளையாடல் செய்தார், காஞ்சியில் நாற்பத்தெண்ணாயிரவர், காரோணத்தில் நாலாயிரவர் அடியார், தில்லையில் மூவாயிரவர் அந்தணர், ஆரூரில் அறுநூற்றொருவர், பெருந்துறையில் முந்நூற்றொருவர், வீழி மிழலையில் நூற்றொருவர். இரத்தினகிரியில் பன்னிருவர் அடியார்கள். **(௯௧)**

## நைமிசாரணியம்

92. **அங்கிரர் வசிட்டர்சவு னகர்முனிவ ரனைவரும்**
**அவனியிற் றவமி யற்ற**
**வலரவ னருட்குசையி னாழிசென் றமர்நைமி**
**சாரணிய முற்ற சூதர்**

தங்கநற் றவிசுதந் துயாவரு மகிழ்ந்திடச்
சவுனகன் வாட்போக்கி யின்
தானமான் மியவளஞ் சாற்றுமென வண்ணல்சீர்
தருசைவ மாம் புராணத்
துங்கமுறு கதையெந்தை முருகர்பாற் கூறவச்
சொல்லைநந் திக்கு ரைப்பத்
தூயமொழி யுஞ்சனற் குமாரர்க் கியம்புசெஞ்
சொல்வியா தரு,மெ மக்கு
வங்கணந் தருமாற்ற மென்னமகிழ் முனிவோர்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** அங்கிரர், வசிட்டர், சவுனகர் முதலிய முனிவர் பிரமன் தருப்பையால் செய்து சுழற்றி ஓடவிட்ட சக்கரம் தங்கிய இடமாகிய நைமிசாரணியத்துக்குப் புராணங்களை விரித்துரைத்த சூத முனிவர் வந்தபோது, அவரை உயர்ந்த ஆசனத்தில் அமர்த்தி சவுனக முனிவர் மூலம் வாட்போக்கியின் புராணவரலாற்றைக் கூறுமாறு சூத முனிவரை வேண்ட, சைவ புராணத்தில் உள்ளதும் சிவபெருமான் முருகனுக்கும், முருகன் நந்தி தேவருக்கும், அவர் சனற்குமாரருக்கும், அவர் வியாதருக்கும், வியாதர் சூத முனிவருக்கும் உரைத்ததும் ஆகிய வாட்போக்கியாகிய இரத்தினகிரி வரலாற்றைச் சூத முனிவர் ஏனைய முனிவருக்கு உரைப்பாராயினார். (கூஉ)

## திருமாணிக்கமலையினுற்பத்தி

93. பொன்குவட் டினின்மூவர் விண்ணில னைவோரும்
பொருந்தியுறை கின்ற காலைப்
பொற்புடன் வாயுஉரகர் வந்துநகை நாரதர்
புரிந்தமர் விளைத்து மேரைத்
தென்புரகன் முடிமீத டக்கவங் கூழ்பிசகு
செய்யமோ தியும் விடாதாற்
றேவர்சொற் குரகர்சற் றயரவுங் கூழ்பிலஞ்
சென்றைந்து முடிகள் வீழ்த்த
நன்குலவு தென்பாண்டி நாட்டில்நீ லந்தொண்டை
நாட்டிலரு ணங்கொங்கு நன்
னாட்டிற் சுவேதம்நீர் நாட்டின்மர கதமெழில்
நவிற்றுபொன் னித்தென் கரை

மன்குலவு நிம்பநிழல் கண்டுபனி தொண்டர்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மேருமலையில் மும்மூர்த்திகளும் ஏனைய தேவரும் தங்கியிருந்த நேரத்தில் நாதரமுனிவர் வாயுவுக்கும் ஆதிசேடனுக்கும் ஆற்றல் பற்றிய போட்டி உண்டாக்கிப் போர்விளைக்கவே ஆதிசேடன் தன் ஆயிரம் படங்களாலும், மேருவின் உச்சியை மூடிக்கொள்ள, வாயு வேகமாக வீசியதால், ஆதிசேடன் சற்று அயர்ந்த நேரத்தில் வாயுவால் பெயர்க்கப்பட்ட மேருவின் ஐந்து சிகரங்கள் முறையே தென்பாண்டி நாட்டில் நீலமலை, தொண்டை நாட்டில் அருணமலை, கொங்கு நாட்டில் சுவேத மலை, நீர் நாட்டில் பரந்த மலை, காவிரித் தென் கரையில் மாணிக்கமலை, என்ற பெயர்களுடன் வந்து தங்கின. (கூசு)

## மாணிக்கமலைச்சிறப்பின்சீர்

94. உன்னுநால் விசைகொண் டெழுந்துபூ தலமமர்ந்து
உயரமீ ரெட்டகல மூன்று
யோசனை யிரத்தின மலைக்கொழுந் தாய்நிம்ப
யோங்கியெண் டீர்த்த மிக்கத்
தென்னுலவு மங்கிதிசை மின்னுபஞ் சாக்கரத்
தீர்த்தமொடு தெய்வ தீர்த்தஞ்
செப்புபஞ். சாக்கரக் குகையுமுனி வோர்தவஞ்
செய்கையுந் துய்ய புலியும்
பன்னக மிகும்பல விலங்கும்வெந் தொழிலுருப்
பான்மையுங் காக மணுகாப்
பண்பும்விண் டருவெனத் தண்டலை தடாகமும்
பயில்வள மிலங்க வுலகின்
மன்னுபெரி யோர்திருப் பொன்னடி பணிந்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** மாணிக்கமலை உயரம் எட்டு யோசனை, அகலம் மூன்று யோசனை, உடையதாய் வேப்ப மரங்கள் மிக வளர்ந்து வடகிழக்கில் ஒளிமிக்க பஞ்சாக்கர தீர்த்தம், தெய்வ தீர்த்தம், பஞ்சாக்கரக் குகை, இவற்றைக் கொண்டு, முனிவர் தவம் செய்யும் இருப்பிடங்களையும், புலி, பாம்பு, பலவகை விலங்குகள் ஆகியவை நடமாடும் இடங்களையும் உடையதாய், காகம் அணுகப் பெறாததாய் கற்பக

மரம் போன்ற சோலையும், குணமும் உடையதாய் அடியார்கள் வந்து அங்குள்ள இராசலிங்க பெருமானை வணங்கும் வாய்ப்பு உடையதாய் விளங்குவது இரத்தின கிரி என்னும் மாணிக்கமலை. (௯௪)

## ஆரியமன்னர் பூசனை

95. **செஞ்சொலுயர் கங்கைமண் டலமுழுது மநுநெறி**
**செலுத்துமா ரியமன் னவன்**
**சேடன்ப ணிந்துமுடி மணிவிளக் கிடுமணிச்**
**சிந்தையொடு வேண்டி வந்து**
**மிஞ்சுமவி டேகமுடி மேல்நிரம் பச்செய்ய**
**வேண்டுமென் றினிய தண்கா**
**வேரிநதி நீராயி ரங்கடங் கொண்டுவர**
**மிக்கபொசி வாசி காட்டத்**
**தஞ்சம் பொறாமல்வா ளுருவிமுடி மோதிடத்**
**தான்சுரும் பார்குழ லுமைத்**
**தையலொடு தோன்றிநின் கிளைஞரென் சன்னிதி**
**தனிற்றினம் பொன்னி நதியின்**
**மஞ்சனப் பணிவிடைகள் புரிகவென் றாரியன்முன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** கங்கை மண்டலம் முழுதும் செங்கோல் செலுத்திய ஆரிய மன்னவன் ஒருவன் ஆதி சேடனைப் பணிந்து, அவன் முடிமணியால் ஆலயத்தில் விளக்கமைக்க வேண்டும் என்ற விருப்போடு இரத்தினகிரி வந்து அங்குள்ள இராசலிங்சேகனுக்கு அபிடேகம் நிறைவாகச் செய்யக் காவிரி நீரை ஆயிரம் குடங்களில் கொண்டு வரச்செய்து அபிடேகம் செய்ய, அந்நீர் போதாமல் இறைவன் ஈரமின்றி உலர்ந்து காட்ட அது கண்டு வருந்திய மன்னன் வாளை உருவித் தன் உயிரை முடித்துக் கொள்ள முற்பட, இறைவன் இறைவியோடு காட்சியளித்து அவன் மரபினர் நாள்தோறும் தனக்குக் காவிரி நீரினால் அபிடேகம் செய்யும் பணிவிடையைப் புரியுமாறு வரமளித்தான்.

**அ.பொ:** கடம் - குடம். (௯௫)

## ஆதிசேடன் பூசைசெய்தது

96. **பூசலிடு சேடன்முன் வானவர்கள் சொலவாயு**
**பூசித்து மாச கன்ற**

**புனிதநெறி மகதியாழ் முனிபுகல வகலிடம்**
**போந்துமா தலம னேகங்**
**காசினி புகழ்ந்துகோ கன்னமுத லந்தங்**
**கடம்பமா நகரி றைஞ்சிக்**
**காவிரியி னீர்படிந் தேகியத் திரிமுதற்**
**கற்றநற் றவமுனிவர் பா**
**ஆசையொடு கண்டம்மை கோவிறென் பாற்சுனை**
**யமைத்துநீர் மூழ்கி வெய்யோன்**
**அப்பெயர்க் கேணிநூற் றெட்டெனுங் கும்பநீர்**
**அபிடேக மதுசெய் துமே**
**மாசுணஞ் சிரமணித் தீபம்வைத் தேற்றிடமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** வாயுவோடு பகைமை கொண்ட ஆதிசேடன், வாயுவால் பூசிக்கப்பட்ட நாரதன் கூறக் கோகர்ணம், கடம்ப வனம் முதலிய திருத்தலங்களைச் சேவித்துக் காவிரியில் நீராடிச் சென்று அத்திரி முதலிய மாமுனிவரை வணங்கி, அம்பிகையின் கோயிலின் தென்பகுதியில் சுனை ஒன்றை அமைத்து அதன் நீரில் மூழ்கி, சூரியன் பெயரால் கேணி அமைத்து, அதன் நீரை *108* குடங்களில் கொணர்ந்து இரத்தினகிரி இறைவனுக்கு அபிடேகம் செய்து, தன் முடிமணிகளைத் தீபங்களாக அமைத்து அத்திருத்தல இராசலிங்கேசனை வழிபட்டு அவனால் ஆட்கொள்ளப்பட்டான். **(கூசா)**

## தேவேந்திரன் சாபந்தீர்ந்தது

97. **தேசுறக் கடல்கடைந் தமுதினிற் பலவகை**
**செனிப்பவக லியைமு குந்தன்**
**செய்கோ தமனுக் களிப்பநீர் மூழ்கித்**
**திறங்கொளா தமரர் கோன்மா**
**லாசுகொண் டேவரிக் குயிலெனக் கூவிமுனி**
**யகலவக லியை வஞ்சமா**
**லாகப்பு ணர்ந்தமுனி சபித்தி டக்குரு**
**வறிந்துதல மகிமை புகல**
**நேசமொடு சென்றிந்திர தீரமொன் றுற்றுஉச்சி**
**நீள்தேவ தீர்த்த மூழ்கி**
**நிம்பநிழல் கொண்டதற் கீசான மிக்கசிவ**
**லிங்கஞ்செய் தர்ச்சனை தவம்**

வாசவன் செய்துமுனி சாபமது தீரமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** பாற்கடல் கடையப்பட்டபோது அதிலிருந்து பல பொருள்கள் வெளிப்பட, அங்ஙனம் வெளிப்பட்ட அகலிகையைத் திருமால் கோதம முனிவனுக்கு அளிப்ப, அகலிகை தனக்கு உரியவள் அல்லள் என்று தண்ணீரில் முழுகி ஒரு முழுக்குப் போட்டு அவளை மறக்க வேண்டிய இந்திரன், காக்கை போலக் கூவி முனிவன் அகலச் செய்து, அகலிகையை வஞ்சனையாகக் கூடிக் கோதம முனிவனால் சபிக்கப்பட்ட இந்திரன், குருவாகிய வியாழ பகவான் கூறியபடி, இரத்தினகிரியை அடைந்து, இந்திர தீர்த்தம் என்ற குளம் உண்டாக்கி, அங்கிருந்த தேவதீர்த்தத்தில் முழுகி, வேப்பமர நிழலில் சிவலிங்கம் அமைத்து அருச்சனை செய்யக் கோதம முனிவன் சாபம் தீருமாறு முன்வந்து இந்திரனை இரத்தினகிரி இராசலிங்கேசன் ஆட்கொண்டான். **(கூஎ)**

## இடி பூசனை புரிந்தது

98. திரமுற்ற வுதயமால் வரையிலுயர் மந்தேகத்
தீவினி லரக்கர் காணாச்
செருவினைத் திரவிதன் றேர்விட் டிறங்கியமர்
செய்திளைப்பு அமரர் கண்டும்
பரமர்அர்ச் சனையினிலுன் றீதகலு மெனவுமியாழ்ப்
பண்முனி வரக்கனலி சொற்
பகரலிங் கத்தினி லிரத்னவரை யார்கழற்
பணியநின் பின்னவ னெனு
முரைகொண் டகத்தினில் நினைப்பமுன் னுருமுவந்
துற்றுமிவ் வுரைத ரச்சென்
றுயர்சித்தி ரைத்திங்கள் பூரணையி லத்தனா
ளோங்கிரவி தீர மூழ்கி
வருமடங் கற்பணிந் திரவிபகை தீரமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** உதய மலையில் சூரியன் தோன்றிட மந்தேகடர் என்ற அசுரர் அவனை எதிர்க்கச் சூரியன் அவர்களோடு போரிட்டு இளைப்ப, அதனைத் தேவர் கண்டு நாரத முனிவர் மூலம், சிவபெருமானை வழிபடுவதால் அவன் இளைப்புத் தீரும் என்று தெரிவிக்க, அதற்கேற்பச் சூரியன் வந்து இரத்தினகிரி

இராசலிங்கேசனைப் பணிந்து, தன் பின்னவனாகிய இடியினைச் சூரியன் நினைப்ப, இடி சித்திரை மாதம் அத்த நட்சத்திரம் கூடிய பௌர்ணமியில் இரத்தினகிரியில் அமைந்திருந்த சூரியகுளத்தில் மூழ்கி, காலகாலனாகிய சிவபெருமானைப் பணிந்து சூரியனுடைய பகைவர்கள் ஒயுமாறு வேண்ட, அவ்வாறே, இரத்தினகிரி இராசலிங்கேசன் இடிக்கு அருள்புரிந்தான். **(௯அ)**

## அகத்தியர் பூசனை

**99.** **கடல்சூழும் நெடியவட வரையினுக் குத்தரதிசை**
**காட்டிவளர் புட்ப பத்தரைக்**
**கரையிடத் தறிஞரொடு குறுமுனிவ ருரையும்நாட்**
**கண்டுநா ரதரிரு வரும்**
**விடையினோர் பதிபல பணிந்திமைய முறவுமுனம்**
**வெருவும் பிரேத மோட்ச**
**மேவுநிம் பத்துறை பணிந்துதைய புரியென**
**விளக்கிநெடு முடியின் மேல்பாற்**
**தடமொன்ற மைத்துநற் சுதையமுதின் மூழ்கியெழில்**
**சந்நிதி புகுந்துச்சி யில்**
**தக்கவர்ச் சனைபுரியும் நட்பில்வண் டார்குழல்**
**தையலுடன் வெள்ளை விடைமேல்**
**மடலவிழ்க் கலசமுனி சொக்கரென் றேத்தமுன்**
**வந்து,அடிமை கொண்ட கயிலை**
**வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்**
**மாணிக்க மலை நாதனே!**

**பொழிப்:** இமயமலைக்கு வடக்கில் உள்ள காட்டில் வாழ்ந்த புட்ப பத்தரை, முனிவர் பலரோடு அகத்தியர் சந்தித்து, நாரதரோடு கூடி இருவராய் இவ்வுலகில் உள்ள திருப்பதிகள் பலவும் பணிந்து, பின் இமயமலைக்குத் திரும்பி வரலாம் என்று திட்டமிட்டு, தென்திசை நோக்கி வந்து பிணங்களும் வீடு பேறடையும் வேப்பமரத் துறையை வணங்கி, உதயமலை போல விளங்கும் மலையின் உச்சியின் மேற்புறம் குளம் ஒன்று அமைத்து, அக்குளத்தின் அமுதம் போன்ற நீரில் மூழ்கிச் சந்நிதி புகுந்து இராசலிங்கேசனை அர்ச்சனை செய்து சான்றோர் போற்ற, வண்டு பொருந்திய கூந்தலை உடைய உமாதேவியோடு சிவபெருமான் அகத்தியரை ஆட்கொண்டான். **(௯௯)**

## உரோமசமுனிவர் அர்ச்சனை

**100.** **சலதிநெடு வுலகின்மனு நெறியிலெண் கோடிபொன்**
**தருமங்க ளீட்டி வாழுஞ்**

சமரவே லரசனொரு தூர்த்தனுற வாய்நெறி
தளர்ந்துலோ காயத மதக்
கல்வியின் சுகமுற் றறம்பாவ மிலையெனக்
காலங் கழிப்ப மறலிக்
கருதியிரு பத்தியெண் கோடிநர கிற்சென்று
கழுகாய லைந்துஇமை யமீது
இலகுதவ ரோமச ரிடஞ்சென்று ஞானமுற்,
றெப்பதி பணிந்து பொன்னி
யெய்தமலை கண்டுபுண் ணியகங்கை யிற்படிந்
தெழில்ரூப மாக முனிவர்
மலரடி பணிந்தரச னுலகியல் புரந்திடமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** இந்நெடு உலகில் எட்டுக் கோடிப் பொன்னைத் தருமங்கள் செய்து நாடு ஆண்ட போரில் வேல் ஏந்தி வெற்றி கண்ட அரசன் ஒருவன், தீ வினையினால் கீழ்மகன் ஒருவன் நட்புக் கொண்டு உலோகாயத மதத்தைப் பின்பற்றி, அறமும் இல்லை பாவமும் இல்லை என்று விருப்பப்படி வாழ்ந்து காலம் கழிக்க, அவன் இறந்ததும் இயமன் ஆணைப்படி *28* கோடி நரகில் அவன் பலகாலம் கழுகாய் அலைந்து திரிந்து பின் இமயமலைக்கு வந்து உரோமச முனிவரை அடைந்து, அவரிடம் ஞானம் பெற்றுப் பல பதிகளையும் பணிந்து காவிரிக் கரையிலுள்ள இரத்தினகிரி மலையை அடைய, அங்குள்ள புண்ணிய கங்கை என்ற குளத்தில் முழுகி, முனிவர்களை வணங்கி, உலகியலில் நல்வாழ்வு வாழ இராசலிங்கேசன் அருள் புரிந்தான். **(௧00)**

## வாயுபூசனை செய்தது

101. அண்டர்மொழி யுட்கொண்ட சண்டமா ருதவேந்தர்
அவனியி லிசைத்து பொன்னி
யாற்றில்நீ ராடிவந் தேற்றகீழ் பாற்பாறை
யதுதன்னி லங்கை வயிரத்
தண்டமதி னாற்கேணி கண்டுபுனல் மூழ்கியொளிர்
சயிலம்வல முற்று மேற்பாற்
சந்நிதி பணிந்துபல யருவநற் றவநெறி
தழைப்பவெள் விடையின் மீது
துண்டமதி முடிநீல கண்டமழு மானிடத்
தோகையொடு முன்பு தோன்றித்

தோத்திரஞ் செயமாசு தீர்த்துநின் வடிவந்
துலங்கமுன் சுனை படிந்த
மண்டலத் தோர்க்கினிமை யுண்டென மொழிந்துமுன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** வாயு பகவான் காவிரியாற்றில் நீராடிக் கிழக்கிலுள்ள பாறையில் தன் கைத்தண்டினால் பாறையை உடைத்துக் கேணி உண்டாக்கி, அந்நீரில் மூழ்கி இரத்தினகிரியை வலம் வந்து, மேற்புறச் சந்நிதியில் வந்து வணங்கிப் பலகாலம் தவம் செய்யச் சிவபெருமான் வாயுதேவனுக்கு உமாதேவியோடு வந்து அருள் செய்து, அவன் அமைத்த கேணி நீரில் நீராடியவர்களுக்கு நன்மை உண்டாக அருள் செய்தார். **(௧0௧)**

## ஆனாயர் பூசனை புரிந்தது

102. செய்க்கழனி சூழ்குழித் தண்டலை நகர்க்குடிமை
சேர்ந்தகோ பால மரபில்
திகழாய ரானிரைகள் மேய்ப்பர்நா டோறுமே
திருமலைச் சார்பி லொருநாள்
மெய்க்கருணை மலைமீது சென்றண்ண லைக்கண்டு
மேவுமான் பால்விருப் பால்
வேண்டியவி டேகஞ்செய் நாள்பலவி லொருநாள்
மிகுந்திடும் பால்க றந்து
கைக்கடந் தன்னையோர் பால்வைத்தி டக்கருங்
காகங் கவிழ்ப்ப வப்பால்
கண்கலுழ்ந் துயிர்விடுப் போமெனவு மிம்மலைக்
காட்சிநம் முருவ மென்றும்
மைக்காக மணுகாத வழல்புரிந் தாயர்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** இடையர் மரபில் ஊதித்த ஆனாயர் ஒருவர் மலையில் மாடு மேய்க்கும் போது, ஒரு நாள் மலை மீது இருந்த இராசலிங்கேசனைத் தரிசித்து அன்று முதல் அவருக்குப் பசுப்பால் அபிடேகம் செய்ய, ஒரு நாள் அவர் வைத்திருந்த பாற்குடத்தைக் கருங்காகம் ஒன்று கவிழ்ப்ப, இறைவனுக்குப் பால் அபிடேகம் தடைபட, உயிர் வாழ விரும்பாமல் அந்த ஆனாயர் உயிர்விடத் துணிய, இறைவன்

அவர்முன் காட்சி தந்து இம்மலையே நம்முடைய வடிவம்தான் எனவும், இனி இம்மலை மீது காகம் அணுகாது எனவும் தெரிவித்து அவரை ஆட்கொண்டார்.
(க0உ)

## வயிரப்பெருமாள் பணிவிடை

103. சூலவுதமி ழுயர்தொண்டை நாட்டினிற் கச்சிநகர்
கூர்ந்திடுந் தந்து வாயர்
குலமதிற் றோன்றியே தன்னொடு பிறந்திடுங்
கோதைசெல் வத்துரி மையா
விலகுபுகழ் பெறுமகவி லாததுயர் கொண்டதால்
இனியசேய் பெற வேண்டிய
யிதயமதி லுற்றுமவ ளெழில்செல்வ னீன்றதா
லெண்ணமுறு படி முடித்த
தலைவரென வந்துமலை மேற்பாங்கர் சந்நிதி
தனக்குமுன் னின்று வாளில்
தன்றலை துணித்திடுஞ் சிந்தைகண் டன்புடன்
தன்பரி கலங்கொ டுத்தே
மலைகாவல் தந்துவயி ரப்பெயர்ப் பெருமாள்முன்
வந்து,அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராசலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே!

**பொழிப்:** தொண்டை நாட்டினில் காஞ்சிபுரத்தில் தந்துவாயர் மரபினில் தோன்றித் தன் உடன் பிறந்த சகோதரி மகப்பேறில்லாமல் இருப்பது கண்டு வருந்தி அவளுக்கு மகப்பேறு உண்டாயின் தான் தன் உயிரையே காணிக்கையாகத் தருவதாக மனத்தில் உறுதி செய்து, தன் சகோதரிக்கு மகப்பேறு ஏற்பட்ட அளவில் இரத்தினிகிரி மலையின் மேற்புற சந்நிதி முன் நின்று வாளினால் வயிரப்பெருமான் என்ற அடியவர் தம் தலையை வெட்டிக் கொள்ள முடிவு செய்த அளவில், சிவபெருமான் காட்சியளித்து அவர் வாளைப் போக்கித் தம் பிரசாதத்தை அவருக்கு வழங்கிய காரணத்தால் இரத்தினகிரி வாட்போக்கி என்ற பெயர் பெற்றது. (க0ங)

திருத்தொண்டர் சதகம் முற்றிற்று.

# கயிலாசநாதர் சதகம்

இந்நூல் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் சேலத்தில் வாழ்ந்த சிதம்பரப் பிள்ளையவர்களால் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த இராசீபுரத்தில் எழுந்தருளியிருக்கும், கயிலையங் கிரியில் விரும்பித் தங்கியிருக்கும் சிவபெருமான் பெயரில், 'கயிலாசாநாதர் சதகம்' என்ற பெயரில் பாடப்பட்டது. சதகம் என்பது நூறுபாடல்களைக் கொண்ட சிறு பிரபந்தம். அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப் பொருள்களுள் எதனைப் பற்றியும் சதகம் அமையலாம்.

இந்தச் சதகத்தின் ஒவ்வொரு பாடலும் 'கங்கைபுனை ஈசனே' மங்கைமகிழ் நேசனே! கயிலை யங்கிரி வாசனே!' என்று நிறைவு பெறுவதால் கயிலாச நாதர் சதகம் எனப் பெயர் பெற்றது. இது, பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. இவ்வாசிரியர் உலகியல் அறிவு, சோதிட அறிவு, உறுப்பு நூல் அறிவு முதலியன நிரம்பப் பெற்றவர். சகுன சாத்திரம் முதலியவற்றில் வல்லவர்.

விநாயகப் பெருமான் காப்பு உரைத்துக் கடவுள் வாழ்த்தோடு தொடங்கும் இந்நூல், வாழ்த்தோடு *101* பாடல்களை உடையது. இச்சதகம் கலியுக ஆண்டு *4932*-இல் பாடப்பட்டதாக இதன் *100*-ஆம் பாடல் கூறுகிறது. இவ்வாசிரியர் வீர சைவ மரபினைச் சார்ந்தவர் என்பது இதன் *23*-ஆம் பாடலால் புலப்படுகிறது.

# கயிலாசநாதர் சதகம்

## காப்பு
## நேரிசை வெண்பா

**சீரார் கயிலாச தேவன்மிசை யான்சதகம்**
**பாராரும் பைந்தமிழாற் பாடவே - ஏராரு**
**மிந்துநதிச் செஞ்சடிலத் தெந்தைதரு மைந்துகரக்**
**கந்தமதத் தந்திமுகன் காப்பு.**

***பொழிப்புரை:*** இந்தக் கயிலாச நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட சதகத்தை நான் இனிய தமிழால் பாட, சந்திர சடாதரனும், கங்காதரனும் ஆகிய சிவபெருமான் தரும் ஐந்து கரத்து ஆனைமுகன் காப்பாக அமைவானாக.

***அருஞ்சொற்பொருள்:*** பார் - உலகம்; ஏர் - அழகு; இந்து - சந்திரன்; நதி-கங்கை; சடிலம் - சடைமுடி; கந்தம் - வாசனை; தந்தி - தந்தங்கள் உடைய யானை.

## கடவுள் வாழ்த்து
### பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

**104.** **சீர்மேவு திங்களணி தேவனே! வண்மைபெறு**
**தில்லை வளர்நட ராசனே!**
**செங்கண்மா லயனுநின் னடிமுடிகள் காணாமல்**
**தேடிய மஹா தேவனே!**
**தார்மேவு பொங்கர வணிந்தசிவ சம்புவே!**
**சங்கரா! கங்கா தரா!**
**தயாபர! விநோதமெய்ஞ் ஞானச் சொரூபனே!**
**சண்முகனை யீன்ற கோவே!**
**ஏர்மேவு முப்பத்து முக்கோடி தேவர்கள்**
**இறைஞ்சிடு மலர்ப் பாதனே!**
**எழின்மிகு கரத்தினின் மான்மழு தரித்தவோ**
**ரெந்தையே! யெனையா ளுவாய்**
**கார்மேவு சோலையோடு சங்கமா நதிசூழ்ந்த**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** கடவுள் வாழ்த்து சிவபெருமானைச் சந்திர சேகரன், நடராஜன், அடிமுடிக் காணப் பெறாதவன், சர்ப்பாபரணன், கங்காதரன், ஞான சொரூபன், முருகன் தாதை, மான்மழு தரித்தவன், எல்லாத் தேவரும் போற்றுபவன், சோலைகள் சூழ்ந்து சங்க நதியால் வளம் பெறும் இராசீபுரத்திலுள்ள அம்மையப்பனாம் கயிலாச நாதன் என்று போற்றுகிறது.

**அ.பொ:** திங்கள் - சந்திரன்; முப்பத்து முக்கோடி- *33* வரிசை, ஆதித்தர் - *12*-பேர், உருத்திரர் - *11*-பேர், வசுக்கள் - *8* பேர், அசுவினி தேவர் - இருவர், ஆக. *12+11+4+8+2 = 33* வரிசை; இராசம் - இராசீபுரம். **(க)**

## நூல்

### செய்யுள் வகை

105. ***நால்வகைச் சாதியும் பலவகைமி னீதியொடு***
***நாற்கவிகள் சொலு முறைமையு***
***நவில்பரம லோபிநன் னடக்கைபண் டிதர்முறைமை***
***நாலெட்டி ராக விதமுஞ்***
***சால்புயர் புராணமொடு வேந்தர்கலி யாண்டநா***
***டத்துவ மனைத்தின் இயல்புஞ்***
***சகலநற் கணிதசாத் திரமட்ட வர்க்கமுந்***
***தகுசகுன லட்சண முடன்***
***நூல்களிற் சரசாஸ்திர மேன்மைபெறு கொக்கோக***
***நூலினொடு கர்ப்போட் டமும்***
***நுண்மையாங் கந்துகத் தியல்புசா முத்திரிக***
***நூன்மர பெலாமி தனிலே***
***காலமுத லியாவரு மறிந்திட வுரைத்தனன்***
***கற்பக விராச மேவுங்***
***கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!***
***கயிலை யங்கிரி வாசனே!***

**பொழிப்:** அடுத்து, இந்த நூலில் கூறப்படும் செய்திகள் சுருக்கமாக இயம்பப்படுகின்றன. நாற்குலம், பலவகை நீதி, கவிஞர், வள்ளல், உலோபி, பண்டிதர் இவர்கள் இயல்பு, இராகங்கள், புராணங்கள், கலிகாலத்து ஆண்ட பெரு மனிதர்கள், பஞ்சாங்கம் பற்றிய பல செய்திகள், சகுன சாத்திரச் செய்திகள், நால்வகை மகளிர் இயல்பு, சாமுத்திரிகா லட்சணம், கர்ப்போட்டம் போன்ற தேவைப்பட்ட பல செய்திகளும் இந்நூலில் இடம் பெறுமாறு காட்டப் பட்டுள்ளது.

**அ.பொ:** லோபி - கஞ்சன்; கந்துகம் - குதிரை. **(உ)**

## வேதியர் சிறப்பு

106. ஆகம புராணகலை சாத்திரத் துண்மையுணர்
அதிமந்திர பலம கிமையும்
யாகாதி கருமமோ டியமநிய மங்களு
மநுட்டான விதிமு றைமையும்
யோகநெறி வழுவாது காலைநீ ராடலு
முவந்திடலு மெக்கிய வோம
முள்ளமகிழ் சீலமுங் காயத்திரி நிலைமையு
முயர்வேத மோது சீரும்.
பாகமிகு மவுபாச மர்க்கியபாத் தியமுமெய்ப்
பயனுதவு கிரியை யாவும்
பனிரண்டு மாதமுந் தவறாது புரிவரிப்
பண்புமறை யோர்பெருமை காண்
காகனக வாழ்வுதரு மாமலைகள் சூழுமுயர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** வேதியர்கள் வேதம், ஆகமம், புராணம், சாத்திரம், பிறகலைகள் இவற்றில் வல்லராய் ஒழுக்க நெறி வழாது எரி ஓம்பக் கடவுட்பேணி காயத்திரி மந்திரம் ஓதிப் பன்னிரு மாதமும் முறையான வழிபாடு தவறாமல் வாழ்பவர்.

**அ.பொ:** எக்கிய - மேம்பட்ட; ஔபாசனம் - எரி ஓம்புதல்; அர்க்கியம் - மந்திரத்தோடு நீர் வார்த்தல்; கா - சோலை; கனக வாழ்வு - செல்வம். **(௬)**

## அரசர் சிறப்பு

107. நீதிநெறி வழுவாது செங்கோ னடாத்தவது
நிலைமை யதுகோ டாமலு
நிறைகுடியி லபிமான மொடுமந்திரி யோசனையு
நீள்சத் தியமிகுதா னமுஞ்
சாதிமுறை யவரவர்க் கேற்றமரி யாதையுஞ்
சதுர்வித வுபாயுங் களுஞ்
சர்வவுயி ரியாவையுந் தன்னுயிர்போ லெண்ணலுஞ்
சதுரங்க சேனை பலமும்

வாதிபிரதி வாதிகள் வழக்கினடு நிலைமையது
மாறாது முடிபு சொல்லு
மாதளக் கர்த்தர்பிர தானிதா னாபதிசூழ்
மகிமையும் வெற்றி வளமுங்
காதல்சே ரிவையெலா மரசர்கட் குரியவாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** நீதி நெறி, செங்கோல், குடி மக்களிடம் அன்பு, மந்திராலோசனை, சத்தியம், தானம், சாதிமுறைக் கேற்ற மரியாதை, நால்வகை உபாயம், வழக்கிற்கு நேரிய முடிவு, ஐம்பெருங்குழு தரும் வளம், வெற்றிச் சிறப்பு, உரிமை மகளிர் அன்பு ஆகியவற்றை நேரிதின் செயற்படுத்துபவர் அரசன்.

**அ.பொ:** கோடாமல் - வளையாமல்; சதுர்விதம் - நான்கு வகை; தளக்கர்த்தர்- சேனைத் தலைவர்; பிரதானி - முக்கியமானவர்; தானாபதி - ஊர்த்தலைவர்.

(ச)

## வைசியர் சிறப்பு

108. வந்தமுத லைச்செலவி டார்கணூற் றுக்கொன்று
வட்டியுங் கொள்வர் மிக்க
வண்டப் புரட்டர்முறி தந்துதங் கட்கடகு
வைக்கினுங் கடன ளிக்கார்
தந்திடும் பற்றுவர விற்பிசகிடார் சொன்ன
தவணைசற் றெனினும் வழுவார்
தந்நாண யக்காரர் கேட்டனுப் பினுமிங்கு
தாமதித் தேகொ டுப்பார்
பந்துசன மெனினுநா ணயமிலா தவரெனிற்
பணத்திலுறு தூரங் கொடார்
பாவான ரைக்காணி லுபசரித் தேநல்ல
பரிசளித் துளமகி ழுவார்
கந்தமணி வணிகர்முறை யிந்தவகை யென்பர்காண்
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** முதலைப் பாதுகாத்தல், 12% வட்டி வாங்குதல், நேர்மையற்றவர் களுக்குக் கடன் கொடாமை, நாணயம் இல்லாதவர் யாராயினும் புறக்கணித்தல், புலவர்களைப் போற்றுதல் முதலியன வணிகர் செயல்.

**அ.பொ:** பிசகு - தவறு; தவணை - கால வரையறை; பந்து சனம் - உறவினர்; தூசு - சிறிதளவு; கந்தம் - வாசனைப் பொருள்; மணி - இரத்தினம். **(ரு)**

## வேளாளர் சிறப்பு

109. **ஆட்சிதரு நீதியுங் கொற்றவர்கள் புஜபலமு**
**மதிவீர சூரர் வலியு**
**மாயிரவர் வாணிப மியற்றுதலு முலகெலாம்**
**அன்னதா தாவென் பதுந்**
**தாட்சியொன் றில்லாத வந்தணர் மகத்வமுந்**
**தங்குசுப கல்யா ணமுஞ்**
**சந்ததஞ் செபதபம் பூசைநேமங் களிவை**
**தப்பாம லேபுரி வது**
**மோட்சநிலை தருமருட் குருவினுப தேசமும்**
**முநிவரிரு டியர் சீலமு**
**மூவுலக மும்புகழ் வாழ்வுபெறு தலுமிவைகண்**
**முற்றுமே ழியர்பெ ருமைகாண்**
**காட்சிதரு கர்த்தனே சூட்சகா ருண்ணியனே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** நீதி, அரசர் வலிமை, வீரர்களின் மாட்சி, வாணிப வளர்ச்சி, பசிபோக்குதல், அந்தணர் பெருமை, நற்செயல்கள், ஜபம், தவம், பூஜை இவை தவறாமல் செய்வது குரு உபதேசம், முனிவர் வாழ்வு இவையாவும் வேளாளரின் உழவின் மேன்மையால் நிகழ்வன.

**அ.பொ:** அன்ன தாதா - சோறு வழங்குபவன்; தாட்சி - தாழ்ச்சி - குறைபாடு; நேமம் - நியமம்; இருடி - முனிவன். **(சா)**

## கவிஞர் பெருமை

110. அணிகொளு மிலக்கிய விலக்கணக் கடன்மடுத்
தாசு மதுரம் சித்திர
மாகும்வித் தாரநாற் கவிமழை பொழிந்தெவரும்
அரிதரி தெனச் சொல்லவே
துணிகொளும் பிரபந்த மவையுட் கலம்பகஞ்
சொற்சந்த மாலை வண்ணந்
துகளிலா மடல்கோவை பரணிபிள் ளைக்கவிதை
தொகைநிலைச் செய்யுண் முதலாத்
திணிகொளுயர் நூலெலாம் அரைநொடியி லேசொலுந்
திறனுநன் மதுர வாக்குஞ்
செப்புமவை யோர்கள்பிர மிக்கவிடி யென்னவே
செய்யும்பிர சங்க நடையும்
கணிகொளிவை யாவுமுடை யோன்கவிஞ னாமெங்கள்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** இலக்கிய இலக்கண அறிவு, ஆசு, மதுரம், சித்திர, வித்தார கவிகளை இயற்றுதல், பிரபந்தச் செய்திகளை எடுத்து உரையாடும் இனிய சொல்வன்மை, அவையில் இடியோசை போலப் பிரசங்கம் செய்தல் முதலியன கவிஞருக்குப் பெருமை தருவன.

**அ.பொ:** பிரமிக்க - வியக்குமாறு; கணி - குறித்து அறிதல். (எ)

## உலுத்தரியல்பு

111. தெள்ளுதமிழ் வாணரைக் கண்டுட னடுங்கித்
திடுக்கிட் டுளம் பதைத்துத்
திகைத்துமுகம் வேறாகி வாயடைத் துக்கண்
குழிந்துபெரு மூச்செ றிந்து
மெள்ளவே யோடிப் பதுங்கிப் பணப்பெட்டி
மீதிற் கவிழ்ந்து காக்கும்
வீண்லோப ரைச்செத்த சவமென்வு மாகாது
வீறுகல் லென லொவாது

வள்ளமா மென்றிடினு மமையாது கழுதையாய்
வகுக்கவுங் கூடாது புன்
வயிரவ னெனச்சொலவு மாகாது பதரென
வழுத்திடவு மாகாது காண்
கள்ளமன முள்ளமா லோபிக்கு லோபியிணை
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தமிழ்ப் புலவரைக் கண்டால் அவருக்கு எதுவும் கொடுக்க மனமில்லாமல் பணப்பெட்டி மீதில் கவிழ்ந்து படுக்கும் உலோபி பிணம், கருங்கல், கழுதை, நாய், பதர் இவற்றிலும் கேடு கெட்டவன். ஆதலின் அவனுக்கு அவனே நிகர்.

**அ.பொ:** சவம் - பிணம்; ஒவ்வாது - பொருந்தாது; வள்ளம் - பெரிய பாத்திரம்; வயிரவன் - நாய். **(அ)**

## பிறவிக்குணம்

112. விரும்பனத் தோடுபிடி யானைநன் னடைகற்க
மேதினி யில்யார் முயன்றார்
வீறுகடன் மீனுக்கு மாமைக்கு நீந்தல்செய
மேனாள் பழக்கினவ ரார்
கரும்பினுக் கிரசமும் பாம்புக்கு விடமுமங்
கார்தான் புகட்டி னார்கள்
கானமல ருக்குமண மும்முள்ளின் முனையுமிக்
காசினியி லெவராக் கினார்
பரும்புலியி னொடுபூனை பறவையா ளிகளெலாம்
பாயப் பழக்கின வரார்
பாரவரை யுறைகழுகி னுக்கிரைக ளிங்கென்று
பார்த்தெவர்கள் சொல்லி வைத்தார்
கரும்புவியி லிவையெலாம் பிறவிக் குணங்கள்காண்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** அன்னம், பெண் யானை, இவற்றிற்கு நடை, பாம்புக்கு விடம், பூவிற்கு மணம், முள்ளுக்கு முனை, புலி, பூனை, கழுகு முதலிய பறவை, சிங்கம் இவற்றின் பாய்ச்சல், கழுகுக்குக் கூரிய பார்வை, இவையெல்லாம் பிறவிக் குணம்.

**அ.பொ:** பிடி யானை - பெண் யானை; கானம் - காடு; மேதினி - காசினி; புவி - உலகம்; யாளி - சிங்கம்; பாரவரை - பெரிய மலை. **(௯௯)**

## செல்வத்தால் வருமுயர்வு

113. **புல்லர்க டமக்குமிக செல்வபாக் கியம்வரிற்**
**பொதிமுத்தன் முத்தப்ப னாம்**
**புகழ்முத்து முத்தையா முதலியா ராம்பின்பு**
**புகன்றிடுவ ரவர்க ளெனவே**
**செல்வர்க்கு மிக்கதாய்க் கிள்ளாக்குச் சென்றிடுஞ்**
**செந்தமிழ்ப் புலவோ ரெலாந்**
**தியாகிமக ராஜனே யென்றுகொண் டாடுவார்**
**திருட்டியுந் தெரியாது போம்**
**நல்லசெவி கேளாது வாயடைத் திடுமிக்க**
**நண்பினரை யெதிர் காணினு**
**நட்டதலை யேறிடா மட்டிக் குலாவர்கடை**
**நாயினுங் கடைய ரந்தக்**
**கல்லாத மூடரைப் படைத்தவித மறிகிலேன்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** செல்வம் வந்தால் முத்தன் முத்தப்பனாவான். செல்வம் மிகுந்தால் முத்தையா முதலி ஆவான். புலவர் போற்றுவர். கண், காது முதுலிய பொறிகள் செயற்படா. நண்பர்களைக் காணினும் பார்க்க விரும்பாமல் தலையைக் குனிந்து கொள்ளும் ஆடம்பரப் புதுப் பணக்காரர் கடை நாயினும் கடையர்.

**அ.பொ:** பொதி முத்தன் - மூட்டை தூக்கும் முத்தன்; கிள்ளாக்கு- செல்வாக்கு, உண்டியற் சீட்டு; திருட்டி - கண்பார்வை; நட்டதலை - குனிந்ததலை; மட்டி- அறிவற்றவன்; குலாவர் - ஆடம்பரம் செய்பவர்; கடையர்- கீழானவர். **(௫0)**

## அரிதெனல்

114. ஊமைசெவி டொடுபேடு குருடுகூ னின்றியே
யுலகிற் செனித்த லரிதாம்
ஒருறுப் புங்குறைக ளின்றியுயர் குலமதி
லுதித்தல தனினு மரிதாம்
வாய்மைமிகு கல்விமா னாவதரி தாஞ்செல்வ
வானாவ ததினு மரிதாம்
வணக்கமு மொழுக்கமும் வாய்ப்பதரி தாந்தர்ம
வானாவ ததினு மரிதா
மாமிதினு மத்துவித நெறியுணர்ந் தாசான்
அநுக்கிரகம் பெறுவ தரிதா
மட்டாங்க யோகமெய்ஞ் ஞானமு நிறைந்திடுத
லதினுமரி தரிது கண்டாய்
காமி!சிவ காமி!யபி ராமி!மதி சாமியே!
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உறுப்புக் குறைவின்றிப் பிறத்தல், நல்ல குடிப்பிறப்பு, கல்வி, செல்வம், ஒழுக்கம், தர்மவான் ஆதல், குரு அனுக்கிரகம் பெறுதல், யோகமும் ஞானமும் பெறுதல் என்பன மக்கட் பிறப்பில் ஒன்றை விட மற்றது கிட்டுதற்கரிய பேறாகும்.

**அ.பொ:** செனித்தல் - பிறத்தல்; அத்துவிதம் - ஒன்றாகிய நல்லது; சாமி - இறைவன். **(கக)**

## இறந்துமிருக்கின்றவர்

115. தேவால யங்கோ புரங்கல்வி பயிலிடந்
தேர்முதல வுண்டாக்கி னோர்
செகமெலாங் கீர்த்திபெறு மோயாத கொடையுளோர்
தேசத்தி னீதி மன்னர்
காவியங் செய்கவிஞர் சுத்தரண வீரரொடு
கனவித்தை கற்ற பெரியர்
கதிர்மதியு முள்ளளவு மாறாத வறனெலாங்
காதல்கொடு செய்த பேர்கள்

வாவிகூ டஞ்சோலை தருமசத் திரமடம்
வண்மைபெற வேசெய்த பேர்
வானகத் துஉயிர்அகன் றேகினும் புவியதனின்
மாளாத பேர்களி வர்காண்
காவுடைய கோவமுயர் மாவுடைய தேவுமதி
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கோயில், கோபுரம், தேர், கல்விச்சாலை இவற்றை அமைத்தவர், பெருங்கொடையாளர், நீதி மன்னர், காவியம் செப்பும் கவிஞர், பெரிய போர் வீரர், பல கலைகளும் அறிந்தவர், பல அற நிலையங்களை அமைத்தவர்கள் இறப்பினும் தம் புகழால் என்றும் வாழ்பவர்.

**அ.பொ:** கல்வி பயிலிடம் - பள்ளிக்கூடம்; ரணம் - போர்க்களம்; கனவித்தை- மேம்பட்ட கல்வி; வாவி - குளம்; கதிர் - சூரியன்; கோவம் - பொன்.

(கஉ)

## இருந்துமிறந்தவர்

116. வெகுசன விரோதியர்கள் பழிமிகக் கொண்டபேர்
விதரணர்க் கீயாத பேர்
வேட்டகந் தன்னிலே மருவுண் டிருந்தபேர்
வெகுகடன் பட்ட பேர்கள்
சகமதனி லேவழக் கோரமது செல்லுவோர்
செப்புமொழி தப்பு நடையோர்
தினந்தினம் பொய்யுரை புகன்றுபா வலர்தமைத்
திருப்படிக் கின்ற தீயோர்
மகதமுத லாம்பாஷை யாவையுங் கற்றவைமில்
வாய்மூடி நின்ற பேர்கள்
மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
மனைவியை வழங்கி யுண்போர்
ககமென வலைந்துதிரி யினுமாண்ட பிணமென்பர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பலருடைய பகையையும் தேடிக் கொண்டவர்கள், பழிச்செயல் செய்பவர், உலோபிகள், வேட்டகத்தில் உண்டு வாழ்பவர், பெரிய கடனாளிகள், வழக்கில் நடுநிலை தவறிப் பேசும் நீதிபதிகள், சொன்ன சொல் தவறியவர், பொய் உரைப்போர், கற்றும் பேச்சாற்றல் அற்றவர், தீராத வறுமையர், தீராத நோயாளிகள், மனைவியை வழங்கி வயிறு வளர்ப்பவர்கள் ஆகியவர்கள் உயிரோடிருந்தும் செத்த பிணத்துக்கு நிகராவர்.

**அ.பொ:** விதரணர் - அறிவாளிகள்; வேட்டகம் - மனைவியின் பிறந்த வீடு; ஓரம் - நடுவு நிலைமையின்மை; திருப்படிக்கின்ற - விரட்டி அடிக்கின்ற; மகதம்- பதினெண் மொழிகளுளொன்று, ககம் - பறவை. **(௧௩)**

## செல்வச்சிறப்பு

117. **பொருளுள்ள பேர்களுக் கருளுண்டு புகழுண்டு**
**புண்யவச மிக்க வுண்டு**
**பூதலத் தவரெலாங் கண்டவுட னேதொழுது**
**பூபதி குபேர னென்பார்**
**திருகொன் றிலாதமதி யுண்டுதிற னுண்டுமெய்த்**
**தேசிகர்தம் அருளு முண்டு**
**தீங்கியற் றினுநன்மை யென்பார்கள் பெருமையுந்**
**தீரமொடு வீர முண்டாங்**
**கருளுண்டு பந்துஜன வுறவுண்டு நண்பினர்க**
**ளானோர்க ளுண்டு நிதமு**
**மவர்முகந் தன்னிலழ குண்டுகளை யுண்டுநல்**
**லானந்த பூர்த்தி யுண்டு**
**கருணைசெய் தன்பர்கட் கழியாத நிதியுதவு**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** நேரிய முறையில் பொருள் தேடிப் பிறருக்கு உதவி வாழ்பவர்கள் அருள், புகழ், காவல், மரியாதை, குரு அருள், பெருமை, தீரம், வீரம், உறவு, நண்பு, அழகு, மகிழ்ச்சி, ஆகிய நலனுடன் வாழ்வர்.

**அ.பொ:** பூபதி - உலகத் தலைவன்; திருகு - குற்றம்; தேசிகர் - குரு; களை- வசீகரம்; பூர்த்தி - நிறைவு. **(௧௪)**

## வறுமைக்குணம்

118. படியதனி லேநூல்கள் பலகற் றுணர்ந்துநற்
பண்பினா லுயர்வு பெறினும்
பரிபவந் தருகின்ற வறுமைகுடி கொண்டிடிற்
பதிதரென வேமெலி குவார்
மடிமைவிட் டொழியாது துயின்மிக விரும்புவார்
வாய்ச்சொ லெங்குஞ் செலாது
மங்கல மிழந்தமா தரும்அவ மதிப்பர்பிறர்
மனைவயிற் செலவஞ் சுவார்
கொடியோ ரெனப்பெயர் தரிப்பர்மித மின்றியூண்
கொள்ளுவர் பகை யாவருங்
கூரறிவு குன்றுமோர் காசுக்கு நம்பாத
கொள்கைவறு மைக்குணங் காண்
கடிகம ழிதழ்க்கொன்றை முடியிடை யணிந்தருள்செய்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** வறியவர்களுடைய கல்வி, பண்பு இவைகள் விளங்க மாட்டா. அவர்களிடம் சோம்பல், உறக்கம், மிக உண்ணுதல் என்பன காணப்படும் அவர்கள் வார்த்தையைக் கைம் பெண்களும் மதியார். எல்லோரும் பகையாகி வறியவர்களும் பகையாகி அவர்களை ஒரு காசுக்கும் நம்பமாட்டார்கள்.

**அ.பொ:** படி - பூமி; பரிபவம் - அவமானம்; பதிதர் - வருணாசிரம தருமந் தவறியவர்; மங்கலம் இழந்த மாதர்- கைம்பெண்கள். (கரு)

## கோபக்கொடுமை

119. குற்றங்கண் மூவகையு ணன்றிலாக் கோபமே
கொடிதுஅதன் செய்கை கூறிற்
குடிகெடுக் கும்பாப மதுவிளைத் திடுநல்ல
குணமழிக் குந்தன் முன்னே
யுற்றபொரு ளினையறிய வொட்டாது பலநாளும்
உறுகண் தனைத் தந்திடு
மோங்குகன மொடுசிறப் புயாவையு மழித்துமெய்
யுறவோர் கள்தவ மழிக்கு

மற்றவர்சொல் புத்தியுஞ் செவிதனக் கேறாது
மடமையின் மூழ்கு விக்கு
மாறாத துன்பம் பயக்குமிதை மாற்றிநின்
மலரடி தொழச்செய்கு வாய்
கற்றவ ரகத்துளுறை வுற்றபரி சுத்தனே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கோபம் குடி கெடுத்துப் பாவம் விளைத்துக் குணத்தைக் கெடுத்து, அறிவை நீக்கித் துன்பம் விளைத்துச் சிறப்பை அழித்துப் பகையைத் தந்து, தவத்தைப் போக்கிப் புத்திமதியைப் புறக்கணித்து நீங்காத துயரத்தில் ஆழ்த்திவிடும்.

**அ.பொ:** குற்றம் மூன்று - காமம், கோபம், மயக்கம்; உறுகண் - துன்பம்; கனம் - பெருமை. **(கக௯)**

## கல்விச்சிறப்பு

120. கடலுலகி லுற்றபொரு ளுக்குளே நன்மைதரு
கல்விநிலை பெற்ற பொருளாங்
கனலினா லுருகாது புனலினாற் கரையாது
கள்ளராற் றிருடொ ணாது
திடமான ராசாதி ராசரா லும்மதைத்
தெண்டம் பிடிக்கொ ணாது
தெரிவைபொது மாதராற் சேதமா காதொருவர்
செலவிடிற் குறைவுறா தங்கு
அடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை
யளவிடவு முடியா துகாண்
அப்பொரு ளினைப்பெறா திப்புவியி லலைகின்ற
அற்பருறு பயனென் கொலோ?
கடகய முரித்துடலி னிற்றரித் திடுதேவ
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உலகிலுள்ள பொருள்களுள்ளே கல்வியே நிலைபெற்றது. கனல், புனல், கள்வர், அரசர், பரத்தையர், தாயத்தார் முதலியோரால் கவரப்படாதது.

கொடுக்கக் குறையாதது. அளவிடப்படாதது. தண்டனை என்ற பெயரால் கைப்பற்ற முடியாதது. அத்தகைய கல்வியைப் பெறாது உழல்கின்றவர் பிறவிப் பயன் உறார்.

**அ.பொ:** தெண்டம் பிடித்தல் - தண்டனையாகக் கைப்பற்றுதல்; தெரிவை - பெண்பாலார்; அடம் - பொல்லாங்கு; கடகயம் - மதம் கொண்ட யானை.

**(கஎ)**

## பொருளாசைக்கு அளவிலையெனல்

121. **கடலிடத் தாழமும் அதனினுண் மணலையுங்**
**கனம்பொழி மழைத் தாரையுங்**
**காயத்தி னிலைமையும் யோகியர்கண் மகிமையுங்**
**கருதுகல் விக்கெல் லையு**
**மடவார்க ணினைவையுங் கவியினுட் பொருளினொடு**
**மாறாத நினத ருளையு**
**மகமேரு வளவையுஞ் சிரமீது ரோமமும்**
**வானத்தி னிறை மீன்களும்**
**புடவிநதி சலமுமா லோபியரு லோபமுமோர்**
**போதளவு செய்தா லுமே**
**பொருண்மீதி லாசைதனை யளவிடக் கூடாது**
**பூதலமெ லாந்து திக்குங்**
**கடவுளே யரிபிரமர் காணொணா வண்ணலே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** கடலின் ஆழம், அதன் மணல்கள், மழை விழும் நீர் ஒழுங்கு, வானத்தின் பரப்பு, யோகியர் மகிமை, கல்விக்கு எல்லை, உயர்ந்த கல்வியின் உட்பொருள், இறைவன் அருள், மேருமலையின் பரப்பு, தலையிலுள்ள மயிரின் எண்ணிக்கை, விண்மீன்கள், ஆறுகளில் ஓடும் நீர், உலோபியர்களின் கஞ்சத் தனம் இவற்றைக் கணக்கிட முடியாது. இவற்றைக் கணக்கிடுதலும் கூடும். ஆனால் மக்களுக்குப் பொருள் மீதில் உள்ள ஆசையைக் கணக்கிட முடியாது.

**அ.பொ:** கனம் - மேகம்; காயம் - ஆகாயம்; புடவி - பூமி. **(கஅ)**

## இவர்க்கிது துரும்பெனல்

122. கனயோக மார்க்கத்தி னின்றதுற விக்குநற்
காவலர்க ளோர் துரும்பு
கசடறக் கற்குமுணர் வுடையோர்க்கு முத்தமிழ்க்
கடலெலா மோர் துரும்பு
தினமுங் கொடுக்கின்ற கொடையாள ருக்கதிக
திரவியமு மோர் துரும்பு
திவ்வியசுந் தரமுள வரம்பையா கினுமவ
டெளிந்தவர்க் கோர் துரும்பு
கனமிக வருந்தியே பசியிலார்க் குக்கருப்
பதுவுமோர் சிறு துரும்பா
மதிகாண வீரருக் குயிரொரு துரும்புபா
வலர்க்கு மதியார் துரும்பாங்
கனமிலகு சோலைவளர் சேலநக ரைச்சார்ந்த
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** துறவிக்கு அரசன் துரும்பு, கல்விமான்களுக்குக் கல்விக் கடல் துரும்பு, கொடையாளருக்குப் பெருஞ்செல்வமும் துரும்பு, தெளிந்த மனமுடையாருக்கு அரம்பையர் அழகும் துரும்பு, பசி இல்லாதவருக்கு இனிய கரும்பும் துரும்பு, வீரருக்கு உயிர் துரும்பு, புலவர்களுக்குத் தம்மை மதியாதவர் துரும்பு.

**அ.பொ:** அரம்பை - தெய்வப்பெண்; கருப்பு - கரும்பு; கரணம் - செயற்படுதல்.

**(௧௧௭)**

## இவரித்தன்மையரெனல்

123. அரியரன் பிரபந்த முறுதியாக் கேளாத
வசடனே கனசெ விடனா
மாங்கார மதுகொண்டு பெரியாரை மதியாத
வறிவிலா தவன் ஊமையாம்
பெரிதாந் தலங்கணதி சென்றுதுதி செய்யாத
பேர்களே சப்பா ணியாம்

பிசகாம லனுதினமு நின்பதம் தரிசியாப்
பெருமூட னதிகுரு டனாந்
தருமங்கொ டுப்பாரைத் தடுத்திடுங் கொடியனே
சண்டாளன் மாபா வியாந்
தாரணியி லிவர்தம்மை யயனிந்த வண்ணமே
தப்பாம லேவ குப்பன்
கரிதனை யுரித்துமுய லகனையு மிதித்தவா
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** இறைவன் புகழ்பாடும் நூல்களைக் கேளாதவன் செவிடன். பெரியோரை மதியாதவன் ஊமை. மூர்த்தி தலம் தீர்த்தங்களைச் சென்றடைந்து வழிபடாதவன் நொண்டி. நாடோறும் இறைவனை வழிபடாதவன் குருடன். தருமம் கொடுப்பதைத் தடுப்பவன் சண்டாளன். இவர்கள் அடுத்த பிறவியில் செவிடு, ஊமை, நொண்டி, குருடு சண்டாளராகப் பிறப்பர்.

**அ.பொ:** சப்பாணி - நொண்டி; அயன் - பிரமன். **(உ0)**

## இப்பத்திரஞ் செல்லாதெனல்

124. சகமதனின் முப்பதாண் டுக்குமேற் பட்டகைச்
சாதன மெனும் பத்திரந்
தந்திட்ட தொருமுதற் பொருளுக்கு வட்டியது
சமமாகு கால மளவுந்
தகவுறுந் திறமுடைய னாகியே தனிகன்மிகு
தனமிகுஞ் செல்வ னாகிச்
சமீபத் திருந்துவாழ் கின்றகட னாளியைச்
சற்றேனுங் கேளா மலுந்
துகளிலாச் சிட்டனைக் காட்டாம லும்மவன்
சும்மா விருந்து விடிலோ
தோன்றுமப் பத்திரம் நீதித்த லத்தினிற்
தோல்வியுற் றழியு மெனவே
ககனத்தர் துதிமுநிவ ரகமுற் றுரைத்தனர்கள்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** முப்பது ஆண்டுக்கு மேல் வரவு வைக்காத கடன் பத்திரம், முதலளவு வட்டி வாங்கி வரவு வைக்கப்பட்ட பத்திரம், பல ஆண்டுகளாகக் கடன் பெற்றவர் வரவு வைத்துத் தராத ரொக்கக்கடன் பத்திரம் இவை நீதித் தலத்தில் செல்லுபடியாகா.

**அ.பொ:** தனிகன் - செல்வன்; துகள் - குற்றம்; சிட்டனை - குறிப்பேடு; ககனத்தர் - தேவர். **(உக)**

## இது செல்லுமெனல்

125. **முன்னோர்கள் சொன்னநற் புத்தியுண ராதமுழு**
**மூடனெதிர் வருவ தறியா**
**மூர்க்கங்கொ ளுன்மத்த னூரைவிட் டோடினோன்**
**மூதுரை வழாது காக்கு**
**மன்னவர்க் குத்தன்னு ளஞ்சினோ னிளமைபெறு**
**வாலிபன் யாதா யினும்**
**வகுத்திடுந் திறமிலா தவன்மிகு பயத்தினால்**
**மனம்வ ருத்திடப் பட்டவர்**
**இந்நிலந் தனிலெவ ரிடத்தாயி னும்பொரு**
**ளேற்றெழுதி யீந்த பத்ர**
**மெக்காலு நெடுநாள தாயினுஞ் செல்லுமென**
**வேயிசைத் திடுவர் முநிவோர்**
**கன்னல்வில் லியைமுன்ன மின்னலடையச் செய்த**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** நல்ல புத்தியைக் கேளாத முழுமூடன், எதிர்கால உணர்வு இல்லாத திமிர்ப்பிடித்தவன், ஊரைவிட்டு ஓடியவன், அரசருக்கு அஞ்சுபவன், இளமை பெறு வாலிபன், செயல்களைத் திறம்பட நிகழ்த்தும் ஆற்றல் இல்லாதவன், பயத்தினால் மனம் மாற்றப்பட்டவன் ஆகியவர்கள் பணத்தைப் பெற்று எழுதிக் கொடுக்கும் கடன் பத்திரம் செல்லுபடி ஆகும்.

**அ.பொ:** உன்மத்தன் - பித்தன்; கன்னல் வில்லி - கரும்புவில்லை உடைய மன்மதன். **(உஉ)**

## குருவினியல்பு

126. சீலமுயர் நிலைமையும் பாசவயி ராக்கியமுஞ்
சிவபத்தி மிகவு முளராய்த்
திகழ்கின்ற வேதாந்த நாதாந்த யோகாந்த
சித்தாந்த நெறியு ணர்ந்து
பாலதா கியநாலு வேதமறு சாத்திரம்
பதினெண் புராண முடனே
பகர்கின்ற வறுபத்து நாற்கலைக் கியானமும்
பயனறிந் தநுபோ கராய்
மேலதா கியவாறு தலமுங் கடந்துபாழ்
வெளிகண்டு வீர சைவ
விதிமுறை வழாதுமெய்ஞ் ஞானவழி காட்டுவோர்
மேலான சற்குரு வராங்
காலனை யுதைத்துமார்க் கண்டனைக் காத்தவா
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சீலகுணம், பற்றறுத்த மனநிலை, சிவபக்தி, வேதாந்தம் முதலியவற்றின் ஆராய்ச்சி, பதினெண்புராணம், 64 கலை பற்றிய அறிவு, துவாத சாந்தத் தவத்தில் யோகம், வீர சைவ விதிமுறை இவற்றைப் பற்றிய செய்திகளை நன்கு உணர்ந்து, உண்மை ஞான வழி காட்டுபவனே மேலான நல்ல குரு ஆவான்.

**அ.பொ:** கியானம் - ஞானம். (உ௬)

## வைத்தியரியல்பு

127. நாடிகணி தானமு மெண்வித பரீட்சையொடு
நாடிப் பிணிக் குறிகளு
நவசித்தர் கோரக்கர் கும்பமுனி தன்வந்திரி
நவிலும் வாகட முணர்ந்து
சாடிவரு மூலிகையு மறுபத்து நான்காஞ்
சரக்கு வகைமுறை தெரிந்து
தயிலங்கள் பஸ்பங்கள் கிருதங்கள் குளிகையொடு
சகல வவுஷத முறைகளு

நீடுமா யுருவேத நூலுமக ராதியு
நிகண்டு பனிரண்டு மோர்ந்த
நிலையுளோர் தங்களைப் பண்டிதர்க ளென்பரிந்
நீணிலந் தனிலா ணவக்
காடதனை வென்றசிவ யோகியர் நிதம்பரவு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** நாடிபார்த்தல், நோயின் காரணத்தை எட்டு விதங்களில் கண்டு அறிதல், நவசித்தர், கோரக்கர், அகத்தியர், தந்வந்தரி இவர்கள் இயற்றிய நூல்களை நன்கு அறிதல், மூலிகைகள் மருந்து சரக்கு இவைகளை நன்கு அறிதல், தயிலம், பஸ்பம், நெய்கள், மருந்து உருண்டைகள் இவற்றின் செய்திறன் அறிதல், ஆயுர்வேத நூல், மருந்து, அகராதி, நிகண்டுகள் இவற்றை நன்கு பயின்றிருத்தல் ஆகிய ஆற்றல் உடையவரே பண்டிதர் என்று போற்றப்படும் மருத்துவராவர்.

**அ.பொ:** கணி - கணக்கிடுகின்ற;வாகடம் - மருத்துவ நூல்; பஸ்மம் - சாம்பல்; கிருதம் - நெய், லேகியம்; குளிகை - மருந்துருண்டை; ஔடதம் - மருந்து.

(உச)

## வியாதிவரு மூலம்

128. மயிரினா லுமியினாற் கடுவழி நடக்கையால்
மலசலம் அடக்கை யாலு
மனதுதுய ரத்தினாற் கல்லினா னெல்லினான்
மாதர்கள் புணர்ச்சி யாலுந்
தயிரிரவி லுண்ணலாற் கனிபல வருந்தலாற்
சருகூற னீரி னாலுந்
தயிலமது மூழ்கிமட மங்கையொடு சேர்தலாற்
றண்பனியி னாற்கா லையில்
வெயில்காய்தல் கண்விழிப்பு அகாலபோ சனமதால்
வெகுநித்திரை செய்த லாலும்
விளம்பிடும் பத்தியத் தாழ்வினால் வினையினால்
வியாதிவரு மூல மென்பார்
கயிரவந் தனைவென்ற செவ்விதழ் மடந்தைசூழ்
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** மயிர், உமி ஆகியவை வயிற்றில் புகுதல், கடியவழியில் நடந்து செல்லுதல், மலசலம் அடக்குதல், மனத்தில் வீண் கவலை, கல்லும் நெல்லும் உணவின் மூலம் வயிற்றில் புகுதல், அளவு கடந்த மகளிர் புணர்ச்சி, இரவில் தயிர் உண்ணுதல், பலவகைக் கனிகளையும் உண்ணுதல், எண்ணெய் தேய்த்துக் குளித்த அன்று புணர்தல், இலைகள் ஊறிய நீரைக் குடித்தல், அதிகக் கண் விழிப்பு, பனியிலும் காலை வெயிலிலும் இருத்தல், காலம் கடந்து உண்ணுதல், அளவுக்கு மீறி உறங்குதல், பத்தியம் மீறி உண்ணுதல், தீவினை பயன்தருதல், இவற்றால் நோய் உண்டாகும்.

**அ.பொ:** சருகு ஊறல் நீர் - இலைகள் அழுகிக் கிடக்கும் நீர்; அகால போசனம்- காலம் தவறி உண்ணுதல்; கயிரவம் - செவ்வல்லி, செவ்வாம்பல். **(உரு)**

## இலட்சுமி இருப்பிடம்

129. **கொற்றவ ரிடத்தினுங் கோக்களின் வாலினுங்**
**குணவான்கள் வதனத் தினுங்**
**குடத்தினுறு பாலினுங் கடல்வார ணத்தினுங்**
**கொடியினுந் துரகத் தினுஞ்**
**சுற்றநீங் காதமனை தன்னினுங் கற்புமிகு**
**தோகைய ரிடந்தன் னினுஞ்**
**சொல்லரிய சிவிகைபே ரிகைதனங் களினுமது**
**சூதனன் றிருமார் பினுஞ்**
**சற்றாயி னும்வாய்மை தவறா ரிடத்துஞ்**
**சலத்தினுந் தானி யத்துஞ்**
**சாதிமல ரதனினும் புண்ணிய ரிடத்தினுந்**
**தங்கநவ ரத்தி னத்தும்**
**கற்றவ ரிடத்தினுந் திருமக ளிருப்பிடங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** திருமகள் அரசர்கள், பசுக்களின் வால், குணவானுடைய முகம், நிறைந்த பாற்குடம், சங்கு, கொடி, குதிரை, சுற்றம் நீங்காத மனை, கற்புடைய மகளிர், பல்லக்கு, முரசம், செல்வக் குவியல், திருமாலுடைய மார்பு, வாய்மை

தவறாதவர் உள்ளம், ஆற்று நீர், தானியங்கள், சாதி மலர்கள், புண்ணியர் இருப்பிடம், நவரத்தினங்கள், கல்விமான்கள் ஆகிய இடங்களில் எப்பொழுதும் தங்கியிருப்பாள்.

**அ.பொ:** வாரணம் - சங்கு; துரகம் - குதிரை; சிவிகை - பல்லக்கு; பேரிகை- முரசம்; தனம் - செல்வம்; மதுசூதனன் - மது என்ற அசுரனை அழித்த திருமால்; சாதிமலர் - முல்லைப்பூ. **(உசா)**

## மூதேவி இருப்பிடம்

130. வருகின்ற யாசக ரிடத்துநோ யினருளும்
வாகின்மட மங்கை பாலும்
வனகூகை முகமதில் தீபத்தி னிழலினும்
மட்சூளை யின்புகை யினுங்
குருதிமட வரிநிழ லாடுதூட் புகையினுங்
கொட்டியிடு முத்தூ ளினுங்
குருவரசு நிழல்விளாத் தாணிமர நிழலினுங்
குலைக்குநாய்க் காற்றூ ளினும்
பெருகுதரை தன்னைப் பெருக்கிடுந் தூளினும்
பிணமயா னப்புகை யுளும்
பீறலாங் கந்தையினு மதிகபோ சனரினும்
பேசுபொய் யினரி டத்துங்
கருதரிய மூத்தா ளிருக்குமிட மிவையென்பர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பிச்சைக்காரன், நோயாளி, ஒழுக்கம் கெட்ட மகளிர், கோட்டான் முகம், விளக்கின் நிழல், குயவன் சூளையின் புகை, இரத்தக்கறை, நிறைவில்லாமல் புள்ளி புள்ளியாக அமையும் நிழல், ஆடுகள் நடப்பதால் வரும் புழுதி, கொட்டமுத்துச் செடியின் குப்பை, அரசு, விளா என்ற மரத்தின் அடிகள், இவற்றின் நிழல், நாய்க்கால் புழுதி, வீடு பெருக்கின புழுதி, சுடுகாட்டுப் புகை, கந்தைத்துணி, அதிகமாக உண்ணுபவர் இருப்பிடம், பொய்யர் இடம் ஆகிய இடங்களில் மூதேவி நிலையாகத் தங்கியிருப்பாள்.

**அ.பொ:** வாகு இல் - அழகு அற்ற, கூகை - கோட்டான்; ஆடுதூள் - ஆடு செல்லும் போது எழும் புழுதி; மூத்தாள் - மூதேவி; ஆணிமரம் - ஒரு வகை மரம். **(உஎ)**

## கலிகால இயல்பு

131. தாலமர நிழலில்நல் லோரமுத முண்கினுந்
தப்பாது குடிய ரென்பர்
தனமிகுத் துளபேர்கள் பித்தளை யணிந்திடிற்
றங்கமென் றேமொழிகு வார்
வாலிபந் தன்னிலே யதிசுசில ராகவே
வைகினும் விடனென்பர் காண்
வறுமைசே ரெளியவர்கள் வயிரமது பூண்கினும்
வளையற்க லெனவு ரைப்பார்
சீலந்து றந்தினு மகத்தினக் கிரமமுஞ்
செயுமீன ரைப்புக ழுவார்
சித்தசுத் தியதாகி ஞானநெறி தேர்ந்திடுந்
திவ்வியபெரி யோரை யிகழ்வார்
காலகலி யுகதரும மீதென வுரைத்திடுவர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பனைமரத்தடியில் அமர்ந்து நல்லவர் பால் பருகினும் கள் குடித்தவர் என்பர். செல்வர்கள் பித்தளை அணிந்தாலும் அது தங்கம் எனப்படும். ஒழுக்கமுடைய வாலிபரைக் காமுகன் என்பர். எளியவர் வயிரம் அணியினும் அது வளையல்கள் என்பர். ஒழுக்கம் கெட்ட அக்கிரமக்காரர் கீழ் மக்களைப் புகழ்வர். ஞானிகளை இகழ்வர். இவையாவும் கலிகாலச் செய்திகள்.

**அ.பொ:** தாலம் - பனை மரம்; சுசீலர் - ஒழுக்கமுடையவர்; விடன் - தூர்த்தன்; ஈனர் - கீழ் மக்கள். **(உ_அ)**

## இதற்கிது நன்றெனல்

132. ஈயாத லோபியைப் பல்லெலாங் கெஞ்சுவதி
லேற்றுண்ப தேநன் றதாம்
இடர்தரு வியாதியாற் றேகமிக மெலிவதி
லிறந்திடுவ தேநன் றதாந்
தாயர்தந் தைகள்உவக் காப்பிள்ளை பலரினுஞ்
சற்புத்ர னொருவ னன்றாந்
தன்மனைவி யாட்கஞ்சி யில்வாழ்க்கை செய்வதிற்
சந்நியாச மிக்க நன்றாம்

ஓயாது நிலையிலாச் சொற்பல வுரைப்பதினு
முறுதிமொழி யொன்று நன்றா
உதவாத லோபர்மேற் கவிசொலித் திரிவதினு
முன்னடி துதித்த னன்றாங்
காயத்திரி மந்திரமற வாதவே தியர்துதிசெய்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உலோபியைக் கெஞ்சுவதில் பிச்சை எடுத்து வாழ்தலும், நோயில் பெரிதும் வருந்துவதினும் உயிரை நீத்தலும், மனத்தை வருத்தும் பல பிள்ளைகளைப் பெறுவதினும் ஒரே நல்ல பிள்ளையைப் பெறுவதும், மனைவிக்கு அஞ்சி வாழ்வதில் துறவு மேற்கொள்ளுதலும், பல உபதேசங்களிலும் சிறந்த ஒரே உறுதிமொழியுரைப்பதும், உலோபிகளைத் துதிப்பதை விடுத்து இறைவனைத் துதிப்பதும் மேம்பட்ட செயல்களாம்.

**அ.பொ:** ஏற்று உண்பது - பிச்சை எடுத்து உண்பது. (உகூ)

## கருவத்தால் பங்கமுற்றோர்

133. பிரமனது கெருவமும் மாறன் புகழ்ச்சியும்
பீடுபெறு வாலி யகமும்
பேரிலங் கைக்கரச னாற்றலு மிராட்சசப்
பெண்தாட கைச்ச மர்த்துந்
திரிபுரர்கள் எண்ணமுந் தக்கனது வேள்வியுந்
தீங்குபுரி துரிய னினைவுஞ்
சினங்கொள் கயிடன்மதஞ் சூரபற் பன்றளந்
தீரமிகு வீர வலியு
இரணியன் பிடிமான மும்பகா சூரனது
இயம்பொணா வுயிர் பறிப்பு
மின்னும் பராக்கிரம மிகுந்தபுர வலர்மதமு
மீதகிலம் நிலைநின் றதோ
காரியமா தேடியுங் காணாத பாதனே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** செருக்கினால் மன்மதன், வாலி, இராவணன், தாடகை, திரிபுர அசுரர்கள், தக்கன், துரியோதனன், கயிடபன், சூரபதுமன், இரணியன், பகாசுரன், பெருமிதமுற்ற அரசர் யாவரும் மாண்டு ஒழிந்தனர்.

**அ.பொ:** துரியன் - துரியோதனன்; கயிடவன் - ஓர் அசுரன்; மீது அகிலம் - இவ்வுலகின் மீது. **(௩௦)**

## கடன் ஈயா இடம்

134. **வாத்தியார் கவிவாணர் வறுமையர்க் கடனதுகுரு**
**மறையோர்கண் மந்திர வாதி**
**மாதர்பொது மங்கையர்கள் பண்டிதர்க எஞ்சாத**
**மாவீர ரடிமை யானோர்**
**சாத்திரஞ் சொல்பவர்கள் கருணிகர்கள் தச்சாண்டி**
**தபசிசந் நியாசி தட்டான்**
**சவரகன் கூத்தாடி வேசிகாந் தன்பந்து**
**தாயாதி யிவர்கட் கெல்லாம்**
**பூத்தநற் செல்வர்கட னீந்திடின் மீண்டுமப்**
**பொருள்வந் துறாது கேட்கிற்**
**பொல்லாங்க தாய்ப்பினுங் கைபொருட் சேதமாய்ப்**
**போகுமென வேயு ரைப்பார்**
**காத்தருள்செய் கர்த்தனே நீத்தவ ரகத்தனே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** வாத்தியார், கவிகள், பரம ஏழைகள், குரு, அந்தணர், மந்திரவாதிகள், பரத்தையர், பண்டிதர்கள், வீரர், அடிமைகள், சாத்திரம் பேசுபவர்கள், கணக்குப்பிள்ளை, தச்சன், தட்டான், தபசி, துறவி, நாவிதன், கூத்தாடி, வேசிகளைச் சுற்றித் திரிபவன், உறவினர், தாயாதியர் இவர்களுக்குக் கடன் கொடுத்தால் திரும்பிப் பெற இயலாமையோடு பகைமையும் ஏற்படும்.

**அ.பொ:** கருணிகர் - கணக்குப் பிள்ளை; தச்சாண்டி - தச்சன்; வேசிகாந்தன்- பரத்தையை நாடுவோன். **(௩௧)**

## பயனிலாதவை

135. **கற்பிலா மங்கையர்க் கேழுசுற் றரணும்வெங்**
**காவலு மிருந்து மென்ன**

காஞ்சிரங் கனியதைத் தேன்குடந் தனில்வெகு
காலம திருத்தி யென்ன
அற்புத மாகவே அரியகவி தைகளெலா
மற்பர்மு னுரைத்து மென்ன
அசாத்யநோ யாளருக் கமுதசிந் தாமணி
யரைத்துப் புகட்டி லென்ன
நற்புவியி லேபிறந் தொருசுகிர்த மும்பெறா
நரரிருந் தாவ தென்ன
ஞானநெறி யின்றியே கோடிநூ லோதினும்
லாபமென் னதுபோல வாங்
கற்பனைய முறுவலார் பொற்பயுர் நடஞ்செய்திடு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கற்பிலா மங்கையர்க்குக் காவல், காஞ்சிரங்காயைத் தேனில் ஊற வைத்தல், அற்பர்களிடம் கவிதை உரைத்தல், கொடு நோயாளனுக்கு நன்மருந்து கொடுத்தல், எந்த சௌகர்யமும் இன்றி வாழ்தல், பல நூல் ஓதினும் ஞானம் பெறாதிருத்தல், ஆகியவை பயனற்றவைகளாம்.

**அ.பொ:** காஞ்சிரம் - எட்டி; சுகிர்தம் - நல்வினை;கற்பு - முல்லை; முறுவல்- பற்கள். **(௩௨)**

## இவர்பகை ஆகாதெனல்

136. அற்றார் தமைத்தாங்கு வேந்தருப தேசிக
ரமைச்சர்மிகு பொருள் படைத்தோர்
அரியமந் திரவாதி கபடர்நய வஞ்சகர்
அதிதுட்ட ரொடு கோபர்கள்
கற்றாய்ந்த பாவாணர் பிறர்கள்வர விடுதூதர்
கள்ளமர் புரிசூ ரர்கள்
கருணிகர் வைத்தியர் தவத்தினி லுயர்ந்துமெய்க்
காட்சிதரு சிவயோ கியர்
சற்றாகி லும்மிந்த ஈரெண்ம ரோடுபகை
தான்கொளிற் றுன்ப முளதாஞ்
சர்வசன முங்கொல்ல வந்தகொடு விடமுண்ட
தற்பரா சிற்சொ ருபனே

கற்றா குழாமேய்க்க வுற்றான் றினம்பரவு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஏழைகள், காக்கும் வேந்தர், உபதேசிகர், அமைச்சர், பெருஞ்செல்வர், மந்திரவாதி, கபடர், நயவஞ்சகர், துஷ்டர், முன்கோபிகள், பாவாணர், பிறர் அனுப்பிய் தூதர், வஞ்சனையாகப் போர்புரியும் வீரர், கணக்குப்பிள்ளை, மருத்துவர், தவம் மேம்பட்ட சிவயோகியர் என்ற பதினாறுவரோடும் பகை கொண்டால் துன்பமே ஏற்படும்.

**அ.பொ:** பிறர்கள் - மற்றவர்கள்; சர்வசனம் - எல்லா மக்கள்; தற்பரன் - தானே மேம்பட்டவன்; கற்றாகுழாம் - இளங்கன்றையுடைய பசுக்கூட்டம்.

(௬௬)

## இருந்தும் பயனிலாதவை

137. இரவலர்க் குதவாத நிதிமதியி லாவான
மிசைபொரு ளிலாத பாடல்
இரக்கமில் லாமனது வணக்கமில் லாமதலை
யேந்திழை யிலாஇல் வாழ்க்கை
புரவியில் லாதபடை சதுமறையி லாவேள்வி
புஷ்ப மில்லாத சோலை
புத்திர ரிலாதமனை மந்திரி யிலாவரசு
புகழ்படைக் காத வுடலந்
திரவிய மிலாவிளமை கவிஞரில் லாதசபை
செங்கோ லிலாத நாடு
தியானமில் லாதசெபம் ஆலய மிலாதவூர்
தீரமில் லாத சேனை
கரங்கா லிலாததநு சுவரிலாச் சித்ரமாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஏழைகளுக்கு உதவாத செல்வம், மதி இல்லா வானம், பொருள் இல்லாப் பாடல், இரக்கம் இல்லா மனம், வணக்கம் இல்லாத் தலை, மனைவி

இல்லாத வீடு, குதிரை இல்லாத படை, வேதம் இல்லாத வேள்வி, மலர் இல்லாத சோலை, பிள்ளைகள் இல்லாத வீடு, மந்திரி இல்லாத அரசு, புகழ் படைக்காத உடல், செல்வம் இல்லா இளமை, கவிகள் இல்லாத சபை, செங்கோல் இல்லாத நாடு, தியானம் இல்லாத ஜபம், கோயில் இல்லாத ஊர், வீரம் இல்லாத சேனை, கைகால் இல்லாத உடல், சுவர் இல்லாத சித்திரம் இவை இருந்தும் பயன்படமாட்டா.

**அ.பொ:** மதலை - மகன்; ஏந்திழை - பெண்பால்; தநு - உடம்பு. **(௩௪)**

## கர்வமுடையோர்

138. தனையே புகழ்ந்துபிறர் யாரையு மிகழ்ந்திடுஞ்
சண்டியே தனக் கெருவியாஞ்
சற்றிரங் காதெருது போற்றலையை யாட்டிடு
சழக்கனே மதக்கெருவி யாம்
விநயங்க ளொடுபெரியர் செய்நூ லழிக்கின்ற
விகடனே தமிழ்க் கெருவியாம்
வேசையர்க ளாசையான் மனைவியை வெறுப்பவன்
வெகுமம தைசேர் கெருவியாம்
அனைவோரு மறியவே மதுவுண்டு திரிபவ
னாங்கார மிகு கெருவியாம்
அட்டதிசை யாள்பவன் றுட்டத் தனஞ்செயி
லதிகார கெருவி யென்பார்
கனமான கிருபைவைத் தெனையாண்ட முதல்வனே!
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தன்னைப் புகழ்ந்து பிறரை இகழ்பவன் செல்வச் செருக்கன், ஏழைகளிடம் சற்றும் இரங்காது தலையை ஆட்டுபவன் மதச் செருக்கன், பெரியார் செய்த நூல்களைப் பழிப்பவன் ஆகிய விகடன் தமிழ்ச் செருக்கன், பரத்தையை நாடி மனைவியைப் புறக்கணிப்பவன் மமதைச் செருக்கன், மது உண்டு திரிபவன் ஆங்காரச் செருக்கன், அரசாட்சியில் தீய செயல் செய்பவன் அதிகாரச் செருக்கன் எனச் செருக்குக் கொண்டோர் பலவகைப் படுவர்.

**அ.பொ:** சழக்கன் - கீழ்மகன். **(௩௫)**

## பட்டணச் சிறப்பு

139. பக்கமொரு நாற்காத நீளஞ் சவுக்கமாய்ப்
பலர்கணிறை தருமா வணம்
பனிவாவி மாடமா ளிகைமேடை கோபுரம்
பகரால யங்க ளுடனே
மிக்கரத கசதுரக பதாதிகே தனமாடல்
வேசையர்க ளாடல் பாடல்
வீதியிரு பாலினுந் தாழைகமு கஞ்சோலை
மேவுமொளி சூழு மணிகள்
தக்கபுக ழந்தணர்கள் மன்னர்மந் திரிமுதற்
சகலசா தியரு முளதாச்
சற்சனரொடு அட்டலட் சுமிவாச முள்ளதே
சதுரங்க பட்டண மதாங்
கைக்குளே நெல்லியங் கனியெனக் காட்சிதரு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** நாற்காத அளவு சதுர வடிவினதாய், கடைத்தெரு, குளம், மாடம் மாளிகை, கோபுரம் கோயில், நால்வகைப்படை, உயர்த்தப்பட்டு அசையும் கொடிகள், ஆடல், பாடல், தெருக்களின் இருபக்கமும் தென்னை மரம், கமுகஞ்சோலை, நான்கு குலத்தவர் தெருக்கள், நன்மக்கள் வாழுமிடம், இவற்றுடன் எட்டுவகைத் திருமகளிரும் வாழும் நகரமே சதுரங்கப் பட்டணம் என்று புகழப்படும்.

**அ.பொ:** சவுக்கம் - சதுரம்; ஆவணம் - கடைவீதி; தாழை -தென்னை; அட்டம்- எட்டு என்ற எண். (நூ௯)

## குணம்மாறாதெனல்

140. வேதமந் திரமோதித் தேன்பால் புகட்டினும்
வேம்பது கரும்பா குமோ
வெண்மைதரு சீனிச் சொரிந்துபயிர் செய்யினும்
வெள்ளுள்ளி குணம் மாறுமோ
கோதையர் முலைப்பால் குடித்துவளர் கினுமந்தி
கொடியசேட் டையினீங் குமோ

கோடிமாத் திரையிலே கியம்பல வளிக்கினுங்
குக்கலின் வானி மிருமோ
சாதிமலர் மாலைபோ னெட்டியிற் செய்திடிற்
சற்றேனும் வாச முறுமோ
சற்குணமி லாதவர்க் கெத்தனை யுரைக்கினுஞ்
சண்டிக் குணம் போகுமோ
காதலொடு மாறனை யணைந்தைய னாரையருள்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** வேத மந்திரம் ஓதித் தேனையும் பாலையும் ஊற்றினும் வேம்பு கரும்பு ஆகாது. சீனியை உரமிட்டுப் பயிர் செய்யினும் உள்ளியின் நாற்றம் மாறாது. மகளிரின் பாலை ஊற்றி வளர்த்தாலும் குரங்கின் சேட்டை மாறாது. கோடி மாத்திரைகளும் இலேகியங்களும் உண்ணச் செய்தாலும் நாயின் வால் நிமிராது. நெட்டி ஒரு போதும் மணம் வீசாது. தீயவர்களுக்கு எவ்வளவு உபதேசித்தாலும் தீய குணம் நீங்காது.

**அ.பொ:** குக்கல் - நாய்; மாறனை - மால் தன்னை, விஷ்ணுவை. **(௱௪௰)**

## கருமிகளாவோர்

141. மனிதனென வுருவுகொண் டுனதுதிரு வடியிணை
வணங்கிடா னொரு கருமியா
மனைவிசுத ரலையவே வேசியே கதியென்று
வைகுவோ னொரு கருமியாந்
தனமிக விருக்கவுண் ணாதுடுக் காதுமெய்
தளருவோ னொரு கருமியாஞ்
சந்நியாசி யாகியும் பெண்ணாசை விட்டிடாச்
சண்டாள னொரு கருமியா
மனவாத ஞானநூ லோதியாண வமதை
யகற்றிடா னொரு கருமியாம்
அன்னைதந் தையர்கள்பசி நோய்கொண் டலைந்திட
வருந்துவோ னொரு கருமியாங்
கனகசபை தன்னிலே நடனமிடு பாதனே
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** மனிதனாகப் பிறந்தும் இறைவனை வணங்காதவன், மனைவி மக்கள் வருந்தப் பரத்தையரே கதி என்று வாழ்பவன், செல்வம் இருந்தும் உண்ணாதும் உடுக்காதும் வருந்தி வாழ்வோன், துறவியாகியும் பெண்ணாசை நீங்காதவன், ஞானநூல் ஓதியும் ஆணவம் நீங்காதவன், பெற்றோர் பசித்திருக்கத் தான் மாத்திரம் உண்ணுவோன் ஆகிய பலரும் பலவகைக் கருமிகள் ஆவர்.

**அ.பொ:** சுதர் - மக்கள்; அருந்துவோன் - தான் உண்போன். **(௱௪௧)**

## கருடதரிசனபலன்

142. **ஆதிவா ரந்தனிற் கருடனைத் தரிசிக்கில்**
**அரியபிணி யாவு மகலு**
**மழகுபெறு திங்கண்மங் களவார முந்தொழ**
**அகத்திலுறு துயர்க ளும்போம்**
**நிதிதரு புந்தியுங் குருவார முந்தொழ**
**நெடியசூ னியமு மகலு**
**நிறைவெள்ளி சனிவார முறவுசா ருங்காலை**
**நித்தமுந் தரிசித் திடின்**
**மேதையொடு தனகனக வாகனா திகண்முதன்**
**மேன்மைபெறு செல்வ முளதாம்**
**வேந்தரென வாழ்ந்தே திருக்கண் களிக்கமுடி**
**விற்பரம பதமடை குவார்**
**காதலுட னேபணிசெ யன்பருக் கருளுதவு**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** ஞாயிறு அன்று கருடனைத் தரிசித்தால் பிணி அகலும், திங்களன்று உடலும் உள்ளமும் அழகு பெறும், செவ்வாயன்று துயர்கள் போம். புதனன்றும் வியாழன்றும் தொழச் சூனியம் அகலும். வெள்ளியும் சனியும் தொழ உறவினர் கிட்டுவர். நாடோறும் கருடனைத் தொழப் புத்திக் கூர்மை, செல்வம், வாகனங்கள், மேன்மை யாவும் கிட்டும்.

**அ.பொ:** ஆதிவாரம் - ஞாயிறு; மங்களவாரம் - செவ்வாய்; புந்தி - புதன்; குருவாரம் - வியாழன்; மேதை - நல்ல அறிவு. **(௱௪௨)**

## பதினெண்புராணம்

143. **மதிக்கின்ற பௌடிகங், காந்தமார்க் கண்டேயம்,**
**வாமனங், கூர்மம், லிங்க,**
**மன்னுசிவ, பிரமாண்டம், வாராக, மச்சமிவை,**
**மங்கை பாகன் புராணந்**
**துதிக்கின்ற பாகவதம், வைணவங், காருடந்,**
**தோன்றுநா ரதமா, லதாஞ்**
**சொல்லரிய பிரமமொடு, பதுமம், மிரண்டுமால்**
**சுதனயற் சூரிய வென்பார்**
**விதிக்கின்ற பிரமகை வர்த்தமா தித்தற்கு,**
**மேவுமக் கினித னக்கோ,**
**வெற்றிசே ராக்நேய, புராணமீ ரொன்பதென**
**மிக்கோ ருரைப்பர் கண்டாய்**
**கதிக்கின்ற தொண்டரு ளுதிக்கின்ற சோதியே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** பௌடிகம், காந்தம், மார்க்கண்டேயம், வாமனம், கூர்மம், லிங்கம், சிவம், பிர்மாண்டம், வாராகம், மச்சம், என்ற பத்தும் சிவபுராணம். பாகவதம் வைணவம், காருடம், நாரதம், நான்கு வைஷ்ணவ புராணம். பிரமம், பத்மம் இரண்டும் பிரமபுராணம். பிரம கைவர்த்தம். சூரிய புராணம், ஆக்நேயம். அக்கினி புராணம் இவை *18* புராணங்கள்.

**அ.பொ:** சிவபுராணம் - *10;* விஷ்ணு புராணம் - *4;* பிரம புராணம் - *2;* சூரிய புராணம் - *1;* அக்கினி புராணம் - *1;* ஆக-*18.* **(௫௦)**

## உள்ளூரிற் சிறப்படையாதார்

144. **உள்ளூரில் வேசையர் பணிக்கர்உப தேசிக**
**ளுபாத்தியா ரான பேர்கள்**
**உயர்தவம் புரிகுரவர் மறுதேச மன்னர்க**
**ளோங்குவா தியர் தூதர்கள்**
**தெள்ளுதமிழ் வாணர்கள் கூத்தாடி கோணங்கி**
**செப்படிகள் கற்ற பேர்கள்**

திறமான நாணயர்கள் சோசியர் வைத்தியர்கள்
சிலதொழில் கற்று ளோர்க
ளுள்ளபடி யீரெட்டுப் பேர்களையு மெள்ளளவு
முள்ளூரி லுறுதி கொள்ளா
ருண்மையாக் கள்ளுண்ப ராகிலும் புதியர்தமை
யுலகெலாங் கொண்டா டுவார்
கள்ளகலி யுகமதி னடக்கையிது வாகுமே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உள்ளூரில் வேசையர், நல்ல ஓவியம் சிற்பம் வல்லவர், உபதேசிகர், உபாத்தியாயர், தவசிகள், மற்ற தேச மன்னர், வாதம் புரிவோர், தூதர்கள், தமிழ்ப் புலவர்கள், கூத்தாடிகள், கோமாளிகள், செப்படி வித்தை கற்றவர், நாணயப் பரிசோதகர், சோதிடர், மருத்துவர், சிறு தொழிலாளர்கள், ஆகியவர்களைப் பழக்கம் காரணமாக உரிய மதிப்புடன் போற்ற மாட்டார்கள். புதியராக வந்த கட்குடியயரையும் ஒழுக்க சீலர் என்று போற்றுவர்.

**அ.பொ:** கோணங்கி - கோமாளி, விதூஷகன்; செப்படி - கண்கட்டு வித்தை.

**(சக)**

## இராகம் முப்பத்திரண்டு

145. மண்டலம் புகழும்வே ளாவளி சாரங்க
மாளவி நாரா யணி
மலகரி குறிஞ்சிதே வக்கிரியை பூபாளம்
வாராளி தன்னி யாசி
குண்டநற் கிரியைபல் லதிதேசி சாவேரி
கூர்ச்சரி பட மஞ்சரி
குணகௌளி பௌளிபங் காளந்தே சாட்சரி
கோதில்சீ மேக ரஞ்சி
யண்டர்துதி கைசிகம் காம்போதி காந்தாரி
யாமிலலி தைவ சந்த
மமர்நாட்டை பைரவி யிந்தோள முந்தோடி
யாரிரா மக்கிரி யையுங்
கண்டமெழு ராகங்கண் முப்பத் திரண்டதாங்
கற்பக விராச மேவுங்

கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உலகம் புகழும் வேளாவளி முதலாக இராமக்கிரியை ஈறாகக் கழுத்திலிருந்து ஒலி வேறுபாட்டால் உணரப்படும் இராகங்கள் முப்பத்திரண்டாம்.

**அ.பொ:** அண்டர்துதி - தேவர்களும் போற்றும்; ஆர் - பண்பு நலன் பொருந்திய.

(சரு)

## வாத்தியங்கள்

146. தாளவாத் தியமொடு திறமான மத்தளஞ்
சரமண்ட லந்தாரை யுஞ்
சகமெலா மோசையெழு கின்றபே ரிகையுலகு
சாற்றுசர மணிவாத் தியமு
நீளவாத் தியமதாங் கின்னரியி னொடுமுரசு
நேர்ந்த தவளச் சங்கமு
நேரான கொம்போசை பூரிதம் பட்டமிந்
நீணிலமெ லாமொ லிக்கு
மேளவாத் தியமும்வெகு விதமான நாககரம்
வெற்றிதரு தம்பூ ருடன்
வேடிக்கை யானதோர் டங்கா வுடுக்கையும்
விநோதமிகு மெக்கா ளமுங்
காளவாத் தியமுமெந் நாளினு முழங்கிடு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தாளவாத்தியம் முதலாகக் காளவாத்தியம் ஈறாக உள்ள தெறிப்பன, கொட்டுவன, ஊதுவன, முழக்குவனவாகிய நால்வகை வாத்தியங்கள் இருபது இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

தெறிப்பன - தம் பூறா முதலியன; கொட்டுவன - மத்தளம், மேளம் முதலியன; ஊதுவன - கொம்பு, நாககரம், எக்காளம், காளம் முதலியன. முழக்குவன - பேரிகை, முரசு, சங்கம் முதலியன.

**அ.பொ:** உலகு சாற்று - மக்கள் புகழ்கின்ற; தவள - வெண்மையான; பூரி - நிரம்பிய; மேளம் - மத்தள வகை; காளம் - ஊதுகொம்பு. (சகூ)

## தொண்ணூற்றாறு தத்துவம்

147. பூதங்க ளைந்தாகும் ஞானவிந் திரியமாம்
பொறியைந்து புலனைந் ததாம்
பொல்லாத தொழில்கரும விந்திரிய மைந்ததாம்
புகழ்பெறுங் கரண நாலாந்
தாதுவேழ் குணமூன்று மலமுமோ ரைந்ததாஞ்
சாற்றிடு விகார மாறாந்
தழைத்திடும் வாயுவொரு பானென்பர் மண்டலந்
தானுமொரு மூன்ற தாகும்
ஆதார மாறாகும் வாசல்களு மொன்பதாம்
அவத்தை யைந்தாகு மிக்க
வருமைசேர்ந் துயர்நாடி பத்ததாங் கோசமைந்
தாம்பிணியு மூன்ற தாகுங்
காதல்செய் கருவியிது தொண்ணூற்றொ டாறென்பர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பூதங்கள் ஐந்து, புலன் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு, தாது ஏழு, குணம் மூன்று, மலம் ஐந்து, விகாரம் ஆறு, வாயு பத்து, மண்டலம் மூன்று, ஆதாரம் ஆறு, வாசல் ஒன்பது, அவத்தை ஐந்து, நாடி பத்து, கோசம் ஐந்து, பிணி மூன்று, ஆக தத்துவங்கள் *5+5+5+5+4+7+3+5+6+10+3+6+9+5+10+5+3=96* ஆகும்.

**அ.பொ:** ஒருபான் - பத்து; வாசல்கள் - ஓட்டைகள்; பிணி மூன்று - வாதம், பித்தம், கோழை. **(சச)**

## இதுவரையில் கலியாண்டஅரசர்

148. ஆதிப் பரிச்சித்தைஞ் ஞூறுசென மேசய
னாண்டதுவு முந்நூ றதா
மடவாக வேநரேந் திரனொன்று மூன்றுநூறு
அவன்புதல்வ னெண்ப தொன்று
நீதிபெறு விக்கிரனு மீராயி ரஞ்சாலி
நிறைமூன்று நூற்றைம்பதா

நிதிபோஜ னைம்பதைந் தெண்டிங்க ணானூறு
நிகரில்பிர தாப ருத்ரன்
சாதிமநு சோழனிரு நூற்றொடிரு பத்திரண்
டாம்ராயர் மூவைம் பதாஞ்
சமர்புரி துலுக்கரைஞ் ஞூற்றியே ழைந்ததாஞ்
சாற்றுபரி தாபி முதலாக்
காதிகலி யுகமதிற் கும்பினி யரசுகாண்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பரீட்சித்து *500* ஆண்டு, சனமே சயன் *300*, நரேந்திரன் *301*, அவன் புதல்வன் *81*, விக்கிரன் *2000*, சாலி *350*, போஜன் *55* ஆண்டு *8* மாதம், பிரதாப ருத்திரன் *400*, மனுச் சோழன் *222*, ராயர் *150*, துலுக்கர் *535*, பரீதாபி ஆண்டு முதல் கும்பினியார் ஆட்சி இக்கலி காலத்தில் நிகழ்வது என இன்றைக்கு *169* ஆண்டுகளுக்கு முன் இந்நூலினை இயற்றிய சேலம் சிதம்பரப் பிள்ளை குறிப்பிடுகின்றார். **(சரு)**

## தோத்திரம் – 149, 150

149. சுக்கிலசு ரோணிதந் திரண்டுருவ தாயதிற்
தோல்நரம் பெலும்பு மாகித்
தொல்லைமல பாண்டத்தி லீரைந்து திங்களாய்த்
துவண்டுகரு வூர் கடந்தே
யொக்கவைம் பூதங்கள் கோட்டைகொண் டேமாயை
யுலகினி லுதித்து நாளு
மூரினடை நூலோதி நாரியிடை மயன்மீறி
யுட்கவ லைசமு சாரமாம்
இக்கடலின் மூழ்கிவலை சிக்குமா னென்னவே
யிடறுழன் றதுபோ துமே
யிப்பிறப் பதுநீக்கி மரணாந்த காலமு
னெழுந்தருளி யென்ற னுடைய
சுக்கிஷமெ லாந்தவிர்த் துனதுபத மேயருள்செய்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சுக்கிலம் சுரோணிதம் கலப்பால் உருவாகித் தோல், நரம்பு, எலும்பு திரண்டு மலப்பாண்டத்தில் பத்து மாதம் தங்கிக் கருப்பையை விடுத்து ஐம்பூதச் சேர்க்கையாகிய உலகில் பிறந்து, கல்வி பயின்று, பெண் மோகம் கொண்டு, கவலை மிகுந்த உலகியலாகிய கடலில் முழுகி வலையில் சிக்கிய மான் போல உழலும் இப்பிறவிப் பிணியைப் போக்குமாறு ஆசிரியர் கயிலாய நாதனை வேண்டுகிறார்.

**அ.பொ:** நாரி - பெண்கள்; மயல் - மயக்கம்; சமுசாரம் - உலக வாழ்க்கை; கக்கிஷம் - வருத்தம். **(சகூ)**

150. **அஞ்சுதே நெஞ்சமுங் கிஞ்சிதம தாகிலு**
**மடங்கியருள் பெறவு மில்லே**
**னடவிமலை குகைதனிற் சருகிலை யருந்தியே**
**யருந்தவ மியற்றியு மிலேன்**
**பஞ்சவிந் திரியம தடக்கிலே னுன்றிருப்**
**பணிவிடை புரிந்து மில்லேன்**
**பத்தியுடன் அஞ்செழுத் தோதுகில் லேனருட்**
**பரமனே யானுன் பதந்**
**தஞ்சமென நம்பினே னேழைபங் காளனே!**
**தர்மவர்த் தனி பங்கனே!**
**சருவசன ரட்சகா! வெனதுசஞ் சலமெலாந்**
**தவிர்த்தருள்வ துனது கடனே**
**கஞ்சன்மா லிந்திரன் றேவர்முனி வோர்தொழுங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** தாம் நெஞ்சின் இயக்கம் அடங்குதல், அருந்தவம் இயற்றல், ஐம்பொறிகளை அடக்குதல், திருவைந்தெழுத்து ஓதல், முதலியன செய்யா விடினும் சிவபெருமான் திருவடிகளைத் தமக்குத் தஞ்சம் என நம்பியதால் தம் மன அலைச்சலைப் போக்குமாறு அப்பெருமானை வேண்டுகிறார்.

**அ.பொ:** கிஞ்சிதம் - குறைவு; அடவி - காடு; தஞ்சம் - பற்றுக்கோடு; ஏழை- பார்வதி; கஞ்சன் - பிரமன். **(சஎ)**

## சுகமகிழ்ச்சி

151. துதிவாணி திருவருளும் விசயநல் லாடையுந்
துணிவறிவு சௌபாக் கியமுஞ்
சுகமான போகமுந் தனதானிய லாபமுஞ்
சொல்லரிய மைந்தர் வளமு
மதிபெருங் கல்வியொடு ஞானமுந் தர்மமு
மகத்தான பேர்க ளுறவும்
வண்மைமிகு கீர்த்தியு மிராப்பகன் மகிழ்ச்சியும்
வயதுசம் பூரணா யுளும்
அதிகசுந் தரமான தர்மவர்த் தனியுமை
யமையநீர் இருவ ருந்தாம்
அடைவதற் கரியவிவ் வைந்நான்கு வகையுநும்
அடியனேற் கருள்புரி குவீர்
கதிர்மதி யுடன்றேவர் கினரர்காந் தருவர்சூழ்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தமக்குச் சரசுவதி திருவருள், வெற்றி, நல்ல ஆடை, துணிவு, அறிவு, சௌபாக்கியம், சுகபோகம், தனதானிய லாபம், மைந்தர் வளம், கல்வி, ஞானம், தருமம், சான்றோர், நட்பு, கீர்த்தி, இரவு, பகல் மகிழ்ச்சி, நீண்ட ஆயுள் ஆகியவற்றை அம்மையப்பனாகிய இறைவன் அருள வேண்டும் என்று வழிபடுகிறார்.

**அ.பொ:** வாணி - சரசுவதி; மகத்து - பெருமை; சம்பூர்ணம் - நிறைவு; தர்மவர்த்தனி - அறத்தை வளர்த்தவள். **(சஅ)**

## கற்புடைய பெண்டிரியல்பு

152. தூங்கணா யகரினிற் றெய்வம்வே றிலையெனச்
சந்தத நினைந்தவர் சொலைத்
தட்டாது கோபம்வர வொட்டாது திட்டமாச்
சாற்றுபணி விடைகள் செய்தே
பொங்கமா யவர்குறிப் போர்ந்தொழுகி நித்தலும்
போந்தபெரி யோர்க் கருத்திப்

பிரிந்தவ ருளங்களித் திடவிருந் தாற்றியிரு
போதுநன் னீரா டியே
திங்கள்வத னத்திலே தங்குபொட் டிட்டுமெய்த்
தேசுற அலங்க ரித்துத்
தினமுநா யகனுண்ட பின்னுண்டு முன்னெழுஞ்
செல்விகற் புடைய ளாவள்
கங்கணந் திரிசூல மான்மழு தரித்தவா!
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கணவனே தெய்வம் எனக் கருதுதல், கோபம் கொள்ளாமை, கணவன் குறிப்பு அறிந்து ஒழுகுதல், பெரியோர்களை உபசரித்தல், நெற்றியில் பொட்டிட்டு அலங்கரித்துக் கொள்ளுதல், நாளும் இருபொழுதும் நீராடுதல், நாயகன் உண்டபின் உண்டு உறங்கியபின் உறங்கி அவன் விழித்தெழுமுன் எழுந்திருத்தல் போல்வன கற்புடைய மகளிர் இயல்புகளாம்.

**அ.பொ:** பொங்கம் - நிறைவு; நித்தலும் - நாள்தோறும்; அருந்தி - உணவு உண்பித்து; இருபோது - காலை மாலை; கங்கணம் - கைவளையல். **(சகூ)**

## வேசையரியல்பு

153. புருடனைக் கண்டவுட னேகத விடுக்கினிற்
போயொளித் திடுவர் பின்பு
பொல்லாத தாய்க்கிழவி தன்னையவர் பாலினிற்
போக்கிவச னிக்க விடுவார்
மருடருங் கண்ணினார் சற்றருகி லேவந்து
மயல்விளைத் துறவு செய்வார்
மன்னநின் னடிகளிச் சிறுகுடிலில் வைத்ததெம்
மாதவ மெனச் சொல்லுவார்
அருணிறைந் தவர்போல விருகையி னாற்றழுவி
யாவலொடு முத்த மிடுவார்
ஐயநீ பிரியிலெம துயிர்பிரியு மென்றவர்கள்
ஆவி முழுதும் பறிப்பார்
கருமையணி வேசையர்கள் முறைமையிது காணென்பர்
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** புருடனைக் கண்டவுடன் கதவிடுக்கில் போய் ஒளிந்து கொள்ளல், தாய்க்கிழவியை அவனிடம் பேசவிடுதல், பிறகு கணவனிடம் வந்து மயக்கம் உறுத்தி உறவாடுதல், அவன் வருகையைப் புகழ்ந்துரைத்தல், அன்புடையவர் போல ஆரத்தழுவி முத்தமிடல், அவன் பிரிவைப் பொறுக்காதவர் போல நடித்து அவன் பொருள், உயிர் யாவற்றையும் பறித்து வாழ்தலே வேசியருடைய பண்புகளாம்.

**அ.பொ:** வசனிக்க – பேச; மருள் – மயக்கம்; கருமை – வஞ்சனை.

**(ருO)**

## வருடமறுபதுக்கும் மாதம் பிறக்கும் நாள்

154. **ஆதியிற் சித்திரை மாதம் பிறக்குநா**
**ளன்றைத் தினங்கார்த் திகை**
**யானமார் கழியுமறு நாளினி லுதித்திடு**
**மதிக்கன்னி மூன்றி லாகு**
**நீதிதை யாடியும் வைகாசி நான்கிலா**
**நிகழ்த்தும் ஐப்பசி யாறிலா**
**நிறைமாசி யைந்திலா மானியா வணியுட**
**னேர்ந்தபங் குனி யேழிலா**
**மாதமுந் நான்குமுன் சொன்னவா ரங்களில்**
**வழுவாம லேயு திக்கும்**
**வருடங்க ளறுபதினு மாதம் பிறக்கின்ற**
**வாரங்க ளிவ்வித மதாங்**
**காதக ரகத்திலெய் தாதொரு பிரமமே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** சித்திரை மாதம் எந்தக் கிழமையில் பிறக்கிறதோ அதே கிழமையில் கார்த்திகை மாதம் பிறக்கும். அடுத்த கிழமையில் மார்கழி, மூன்றாவது கிழமையில் புரட்டாசி, நான்காவது கிழமையில் தை மாதம், ஆடி மாதம், வைகாசி மாதம், ஆறாவது கிழமையில் ஐப்பசி மாதம், மாசி மாதம் ஐந்தாவது கிழமையில், பங்குனி மாதம் ஏழாவது கிழமையில் ஆனி மாதம், ஆவணி மாதம் பிறக்கும் என்று சோதிட நூலார் கணக்கிட்டுள்ளனர்.

எடுத்துக்காட்டாக இந்த விக்கிரம ஆண்டு சித்திரை மாதம் வியாழக்கிழமையில் பிறந்துள்ளது. கார்த்திகை மாதப் பிறப்பும் வியாழக்கிழமை. மார்கழி மாதப் பிறப்பு வெள்ளிக்கிழமை, புரட்டாசி சனிக்கிழமை, தை ஞாயிறு, ஆடி, வைகாசி ஞாயிறு, ஐப்பசி செவ்வாய், மாசி திங்கள், பங்குனி புதன் கிழமையில் பிறக்கும் என்பதை அறிக.

**அ.பொ:** கன்னி - புரட்டாசி; காதகர் - கொடியவர். **(ருக)**

## வருடம் அறுபதுக்கும் கிழமை நட்சத்திரம், திதி, நாழிகை, பிறப்பு

**155.** **முன்வருட முதயநாள் பின்வருட மறுதின**
**முளைத்திடும் வருடங் கடா**
**முளைத்தநட் சத்திரம் பதினொன்றி லுதயமா**
**முறைவருட நட்சத் திரம்**
**பின்றிதி பிறந்திடும் மீராறு தன்னிலே**
**பிறக்கின்ற வருட மாகும்**
**பிறந்தமுன் னாழியீ ரெட்டின்மேற் றோன்றிடும்**
**பிசகாமல் வகைவிப ரமாய்**
**வன்மையில் லாமலே வருடநட் சத்திரம்**
**வாரங்க டிதிக ளுடனே**
**வளர்நாழி கைத்தொகையு மிவ்விதம தாமென**
**வழுத்தினர் செழித்த நூலோர்**
**கன்மவினை யொழியவே நன்மையரு ளையனே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** முதல் வருடம் பிறந்த மறு கிழமையில் மறு வருடம் பிறக்கும். இந்த விக்கிரம வருடம் வியாழக்கிழமையில் பிறந்துள்ளது. விஷு வருடம் வெள்ளிக்கிழமையில் பிறக்கும். முதல் வருடம் பிறந்த நட்சத்திரத்தின் *11*-ஆம் நட்சத்திரத்தில் அடுத்த வருடம் பிறக்கும். விக்ரம வருடம் ஆயில்யத்தில் பிறந்துள்ளது. விஷு வருடம் மூல நட்சத்திரத்தில் பிறக்கும். முதல் வருடம் பிறந்த திதியின் *12*-ஆம் திதியிலே மறு வருஷம் பிறக்கும். விக்கிரம வருடம் தசமியில் பிறந்துள்ளது. விஷு வருடம் சப்தமி திதியில் பிறக்கும். முதல் வருடம் பிறந்த நாழிகைக்கு மேல் *16* நாழிகை கழித்து மறு வருடம் பிறக்கும். விக்கிரம வருடம் *22* நாழிகைக்குப் பிறந்தது. விஷு வருடம் *38* நாழிகைக்குப் பிறக்கும்.

எனவே, முதல் வருடப் பிறப்பின் அடுத்த கிழமையில் அடுத்த *11*-ஆம் நட்சத்திரத்தில், அடுத்த *12*-ஆம் திதியில், அடுத்த *16*-ஆம் நாழிகையில் மறு வருடம் பிறக்கும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. **(ருஉ)**

## கலியுகமும் சாலிவாகன சகாப்தத் தொகையும்

156. **பிரித்திடு மறுபதை யெண்பத்தி ரண்டினிற்**
**பெருக்கிக் கணக்காக் கவே**
**பேர்பிர பவமுத னடக்கின்ற வருடம்வரை**
**பிசகாது தொகை யானதி**
**லுரைத்தபனி ரண்டுங் கழித்திடக் கலியாண்டு**
**ளோங்கிய சகாப்த வகைகே**
**ளுள்ளபடி யறுபது மிருபதோ டொன்பானை**
**யொட்டிப் பெருக்கி யேதான்**
**விரித்தபிர பவமுத னடக்கும்வரு டம்வரையில்**
**விடாதுதொகை கூட்டி யதனில்**
**விளம்புபதி னொன்றுங் கழித்திடச் சகாப்தமதின்**
**விபரமிது வென்பர் மேலோர்**
**கரத்தினின் மான்மழு தரித்திடுங் கடவுளே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** இந்தக் கயிலாச நாதர் சதகம் *169* ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது. அப்பொழுது கலியுக ஆண்டு *4932*. இவ்வாண்டு கலியுக ஆண்டு *5101*. இந்நூல் இயற்றப்பட்ட சாலிவாகன சகாப்தம் *1753*. இப்பொழுது *1922-23*. எனவே, இந்நூல் *169* வருடம் முற்பட்டது அப்பொழுது கணக்கிடப் பட்ட விபரம் பின்வருமாறு.

*60* ஐ *82* ஆல் பெருக்கிப் பிரபவ முதல் இப்பொழுது நடக்கும் ஆண்டுவரை வரும் எண்ணிக்கையில் இரண்டைக் கழித்து மீதியைக் கூட்டினால் கலி ஆண்டு $(60 \times 82) + 14 - 2 = 4920 + 12 = 4932$. பிரபவ முதல் விக்கிரம முடிய *14* வருடம். *2* ஐக் கழித்தால் $12\ (60 \times 82) + 12 = 4932$. *60* ஐ *29*ஆல் பெருக்கிப் பிரபவ முதல் இப்பொழுது நடக்கும் ஆண்டு வரை கூட்டி ஒன்றைக் கழித்தால் சாலி வாகன ஆண்டு. $(60 \times 29) + 114 - 1 = 1730 + 13 = 1753$.

பாடலில் பன்னிரண்டு சொல்லப்பட்ட இரண்டு. விளம்புவதின் ஒன்று என்று கொள்க. **(ருசு)**

## மாதம் பன்னிரண்டுக்கும் நட்சத்திர மறிவது

157. கனமான சித்திரைத் திங்கணட் சத்திரங்
கண்டதே யொன்ற தாகுங்
கருதரிய ரிஷபத்தில் ஐந்துஆனி யொன்பதாங்
கடகமோர் பதின்மூன் றதாந்
துனிசிங்க மஃதுபதி னேழ்கன்னி மூவேழ
தாந்துலா மூவெட் டதாந்
தொடுகார்த்தி யிருபதேழ் மார்கழி யிரண்டதாஞ்
சொன்மகர நாலா குமே
செனிகும்ப மாறதா மீனமஃ தொன்பதாஞ்
சித்திரைத் திங்கண் முதலாத்
திகழ்கின்ற மாதங்கள் பனிரண்டு மிவ்விதஞ்
சேர்ந்துவரு நட்சத் திரங்
கனகசபை நாதனே யெனதுகலி நீக்கியருள
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சித்திரை மாதம் பிறந்த நட்சத்திரத்தை முதல் நட்சத்திரமாகக் கொண்டு கணக்கிட்டால் வைகாசி மாதம் பிறக்கும் நட்சத்திரம், முதல் நட்சத்திரக்கு *5*-ஆவது, ஆனி *9*-ஆவது, ஆடி *13*-ஆவது, ஆவணி *17*-ஆவது, புரட்டாசி *21*-ஆவது, ஐப்பசி *24*-ஆவது, கார்த்திகை *27*-ஆவது, மார்கழி *2*-ஆவது, தை *4*-ஆவது, மாசி *6*-ஆவது, பங்குனி *9*-ஆவது நட்சத்திரத்தில் மாதம் பிறக்கும் என்று கணக்கிடுக.

**அ.பொ:** ரிஷபம் - வைகாசி; கடகம் - ஆடி; சிங்கம் - ஆவணி; கன்னி - புரட்டாசி; துலாம் - ஐப்பசி; மகரம் - தை; கும்பம் - மாசி; மீனம் - பங்குனி.

**(ருச)**

## வருடம் அறுபதுக்கும் பஞ்சாங்கப்பிறப்பு

158. பங்குனித் திங்களி லுகாதி பிறந்தநாள்
பாருலகி லரச னென்பார்
பத்திதரு சித்திரை பிறந்தநாண் மந்திரி
பகர்சிம்ம சேனா பதி

யங்குவரு மாடிநாள் பயிர்தனக் குடையவ
னானதனு தானி யாதியாம்
ஆனிவள் ளந்தாங்கி தனபதி மகரமைப்
பசியரச வர்க்கா பதி
யிங்கானி யாதிரை யுதித்தநாண் மேகாதி
பதியென வியம்பு வார்கள்
ஈராறு மாதம் பிறந்தநாட் கதிகார
மீதென்பர் கணித நூலோர்
கங்கிலாப் புதியபஞ் சாங்கபல மிவ்வணங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** பங்குனியில் தெலுங்கு வருடப் பிறப்பு நாள் - அரசனுக்கு அதிகாரம். சித்திரை பிறந்த நாள் - மந்திரிக்கு அதிகாரம். ஆவணி பிறந்த நாள் - சேனாபதிக்கு அதிகாரம் ஆடி பிறந்த நாள் - பயிர் தனக்கு உடையவனது அதிகாரம். மார்கழி பிறந்த நாள் - தானியம் முதலியவற்றிற்கு அதிகாரம். ஆனி பிறந்த நாள் - நீர்ப் பெருக்கிற்கு அதிகாரம். தை பிறந்த நாள் - செல்வமுடையவனுக்கு அதிகாரம். ஐப்பசி பிறந்த நாள் - அரச வர்க்கத்தினருக்கு அதிகாரம். ஆனி மாதம், திருவாதிரை நட்சத்திரம் பொருந்தும் நாள் மேகாதிபதியான இந்திரனுக்கு அதிகாரம். மற்ற வைகாசி, புரட்டாசி, கார்த்திகை, மாசி மாதப் பிறந்தநாள் பயன் பாடலில் கூறப்படவில்லை.

**அ.பொ:** சிம்மம் - ஆவணி; அர்க்கம் - பொன்; மகரம் - தை; மேகர்திபதி - மேகங்களின் தலைவனான இந்திரன்; கங்கு - அளவு. (ருரு)

## மாதம் பன்னிரண்டுக்கும் அமாவாசைவரும் நட்சத்திரம்

159. சித்திரைக் ககபதி வைகாசி ரோகணி
சீரானி திருவா திரை
சேருமாடிப் பூசமாஞ் சிங்க மகமாந்
திகழ்புரட் டாசி யுத்ரம்
மற்றுலாஞ் சோதியாங் கார்த்திகைக் கனுடமா
மார்கழியி னுக்கு மூல
மகரமுத் ராடமா மாசியி லவிட்டமெய்
வளர்பூரட் டாதி மீன

மொத்தவம் மாவாசை யீராறு மாதமு
முதித்து வருநட் சத்திர
முண்மையிது வாகுமென வன்மைபெறு பெரியோ
ருரைத்தனர் கணித நூலிற்
சுத்தனே யத்தனே சித்தம்வைத் தெனையாண்ட
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சித்திரை- அசுபதி ஐப்பசி - சுவாதி
வைகாசி - உரோகணி கார்த்திகை - அனுடம்
ஆனி - திருவாதிரை மார்கழி - மூலம்
ஆடி - பூசம் தை - உத்தராடம்
ஆவணி - மகம் மாசி - அவிட்டம்
புரட்டாசி - உத்தரம் பங்குனி - பூரட்டாதி

ஆகிய நட்சத்திரங்களில் அமாவாசை வரும். (நுசூ)

## மாதம் பன்னிரண்டுக்கும் பௌர்ணமி வரும் நட்சத்திரம்

160. சித்திரைத் திங்களிற் பௌரணை யுதிப்பதே
சித்திரை நட்சத் திரம்
சேர்ந்தவை காசியில் விசாகநட் சத்திரந்
திகழானி கேட்டை யாகு
மத்திபெறு கடகத்தி லுத்தரா டம்மா
மாவணி யவிட்ட மாகு
மதிகன்னி மதிபூரட் டாதியைப் பசிகார்த்தி
கைமாத மஸ்வனி யதா
மற்றமார் கழிமாத மான்றலை, தைப்பூச
மாசிமக மீன முத்ர
மாதமீ ராறினும் தவறாது பௌரணை
வருகுநட் சத்திர மாகுங்
கத்தியலை யாதுபரி சுத்தவெனை யாண்டருள்செய்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:**

| | | | |
|---|---|---|---|
| சித்திரை | - சித்திரை | ஐப்பசி | - அசுபதி |
| வைகாசி | - விசாகம் | கார்த்திகை | - கார்த்திகை |
| ஆனி | - கேட்டை | மார்கழி | - மிருகசீரிடம் |
| ஆடி | - உத்தராடம் | தை | - பூசம் |
| ஆவணி | - அவிட்டம் | மாசி | - மகம் |
| புரட்டாசி | - பூரட்டாதி | பங்குனி | - உத்தரம் |

ஆகிய நட்சத்திரங்களில் பௌர்ணமி வரும்.

(பாடலில் உத்திரட்டாதி என்பது உத்தராடம் எனத்திருத்தப்பட்டுள்ளது).

**அ.பொ:** மான்தலை - மிருகசிரீடம். **(௱௬௰)**

## கிழமை, நட்சத்திரம் இவற்றில் அமிர்தயோகம்

161. மூலதிரு வோணமு மிரேவதியு மஸ்தமு
மூவுத்ர முடன ருக்கன்
மோதுமான் றலைசோதி புனர்பூசந் திருவோண
மோடுருளி சோம வார
மோலவுத் திரட்டாதி ரோகணியு மூலமு
முத்திர முமங் காரக
னுத்திரட் டாதிமுப் பூரம்உத் ரங்கீர்த்தி
யுயர்புதன் சோதி குதிரை
சூலமக மிகுபூசம் வியாழநா ளிரேவதி
துரகமு மஸ்த மூலஞ்
சுக்கிரவா ரஞ்சதைய ரோகணி மகங்கீர்த்தி
சோதியுஞ் சனிநா ளுறுங்
காலமிது வாநாள்க ளமுதயோ கங்களாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிற்றுக்கிழமை - மூலம், திருவோணம், இரேவதி, ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தாரட்டாதி - *7;* திங்கட்கிழமை- மிருகசீரிடம், சுவாதி, புனர்பூசம், திருவோணம், உரோகணி - *5;* செவ்வாய்க்கிழமை- உத்தரட்டாதி, உரோகணி, மூலம், உத்தரம் - *4;* புதன் கிழமை - உத்தரம், உத்தரட்டாதி, பூரம், பூராடம், பூரட்டாதி - *5;* வியாழக்கிழமை - சுவாதி, அசுபதி, சூலம், மகம், பூசம்,

(சூலம், இரேவதி) - 5; வெள்ளிக்கிழமை- இரேவதி, அசுபதி, அஸ்தம், மூலம்-4; சனிக்கிழமை - சதயம், உரோகணி, மகம், கார்த்திகை, சுவாதி - 5.

**அ.பொ:** உருளி - உரோகணி; அங்காரகன் - செவ்வாய். **(௫அ)**

## கிழமை, நட்சத்திரத்திம் இவற்றில் மரணயோகம்

162. **அனுடமுங் கேட்டையு மகமும் விசாகமு**
**மவிட்டமிவை யாதி வார**
**மானபூ ரட்டாதி கிர்த்திகை விசாகமோ**
**டமைமகஞ் சோம வார**
**முனுசதைய மாதிரை விசாகபூ ராடமிவை**
**யோங்குமங் களவாரநா**
**ளுற்றரே வதியஸ்த துரகமூ லம்புந்தி யுரோணிமான்**
**றலைகார்த் திகை**
**யொனுசதைய மாதிரை யுத்திரங் குருவார**
**முரோகணி மகங் கேட்டையா**
**மோணமா யிலிபூச மரணயோ கம்வெள்ளி**
**யுத்திரம் பூரட்டாதி**
**கனசனியி லாயிலிய மஸ்தம்ரே வதிசித்ரை**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** ஞாயிற்றுக்கிழமை - அனுசம், கேட்டை, மகம், விசாகம், அவிட்டம்-5; திங்கட்கிழமை - பூரட்டாதி, கார்த்திகை, விசாகம், மகம் - 4; செவ்வாய்க்கிழமை - சதயம், ஆதிரை, விசாகம்,பூராடம் - 4; புதன் கிழமை- இரேவதி, ஹஸ்தம், அசுபதி, மூலம் - 4; வியாழக்கிழமை - உரோகணி, மிருகசீரிடம், கார்த்திகை, சதயம், ஆதிரை, உத்தரம் - 6; வெள்ளிக்கிழமை- உரோகணி, மகம், கேட்டை, ஓணம், ஆயிலியம், பூசம் - 6; சனிக்கிழமை- உத்தரம், பூரட்டாதி, ஆயிலியம், ஹஸ்தம், ரேவதி, சித்திரை - 6. **(௫௯)**

## திதியில் அமுதயோகம்

163. **குருவுக்கு நவமியுஞ் சதுர்த்தசித் திதியுடன்**
**கூடினா லமிர்த யோகங்**
**கொடுஞ்செவாய் நாயிறு முதற்றிதியே காதசி**
**குணமான சஷ்டி யுடனே**

தரும்புகர் திங்களுந் துதிகை துவாதசி
தம்மினல் லமிர்த யோகந்
தனிபுதன் திரையோதசி திருதிகையு மட்டமி
தான்கூடி லமிர்த யோகங்
கரியசனி தசமியொடு கூடியே வந்திடிற்
கனமான வமிர்த யோகங்
காசினியி லிந்நாட்க டிதியமிர்த யோகமாக்
கழறினார் கணித நூலோர்
கரிமுகனை யுங்கந்த சாமியையு மீன்றவா
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிற்றுக்கிழமை - பிரதமை, ஏகாதசி, சஷ்டி வந்தால் அமுதயோகம்; திங்கட்கிழமை - துதியை, துவாதசி வந்தால் அமுதயோகம்; செவ்வாய்க்கிழமை - பிரதமை, ஏகாதசி, சஷ்டி வந்தால் அமுதயோகம்; புதன் கிழமை - திருதியை, அஷ்டமி, திரயோதசி வந்தால் அமுதயோகம்; வியாழக்கிழமை - நவமி, சதுர்த்தசி, வந்தால் அமுதயோகம்; வெள்ளிக்கிழமை - துதியை, துவாதசி, திரயோதசி வந்தால் அமுதயோகம்; சனிக்கிழமை - தசமி வந்தால் அமுதயோகம்.

**அ.பொ:** புகர் - வெள்ளி. **(சுO)**

## கிழமை திதிகளில் தத்தயோகம்

164. இரவியிற் கீராறு திங்கள்பதி னொன்றதாம்
இயைந்த செவ்வாய் பஞ்சமி
யினியபுத னுக்குமே ரண்டுபொன் னற்காறு
இடும்புகர்க் கெட்டு மாமே
சரசமில் லாச்சனிக் கொன்பதிவ் விதநாட்கள்
தத்தயோ கமதா குமே
சகலசுப காரியங் களுஞ்செய்ய லாகாது
தாரித்திர னாஞ் செனிக்கிற்
புரமதின் மனைகோல லாகாது தீமைகள்
பொருந்துமென மேலோர் கண்முன்
புகன்றிட்ட சோதிடப் படியாக அடியனும்
புகன்றனன் புவிய தனிலே

கரதல கபாலனே கண்ணுதன் மூர்த்தியே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிற்றுக்கிழமை - துவாதசி வந்தால் தத்தயோகம்; திங்கட்கிழமை-ஏகாதசி வந்தால் தத்தயோகம்; செவ்வாய்க்கிழமை - பஞ்சமி வந்தால் தத்தயோகம்; புதன் கிழமை - பஞ்சமி வந்தால் தத்தயோகம்; வியாழக்கிழமை - துதியை வந்தால் தத்தயோகம்; வெள்ளிக்கிழமை - அஷ்டமி வந்தால் தத்தயோகம்; சனிக்கிழமை - நவமி வந்தால் தத்தயோகம். இந்த நாள்களில் சுபகாரியம் செய்யக்கூடாது.

**அ.பொ:** இரவி - ஞாயிறு; புகர் - சுக்கிரன், வெள்ளிக்கிழமை நட்சத்திரம்.

(சுஐ)

## தரித்திரயோகம்

165. அனுடமொடு நாயிறும் முத்திரா டந்திங்க
ளங்கார கன்சதை யமும்
அசுவதி புதன்வார மிருகசீ ரிடங்குரு
ஆயிலிய சுக்கிர வாரஞ்
சனிவார மஸ்தமுங் கூடிவரு மாயினது
தாரித்ர யோக மென்பார்
தனம்புதைத் திடவுநன் மருந்துணவு மாகாது
தானியம் விதைக்கொ ணாது
முனியோட்ட லாகாது கடன்கொளிற் றீராது
முத்தணிகள் பூண லாகா
முதல்விருந் தாகாது சபைகூடி லவமானம்
முழுமிடிய னாமுதிக்கிற்
கனியினுக் குலகைவலம் வந்தவன் றந்தையே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிற்றுக்கிழமை - அனுட நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்; திங்கட்கிழமை - உத்தராட நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்; செவ்வாய்க்கிழமை - சதய நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்; புதன் கிழமை-அசுபதி நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்; வியாழக்கிழமை - மிருகசீரிட நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்; வெள்ளிக்கிழமை - ஆயிலிய நட்சத்திரம்

வந்தால் தரித்திர யோகம்; சனிக்கிழமை - ஹஸ்த நட்சத்திரம் வந்தால் தரித்திர யோகம்.

இந்நாள்களில் பணத்தைப் புதைத்து வைத்தல், மருந்து உண்ணுதல், தானியம் விதைத்தல், பேய் பிசாசு ஒட்ட முற்படுதல், கடன் வாங்குதல், புது அணிகள் பூணுதல், முதலில் விருந்து வைத்தல், சபை கூடித் தீர்மானித்தல், முதலியன நிகழ்த்தத் தகாதவை. **(சாஉ)**

## நட்சத்திரமும் திதியும் பகையாகும் மரணயோகம்

**166.** **அனுடமுந் துதிகையும் மூவுத்தி ரங்கிர்த்தி**
**கையரு மகம் பஞ்சமி**
**யதிசஷ்டி ரோகணி சித்திரை சுவாதியோ**
**டானதுர வாதி சியுமே**
**மனுவஸ்த மூலமுஞ் சத்தமி தனிற்கூடின்**
**மரணயோ கங்க ளாகும்**
**அதிகரும மாகாது சோபனஞ் செயில்விதவை**
**மாவித்தை சொலின் மூடனாந்**
**தனதானி யங்கண்முத லுண்ணினோய் வறுமையாந்**
**தடம்போகி லுடன் மரணமாந்**
**தப்பாது முன்னூ லுரைத்தபடி யானுமிச்**
**சதகத்தி லுஞ்செப்பி னேன்**
**கனமான மிடியோட வடியார்க ணடமாடு**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** துதியைத் திதிக்கு - அனுச நட்சத்திரம் பகை. பஞ்சமி, சஷ்டி திதிக்கு- உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, கார்த்திகை, மகம் ஆகிய நட்சத்திரங்கள் பகை; துவாதசி திதிக்கு - உரோகணி, சித்திரை, சுவாதி இவை பகை. சப்தமி திதிக்கு ஹஸ்தம், மூலம் ஆகியவை பகை. இவற்றில் நல்ல காரியங்களைத் தொடங்கினால் சிறப்புறாது.

**அ.பொ:** சோபனம் - கலியாணம்; தடம் - வழி; மிடி - வறுமை. **(சாஙு)**

## நட்சத்திரங்களுக்கும் கிழமைக்கும் பகை

**167.** **ஆதிவா ரம்பரணி சோமவா ரஞ்சித்ரை**
**யரிய செவ்வா யுத்திர**

மவிட்டமும் புந்தியுங் குருவார முங்கேட்டை
யதிவெள்ளி பூராட முஞ்
சோதிசனி யோடிரே வதியுமாக் கூடிடிற்
சோபனஞ் செயில் விதவையாஞ்
சொல்லுறுதி கொள்ளாது வழிபோகின் மரணமாந்
துணையாகி லிடருற் றிடும்
நூதனப் பிரதிட்டை யாகாது புதுமனைக
ணோக்கியே கோல லாகா
நோயாங் குழந்தையுஞ் செனித்திடின் மாயுமென
நூலோரு ரைத்த படியே
காதலுட னிக்கவிதை தன்னிலு முரைத்தனன்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிறு - பரணி; திங்கள் - சித்திரை; செவ்வாய் - உத்தரம்; புதன்- அவிட்டம்; வியாழன் - கேட்டை; வெள்ளி - பூராடம்;சனி - ரேவதி இவை பகையாகும். இவற்றில் நல்ல செயல்கள் பயன்தர மாட்டா.

**அ.பொ:** ஆதிவாரம் - ஞாயிறு, சோமவாரம் - திங்கள், குருவாரம் - வியாழன்.

(சுசு)

## கிழங்கு இட, கன்று நட, நல்ல நட்சத்திரங்கள்

168. ஓணமா திரைபூச சதையசு வுத்திர
முரோகணி யவிட்ட மிவைதா
மொன்பானு மேனோக்கு நாண்மனைக டோப்புவிதை
யூன்றிடவு மிக்க நன்றாம்
வேணமுப் பூரமும் பரணிகார்த் திகைமகம்
விசாகமா யிலிய மூலம்
விளங்குமிவ் வொன்பதும் வையகந் தன்னிலே
வேர்கிழங் கிடு நாட்களா,
முனுமான் றலைகேட்டை சோதிசித் திரையனுட
மோங்கஸ்த மிரு பூசமு
முயரிரே வதியொடிவ் வொன்பது மரங்கொடிகள்
ஊன்றுதற் குரிய நாளாங்

காணுதற் கரியநின் னடியென்று காண்பனோ.
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஓணம், ஆதிரை, பூசம், சதயம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, உரோகணி, அவிட்டம், என்ற ஒன்பது நட்சத்திரங்களும் வளர்ச்சிக்கு உதவுவதால் இவை விதையிட நல்ல நட்சத்திரங்கள்.

பூரம், பூராடம், பூரட்டாதி, கார்த்திகை, பரணி, மகம், விசாகம், ஆயிலியம், மூலம் இவை கிழங்கு புதைக்க ஏற்ற நாள்கள். (நாள் - நட்சத்திரம்).

மிருகசீரிடம், கேட்டை, சுவாதி, சித்திரை, அனுசம், ஹஸ்தம், புனர்பூசம், பூசம், இரேவதி இவை மரக்கன்று நட நல்ல நாள்கள். **(சுரு)**

## பல்லி நம் உடல் மேலே விழுவதன் பயன்

169. ஆதிவா ரந்தனின் மேலான பகைவரு
மானமதி சீவ னழிவாம்
அங்கார கன்பகைவர் தன்னினிட ராம்புத
னனைபிதா மக்கள் சேதம்
நீதிகுரு வாரநாட் கரிபுரவி யுறவினொடு
நீணிதி யெலாம கற்று
நிகர்வெள்ளி சனியுடற் பிணியுண்டு பீடையா
நிகழாவி னமுத மெண்ணெய்
பாதக மகற்றுகோ மயமோம நெய்வெண்ணெய்
பரிகார மாக்கொண் டிடிற்
பல்லியெலி யோந்திபாம் பரணைவிழு தோடங்கள்
பற்றற வகன்று விடுமே
காதிரா வணனையொரு விரல்தனி னெரித்தவா
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிறு - பகைவர் மிகுவர்; திங்கள் - உயிருக்கு ஆபத்து; செவ்வாய்- பகைவரால் தொல்லை; புதன் - அப்பா, அம்மா, மக்கள் இவர்களுக்குத் தொல்லை; வியாழன் - செல்வத்திற்கு அழிவு; வெள்ளி, சனி - உடம்புக்கு நோய்.

இவற்றிற்குப் பரிகாரமாகப் பசும்பால், பசுவின் சிறுநீர், நெய், வெண்ணெய் இவற்றையும் எண்ணெயையும் உட்கொள்ள வேண்டும்.

**அ.பொ:** தோடம் - தோஷம்; காதி - துன்புறுத்தி. **(சூசூ)**

## வாஸ்து எழுகின்ற நாள்

170. **சித்திரைக் கீரா‌ற தாந்துலா மெட்டினிற்**
**செய்கார்த்தி கைப்பத் தினிற்**
**சீராடி பதினொன்று சிங்கமா றுயர்மாசி**
**தேதியிரு பத்தி ரண்டில்**
**வைத்தவை காசியிரு பானொன்று நாளினில்**
**வாஸ்துவெழு கின்ற தினமாம்**
**வையகந் தன்னிலே புதுமனை யெடுப்பவர்**
**மகராச ராக வாழ்வார்**
**பத்தடிகள் பதினொன்று பனிரண்டொ டேழடிகள்**
**பார்த்தகலம் வைக்க நன்றாம்**
**பாருலகி லிவ்வாறு செய்தல்நல மென்றுயான்**
**பழமொழிப் படிசெப்பி னேன்**
**சுத்தனே முனம்வீர பத்திரனை யீன்றவா**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** சித்திரை - *12*-ஆம் நட்சத்திரம் உத்தரம்; வைகாசி - *21* ஆம் நட்சத்திரம் உத்தராடம்; ஆவணி - *6* ஆம் நட்சத்திரம் திருவாதிரை; ஆடி - *11*-ஆம் நட்சத்திரம் பூரம்; ஐப்பசி - *8* ஆம் நட்சத்திரம் பூசம்; கார்த்திகை - *10* ஆம் நட்சத்திரம் மகம்; மாசி - *22*ஆம் நட்சத்திரம் திருவோணம்; ஆனி, புரட்டாசி, மார்கழி, தை, பங்குனி, ஆகிய மாதங்கள் வாஸ்து எழுநாள் அல்ல வீட்டு முன்னிடத்திலிருந்து *7,10,11,12* - அடிகள் தள்ளி வாஸ்து மூர்த்தம் செய்து வீடு கட்டவும்.

**அ.பொ:** துலாம் - ஐப்பசி; சிங்கம் - ஆவணி. **(சூஎ)**

## வீடு கட்டுகையில் நன்னிமித்தம் தீ நிமித்தம்

171. **மனைகோல வேகுழிகள் கெல்லிநீர் விட்டுமேன்**
**மலர்தூவ வலமா கிடில்**

வாழ்வா மிடப்புறஞ் சுற்றிடிற் பகையதாம்
வண்டுபுழு காணில் தீதாஞ்
சினையாகு சிலைகாணி லாக்கமாஞ் செங்கல்நிதி
சீரரணை நண்டு பல்லி
தேரை சிலந்தியாம் பூச்சியிவை கண்டிடிற்
செம்மையா மம்மனைக டாந்
தனதாமை பாம்புதேள் உடும்புபுலி பூரமிவை
தாங்காணின் மனைகள் பாழாஞ்
சங்குகன யோகமாம் வேர்கள்கா ணப்பொருள்
தப்பாது சேத மாகுங்
கனமனைகள் கோல்பவர்க் கிவைநல்ல சகுனமாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** வீட்டைச் சுற்றி அத்திவாரம் பறித்து நீர் ஊற்றினால் நீர் வலம் சுழன்றால் நலம். இடம் சுழன்றால் பகை. கருங்கல் இருந்தால் செல்வம். வண்டும் புழுவும் இருப்பின் தீது. செங்கல், நாணயம், அரணை, நண்டு, பல்லி, தேரை, சிலந்தி பூச்சி இருப்பின் நன்று. ஆமை, பாம்பு, தேள், உடும்பு, பூரான் இவை இருப்பின் தீது. சங்கு கிடைத்தால் செல்வம். வேர்கள் காணப்பட்டால் நஷ்டம்.
(சுஅ)

## கிரகச்சுற்றும் அவற்றினாட்சி நிலையும்

172. கதிரவன் புகர்புந்தி யந்தந்த மாதலக்
கனத்திலொரு மாதம் வாழ்வர்
கலைநா ளிரண்டேகான் மாதமொன் றரைகுசன்
காரிவரு டம்ரண் டரை
யெதிர்குருவு மோராண் டிராகுகே தொன்றரையி
தேற்றகிர கச்சுற் றதா
மிசைகிரக நிலையாட்சி கேள்கதிர வன்சிங்க
மேதிங்கள் கடக குசனுஞ்
சதிர்விருச் சிகமேட புதன்மிதுன கன்னியாஞ்
சரசகுரு தநுசு மீனஞ்
சனிமகர கும்பமும் புகர்துலா மிடபமுஞ்
சாற்றினா ராட்சி நிலையே

கதலிசண் பகவனங் கூவிளங் கன்னல்சூழ்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சந்திரன் நீங்கலான எல்லாக் கிரகங்களும் சூரியனைச் சுற்ற ஒரு ராசிக்கு - செவ்வாய், புதன், சுக்கிரன் *45* நாள், குரு ஒரு வருடம், இராகு, கேது - *18* மாதம். சனி $2\frac{1}{2}$ஆண்டு, *12* கலைகள் கலை ஒவ்வொன்றிற்கும் $2\frac{1}{4}$ நட்சத்திரம்.

சூரியனுக்கு ஆட்சி சிங்கம். சந்திரனுக்குக் கடகம். செவ்வாய்க்கு மேடம், விருச்சிகம். புதனுக்கு மிதுனம், கன்னி. வியாழனுக்குத் தனசு, மீனம். சனிக்கு மகரம், கும்பம். வெள்ளிக்குத் துலாம், இடபம். இவை கிரகங்களின் ஆட்சிக்குரிய இராசிகள்.

**அ.பொ:** புகர் - சுக்கிரன்; குசன் - செவ்வாய்; காரி - சனி; குரு - வியாழன்.

**(சாகை)**

## பல்லி சொல், தும்மல், ஆந்தை காகம் கூவுதல் இவற்றிற்கு ஆருடம்

173. குழுமேட ராசிபடை யொலிக,ளிட பப்பலன்
குடியோட்டு மிதுன நோயாங்,
குலவுகட கம்நன்மை, சிங்கம்அமு தந்தயிர்
கொடுத்திடுங், கன்னி வெற்றி
விழுதுலாந், தூரதோலை வரும்விருச் சிகம்பொனாம்
விருந்துண்டு தநுசி னுக்கே
மேன்மகர ராசிகோ ளுண்டுதீ தாங்கும்ப
மீனமு மகிழ்ச்சி நல்கும்
எழுவார மிரவுபகல் பனிரண்டு கோணமு
மியம்பிடுங் கௌளி தும்ம
லிசைகாக மாந்தைகட்கு ஆரூட பலமைந்து
மிவ்வித மெனப் புகலுவார்
கழனியிற் செந்நெலொடு கன்னல்வள மோங்கிடுங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஏழு நாளும் இரவும் பகலும் பன்னிரண்டு இராசிகளிலும் பல்லி சொல்லுக்கு மேடம் - படை ஒலிகள், இடபம் - குடியை ஓட்டுதல், மிதுனம் - நோய், கடகம் - நன்மை, சிம்மம் - அமுதம், கன்னி - வெற்றி, துலாம் - தூது ஓலை, விருச்சிகம் - பொன், தனசு - விருந்து, மகரம் - தீயகோள், கும்பம், மீனம் - மகிழ்ச்சி.

இவ்வாறே தும்மல், காகம், ஆந்தை ஆகியவை ஒலித்தலுக்கும் ஐவகைப் பயன் கூறுவர்.

***அ.பொ:*** கௌளி - பல்லி. **(எ0)**

## தெய்வ கண, மனித கண, அசுர கண நட்சத்திரங்கள்

174. **அசுபதி சுவாதியும் மான்றலை யிரேவதியும்**
**அனுடமுந் திருவோ ணமு.**
**மஸ்தபுனர் பூசமும் பூசமீ தொன்பது**
**மடைவான தெய்வ கணமாம்**
**பசுபரணி ரோகணி முப்பூர மதனிலும்**
**'பண்புடைய மூவுத் திரம்**
**பகருதிரு வாதிரையிவ் வொன்பதி லுதித்தவர்கள்**
**பாருலகின் மனிதர் கணமாம்**
**விசாகமுங் கார்த்திகை சதையசித் திரையினொடு**
**அவிட்டமுங் கேட்டை மூலம்**
**விளம்பாயி லியமக மிவற்றினி லுதித்தவ**
**ரிராட்சத கணங்க ளாவார்**
**கசமதை யுரித்துமன் மதனையு மெரித்தவா**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** அவரவர் பிறந்த நட்சத்திரத்தை மனத்தில் கொண்டு இன்ன கணம் என்று சொல்ல வேண்டும்.

**தேவகணம்** - அசுபதி, சுவாதி, மிருகசீரிடம், இரேவதி, அனுசம், திருவோணம், ஹஸ்தம், புனர்பூசம், பூசம் என்ற 9 நட்சத்திரங்கள்.

**மனிதகணம்** - பரணி, உரோகணி, பூரம், பூராடம், பூரட்டாதி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, திருவாதிரை என்ற 9 நட்சத்திரங்கள்.

**அசுரகணம்** - விசாகம், கார்த்திகை, சதயம், சித்திரை, அவிட்டம், கேட்டை, மூலம், ஆயிலியம், மகம் என்ற 9 நட்சத்திரங்கள். **(எக)**

## குளிகன் இராகுகாலங்கள்

175. பருதியிரு பத்திரண் டரையின்மேற் குளிகன்மதி
பதினெட்டே முக்காலின் மேற்
படைகுருதி பதினைந்து புந்திபதி னொன்றேகால்
பார்த்திபற் கேழரை யின்மேற்
கருதுபுகர் மூன்றேமுக் காலின்மேற் சனிதனிற்
கதிருதய லயநடு வினுங்
காரியின் புதல்வனாங் குளிகன்வரு வேளையிது
கண்டறிக ராகு காலந்
திருவார மேழுமே செல்லுசனி முடிவா
வெனச்சே ரெழுத்தின் தொகை
திறமாக மூன்றேமுக் காலொடு பெருக்கிடிற்
றெரித்திடு மிராகு காலங்
கருவினி லுதித்திடா தருள்செயுங் கடவுளே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிறு - 22 ½ நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; திங்கள் - 18 ¾ நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; செவ்வாய் - 15 நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; புதன் - 11 ¼ நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; வியாழன் - 7 ½ நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; வெள்ளி - 3 ¾ நாழிகையின் மேல் 3 ¾ நாழிகை; சனி - முதல் 3 ¾ நாழி. இவை சனியின் புதல்வன் குளிகன் வரும் நேரம். திங்கள், சனி, வெள்ளி, புதன், வியாழன், செவ்வாய், ஞாயிறு என்ற முறையில் காலை 7 ½ மணி முதல் மாலை 6 மணி முடிய ஒவ்வொரு நாளும் 3 ¾ நாழிகை (1 ½மணி)யாக இராகுகாலம் முறையே வரும். இராகு காலம் காலை 3 ¾ நாழிகைக்கு மேல் இம்முறையில் ஒவ்வொரு கிழமையும் 3 ¾ நாழிகையாக வரும்.

**அ.பொ:** குருதி - செவ்வாய். **(எஉ)**

## சென்மநட்சத்திரக் கிழமை பலனும், மாதபலனும்

176. இரவிவா ரத்தில்வழி நடையிந்து போசன
மியம்பு செவ்வாய் வசியமா
மினிமைதரு புதன்வித்தை குருவினிற் பொன்னாடை
யியல்வெள்ளி செல்வ முளதாம்
நரகசனி வியாதியாஞ் சென்மநட் சத்ரமதி
னாட்களிப் பலனீந் திடும்
நவிலுமவ ரவர்செனன நட்சத்ர முதன்மாத
நன்னுநட் சத்ர வரையிற்
சரியாக வேயெண்ணி யேழிற் பெருக்கியது
தனையெட்டி லேக ழிக்கத்
தானேகல் பிணிலாபம் வழிசேறல் நிதிதருஞ்
சாரின்ப வவமான மாங்
கருதினார் மாதபல னிவ்வண்ண மாகவே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஞாயிறு - வழிநடை; திங்கள் - போசனம்; செவ்வாய் - வசியம்; புதன் - வித்தை; வியாழன் - பொன், ஆடை; வெள்ளி - செல்வம்; சனி- வியாதி.

ஜன்ம நட்சத்திரம் முதல் அவர்கள் பிறந்த மாதம் பிறக்கும் நட்சத்திரம் வரையில் சரியாக எண்ணி ஏழால் பெருக்கி, அதனை எட்டில் கழிக்க, மீதியை நோக்க, *1.* ஏசல், *2.* பிணி, *3.* இலாபம், *4.* வழிச்சேறல், *5.* செல்வம். *6.* இன்பம். *7.* அவமானம் எனவரும் எண்ணுக்குரிய கிழமைக்குரிய பயனைக் கொள்க. இவ்வாறே ஒவ்வொரு மாதப் பிறப்பிலும் கணக்கிட்டு மாதப் பயனை அறிக. எடுத்துக்காட்டாக. ஜன்ம நட்சத்திரம் பரணி என்று கொள்வோம். மாதம் தை என்று கொள்வோம். இவ்வாண்டு தை மாதம் பிறக்கும் நாள் பூரம். பரணி - பூரம் - *10* நாள். *10x7 = 70. 70-7* ஆகும். *8*-இல் *7* ஐக் கழித்தால் மீதி *1. 1.* ஞாயிற்றுக் கிழமை. அதன் பயன் செயல்களில் ஈடுபடுதல்.

**அ.பொ:** இரவி வாரம் - ஞாயிறு; இந்து - திங்கட்கிழமை. **(எசு)**

## ருதுநட்சத்திர வாரபயன்கள்

177. உத்தராட முதலவீ ராறுநட் சத்திரமு
முத்தம மெனச் சொல்லுவார்
உயருதிரு வாதிரை தொடர்ந்தநட் சத்திர
மோரேழு மத்திப மதாம்
அத்தமுஞ் சித்திரையு மதிவாழ்வு குன்றுமற்
றாறுமே விதவை யாக்கு
மருக்கனிற் சிசுவழிவு சோமவா ரத்தில்னலம்
அங்கார கன்விதவை யாம்
புத்திரர்க ளுண்டுபுதன் குருவார நன்மையாம்
புகரெனிற் செல்வ முளதாம்
பொல்லாத சனிதனிற் பிணிபீடை யுண்டெனப்
போற்றினர்க ளேற்ற நூலோர்
கத்தியலை யாதுன்னை நித்தந் துதிக்கவருள்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உத்தராடம் முதல் மிருகசீரிடம் முடிய 12 நாள்களும் உத்தமம். திருவாதிரை முதல் உத்தரம் முடிய 7 நாள்களும் மத்திமம். ஹஸ்தம், சித்திரை இரண்டும் வாழ்வு குன்றும். சுவாதி முதல் பூராடம் முடிய ஆறும் விதவையாக்கும். ஞாயிறு - சிசு அழிவு, திங்கள் - நலம், செவ்வாய் - விதவை, புதன் - புத்திரலாபம், வியாழன் - நன்மை, வெள்ளி - செல்வம், சனி - பிணி, பீடை.

(எச)

## நாள், திதி, கிழமை இவற்றின் பொதுப்பயன்

178. மூவுத்தி ரந்தானு மஸ்தமொடு நான்கின்மேன்
மொழிபூச மிவ்வி ரண்டு
முடன்ரோணி யநுடமுஞ் சத்தமி துதிகையுடன்
முனைதசமி பஞ்சமி யுமே
துவாதசி திர்திகை திரையோத சியட்டமி
சுகமா மருக்க னன்றாஞ்
சொன்மதி தனக்குறுகண் செவ்வாயி னுக்கிடர்கள்
சுகவெற்றி போம் புந்தியில்

நோவுவரும் வாழ்வுபோ மரணமா குஞ்சனி
நுவல்குரு சுக்ர வாரம்
நோயில்லை திருவுண்டு வஸ்திரபூ டணமுண்டு
நுண்ணரும் பெருமை யுண்டாங்
காவுலகில் யாவர்க்கு மிவைநல்ல நாட்களாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, ஹஸ்தம், புனர்பூசம், பூசம், உரோகணி, அனுசம் என்ற நாள்கள் துதியை, திரிதியை, பஞ்சமி, சத்தமி, அட்டமி, தசமி, துவாதசி, திரயோதசி, ஆகிய திதிகள், ஞாயிறு, வியாழன், வெள்ளி என்ற கிழமை இவைகள் நற்பயன் தருவன. இந்த நட்சத்திரம், திதிகள், கிழமைகளில் நோய் இல்லை செல்வம் வரும், ஆடை அணிகலன்கள் வரும். பெருமை உண்டு. திங்கட் கிழமை - துன்பம், செவ்வாய் - இடையூறு; சுகமும் வெற்றியும் போம், புதன் - நோவு வரும், வாழ்வு போம், சனி - மரணம் இவை தீய கிழமைகள்.

**அ.பொ:** உறுகண் - அச்சம். (எரு)

## பயணம் போகும்நாள் போகாதநாள்

179. அங்கார கன் னிந்திரி சனிதிங்கள் தெற்குமே
லதின் மேற்கு புந்திகுருவா
மாதிவா ரம்வெள்ளி வடதிசைச் சென்றவர்க்
காகாத காரிய முமாந்
தங்கியிடு பரிதியொடு வெள்ளியிற் கீழ்த்திசைத்
தானேகில் அதிக பகையாஞ்
சனிமதியு மேற்றிசைச் சென்றிடிற் காரியந்
தானகன் றோடி விடுமே
மங்களவா ரம்மதில் தெக்ஷணத் திசையேகின்
மரணமாம் போன வர்க்கு
வாரகுரு புந்தியில் வடதிக்கு நோக்கிடின்
மறுபடி திரும்பி டார்கள்
கங்குலும் பகலுமென் பங்கினி லிருந்தருள்செய்
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** செவ்வாய்க்குக் கிழக்கு; சனிக்கும் திங்களுக்கும் தெற்கு; புதனுக்கு மேற்கு; வியாழனுக்கும் ஞாயிறுக்கும் வெள்ளிக்கும் வடக்கு ஆகிய திசைகள் நன்மை தரும். ஞாயிறுக்கும் வெள்ளிக்கும் - கிழக்கு; திங்கள், சனி - மேற்கு; செவ்வாய் - தெற்கு; புதனுக்கும் வியாழனுக்கும் - வடக்கு என்பவை ஆகாத திசைகள்.

இக்காலத்தில் இதனை மாற்றித் திங்கள் சனி கிழக்கே சூலம், வெள்ளி, ஞாயிறு, மேற்கே சூலம், செவ்வாய், புதன் வடக்கே சூலம், வியாழன் தெற்கே சூலம் என்று வழங்குகின்றனர்.

**அ.பொ:** இந்திரி - கிழக்கு. **(எசு)**

### காக்கைச் சகுனம்

**180.** **அங்குதய நன்மையாய் விருந்துபொ ருணஷ்டியா**
**மழுகையான் மடந்தை வருவ**
**ன்திவருணந் தீமூட்டல் முகில்பொழுதி லுதிரஞ்சா**
**மாகுமிது காக சாஸ்திரந்**
**தங்கிட மிருந்துவல மாகவே சென்றிடிற்**
**சருவகா ரியமு மாகுந்**
**தரையினீர் புற்றிலு மகனெல்பான் மரத்திலுந்**
**தான்கூவன் மிக்க நன்றாந்**
**தொங்கியிடு கனிபலாக் கௌவிமூக் கினைநக்கல்**
**சோறிரைகள் கௌவி வருத**
**றொடர்வழியின் முன்னோடல் வாய்மெல்ல னன்றதாந்**
**தொல்லுலகில் யாவ ருக்குங்**
**கங்கையாஞ் சங்குநதி பெருகுவள நாடெனுங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** விடிகாலையில் காக்கை கரையின் நல்ல விருந்தினர் வருவர். காக்கை அழுதால் பொருள் நட்டம். மகள் அழுது கொண்டு வருவாள். அடுப்பு மூட்டிய நேரம், மழைப்பொழுது இவற்றில் காக்கை கரைந்தால் இரத்தக்காயம் ஏற்படும்.

காக்கை தங்கிய இடத்திலிருந்து வலமாகப் போனால் நன்மை. ஈரமாயுள்ள தரை, புற்று, நெல் வயல், பால்மரம் இவற்றிலிருந்து கரைந்தால் மிக்க நன்மை. கனிகளைக் கௌவி வருதல், தன் மூக்கினை நக்குதல், சோறு இரைகள் கௌவி வருதல், நாம் போகும் வழியில் முன்னே பறந்து போதல், வாயினை மெல்லுதல் என்பன நன்மையாம். **(எஎ)**

## சிவப்புக் கறையான் எழும்புதலின் பயன்

**181.** **எமநிருதி வருணதிசை செஞ்செல் லெழும்பினால்**
**இஷ்டபாக் கியங்க ளுண்டாம்**
**இந்திரதிசை வாயுதிசை யீசனழ லன்றிசை**
**யெழும்பினாற் றீங்கு வருமே**
**யமர்சிசுத் தொட்டிலடி மரணமாந் தூணடியி**
**லம்மனைக் கிறை மரணமா**
**மானபஞ் சணையினடி கட்டிலின் கீழுறில்**
**அந்தமனை யாளு மரணம்**
**விமரிசைய தாநிலத் திற்செல் லெழும்பிடின்**
**வீடடங் கலு மாயுமே**
**விபரமுட னிந்நூலு முன்னூ லுரைப்படி**
**விளம்பிடும் புவியதனிலே**
**கமகமென வாசமிகு புஷ்பவன மேபெருகு**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** தெற்கு, தென் மேற்கு, மேற்குத் திசைகளில் கறையான் தோன்றினால் பாக்கியம். கிழக்கு, வடமேற்கு, வடகிழக்கு, தென் கிழக்குத் திசைகளில் கறையான் தோன்றினால் தீமை வரும். குழந்தையின் தொட்டிலின் அடியில் கறையான் தோன்றினால் மரணம். தூண் அடியில் தோன்றினால் வீட்டுத் தலைவனுக்குத் தீங்கு. படுக்கையின் அடி, கட்டிலின் அடி, இவற்றில் கறையான் தோன்றினால் வீட்டுத் தலைவிக்குத் தீங்கு. எல்லோரும் நடந்து செல்லும் நிலத்தில் கறையான் தோன்றின் வீட்டிலுள்ள எல்லோருக்கும் தீங்கு.

**அ.பொ:** செஞ்செல் - சிவப்பு நிறக் கறையான்; சிசு - குழந்தை. **(எஅ)**

## தேங்காய்ச் சகுனம்

182. அடியது பருத்துமுடி சிறுகிவட் டமதாகில்
ஆக்கமுக் கூறாய்விடின்
அதிகசந் தோஷமா மைந்திரண் டாயுடையி
லளவிலாச் செல்வ முளதாம்
நெடினரம் பிருகோண மாகிலோ துன்புறு
நிதானமாம் வாழ்வு தானு
நிறையோ டகன்றுதான் முட்டைபோ லாகிடில்
நீலரத் தினஞ் சேருமாம்
வடிவுசுக் கெட்டாகி லரிசிவத் தியானமாம்
வட்டமா யுடையி னன்றாம்
மஹாகண பதியின்முன் றேங்கா யுடைக்கையின்
மகிழ்சுபா சுபசகு னமாங்
கடலுலகில் யாவரு முணர்ந்திடச் செப்பினேன்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தேங்காய் கணபதி முன் உடைக்கும் போது தலைப்பக்கம் சிறு வட்டமாகவும், மீதிப்பக்கம் இரண்டு கூறாகவும் உடையின் மகிழ்ச்சி, பத்துச் சுக்கலாக உடையின் மிக்க செல்வம். நரம்பில் இரு கோணமாக நெடுக்கில் உடையின் துன்பம். ஓடு அகன்று முட்டைபோல் கொப்பறையாக விழுந்தால் நீலரத்தினம் கிட்டும். எட்டுச் சுக்கலாக உடையின் சிவத் தியானம் உண்டாகும் வட்டமாய் உடையின் நல்லது. **(எகூ)**

## இடமாகச் செல்ல வேண்டுவன முதலியன

183. கலைமானும் வானரங் கருடனுங் கீரியுங்
காடான் கருங் கூகையுங்
கரடிநாய் பன்றிமுஞ் சூறாந்தை யாமையுங்
காடையொடு பூனை சிட்டும்
வலைமுய லுடும்பிவைகள் வலமிருந் திடமாகின்
மாவெற்றி தரு சுகுணமாம்
வழிப்பயண மாகுகையி லோர்தும்ம லாணைதலை
வாசற் படியி டித்தங்

கலறியே யிருமலும் போகாதே யென்றிடலு
மாங்கவன் றொடை யிருத்த
லவச்சொலுப சரித்தலிவை யாவுநன் றல்லவெவ்
வலுவலு முடிந்தி டாது
கலியுகந் தன்னிலிது கைகண்ட சாஸ்திரங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கலைமான், குரங்கு, கருடன், கீரி, கோட்டான், கரடி, நாய், பன்றி, மூஞ்சுறு, ஆந்தை, ஆமை, காடை, பூனை, சிட்டுக்குருவி, உடும்பு இவை வலமிருந்து இடம் போனால் வெற்றி தரும் சகுனமாம். புறப்படும்போது தும்மல், பிறர் அழைத்துக் கட்டளையிடுதல், வாசற்படியில் தலை இடித்தல், அலறல் ஒலி, இருமல், போகாதே என்று பிறர் பிறரிடம் கூறல், தீய சொற்கள் கேட்டல், முதலியன தீய சகுனங்கள். போகும் காரியம் நிறைவேறாது.

**அ.பொ:** சுகுணம் - சகுனம். **(அ௦)**

## எதிர்வரில் நலமும் தீதுமாவன

184. நிறைகொண்ட நீர்க்குடம் பாற்குட மெருக்கூடை
நீடுமங் கிலி யரசர்பார்
நிகழ்த்திடுங் கர்ப்பமுறு மாதர்வே சையர்சிறார்
நீள்வளைக ளுபய மறையோர்
கறைபலாக் கனியன்ன மிவையெலா முன்வரிற்
காரியங் கைகூ டிடுங்
கனகுட்டை மொட்டையுந் தவசிதட் டானுடன்
காதுமுலை நாசி யிலியு
மறையாள னொருவனவ பாண்டநா விதன்கோடி
வஸ்திரம்விரி தலையன் செக்கான்
வாணியன் விறகுசந் நியாசியக் கினியெதிர்
வந்திடிற் றீதென்பர் காண்
கறைகண்ட னேதொண்டர் தெண்டனிடு பாதனே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** நீர்க்குடம், பாற்குடம், எருக்கூடை, சுமங்கலி, அரசர், கருவுற்ற மாதர், வேசையர், சிறுவர், இரட்டை அந்தணர், சங்கு, பலாப்பழம், உணவு, இவை முன்வரின் போகும் காரியம் கை கூடும். குட்டையன், மொட்டையன், துறவி, தட்டான், காது மூக்கு அறுபட்டவர், ஒற்றை அந்தணர், குயவன், நாவிதன், புத்தாடை, விரித்த தலையன், வாணியன், செக்கான், விறகு, நெருப்பு ஆகியவை எதிர் வந்திடின் தீய சகுனம். **(அக)**

## உயிர்விடும் நாளின் தோஷம்

**185.** **உத்தரட் டாதிபூ ரட்டாதி ரேவதி**
**யுரோகணி யவிட்ட சதைய**
**மொருவருட தோடந்தா னுற்றபஞ் சமியிலே**
**யோராறு மாத தோடஞ்**
**சித்திரைநாள் புனர்பூச முத்திரங் கிர்த்திகை**
**செய்யமான் றலைவி சாகஞ்**
**சித்திதரு முத்ராட மிவ்வேழு மேமூன்று**
**திங்கள்வரை யுந்தோஷ மாம்**
**நத்துமூ லங்கேட்டை யாகுமிரு நாட்களு**
**நாற்பது தினந் தோஷமாம்**
**நலமாக மேற்கண்ட நட்சத்தி ரந்தவிர**
**நன்றதா மற்ற நாட்கள்**
**கத்தனே யுலகிலுயிர் செத்தநாட் டோஷமிது**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** பூரட்டாதி, உத்தரட்டாதி, ரேவதி, உரோகணி, அவிட்டம், சதயம் இவற்றில் ஒருவர் உயிர் நீத்தால் அவ்வீட்டிற்கு ஒரு வருடம் தோஷம். பஞ்சமி திதி - ஆறுமாத தோஷம். சித்திரை, புனர் பூசம், உத்தரம், கார்த்திகை, மிருகசீரிடம், விசாகம், உத்தராடம் இந்த எழு நட்சத்திரங்களுக்கும் மூன்று மாத தோஷம். மூலம், கேட்டை ஆகியவற்றில் உயிர் நீத்தால் *40* நாள் தோஷம். இந்த *15* நட்சத்திரம் தவிர மற்றவற்றில் உயிர் நீப்பது தோஷமன்று. **(அஉ)**

## ஆடுமாடு வாங்குவதற்கு ஏலாத நாள்கள்

**186.** **சித்திரை மகத்தினோ டுத்திரபூ சத்திலுஞ்**
**சேர்ந்தரோ கணி தன்னிலுஞ்**

செப்புஅவிட் டத்திலு முத்திரா டத்திலுந்
திகழுத்தி ரட்டாதி யோடு
ஒத்தவிவ் வெட்டுநட் சத்திரந் தன்னிலே
யுலகுளோ ரெவர்க ளுந்தா
முயர்புரவி மாடாடு கால்நடை அடிமையொடு
ஒட்டைமுத லிவைக ளெல்லா
மெத்தனை கொள்கினும் வருடமொன் றிலேமாயு
மென்றியம் பினார்சோ திடத்தி
லிதமாக யாவர்களு நற்றினந் தன்னிலிவை
யெய்திடின் மிக்க நன்றாங்
கத்துமுத லியகொடிய பித்தினை யகற்றியருள்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** சித்திரை, மகம், உத்தரம், பூசம், உரோகணி, அவிட்டம், உத்தராடம், உத்தரட்டாதி என்ற எட்டு நட்சத்திரங்க்ளிலும் குதிரை, மாடு, ஆடு, கால்நடை, ஒட்டகம், அடிமை முதலியன வாங்க மாட்டார்கள், வாங்கினால் ஓராண்டில் இறந்துவிடும். இவையல்லாத நல்ல நாளில் வாங்கினால் நன்மை பயக்கும்.

**அ.பொ:** ஒட்டை - ஒட்டகம். **(அகூ)**

## சூரியகலைக்கு உரியன

187. பார்க்கிலுப தேசமும் வித்தையுஞ் சேவையும்
படையோட்டு களவு சூதும்
பசாசோட் டிபங்கொளல் வழக்குபகை தீர்த்தலும்
பரிகரித் தேரூர் தலும்
வார்த்தையொ டெழுத்தெழுதல் கீதங்கள் பாடுதல்
மருந்துண்ணல் புனலா டுதல்
மந்திரஞ் செபித்திடுதல் விடமதை யறிந்துதன்
மணிமந்தி ரங்க ளுடனே
தூர்த்தல்கொடு பிணிமுதற் றம்பனநல் யோகமாஞ்
சூரிய கலைக் குரிமையே
தும்பிமுக னைப்பெற்ற வம்பிகை தனக்குமுன்
சுவாமியுரை செய்த விவையாங்

**கார்க்கோட விடமுண்ட கண்டவெனை ரட்சிக்குங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

***பொழிப்:*** உபதேசம், வித்தை, சேவை, படை, களவு, சூது, பசாசு, பேய் இவற்றை விரட்டுதல், யானை வாங்குதல், வழக்குப் பகை தீர்த்தல், யானை, குதிரை, தேர் ஊர்தல், புதுநூல் எழுதத் தொடங்குதல், பாடல்கள் பாடுதல், மருந்துண்ணுதல், புண்ணிய தீர்த்தங்களில் நீராடல், மந்திரம் செபித்தல், விடம், பிணி முதலியன போக்குதல் ஆகியவை சூரிய கலைக்கு உரியன.

***அ.பொ:*** இபம் - யானை. **(அச)**

## சந்திரகலைக்கு உரியன

**188.** **கிளைக்குமனை யாடையா பரணங்கள் பூணலுங்**
**கேணிதோண் டிடலடி மையுங்**
**கீழ்சலந் தான்காணன் மன்னரெதிர் சாந்தியுங்**
**கீர்த்திப்பிர திஷ்டை சுரமு**
**முளைக்குநல் விதைநாட்ட லுண்மைவச னஞ்சொலன்**
**முயல்தரித் திரர்க்கு தவுதன்**
**மொழிகல்வி கற்குதல் தனம்புதைத் திடுதலிவை**
**முற்றுமதி கலையி லாமே**
**விழிக்கனலி னால்அநங் கன்றனை யெரித்துளோன்**
**விளம்புசாத் திரநூ லிதாம்**
**விபரமா யுலகுளோர் யாவரு மறிந்திட**
**விரித்துரைத் தனனெளிய னுங்**
**களிக்கவறு பத்துமூ வர்க்குமெய்ப் பதமுதவு**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

***பொழிப்:*** வீடு வாங்குதல், ஆடை ஆபரணம் வாங்குதல், அடிமை வாங்குதல், அரசரைக் காணல், சாந்தியும் கீர்த்தியும் அடைதல், விதை விதைத்தல், வறியவர்களுக்கு உதவுதல், கல்வி கற்றல், தனம் புதைத்திடுதல் இவை சந்திரக்கலையில் நிகழத்தக்கன. **(அரு)**

## உபயகலைகள்

189. ஆதியா யிருக்கின்ற வுபயகலை சமனதா
யடைவுட னடப்ப தாகி
லப்பொழுது தொட்டிடு நினைத்திடுங் காரிய
மாகா ததினிச் சயம்
நீதியாய் மனதினி னினைத்தன்முடி யாதுதான்
நினையாது வந்தெய் திடும்
நிலையாத தவமது நிலைத்தடு மிக்கலையி
னேர்மையிஃ தாகு மெனவே
வாதவூ ரர்க்காக நரிபரிய தாக்குமெம்
மாதேவர் மன மகிழ்ந்து
மண்ணுலகி லியாவருந் திண்ணமிது வென்றுணர
வகைவகை யதாவு ரைத்த
காதிபெறு சரநூலின் மார்க்கமிது வாகுமே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** இரண்டு கலைகளும் (சந்திரகலை, சூரிகலை) சமமாகும் போது முடியாத காரியம் முடிந்திடும். நிலையாத தவம் நிலைத்திடும். **(அகூ)**

## பதுமினிப்பெண் குணம்

190. செண்பக நிறத்தினாள் கூவிளங் கொங்கையாள்
செய்யமலர் வாச முடையாள்
செயமதுர வாக்கினாள் பொய்யுரை சொலாதவள்
செந்திரு தனக்கு நிகரா
ணன்பாக வேயமரர் பெரியோர் தமைப்பணிவ
ணடையன்ன மின்சொ லுடையாள்
நவிலிடை சிறுத்திடும் வெண்துகி லுடுப்பணல்
அல்குல்தா மரை நேரினாள்
வண்மைபெறு சுரதநீர் கோகனக வாசமா
மானனைய காட்சி யுடையாண்
மாதுரிய கனியுண்ப ளெட்பூவி னாசியாண்
மாலிரவி சாயா முனங்

**கணமெனுங் கண்படாள் பதுமினிப் பண்பிதாங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** சண்பகம் போன்ற நிறம், விளம்பழம் போன்ற கொங்கைகள், மலர் போன்ற இயற்கை மணம், இனிய பேச்சு, பொய் உரையாமை, பெரியோரைப் பணிதல், அன்ன நடை, சிறுத்த இடை, வெள்ளைத் துகிலில் விருப்பம், தாமரை போன்ற அல்குல், சுரதநீர் தாமரை வாசம் உடையாள், மான் போன்ற பார்வை, எட் பூப் போன்ற மூக்கு, கனி உண்பதில் விருப்பம் பகலில் உறங்காமை, இவற்றை உடையவள் உத்தமமான பதுமினிப் பெண். **(அஎ)**

## சித்தினிப்பெண் குணம்

191. **சித்தினிப் பெண்ணடை பிடியானை போல்பவள்**
**சிவந்துடன் மிகுந்த வழகுந்**
**திருவலம் புரிகழுத் தினள்வஞ்சி போல்வள்**
**செய்யவிரு தனம் பசுமையாள்**
**சுத்தவன் னத்துகிலி லிச்சையது கொள்ளுவாள்**
**சுரதநீர் மதுவா சமாந்**
**துடியான வார்த்தைபுடை பரவுதன முடையளிதழ்**
**துகிர்கொவைக் கனிபோன் றவண்**
**மெத்தமய லாகவே யிருபோது மோர்சாம**
**மேவிய ணைவாள் புருடனை**
**மிகவற்ப மாகவே யுண்பள்சங் கீதத்தின்**
**மீதுநற் பிரிய முடையள்**
**கத்தனே சித்தினிப் பெண்களித் தன்மையர்கள்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** பெண் யானை போன்ற நடை, செந்நிறம், மிக்க அழகு, சங்கு போன்ற கழுத்து, கொங்கையில் பச்சை நரம்பு ஓடும், நல்ல நிறமுடைய ஆடை, சுரத நீர் தேன் போன்ற வாசம், உற்சாகமாகப் பேசுதல், பருத்த தனம், பவளம் போன்ற உதடு. கோவைக்கனி போன்ற வாய், குறைவான உணவு, இசையில் விருப்பம், காமம் மிக்கு நாடோறும் இரவிலோ பகலிலோ கணவனைக் கூடுவாள்.

**அ.பொ:** துகிர் - பவளம்; கொவை - செந்நிறக் கோவைக்கனி. **(அஅ)**

## சங்கினிப் பெண் குணம்

192. சங்கினிப் பெண்ணினுடல் சிறுகாது பெருகாது
சமனுருவ தாயி ருக்குஞ்
சாற்றிடுங் கழுதையைப் போற்கூவு வண்மூன்று
சாமம் விடாது புணர்வாள்
அங்குகோள் பொய்யுரை பொருந்தியிடு நாவினா
ளடியுதடு நீள முடையா
ளல்குல் கறுப்பதா நடுவிரல்க ணீண்டவ
ளகோரகோ பாக்கினி யுளாள்
தங்கிய சிவந்தமல ராடைமே லன்பினாள்
கலிப்பொடு களிப்பு முடையாள்
தனகும்ப மனையவள் வஞ்சக மனத்தினள்
சரீரவெம் மையினை யுடையள்
கங்குலகில் சங்கினிப் பெண்குணமி தென்பர்காண்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உடல் சிறுகாது பெருகாது சமமாக இருக்கும், கழுதை போன்ற குரல், இரவில் கணவனை மும்முறை புணர்வாள். கோள் சொல்லுவாள், பொய் பேசுவாள், அடி உதடு நீளம், அல்குல் கருநிறம், நடு விரல்கள் நீளம், மிகுந்த கோபம், செந்நிற ஆடையில் விருப்பம், எப்பொழுதும் காமமும் களிப்பும் உடையவள். குடம் போன்ற முலை, வஞ்சக மனம், உடம்பில் எப்பொழுதும் சூடு - இவை சங்கினிப் பெண் இயல்பாம்.

**அ.பொ:** கலிப்பு - ஆரவாரம்; கங்கு - எல்லை. (அகூ)

## அத்தினிப்பெண் குணம்

193. அத்தினிப் பெண்ணினுட லுயரமா மெந்நாளு
மடியுதறி யேந டப்ப
ளவன்மிக்க தூலமா மரணையுடல் போற்குறி
யகன்றுமணி யார்ந்தி ருக்குங்
கற்றாழை நாறுடலி னாடுவரி னிச்சையாள்
கனமுலை சுரைக்கா யனாள்

கருதூண் பொசிப்பள்குறு கியகழுத் தினளொழுகு
காமநீர் நாற்ற முடையள்
சத்தமிடி யோசைபோற் பேசுவாள் பாதவிர
றானீண் டிருப்ப தன்றிச்
சாற்றிடு மிராப்பகன் முழுவதும் புருடனைத்
தழுவிவெகு கோஷ்டி செய்வள்
கத்தனே யத்தினிப் பெண்குணமி வண்ணமாங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** உயரமான உடம்பு, காலை உதறி நடத்தல், பருத்த அரணை போன்ற உடல், அகன்று மணி தெரியும் குறி, உடம்பில் கற்றாழை நாற்றம், சுரைக்காய் முலை, தன்னை நாடி வருபவன் விருப்பிற்கு இணங்குதல், மிக்க உணவு உண்ணல், குறுகிய கழுத்து, ஒழுகும் காமநீர் மிகவும் நாறுதல், இடி ஓசை போன்ற பேச்சு, கால்விரல் நீளம், இரவு பகல் புருடனைப் புணர்தல் இவை அத்தினிப்பெண்ணின் பண்புகள்.

**அ.பொ:** கோஷ்டி செய்தல் - கூடுதல். **(கூ௦)**

## பெண்களுக்கு உணர்ச்சி மிகும் நிலைகள்

194.. பெருவிரல் பெருங்கால்கள் கரடணி முழந்தாள்
பெருங்குய்ய முந்தி மார்பும்
பெறுங்கொங்கை கைமூல கண்டங் கபோலம்வாய்
பேதைகண் ணெற்றி யுச்சி
மருவுமூ வைந்துதா னத்தினி லிடப்புறம்
வளர்பிறை தன்னி லாகும்
வலப்புறம் தேய்பிறை தன்னிலே தாள்வதாம்
வலதுபா தம்வ ரையிலு
மருளுமுப் பதுதான மும்போக நிலைநிற்கு
மமுதினுக் கேழா மிட
மதிவிட மிருக்குமா மன்றுபோ கத்தொழி
லணுவளவு மாகா தெனக்
கருதினார் மதனநூ லதனிலே கொக்கோகர்
கற்பக விராச மேவுங்

**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** கால்களின் பெருவிரல், கணுக்கால், முழந்தாள், உபஸ்தம், கொப்பூழ் மார்பு, கொங்கை, கை இணைப்பிடம், கழுத்து, கன்னம், வாய், கண், நெற்றி, உச்சி, கைகளின் கட்டை விரல் என்ற பதினைந்து இடங்களிலும் உணர்ச்சி நிலை வளர்பிறையில் இடப்புறத்தில் நிகழும். தேய்பிறையில் இவற்றில் வலப்புறம் உணர்ச்சி நிலை சுரக்கும். இந்த 30 இடங்களும் போக நிலைக்கு உணர்ச்சி சுரத்தற்கு உரியன. அமுதினுக்கு ஏழாம் இடம் விடம் இருக்கும். அன்று புணர்ச்சி கூடாது.

**அ.பொ:** மதன நூல் - மன்மதன் பற்றிய சாத்திரம். **(கூகை)**

## போகம் நுகரும் நாள்

195. **அரிவையர்கள் பூப்புநா ளன்றுமுத லீரெட்ட**
**தானநாள் வரை தன்னிலு**
**மடைவாக வேகருத் தரிக்குநா ளதினான்கி**
**லாஞ்சிசுக் கல்வி வானாம்**
**பெருகுநா ளைந்தினிற் சோரனா மாறினிற்**
**பெருந்தவசி யேழாந் தினம்**
**பிரபல தயாபர னெட்டதனின் மிடியனாம்**
**பீடுதன வானொன் பதில்**
**அரியபத் தாந்தினங் காமியாம் பதினொன்றி**
**லதிதுட்ட னீரா றினி**
**லருமைமிகு பண்டிதன் பதின்மூனறி னோயினோன்**
**அமருபதி னான்கி லீனன்**
**கருதேந்தல் பதினைந்தி லீரெட்டில் யோகியாங்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** பூப்பு நிகழ்ந்து மூன்று நாள் கழித்து நீராடியபின் வரும் முதல் நான்கு நாள் தரிக்கும் கரு கல்விமான் ஆவான். ஐந்தாம் நாள் திருடனாம், ஆறாம் நாள் தவசி ஆவான். ஏழாம் நாள் கருணை வள்ளலாவான். எட்டாம் நாள் வறியவன் ஆவான். ஒன்பதாம் நாள் செல்வன் ஆவான். பத்தாம் நாள்

சாமி ஆவான். பதினொன்றாம் நாள் துஷ்டன். பன்னிரண்டாம் நாள் சிறந்த பண்டிதன் ஆவான். பதின்மூன்றில் நோயாளன். பதினான்கில் நல்ல பண்பு கெட்டவன். பதினைந்து, பதினாறில் போகி ஆவான். பெரும்பாலும் பூப்பு நிகழ்ந்து நீராடிய பின் பதினாறு நாள் வரை கருத்தரிக்கும். **(கூஉ)**

## க்ஷவரத்திற்கு ஏற்ற நாள்

196. **சேருமுத் தரநான்கும் பூசபுனர் பூசமுந்**
**திகழுமுத் ராட நான்குஞ்**
**செய்யமான் றலையுத்தி ரட்டாதி மூன்றுமாந்**
**திதிதசமி நன்ற தாகும்**
**மாரிவரு துதிகைதிரு திகையினொடு பஞ்சமி**
**வளர்கின்ற சத்தமி யுமே**
**வகுக்குந்திர யோதசி துவாதசி மதிபுதன்**
**மயிர்கழித் திடுதல் நன்றாம்**
**பாருலகில் வைகாசி யானியா வணிகார்த்தி**
**கைதைபங் குனிதன் னிலே**
**பண்புதரு க்ஷவரமது செய்துகொள வேயஷ்ட**
**பாக்யங்கள் மேன்மே லுறுங்**
**காருலவு சோலையொடு சிகரநெடு மலைகள்சூழ்**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** உத்தரம், புனர்பூசம், உத்தராடம், மிருகசீரிடம், உத்தரட்டாதி ஆகிய நட்சத்திரங்கள் துதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, துவாதசி, திரயோதசி என்ற திதிகள், திங்கள், புதன், என்ற கிழமைகள் வைகாசி, ஆனி, ஆவணி, கார்த்திகை, பங்குனி என்ற மாதங்கள் இவற்றில் நட்சத்திரம், திதி, கிழமை பார்த்து க்ஷவரம் செய்து கொள்ளின் எல்லா நலன்களும் சேரும். **(கூ௬)**

## க்ஷவரத்திற்கு ஆகாதநாள்

197. **ஆடிமார் கழிமாசி கன்னிமா தந்தனி**
**லாஞ்செல்வ மதுநீங் கிடும்**
**அருக்கனுயி ரழிவாகு மனைவிபொருள் சேதமா**
**மானகுரு மான சேதம்**

நாடிவரு சுக்ரவா ரத்துடற் பலவீன
நவில்சனிக் கெவையு நாச
நவமிதன நஷ்டமாஞ் சதுர்த்திதாய்க் காகாது
நற்சஷ்டி பிதுர் சாபமாஞ்
சாடிவரு சதுர்த்தசியிற் சோதரர்க் காகாது
தன்மனை விபோமஷ் டமி
சாற்றுசெவ் வாய்நாயி றெண்மதித் தோடமாஞ்
சனிகுருவி னுக்கிட ரதாங்
காடுமலை யாவுமகில் சூழுமிட மெனவீறு
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** ஆடி, மார்கழி, மாசி, புரட்டாசி மாதம் செல்வத்தை நீக்கும். ஞாயிறு- ஆயுள் குறைவு, மனைவி, பொருள் சேதம்; வியாழன் - மானக்கேடு; வெள்ளி- உடல்பலகீனம்; சனி - எல்லாம் நாசமாகும்; நவமி - செல்வம் கெடும்; சதுர்த்தி- தாய்க்கு ஆகாது; சஷ்டி - பிதுர் சாபம்; சதுர்த்தசி - சகோதரருக்கு ஆகாது; அஷ்டமி - மனைவிக்கு ஆகாது; செவ்வாய், ஞாயிறு, சனி - அறிவுக்குக் கேடு, குருவுக்குத் தீங்கு, ஆதலின் இந்த மாதம் திதி, கிழமைகள் ஆகா.
(கூசா)

## கர்ப்போட்ட நாட்கள்

198. மார்கழித் திங்களி லொன்பதாந் தேதிமேன்
மாமழைக் கெற்போட்ட மாம்
வளர்சித்ரை வைகாசி நாலரை நாட்களா
மன்னுதநு பதின்மூன் றரை
யாரிரண் டொன்றரைத் தேதிநா நாளுக்குமே
லானிக்கு நாளொன் றரை
யாடிக்கி ரண்டேகால் ஆவணி புரட்டாசி
யைப்பசி கார்த்தி கைக்கும்
பார்நா ளிரண்டேகான் மார்கழித் திங்களிற்
பற்றுநா ளதுவு முக்கால்
பட்சமுட னிவ்விதங் கெற்போட்ட மோடிடிற்
பஞ்சமது நீங்கி யுலகிற்

கார்மழை சொரிந்துநற் சீர்வள மிலங்கிடுங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** மார்கழியில் 9-ஆம் நாளுக்கு மேல் கர்ப்போட்டம். சித்திரை வைகாசியில் 4 ½ நாள்கள், ஆனி 1 ½ நாள், ஆடி 2 ¼ நாள், ஆவணி முதல் கார்த்திகை முடிய 2 ¼ நாள். மார்கழியில் 13 ½ நாள். இந்தக் கர்ப்போட்டத்தால் நாட்டில் மழை பெய்ய, பஞ்சம் நீங்கும். **(கூரு)**

## குதிரைகளின் லட்சணம்

199. விதிகொள்பரி சிரமதின் மத்தகச் சுழிரண்டு
மேன்மவுன சுழிமூன்ற தாம்
விளம்புஞ் செழுங்குளம் பிற்சுழிக ணான்குதாம்
வீறிய கழுத்தோர் சுழி
சதிகொணரி காகம் பருந்தலகை சவையோரி
சாற்றிடுங் கேழ லிவைக
டருகுரல்க ளின்றிநல் வேழமங் கலஞ்சங்கு
தனிவாத்ய மென முழங்க
மதிக்கின்ற நாதமணி யோர்பதந் தூக்கியொலி
மாதங்க மென வாயினும்
வளர்செல்வ மிகுமமர்க் களஞ்சென்று பொருதினும்
வந்தடும் வெற்றி யுடனைங்
கதிகொண்ட துரககுண மீதென விளம்பிடுங்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**குறிப்பு:** குதிரைகளின் லட்சணம் பற்றிய செய்திகள் 96, 97 ஆகிய பாடல்களில் கூறப்பட்டுள்ளன. அவற்றைப் பற்றி இக்காலத்தில் தெளிவாக அறிய இயலாது. **(கூசா)**

## குதிரைக்கு ஆகாத சுழிகள்

200. சந்திரசுழி யகிலாண்ட வர்த்தமுந் தண்டையடி
தானுடற் பக்கச் சுழி

சாற்றுகவ் வகச்சுழிக் காவத்த சுழியுடன்
சதிரிலா வளைய சுழியும்
விந்தைய திலாததாங் கொடியசுழி கேதாரி
வீறுமடி சேர்ந்த சுழியும்
விகடகே சாப்பத்தங் கச்சுநிலை பட்டடை
வெள்ளிவிழி கொள்ளிப் பதஞ்
சிந்தனை பெருகிடுந் திரிகண்டி னிக்குண்டி
செயமிலா விலங்கின் சுழி
சேரவே சுடலைமுக நஞ்சபா தத்துடன்
செப்புமிச் சுழிக ளெல்லாங்
கந்துக மதற்குமிக வாகாத சுழியென்பர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே! (கூள)

### சாமுத்திரிக லட்சணம் – 201, 202

201. தாமரை யெனக்கண்ண னாகிறன முடையனாந்
தருமதுக் கண்ண னெனிலோ
சகலசன திருவுண்டு கழனிக்க ணுடையவன்
றாரணியில் ராம னாவன்
பூமருவு விழியினான் பொருந்துரைப் புலவனாம்
பொருகங்கை யரணை சங்கு
பொற்கொடிகள் குண்டலஞ் சமுத்திரஞ் சாமரம்
பூங்கர மிருக்கி லரச
னாமரைக ணாலுமே மகரமிரு பிடரிதனி
லாறா யமைந்த தானா
லருநிதித் தலைவனா முதுகினி லிருந்திடி
லதிசெல்வம் வயது நூறாங்
காமுறுசா முத்திரிக லட்சணமி தென்பர்காண்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** தாமரைக் கண்ணன் - தனம் உடையவனாவான்; மதுக்கண்ணன் - எல்லா மக்களின் ஆதரவும் செல்வமும் பெற்றவனாவான்; கழனிக் கண்ணன்- இராமனைப் போன்ற கீர்த்தி மான்; பூமருவு விழியினான் - சிறந்த புலவனாவான்.

கங்கை, அரணை, சங்கு, கொடி, குண்டலம், சமுத்திரம், சாமரம், இவற்றின் வடிவம் உள்ளங்கையில் இருக்கின் அரசனாவான். நான்கு தாமரை, மகர மீன் வடிவம் பிடரியில் இருப்பின் பெருஞ் செல்வன். முதுகினில் இருப்பின் பெருஞ்செல்வம் உடையவனாவான். நூறு வயது வரை வாழ்வான்.

**அ.பொ:** சாமுத்திரிகா லட்சணம் - உறுப்பு நூல் கூறும் இலக்கணம். **(கூஅ)**

202. **தோளுகை நடுவிரலி னளவுநா லிரட்டித்துச்**
**சொல்பாத பெருவிரன் முதற்**
**றொடர்நெற்றி நாசிவாய் நின்றிடிற் கயிறுதான்**
**தொலையாத செல்வ முளதா**
**மாளுக்கு நெற்றிவரை யைந்தாகி னூறுநான்**
**காகிலெண் பானா குமே**
**யமருமுன் றறுபதா மிரண்டற்கு நாற்பதா**
**மதனிலொன் றற்கிரு பதாந்**
**தாளோடு கரிகுரற் பரிமுழக் கங்கள்போற்**
**றவன்சிறு முழக்க மாயின்**
**றரணியிற் செல்வனாம் பதுமினிப் பிரியனாஞ்**
**சாஸ்திர முரைத்த வாறே**
**காளகண் டத்தனே யாலடிவி லாசனே**
**கற்பக விராச மேவுங்**
**கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!**
**கயிலை யங்கிரி வாசனே!**

**பொழிப்:** தோள் கை பெருவிரல், பாதப் பெருவிரல், நெற்றி, நாசி, வாய் இவை சற்று நீண்டிருப்பின் தொலையாத செல்வம் உண்டு. நெற்றியில் ஐந்து கோடு இருந்தால் *100* வயது. நான்கு கோடு இருந்தால் *80* வயது. மூன்று கோடு இருந்தால் *60* வயது. இரண்டு கோடு இருந்தால் *40* வயது. ஒரு கோடு இருந்தால் *20* வயது. யானை போலவும் குதிரை போலவும் முழங்குபவன் செல்வனாவான்.

**அ.பொ:** கரி - யானை, பரி - குதிரை. **(கூகூ)**

## இந்நூல் பாடிய காலம்

203. ஆதிகலி நாலாயி ரத்துத் தொளாயிரத்
தாகுமுப் பானி ரண்டில்
ஆயிரத் தெழுநூற் றைம்பத்து மூன்றுவரு
டஞ்சகாப் தம்விகுர் தியா
நீதிசே ராண்டுமே டத்திங்கள் குருவாரம்
நேர்ந்தபனி ரண்டாந் தினம்
நிறைகன்னி திதியைந்தி னோடமிர்த யோகமிவை
நீடிரே வதி நாளினிற்
சாதியில் வீரசை வன்விசுவ லிங்கன்பர்
தருசிதம் பரவாணன் யான்
சதகமெனு மிப்பநுவல் நின்னடிக் கன்புகொடு
சாற்றின னுவந் தாளுவாய்
காதலுட னடியர்தொழு கறைமிடற் றண்ணலே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே! மங்கைமகிழ் நேசனே!
கயிலை யங்கிரி வாசனே!

**பொழிப்:** கலி வருடம் *4932*-இல் சாலி வாகன ஆண்டு *1753*-இல் விகுர்தி ஆண்டு சித்திரை மாதம் *12*-ஆம் நாள் பஞ்சமி அமிர்தயோகம் கூடிய ரேவதி நட்சத்திரத்தில் வீர சைவன் விசுவலிங்கத்தின் மகன் சிதம்பரம் இராசிபுரம் சிவபெருமான் திருவடி பணிந்து இந்தச் சதகத்தைப் பாடியுள்ளேன்.

**அ.பொ:** கடைமிடறு - விடக்கறை பொருந்திய கழுத்து. **(௲)**

## வாழி

204. சீர்வாழி நான்மறையி னோர்வாழி! விண்ணிலுறை
தேவர்முநி வோர்கள் வாழி!
செந்தா மரைத்தவிசு வந்துளாள் வாழி!யித்
தேசமன் னவர்கள் வாழி!
பார்வாழி! கலைமங்கை வாழி!செந் தமிழ்வல்ல
பாவாணர் வாழி! நிதமும்
பரவுசெங் கதிர்வாழி! மதிவாழி! துதிவாழி!
பத்திபுரி தொண்டர் வாழி!

கார்வாழி! யைங்கரன் றாள்வாழி! முருகவேள்
கழல்வாழி! நாரண னெனுங்
கருமுகி னிறக்கடவுள் வாழி!யெவ ரும்பரவு
கயிலையங் கிரிநாதரென்
போர்வாழி! தர்மவர்த் தனியம்மை வாழி!யா
னுரைத்தவிச் சதகம் வாழி!
யுவப்புடன் கற்றுளோர் கேட்டுளோர் வாழி!யவ
ருறவினரும் வாழி தானே.

**பொழிப்:** அந்தணர், தேவர், முனிவர், மன்னவர், திருமகள், நாமகள், பாவாணர், சந்திரன், சூரியன், வழிபாட்டுப் பாடல்கள், தொண்டர்கள், மழை, விநாயகன், முருகன், திருமால், கயிலை நாதர், தர்ம சம்வர்த்தனி அம்மை இச்சதகம், இதனைக் கற்றோர், கேட்டோர், அவர் உறவினர் ஆகியோர் வாழ்க என்று வாழ்த்தி இச்சதகம் நிறைவுறுகிறது.

**அ.பொ:** ஐங்கரன் - ஐந்து கைகளை உடைய விநாயகன். **(௧0௧)**

**கயிலாசநாதர் சதகம் முற்றிற்று.**

உ

சிவமயம்

மாயூரம் நல்லதுக்குடி கிருஷ்ணையர் அவர்கள்
இயற்றிய

# அவையாம்பிகை சதகம்

# அவையாம்பிகை சதகம்

'அபயாம்பிகை' என்ற பெயர் தமிழில் 'அவயாம்பிகை' என்று வழங்கப்படுகிறது. 'அ ஐ முதலிசை ஒக்கும் ச ஞ ய முன்' என்ற நன்னூல் போலி எழுத்தின் விதியை உட்கொண்டு இமயம் இமையம் எனவும் அரசர் அரைசர் எனவும் முரசு முரைசு எனவும் அருகி வழங்குவது போல அவயாம்பிகை என்பது செய்யுளின் ஓசை இனிமை குறித்து அவையாம்பிகை என வழங்குவதாயிற்றுப் போலும்.

இப்பொழுது மயிலாடுதுறை என்று வழங்கும் திருத்தலம் இடைக்காலத்தில் மாயூரம் என்று வழங்கப்பட்டது. இத்திருத்தலத்து இறைவர் மயூரநாதர் எனவும் இறைவி அபயாம்பிகை எனவும் வழங்கப்படுகின்றனர். திருநாவுக்கரசர் பெருமான் திருக்குறுந்தொகையில் மயிலாடுதுறை பற்றிய பதிகத்தின் *4*-ஆம் பாடலில் *(V-39-4)* 'மாமயிலாடுதுறை உறை அஞ்சலாள் உமைபங்கன் அருளிலே' என்று காணப்படும் தொடரை உட்கொண்டு அஞ்சலாள் என்ற இறைவியின் திருப்பெயர் அபயாம்பிகை என்று வழங்கப்பட, அதுவே இன்று வரை வழக்கத்திலிருந்து வருகிறது. அந்தணர் பலர் தம் புதல்வியருக்கு அபயாம்பிகை என்று பெயரிடுவது வழக்கமாக உள்ளது. மாயூரத்தைச் சுற்றிச் சேந்தங்குடி முதலாகப் பல சிற்றூர்கள் உள்ளன. அவற்றுள் நல்லதுக்குடி என்ற சிற்றூரைச் சார்ந்தவரும் *19* -ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவரும் ஆகிய கிருஷ்ணையர் என்பவரால் இயற்றப்பட்ட அவையாம்பிகை சதகம் காப்புச் செய்யுளாம் வெண்பா நீங்கலாகப் பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் அமைந்த நூறு பாடல்களை உடையது. பாடல்களில் அக்காலத்துப் பின்பற்றப்பட்ட முறைப்படி கிரந்த எழுத்துக்கள் சில இடம் பெற்றுள்ளன. பஞ்சாரத்தி, ஸ்ரீகிருஷ்ணாதி சோதரி, கடாக்ஷம், அசாரத்தி, அமுத வருஷம், ராக்ஷதர், சாக்ஷாத்காரம், சூக்ஷ்மம், ஸ்ரீபீடாதி, பரமேஸ்வரி, ஈஸ்வரி, விருக்ஷம், தூஷணிப்பு, சாக்ஷி முதலியன காண்க.

தமிழ் எழுத்தில் வடசொற்கள் பல வரையப்பட்டுள்ளன. அவை பெரும்பாலும் விளிகளிலேயே உள்ளன. புண்டரிகம், பரம்பரம், பரிபுரம், பாசாங்குசம், நவகுணம், நதி, பரிபாகம், பஞ்சாபரணி, நவபூரணி, பரணாபரணி,

பரமேசுவரி, ஈசுவரி, சனனம், பூரகம், கும்பகம், வாராகினி, அருணம், துவாத சாந்தம், செடம், புண்ய நதி, சதுர்த்தோளி, குரோதம், சோத்ரம், தொக்கு, சட்சு, ஆக்ராணம், அமலம், சாட்சாத்கார பூரணம், ககனக்கிரி, நவகோணம், இந்த்ராணி, நாரணி, வித்தாரம், கிர்பானந்த கடாக்ஷம், சுத்தவியோமம், துரந்தரி, கனகசபை, கருணாநிதி, பரநிதி, நித்யானந்தம், மவுனாதீபம், நமலி, கனகாபரணி, பரிதாபம், கிருபை, கபிலை, தருணா, சர்வானந்தம், அகண்டிதம், மூலாதாரம், ககனம், மோகனரூபி, பீடாசனி, சத்த பரிச ரூப ரச கந்தம், மோகாவேசம், அபரஞ்சி, தனுகரணம், நளினாசனம் முதலிய பல வடசொற்கள் உள்ளன. வசியமாகுது, தோண வேண்டும், தளர அடிக்குது, கிடக்குது, முடிச்சது, திரியுது, மயங்குது முதலிய உலக வழக்குச் சொற்கள் உள்ளன.

பாடல்கள் பெரும்பாலும் இறைவியை விளிக்கும் தொடர்களாகவே உள்ளன. இவற்றிலிருந்து அவையாம்பிகை ஆயிரம் போற்றி அமைத்தல் எளிது. இறைவியைப் பல கிளிகளாகவும், பழங்களாகவும், மணிகளாகவும் கூறும் பாடல்கள் மிக இனியன. ஆசிரியர் கிருஷ்ணையர் அவையாம்பிகையின் திருவடிகளில் மிகவும் ஈடுபாட்டோடு பாடியுள்ள இந்தச் சதகம் அன்பர்கள் பாராணயத்துக்கு ஏற்றது.

# அவையாம்பிகை சதகம்

## காப்பு

## நேரிசை வெண்பா

அவையாம் பிகைசதக மன்பா யுரைக்க
உபய சரண முதவுஞ்-சபைநடுவுள்
ஆடுகின்ற வையன்முத லன்பாகப் பெற்றெடுத்த
கோடுள மாதங்கங் குறித்து.

**பொழிப்புரை:** திருமகள் கணவனாகிய நாராயணன் தேடுதற்கு இயலாத திருவடிகளை உடைய அருணாசலப் பெருமான் மீது அன்போடு தெளிந்த நாவினால் பாடுவதற்கு மும்மதங்களை உடைய யானை முகத்தவனாகிய விநாயகனின் தாமரை போன்ற மெல்லிய திருவடிகள் காவலாக அமையும்.

**அருஞ்சொற்பொருள்:** உபயசரணம் - இரண்டு திருவடிகள்; கோடு உள - கொம்புகளை உடைய; மாதங்கம் - யானை (யானை முகத்தினை உடைய விநாயகரைக் குறித்தது).

## நூல்

### பன்னிரு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

205. பாதாம் புயத்திற் சிறுசதங்கைப் பணியுஞ்
சிலம்புங் கிண்கிணியும்
படர்பா டகமுந் தண்டையுடன் பணியுங்
கொலுசுந் தழைத்தருளும்
பீதாம் பரமுந் துவளிடையும் பிரியா
தரைஞாண் மாலைகளும்
பெருகுந் தரள நவமணியும் புனையுங்
குயமு மிருபுயமும்
போதா ரமுத வசனமொழி புகலு
நகையுங் கயல்விழியும்
புண்ட ரீகத் திருநுதலும் பொன்போற்
சடையு மதிமுகமும்

வாதா டியபே ரின்பரச வதனக்
கொடியே புனையடுத்தேன்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** சிலம்பு, கிண்கிணி சதங்கை, பாடகம், தண்டை, கொலுசு, என்பனவற்றைத் திருவடித் தாமரைகளில் அணிந்து மஞ்சள் நிறப் பட்டுடுத்து அரைஞாண், மாலைகள் முத்து முதலிய நவமணி மாலைகள் இவற்றைப் பூண்டு அசையும் இடை, தனங்கள், புயம், பற்கள், விழி, நெற்றி, சடை, மதிமுகம் இவற்றால் அழகுற்ற இன்ப ரசக் கொடியாகிய உன்னை அடுத்துள்ளேன். மயூரநாதர் வாழ்வாகிய அவயாம்பிகைத் தாயே! அருள்புரிக.

**அ.பொ:** பாடகம் - ஒரு கம்பியாய் பல முடக்காலே செய்யும் காலணி; பீதாம்பரம் - மஞ்சள் நிறப் பட்டாடை; துவள் இடை- அசையும் இடுப்பு; குயம் - தனம்; நகை - பற்கள்; வாதாடிய - காற்றில் அசையும். **(௬)**

206. அஞ்சு முகத்தி நலமுகத்தி யாறு
முகத்தி சதுர்முகத்தி
யலையிற் றுயிலு மான்முகத்தி யருணை
முகத்தி பரம்பரத்தி
பஞ்சா க்ஷரத்தி பரிபுரத்தி பாசாங்
குசத்தி நடுவனத்தி
பதுமா சனத்தி சிவபுரத்தி பாரத்
தனத்தி திரிகுணத்தி
கஞ்ச முகத்தி கற்பகத்தி கருணா
கரத்தி தவகுணத்தி
கயிலா சலத்தி நவகுணத்தி காந்தண்
மலர்போற் சதுர்க்கரத்தி
மஞ்சு நிலத்தி பரம்பரத்தி மதுரச்
சிவத்தி மங்களத்தி
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நாலுமுகம், அஞ்சு முகம், ஆறுமுகம், நலமுகம், மால்முகம், அருணை முகம், கஞ்ச முகம், பாரத்தனம், நாற்கரம், பரிபுரம், பாசாங்குசம், பதுமாசனம், கயிலாயம், கற்பகம், முதலியன உடையவள் அவயாம்பிகை. பாடல் இயைபு தொடையில் சிறப்பாக அமைந்துள்ளது.

**அ.பொ:** மால் - திருமால்; அருணை - செந்நிறம்; பரம்பரத்தி - மேம்பட்ட நிலையில் இருப்பவள்; பரிபுரம் - சிலம்பு; கயிலாசலத்தி - கயிலை மலையில் இருப்பவள்; மஞ்சு - மேகம், அழகு; பரை - மேம்பட்டவள். **(உ)**

207. **உச்சிக் கிளியே யருட்கிளியே யுணர்வுக்**
**குணர்வா யுயிர்க்குயிராய்**
**உதித்த கிளியே பரவெளியி லொளிவான்**
**பழத்தை யுன்னிவரும்**
**நற்சொற் கிளியே கதம்பவன நகரில்**
**வாழும் பரைக்கிளியே**
**ஞானக்கிளியே மறைவனத்தி னடனக்**
**கிளியே சிவக்கிளியே**
**பச்சைக் கிளியே யன்பர்தகி படரும்**
**வாவி யோடையினிற்**
**பரவுங் கிளியே நிதிக்கிளியே பவழக்**
**கிளியே பதிக்கிளியே**
**வச்ரக் கிளியே நவபீட வாசக்**
**கிளியே யருளமையும்**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** அவயாம்பிகை பல கிளிகளாக உருவகிக்கப்பட்டுள்ளாள். பாடல் சுவையாக அமைந்துள்ளது.

**அ.பொ:** வச்ரம் - வைரம் போன்ற ஒளி; ததி - தத்துவம். **(ரு)**

208. **பண்டு மறையின் முடிவினுள்ளே பழுத்த**
**பழமே யருட்பழமே**
**பரிபா கத்துப் பத்தர்நெஞ்சிற் படர்ந்த**
**பழமே நவமுடிமேல்**
**என்றுங் கனிந்த திருப்பழமே யிமையோர்**
**தேடித் தேடியுமே**
**யெட்டாப் பழமே காசினியி லெவர்தாந்**
**தனையே யுணர்ந்தோர்கள்**
**கண்டு புசிக்கும் பதிப்பழமே கருணைப்**
**பழமே சிவப்பழமே**

கயிலா யத்தி லரன்முடிமேற் கனிந்த
பழமே கதிப்பழமே
மன்றுண் மணக்கு மடிவயர்க்கு மாயோ
கியர்க்கு முதவிநிற்கும்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அவயாம்பிகை பல பழங்களாக உருவகிக்கப்பட்டுள்ளாள். பாடல் படித்து இன்புறும் வண்ணம் உள்ளது.

**அ.பொ:** பரிபாகம் - ஏற்ற பக்குவம்; காசினி - உலகம். **(ச)**

209. தேனே பாலே சருக்கரையே தெவிட்டா
ருசியே கற்கண்டே
சீனி யுடன்முப் பழச்சாற்றில் சிறந்த
ரசமே செம்பொன்மலை
மானே மடலே மடக்கொடியே வளர்ந்த
வனமே திருவதன
மயிலே குயிலே யன்பரெலாம் வாரச்
சொரியு மனுநிதியே
ஊனே யென்ற னுயிர்க்குயிரே யுள்ளும்
புறம்பே யுறுமொழியே
யொளிசேர் கனகக் கற்பகமே யுதித்த
சுடரே திருப்பரமே
வானே வானின் வளிக்கனலே வனமே
பூவே வரைமகளே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம்பிகைத்தாயே!

**பொழிப்:** அவயாம்பிகை பல இன்சுவைப் பொருள்களாகவும், மான், மடல், கொடி, மயில் போன்றவைகளாகவும், குயில், நிதி, சுடர், கற்பகம், பூக்கள் முதலியனவாகவும் உருவகிக்கப்பட்டுள்ளாள்.

**அ.பொ:** மடல் - பூவின் மெல்லிய இதழ். **(ரு)**

210. பஞ்சா பரணி நவபூரணி பரணா
பரணி தவசரணி

பரமேஸ் வரியே யீஸ்வரியே பஞ்சா
க்ஷரத்தி பங்கயத்தி
எண்சா ஹுடம்பிற் றொண்ணூற்றா றிசைந்த
தத்வா திகமுகமே
இறையோ னிடத்தி னடனமிடு மிமையோர்க்
கரசே யேகவெளிக்
கஞ்சா சனத்தி னலையானே கருணா
லயத்து ளுறைபவளே
கன்னற் சிலையு மம்பூவுங் கரத்திற்
சிறந்த பரைத்திருவே
வஞ்சா குலந்தீர் திருவடியர் மனத்து
ளுறையுங் கிருபைக்கடலே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியார் மனத்துள் உறையும் கருணைக் கடலாகிய அவயாம்பிகை 96 தத்துவங்களையும் கடந்து திருவைந்தெழுத்தில் தங்கியுள்ளாள்.

**அ.பொ:** பஞ்சாபரணி - பூண்வன, புனைவன, செருகுவன, பூட்டுவன, நடுவன என்ற ஐவகை அணிகளை உடையவள்; பரணா பரணி - அணிகலன்களை அணிந்தவள்; வஞ்சாகுலம் - வஞ்சனையால் நிகழும் துன்பம். **(சா)**

211. எங்கு நிறைந்த வருண்மணியே யேக
மணியே யொளிர்மணியே
யிறையோ னிடத்தி னடனமிடு மிமைய
மணியே நவமணியே
கங்குல் பகலுங் கண்டவெளிக் கலைநான்
குடைய திருமணியே
கண்ணின் மணியே பொன்மணியே கமலா
சனத்தில் வளர்மணியே
தங்கு மடியா ரிதயமதிற் றழைத்த
மணியே நவமணியே
தரணிக் கொளியா யிரவுபகல் தானே
வளர்ந்த தவமணியே
மங்குங் கருத்தை நிலைநிறுத்தி வதன
வெளியிற் படர்மணியெ

மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அவயாம்பிகை பல மணிகளாக உருவகிக்கப்பட்டுள்ளாள். இது சுவையாகவும், சிறப்புடனும் விளங்குகிறது.

**அ.பொ:** கங்குல் - இரவு. **(எ)**

212. ***அழியச் சனன வலைமுழுது மலையு***
***மனத்தை நிலைநிறுத்தி***
***யாதா ராதி யடிநடுவு ளருணா***
***சலத்தின் வேரினுள்ளே***
***சுழியைத் திறந்து வாயுவதாற் சுடரே***
***சகபூ ரகத்தாலுந்***
***தோன்றுங் கும்ப காதியுடன் சோதி***
***படரு ஞானவெளி***
***விழியுந் திறக்கு மதிக்குழம்பு மிகுந்து***
***சுரக்கு நவக்கிரக***
***வெளியா மேலே வெளிபடர்ந்து விம்மித்***
***தனையே யாண்டருள்வாய்***
***வழியைப் பொருத நாயடியேன் மனத்தா***
***மரையு ணீவருவாய்***
***மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!***
***அவையாம் பிகைத்தாயே!***

**பொழிப்:** யோகியர் உள்ளத்தில் அவயாம்பிகை வீற்றிருந்து அவர்களை ஆட்கொள்கிறாள்.

**அ.பொ:** சனன அலை - பிறவிக்கடல்; ரேசகம் - காற்றை வெளியே விடுதல்; பூரகம் - உட்புகும் காற்று; கும்பகம் - நிலை நிறுத்தும் காற்று; மதிக்குழம்பு - சந்திரனிடத்திலிருந்து வரும் அமுததாரை. **(அ)**

213. ***கண்ணா ரமுதே யுனையெனது கண்டான்***
***களிக்க மொழிகுழறக்***
***கதித்த வுயிரு முடல்புளகங் காணும்***
***பருவம் பெறுவேனோ***

விண்ணா ரமுதே சிவபுரத்தில் விளைந்த
கனியே தேன்கடலே!
வீசிப் படர்ந்த கமலமதில் வீற்றே
யிருக்கும் விழிச்சுடரே!
பெண்ணா னதுவே யாண்வடிவே பேணு
மலியோ பிறங்கொலியே!
பேதை நாயே னிதயமதிற் பிரியா
திருக்குந் தவக்கொழுந்தே!
மண்ணா டியவ னிடப்பாகம் வளருங்
கொடியே மடமயிலே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியேன் உள்ளத்தில் பிரியாதிருக்கும் உன்னைக் கண்டுகளிக்க, மொழி குழற, உயிரும் உடலும் மயிர்க்கூச்செரியக் காணும் வாய்ப்பினை எதிர்நோக்கியுள்ளேன்.

**அ.பொ:** கண்டான் - கண்தான். (கூ)

214. தீரா மயக்கப் பிணிநோயைத் தீர்க்கு
மருந்தே யருமருந்தே
தேவா திகளு மறியாத ஸ்ரீகிருஷ்
ணாதி சோதரியே
ஆரா திப்பார் பூசிப்பா ரமைந்துன்
நாம மதைநினைப்போர்
அடுத்தோ ரின்ப சுகமுமுனை யடையு
மெனவே மறைவிளம்ப
நேரா யிருந்து களிப்பவளே நித்யா
னந்த சுகப்பொருளே
நெறியே குறியே யெனையாளு நிமலி
யமலை சுகத்தாளே
வாராகினியே துட்டரிட மனத்தை
அழிக்குஞ் சினத்தாளே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் நாமத்தை நினைப்பவரும் அவரை அடுத்தவரும் இன்ப சுகம் அடைவர் என்று வேதங்கள் குறிப்பிடும்.

**அ.பொ:** சோதரி - சகோதரி; மறை விளம்ப - வேதங்களைக் கூற; நிமலி - களங்கமற்றவள்; அமலை - களங்கத்தைப் போக்குபவள். **(க0)**

215. **மெய்யிற் படர்ந்த வருட்கடலே வினவு**
**ஞான முளரியினில்**
**விரிவாய்ப் பொருந்தும் பரிநிதியே வினையை**
**யகற்றும், பதமுடையாய்**
**உய்யுந் தவத்தோர் மேலோர்க ளூறுதி**
**யுடனே மகிழ்பதியே**
**ஒன்றா யோக முடிவதனி லொளியாய்**
**வெளியா யுதித்தவளே**
**செய்ய கமலத் தயன்மனைவி தினமும்**
**பணியுந் திருவருளே**
**தேகா தேகக் கொடியையெலாஞ் சிறந்து**
**நிறைந்த சின்மயமே**
**வையத் தடங்கா வருள்அமலை வருண**
**வருண வொளிமணியே**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** அவயாம்பிகை வினைகளைப் போக்கும் திருவடிகளை உடையவள்.

**அ.பொ:** முளரி - தாமரை. **(கக)**

216. **வன்ன மொன்றா யிரண்டாகி வளர்ந்தோ**
**ரைந்தா யெட்டாகி**
**வானாய் வானின் வளிக்கனலாய் வனமாய்ப்**
**பாராய் வகையைந்தாய்ப்**
**பன்னு மறையோர் நான்காகிப் பரந்த**
**சாத்ர முடனாறாய்ப்**
**பதினெண் புராண வாகமங்கள் பரிந்தோ**
**ரிருபத் தெட்டாகி**
**உன்னி நெடுமா லயனாலு முலகை**
**வகுக்கக் காப்பாற்ற**
**வுடனே சங்கா ரித்திடவு முமையா**
**ளொடுதன் கேள்வனுமாய்**

**மன்னி நிதமு மூட்டிவைத்த மதலாய்**
**மேரு மகளாக**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** பஞ்ச பூதங்கள், நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், பதினெட்டுப் புராணங்கள், இருபத்தெட்டு ஆகமங்கள் இவற்றால் நீ போற்றப்படுகிறாய்.

**அ.பொ:** வன்னம் - எழுத்து. **(கஉ)**

217. **தந்தை தாயார் சுற்றத்தார் சகல**
**வாழ்வு முனதருளே**
**தமியேன் செய்யும் வினையுனது சடல**
**முனது வுயிருனது**
**சிந்தைக் கிசைந்த வடிமையென்றும் செகத்தி**
**லெவர்க்குந் தெரியாதா?**
**சிந்தா மணியே யெனக்குவருஞ் செயலே**
**யுனது செயலலவோ?**
**சொந்த வடிமை கிடந்தலையச் சும்மா**
**விருந்தா லுனைவிடுமோ**
**சோதி வதன மணிவிளக்கே துவாத**
**சாந்தப் பெருவெளியே**
**மைந்த னெனவந் தாண்டருள்வாய் வனச**
**வதனி நவச்சரணி**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** தந்தை, தாய், சுற்றத்தார், சூழ வாழும் வாழ்வு, அடியேனுடைய உடல், உயிர், செயல்கள் யாவும் உன்னைச் சார்ந்தே நிகழ்வன. ஆதலால் அடியேனை உன் மைந்தனாகக் கொண்டு ஆண்டருள்வாய்.

**அ.பொ:** சடலம் - உயிர்; துவாத சாந்தம் - உச்சிக்கு மேல் பன்னிரண்டு அங்குலத்தில் உளதாகக் கருதப்படும் யோகஸ் தானம்; துவம் - இரண்டு; தசமி - பத்து; வனசம் - தாமரை; நவசரணி - புதுமை நலமுடைய திருவடிகளை உடையாய். **(கரு)**

218. **பேயே னூமை விழிக்குருடு பேறுஞ்**
**செவிடு கான்முடமாய்ப்**

பிள்ளை யெனவே யீன்றவர்க்குப் பிரிய
விடவு மனதாமோ
நாயேன் செய்யும் வினைமுழுது நலமாய்ப்
பஞ்சுப் பொறியெனவே
நகத்திச் சிவத்து ளெனதுயிரை ஞானப்
பதியுட் சேர்த்தருள்வாய்
ஆயே யமலை யருட்கடலே யகிலா
தார முடிவிளக்கே
யணங்கே யிணங்கும் அடியவர்கட்கமுத
ஞான மருளரசே
மாயே செகமோ கனமான வடிவே
முடிவே மலைமகளே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உறுப்புக்குறை உடைய மக்களையும் பெற்றோர் பிரிய விரும்பார். என் தாயாகிய நீ என் உயிரை ஞானப்பதியாகிய இறைவனோடு சேர்த்தருள்வாய்.

**அ.பொ:** நகத்தி - போக்கி, அகற்றி; ஆயே - தாயே; மோகனம் - கவர்ச்சி.

(கச)

219. எண்ண வடங்கா தெனதுசென்ம மேட்டி
லெழுதி முடியாதங்
கிடிப்பார் நீண்ட மரம்போலு மெமனார்
பதியி லடைந்தஃது
பெண்ணின் மயக்கம், வினைமயக்கம், பிறவி
மயக்கந் தொலையாது
பித்தர் சாலப் புலையருடன் ப்ரமைகொண்
டடிமை யலைவேனா
வண்ணக் கலையே கதிமுதலே வனசப்
பதியே யதிமதுர
வனமே கனமே யோகியர்கண் மனமே
குடியே வாரிதியே
மண்ணிற் கனக முடிநடுவுண் வாதா
டியபே ரொளிவிளக்கே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே! (கரு)

**பொழிப்:** என் பிறவிகள் எண்ணில் அடங்கா. இவற்றை எடுத்த நான் இன்னும் பெண் மயக்கம், வினை மயக்கம், பிறவி மயக்கம், கீழ் மக்கள் தொடர்பு இவற்றால் அலையாமல் காத்தருள்வாய்.

220. **பறந்த பறவை நாற்காலாய்ப் படரும்**
**விலங்கு மூர்வனவும்**
**பதிய தனில்வாழ் சீவர்களும் பாரில்**
**நிலையாந் தாபரமும்**
**பிறந்த மனிதர் தேவரோடு பிசகா**
**தெடுத்த செனனமதிற்**
**பெற்ற தாயா ரெத்தனையோ பிறவி**
**மனையாள் புதல்வர்களும்**
**நிறைந்த கோடா கோடியினி னிலையா**
**னதுவு மொன்றறியே**
**னீயே தாயென் றநுதினமு நெறியே**
**யருளிப் பிறவியினி**
**மறந்து விடவு முனதுபய வனச**
**மலர்த்தா ளீந்தருள்வாய்**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** நான் எழுவகைப் பிறப்புக்களில் எவ்வளவோ பெற்றோர் மனைவியர் மக்களைப் பார்த்துள்ளேன். இனி அடியேன் பிறவியை மறந்து விட அருள்புரிவாயாக.

**அ.பொ:** தாபரம் - தாவரம். **(கசா)**

221. **செடத்தை யெடுத்து மயல்நிகழத் திகைப்பி**
**லுயிரு மகப்படவுந்**
**தேசா சார வதிமோகத் திருக்கில்**
**மனமு முருக்கமுடன்**
**கடத்தை யெனதென் றபிமானக் கருமா**
**மயிலா ருடனாசைக்**
**காத லதனி லுயிர்மறைந்து கலங்கிக்**
**கலங்கி யலைவேனோ**
**நடத்தை யறியாப் பரிபாக நாவா**
**லுன்ற னிருபதத்தை**

நம்ப மனதிலுறுதி யொன்றாய் நாட்டி
யெனையோ ராளாக்கி
மடத்தை யறிய வதிலலைப்பாய் மதிவா
ணுதலே! மலைமகளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அலையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உலகியல் மயக்கத்திலும் மகளிர் மயக்கத்திலும் என் உயிர் மறைந்து கலங்காது. பக்குவம் அளித்து உறுதியான மனம் அளித்து என்னை ஆட்கொள்வாயாக.

**அ.பொ:** திருக்கு - செருக்கு; கடம் - உடம்பு; கருமாமயிலார் - மகளிர்.

(கஎ)

222. காவே யிலங்கும் பொன்னிநதிக் கரையே
யிலங்கு மயிலைநகர்
கங்கை முதலாம் புண்யநதி கருதிப்
பணியு மூதூரே
பாவே யிலங்குங் கவிவாணர் பகரு
மறைவே தாகமங்கள்
பயிலும் வீதிக் கமுகிளநீர் பாயும்
வாழை குருந்தேறும்
ஆவே யிலங்கு வயல்சூழு மதிலே
நானா விருக்ஷமுட
னமுத ரசமாய்க் கனிபழுக்கு மருகிற்
பறவை யினஞ்சூழும்
மாவே யிலங்கு மநுதினமு மருவுங்
கயிலை நிகராம்அம்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அலையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** காவிரிக் கரையில் சோலைகள் சூழ, ஊரில் மறையும் வேதாகமங்களும் ஓதப்பட, கமுகும், வாழையும், பலவகை மரங்களும், கரையிலமைந்த வயல்களும், பறவை இனங்களும், மிகுதியாகக் காணப்பட, புண்ணிய நதிகள் வந்து பணிய, கயிலாயத்தை நிகர்க்கும் மயிலாபுரியில் நீ வீற்றிருக்கிறாய்.

**அ.பொ:** ஆவே - பசுக்களே.

(கஅ)

223. என்ன மயக்க மிதுபுதுமை யிதையா
ருடனே யானுரைப்பேன்
எடுக்க முடியா வினைச்சுமையை யேழை
தலைமீ தெடுத்தேற்றி
மன்னிப் பிறக்க விடமுமன்றி வாகாய்
நடக்க வழியுமன்றி
மயக்கக் கொடுவேல் முனைக்கானில் வனவே
டர்கள்செந் நாயுடனே
என்னை மறிக்கக் கொடுமையுட னெழுந்தே
யுழுவை பாய்ந்திடவிட்
டிதிலே நிறுத்தி யலைச்சலைவிட் டெங்கே
யொளித்தா யீஸ்வரியே
வன்ன மயிலே! யெனக்குரைத்த வசன
மதுபொய் யானதென்னோ
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** என் தலையில் வினைச் சுமையை ஏற்றி, பிறக்க இடமுமின்றி, நடக்க வழியும் இன்றி, வேடர்கள் செந்நாயுடனே, என்னை மறிக்க, புலி என்மேல் பாய வர என்னைத் தனியே விடுத்து நீ எங்கே மறைந்திருக்கிறாய்.

**அ.பொ:** உழுவை - புலி. **(கஉ௩)**

224. பாகு சேருங் குழலணங்கே பணத்தை
யணியுஞ் சதுர்த்தோளி
பாதி மதியுங் கதிரணியும் பரம
ஞான வெளிச்சுடரே
ஆகும் பருவ மறிந்தென்ற னாவி
யாமுன் னுபயபத
மடுத்துக் கவிதைச் சரந்தொடுத்தே யமைந்து
பொழிய வரந்தருவாய்
ஏகு மயக்கத் துட்டருடன் இனிதா
வெனைச்சேர்த் தகற்றாதே
யிமவா னளித்த திருமகளே யெங்கு
நிறைந்த பெருவெளியே
வாகு பொருந்துங் கிருஷ்ணனது வரிசைத்
துணைவி சுகவதனி

மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** என்னை உலகியல் மயக்கத்தில் சேர்த்து அகற்றாமல் உன் திருவடிகளைத் தந்து கவிதை மழை பொழிய அருள்வாயாக.

**அ.பொ:** பணத்தை - படம் எடுக்கும் பாம்பை. **(உ0)**

225. விதியின் முறைமை யெத்தனைநாள் வினையிற்
படுவ தெத்தனைநாள்
விசுவா சிக்கக் கொடுமையன்றி விளையும்
பகையு மெத்தனைநாள்
அதிக வினையு மெத்தனைநா ளற்ப
வாழ்வு மெத்தனைநா
ளதிலே குரோதித் திருப்பதெலா மழியும்
வகையு மெந்நாளோ
பொதிகை மலைய னரியயனும் புகழ்சேர்
காமன் றிசைப்பாலன்
போற்று முன்ற னிருசரணம் பொருந்தி
மகிழ்வ தெந்நாளோ
மதியைத் தரித்த முகில்வேணி மயிலே!
குயிலே! வான்மணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** விதியின் முறைமை, வினையின் தாக்கம், விளையும் பகை. அதனால் ஏற்படும் கோபம் இவற்றை விடுத்து உன் திருவடிகள் இரண்டையும் பொருந்தி நான் மகிழ்வது எந்நாளோ?

**அ.பொ:** விசுவாசிக்க - நம்பிக்கையுடன் இருக்க; குரோதித்து - கோபித்து.
**(உக)**

226. சிந்தா மணியின் பூசைசெய்தாற் செகத்தி
லெவர்க்குங் குறைவருமோ?
செல்வ முடனே கல்விதருந் திரளாம்
வினைக ளென்பவெலாம்
முன்றா னான போதிலையே முதல்வி
யுன்ற னருளுலகில்

மூழ்கிக் கனமாய் வினையிருளு முறியப்
படர்ந்து மறைந்ததுபோல்
இந்தா வெனவே நீகொடுத்த வியல்பே
யல்லான் மானிடரோ
டேற்கை சேர்க்கை யவருரைத்த தேதா
கிலுமுண் டோவுரையாய்
மைந்தா வெனவே யமுதளித்த வகையை
நீயு மறந்தாயோ
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** சிந்தாமணியை வழிபட்டவர்கள் உலகில் குறைவு உறுவாரோ? யாவும் நீ கொடுத்தனவே. ஆதலால் அடியேற்கு அமுது அளித்த செயலை நீ மறந்தாயோ? **(உஉ)**

227. வெகுநாட் பழய வடிமையென மிகவுங்
கனிந்தே யருளளித்து
வெளியைக் காட்டிக் களிப்புடனே விம்மி
விழிநீர் சொரிந்தருளத்
தகுமெய்ஞ் ஞானச்சாரமெலாந் தந்தோந்
தந்தோ மென்றுரைத்த
தாய்தான் மறந்தா லுலகில் இனித் தானார்
பகையா ரென்னசெய்கேன்
புகழ்நா ரணியே யுன்னைவிடப் பொருளு
மருளும் வேறுமுண்டோ
பொல்லா தவனா னானாலும் பிள்ளை
யிவனென் றருள்புரிவாய்
வகுத்த சேயைப் பால்கொடுத்து வளர்க்கா
திருக்குந் தாயுமுண்டோ?
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகாத்தாயே!

**பொழிப்:** பழகின அடிமை என எனக்கு அருள்வெளியைக் காட்டி மெய்ஞ்ஞான சாரம் எல்லாம் தந்தோம் என்றுரைத்த தாயாகிய நீ யான் பொல்லாதவனானாலும் என்னை மறவாது அருள்புரிக. தன்பிள்ளைக்குப் பால் கொடுக்காத தாயும் உளளோ? **(உஙு)**

228. சோத்ர வழியால் வருவினையுந் தொக்கு
வழியால் வருவினையுந்
தொடருஞ் சட்சு வழியாலுஞ் சொன்னா
வுடனே யாக்ராணம்
பார்த்த வழியிற் கரணமதைப் பற்றி
யுயிரைக் கலங்கடித்துப்
பண்ணும் வினையும் வெகுகோடி பாழ்போ
னதுவும் வெகுகோடி
ஆற்றிற் கரைத்த புளியெனவே யாச்சுது
ஒருவர்க் குதவியன்றி
யடியேன் முன்னா ளொருவருக்கு மாகா
தவனோ வதையினித்தான்
மாற்ற வகையு மறியாயோ வகுத்த
வெனையு மறந்தாயே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** ஐம்பொறிச் செயல்களால் என் உயிர் கலக்குற்றுப் பாழாயிற்று. யான் கற்ற கல்வி ஆற்றில் கரைத்த புளி ஆயிற்று. என்னை மறவாமல் என் கலக்கத்தை மாற்றுவாயாக.

**அ.பொ:** சோத்ரம் - செவி, காது; தொக்கு - தோல்; சட்சு - கண்; ஆக்ராணம் - மூக்கு.

**(உச)**

229. நாளோ வினையோ வீணாளோ நானா
தொழிலுக் கானதுவு
நலஞ்சேர் நிட்டைக் குதவிவரு நாழி
யொன்றா யினுமிலையோ
சூளைக் குயவன் விதிவசத்தாற் றுக்க
சுகமுந் தொடர்ந்துவரத்
துன்மார்க் கத்தால் வந்ததென்றுஞ் சொல்வார்
பாரிற் சூழ்மனிதர்
வேளைக் கிசைந்த மொழிபேசி வினையிற்
புகுந்த சுகம்போதும்
இமாயை யொழித்தே யமலசுக வெளியைப்
பொருத்தி வினைப்பிறவி

மாறும் படிநீ யருள்புரிவாய் வாலாம்
பிகையே வான்மணியே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நிட்டை கூடி உன்னை அனுபவிக்காமல் வீண் பேச்சில் வீணாக்கிய என்னை ஆட்டிப் படைக்கும் மாயையைப் போக்கிக் களங்கமற்ற சுகவெளியைக் காட்டி என் வினைப் பிறவி மாளும்படி அருள்புரிவாயாக.

**அ.பொ:** வேளை - சந்தருப்பம். **(உரு)**

230. என்ற னினைப்பு மினிக்கடந்தே யேக
வெளியி னிலை துறந்தே
யிரவு பகலு மற்றவிட மினிதா
கியபே ரொளிவிளக்கே
சந்திக் கரையின் முடிவேற்றித் தனையுந்
தலைவ னடிசேர்த்துச்
சாட்சாத் கார பூரணமாய்ச் சர்வா
னந்த மாயிருக்க
உன்ற னிருதா ளடிக்கருணை யொளிசேர்
கனகக் கிரிமுடிமே
லுதித்தா யெனதுவினையறவு முமையே
யிமையோர்க் கரசான
மந்த்ரக் கலைச்சி நவகோணம் வாழும்
யோக நாயகியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நான் தலைவன் அடி சேர்ந்து சாட்சாத் கார பூரணமாய்ச் சர்வானந்தமாய் இருக்கவும் என் வினைகள் நீங்கவும் அருள்வாய். **(உசா)**

231. காமக் கிரிபீ டத்தழகி கனக
சபையி னடனமிடுங்
காலி! வீரி! கவுமாரி! காமேஸ்
வரியே! யீஸ்வரியே!
பூம தேவி! நான் முகவன் புணரு
மனைவி யிந்த்ராணி

புகழ்நா ரணியுந் தினம்பணியும் பூர்ண
கலையே! கதிமுதலே!
சோம னுதய மணிநுதலே! சுருதி
ஞான முடிமுதலே!
துவாத சாந்த நிலையானே! சுகமே!
ஞான மணிவிளக்கே!
வாம நயனி யதிரூபி! வனசா
கினியே! மாமணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** பூமி தேவி, நான்முகன் தேவி சரசுவதி, இந்திராணி, நாரணி ஆகியோர் நாளும் பணியும் பூரணக் கலையாகி இருப்பவள் நீ.

**அ.பொ:** காலி - காலை உடையவள்; வீரி - வீரமுடையவள்; கவுமாரி - குமரனைப் படைத்தவள். **(உஎ)**

232. மூலத் துதிக்கு ஞாயிறுபோன் முளரி
யிதழாய்ச் சதுர்முகனாய்
மூல வுந்தித் திருமாலாய் மூளுங்
கால காலனுமாய்
மேலுற் றருளுஞ் சதாசிவனும் விரியு
மிதமொன் றருள்பரையும்
வித்தா ரமுமா யுலகனைத்தும் விரிவாய்
நின்ற விரிசுடரே!
ஞாலத் தமைந்த விருபதமு நடனச்
சிலம்புங் கிண்கிணியு
நறுகும் பெருகு மிந்துநிதி ஞான
நிதியாம் பரமநிதி!
மாலற் றவர்க்கு முதவிநிற்கு மதுர
வசனி! நவசரணி!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** சதுர்முகனாய்த், திருமாலாய்க், காலகாலனும், சதாசிவனும் ஆகி உலகு அனைத்தும் விரிவாய் நின்ற விரிசுடராய் உள்ளாய். **(உஅ)**

233. ஏன்றான் மயக்கத் திருவினையு மிடியும்
வகையும் பொருதாதோ
வேழை தனையே பகைப்பவர்கள் இருமா
நிலத்திற் சலிமையுண்டாய்
நான்றான் பெரிய னென்றுரைத்த நாவும்
வாயு மிகவடைத்தே
நகரிற் பயண மாகிவர நடத்தாய்
கருணைச் சுடர்விளக்கே
தான்றான் செய்த வினைமுழுதுந் தனக்கே
யன்றி மனக்கவலை
தன்னாற் போமோ வென்மனதுள் தவழ்ந்து
புழுங்கு தென்னசெய்தேன்
வான்றான் பரவுந் திரிபுரையே மௌனா
தீப மலர்க்கொடியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** என் இரு வினையும், வறுமையும், பகைமையும், மனக் கவலையும் என் மனத்துள் தவழ்ந்து புழுங்கா வண்ணம் அருள் செய்வாய். **(உகூ)**

234. கள்ள மயக்கந் தொடராமற் கவலைப்
பிணிகள் படராமற்
கனவை நிஜமாய்த் தொடர்ந்தடர்ந்து கரைய
விழியின் புனலாறாய்த்
துள்ளி மனந்தான் மிகச்சலனந் தொடுத்துத்
தொடுத்தே யலையாமற்
சுகமா யுன்ற னிருபதத்தைத் தொண்டன்
மனதுட் கொண்டருள்வாய்
உள்ள படியே மனத்தடத்தி லொன்றாய்
வாழுங் கனியமுதே!
வோங்கா ரத்துக் குள்ளிருந்தே யுயர்ந்த
கமலா சனத்தரசே
வள்ளன் மயத்தி யருண்மயத்தி வனச
முகத்தி கனகசத்தி!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** கள்ள மயக்கம் கவலைப் பிணிகள், கனவை நனவாய்க் கருதிக் கண்ணீர் வடிக்கும் மன அலைவு இவற்றால் நான் வருந்தாதபடி உன் திருவடிகளை அடியேன் மனத்துள் வைப்பாய்.

**அ.பொ:** மயத்தி - அழகுடையவள். (௩௦)

235. **பெரியோ ரெவரைப் பழித்தேனோ பிரம**
**தவத்தை யழித்தேனோ**
**பெற்ற தாயார் பசித்திருக்கப் பேணி**
**வயிற்றை வளர்த்தேனோ**
**அரிய தவத்தோர்க் கிடைஞ்சல்செய்தே யற்ப**
**ரிடத்திற் சேர்ந்தேனோ**
**வறியா மையினா லென்னகுற்ற மார்க்குச்**
**செய்தே னோவறியேன்**
**கரிய வினைதா னெனதறிவைக் கலங்க**
**முடித்த முடிச்சதையுங்**
**கரைக்க வுன்கிர் பானந்தக் கடாக்ஷம்**
**பொருந்தி யருள்புரிவாய்**
**வரிவிற் புருவ மடமானே வதனாம்**
**பிகைவா லாம்பிகையே!**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** பெரியவரைப் பழித்தல், தவத்தை அழித்தல், தாய்ப் பசித்திருக்கத் தான் உண்ணுதல், அற்பரிடம் சேர்தல், போன்ற தவறுகளை அடியேன் செய்திருக்கக் கூடும். அவற்றின் தீவினை அடியேன் மனத்தைக் கலக்காமல் கருணைப் பார்வை செலுத்துவாய்.

**அ.பொ:** முடிச்சது - முடித்தது; கடாக்ஷம் - பார்வை. (௩௧)

236. **கனத்த மலையை யெடுத்தணுவாய்க் காலா**
**லூன்றி மீதுவைத்தால்**
**கால்தான் தாங்க வசமாமோ கருணா**
**நிதியே! யினியுனது**
**சினத்தை மகன்மேற் பொருத்திநின்றாற் சிறியேன்**
**பொறுத்து நிலைப்பேனோ**

சிவமே யுனது தயவுவரச் செய்வா
யினியஞ் சுகவினமே!
தொனித்த மறையின் முடிவிளக்கே சோதி
வதனச் சுடரொளியே!
சுத்த வியோம மண்டலத்திற் சுகமாய்
வளருந் துரந்தரியே!
மனத்து ளழுக்கை யகற்றியுன்றன் மலர்ப்பாத
மதிற்சேர்த் தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** பெரிய மலையின் கனத்தை அணு ஒன்று தாங்க முடியாது. உன் சினத்தை அடியேன் மீது செலுத்தினால் தாங்க மாட்டேன். அடியேன் மனத்து அழுக்கை அகற்றி உன் மலர்ப் பாதத்தில் அடியேனைச் சேர்த்து அருள்வாய்.

**அ.பொ:** அஞ்சுகம் - அழகிய கிளி. (௩௨)

237. கிளியே யருண வொளிச்சுடரே கிர்பைசேர்
வதன முழுமதியே
கெடியா முன்ற னிருபதம்நான் கிடைக்கும்
வகையும் பெறுவேனோ
ஒளியா யிருக்குங் கனகசபை யொன்றே
யிரண்டே விபரிதமே!
யுரைக்குங் கருணா நிதிமயலே யுதித்த
பரம னுடனாடும்
அளியா ரமுதே! பரம்பரையே யணுவி
லணுவா யண்டபிண்ட
மமர்ந்த சிவமே! ஞானவெளிக் கரசே!
வேதத் துட்பொருளே!
வளியே! சுழியி னடமிடுகண் மணியே!
யெளியேற் கினியருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் திருவடிகளை அடியேன் அடையுமாறு செய்வாய்.

**அ.பொ:** கெடி - நன் மதிப்பு; அளி - அன்பு. (௩௩)

238. கவலைக் கடலின் வினையலையிற் கனத்த
மனமா கியமடுவிற்
கைநீச் சாக நீஞ்சவென்றாற் கரைதா
னடுத்துக் கிட்டவிலை
சவல மலையி லிடர்படவுந் தகையும்
வெகுளி காமமது
தாவி வரவுங் கைப்பிடிக்கத் தானா
தரவு மில்லாமல்
குவளை விழியிற் புனல்பெருகக் கோகோ
வெனயா னழுதுநின்றாற்
குறித்துன் னருட்டோ ணியிலேற்றிக் கொண்டே
கரையிற் சேர்த்தாள்வாய்
மவுனச் சிவனா ரிடப்பாகம் வளருங்
கருணா நிதிமயிலே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** கவலைக் கடலில் வினை அலையில் தவித்துக் கரைகாண இயலவில்லை. ஆசை, கோபம், காமம் என்ற அலைகளால் மோதப்பட்டுக் கண்ணீர் விட்டு அழுது நிற்கும் என்னை உன் அருளாகிய தோணியில் ஏற்றிக் கரையில் சேர்த்து ஆள்வாய்.

**அ.பொ:** நீஞ்ச - நீந்த; சவலம் - நடுக்கம்; தகையும் - இளைக்கும். **(ரூச)**

239. நல்லார் நடக்கும் வகையறியே னானா
னெனவே யுலகமதில்
நாடு வீடு மாடுமக்கள் நம்பு
மனையாள் வாழ்வதனில்
பொல்லா வறுமை பொருந்திவரப் புல்லர்
தம்பால் வருந்திநின்று
பொழுதை வீணாக் கழித்தொழித்துப் பொய்யா
முடலம் வீழ்ந்துவிடில்
எல்லா மெனதென் றிருந்தவெலா மெள்ள
ளவும்பின் றொடர்வதில்லை
யிவைநீ நிறுத்தி மயக்கஅதை யானோ
வறியேன் விதிவசத்தால்

வல்லா ணவத்தா லழியாதென் மனதிற்
குடிகொண் டாண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நல்லவர் செய்யும் வகைகளை அறியாமல், நாடு, வீடு, மாடு, மக்கள், மனைவி இவரோடு வாழ்தலை மேற்கொண்டு வறுமையால் அற்பர்களை வேண்டி உயிர் வாழ்ந்து, அழிந்து போகாமல், ஆணவத்தால் அழியாமல் என் மனத்தில் குடி கொண்டு என்னை ஆள்வாய்.

**அ.பொ:** வகை - முறை. **(௯௫)**

240. **அடியார் செய்யும் வினைதனக்கோ ரருள்செய்
துவந்து காக்கிலையோ?
யான்மாத் திரந்தா னுன்றனுக்கோ யாகா
தவனாய்ப் போனேனோ?
படிமேன் முன்செய் தவக்குறையோ? பத்தர்
தமக்குத் தீம்புசெய்த
பாபந் தானோ? வறியாமற் பலவா
யென்ற னுயிர்மறுகி
முடியாக் கலக்கங் கொள்ளவைத்து மூழ்காற்
றடிக்கு தென்னசெய்கேன்
மோச மான விருவினையில் முளைத்தே
யெழுந்த செனனமதை
மடியக் கிர்பைதா னினியருள்வாய் வைய
வாலைத் திரிபுரையே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** அடியவர்களுக்கு அருள் செய்யும் நீ அடியேனைக் கலக்கம் கொள்ள வைத்துத் துயரில் மூழ்கச் செய்யலாமா?

**அ.பொ:** வாலை - இளமையானவள். **(௯௬)**

241. **எங்குஞ் சரியாய் நீயிருந்தே யேற்றல்
குறைச்சல் பேதகத்தி
லெண்ணா துயிரை யிப்பிறப்பி லேதான்
வயது மறியேனே**

சங்க மாழி தரித்தருளுஞ் சகல
வுயிர்க்கு முயிர்க்குயிராய்த்
தானா யிருந்த தவப்பொருளே! தமியேன்
செய்த வினை முழுதும்
மங்கும் படியே நீபார்த்து மயங்காக்
ககனப் பெருவெளியில்
மாறாக் கருணைக் கமலமதில் வாழக்
கிர்பைநீ தானருள்வாய்
வங்கங் கொழிக்கும் பொன்னிநதி வளர்ந்த
புனலா றிசைந்துவரு
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியேன் செய்த வினை முழுதும் மங்கும்படிச் செய்து, மயங்கா வானப் பெருவெளியில் உன் கருணையால் வாழ அருள்க. **(கூஎ)**

242. ஒல மிடவு மமலையுந்தா னுறுதி
மனதிற் பொருத்தவில்லை
யொருநா ழிகையா யினுமிடிய னுபய
பதத்தைத் நினைத்ததில்லை
கால மறிந்து நினதடியர் கருது
மொழியுங் கேட்டதில்லை
கனமா கியசம் சாரமெனுங் கடலி
னிடைவீழ்ந் தலைமோத
நீல விருளில் விழிக்குருடாய் நின்றே
மயங்கிக் கிடப்பேனை
நீதான் கிருபை பொருந்தியுன்ற னெறிதா
னளித்து நிலையில் வைப்பாய்
வாலை முடிவே கனகமுடி வான
திருவே மலைமகளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** மனத்தில் உறுதி, உன் திருவடித் தியானம், அடியார் சொற் கேட்டல் என்பனவற்றை விடுத்து உலகியல் அலையில் இருளில் விழிக் குருடாய் மயங்கிக் கிடக்கும் என்னை உன் வழியில் செலுத்தி நல்ல நெறியில் வைப்பாய்.

**அ.பொ:** அமலை - களங்கமற்ற இறைவி; மிடியன் - வறியவன்; சம்சாரம் - உலகில் பற்றுறும் வாழ்க்கை. **(கூஅ)**

243. ஆண்ட வளுநீ யாமாகி லழகு
துரைச்சி நீயாகில்
அருண னிறத்தி நீயாகி லமுதச்
சிவத்தி நீயாகில்
பூண்ட விமயா சலத்தினுயர் பொன்னே
நீதா னாமாகிற்
புகழ்ந்தே யெனக்குன் னருண்முலைப்பால் புசிக்கக்
கொடுத்த தாயாகில்
நீண்ட புகழ்முன் சமயமெனு நெறிதந்
தநுவு நிசமாகில்
நிலத்தி லெனையே பகைத் தாட்டும்
நேரில்லாப்பாழ்ம் பேருடலம்
மாண்டு விடவே யருள்புரிவாய் வாரா
கினியே! யருண்மணியே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீ எனக்கு உன் முலைப்பால் உண்ணக் கொடுத்த தாய் ஆவாய். என்னைப் பகைத்து ஆட்டும் என் பேருடல் மாண்டு விட அருள் செய்வாய்.

**அ.பொ:** துரைச்சி - தலைவி. (௩௯)

244. அலையிற் றுரும்பாய் மனதலைய அனலின்
மெழுகாய் மனமுருக
வழிந்த பழம்போ லுடல்தளர வருவி
விழிகள் புனல்சொரிய
கலையி லறிவும் பிசகிநின்ற கலக்க
மதனை யகற்றியொரு
கனஞ்சேர் உன்றனி ணையடியைக் காண
வசங்கொண் டிருக்கவைத்தாய்
சிலையைப் பிடித்த கரத்தழகி! சிவத்தி!
தவத்தி! பவமகற்றி!
செயமே தரித்த மனோகரத்தி! சிந்தா
மணிரத் னாபரணி!
மலையி லுதித்த நவபீட வாச
முறைமா யேஸ்வரியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அலையில் துரும்பாய் அலைந்து அனலில் மெழுகாய் உருக, அளிந்த பழம் போல் உடல் தளர, விழிகள் புனல் சொரிய, அறிவும் நெறி தவற, என் கலக்கம் அகற்றி உன் இணையடிகளைக் காண வசங்கொண்டு இருக்க வைத்த உன் கருணையைப் போற்றுகிறேன். **(சO)**

245. உடலும் பகைக்க வகம்பகைக்க வொக்கப்
பிறந்தார் மனையாட்டி
யுடனே பகைக்க வூர்பகைக்க வொழிந்த
பெரியோர் களும்பகைக்கக்
கடலும் பகைக்க நிலம்பகைக்கக் கனல்கால்
ககன முடன்பகைக்கக்
கருதி யிருக்கும் வேளையதைக் கண்டா
யோவென் மாதாவே!
சடலந் தனையே பகைப்பதல்லால் சர்வ
மூல முதல்வியுனைத்
தானே பகைக்க மிகக்கயவர் தம்மா
லாமோ தார்க்குழலே!
மடலம் பரையே யுனையடுத்தேன் வந்தென்
றனைநீ காத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உடம்பு, மனம், உடன் பிறந்தார், மனைவி, ஊரார் மற்ற பெரியோர்கள் முதலிய யாவரும் கடல், நிலம், தீ, காற்று, ஆகாயம் முதலிய யாவையும் என்னைப் பகைத்த போதும் பகைக்காமல் எனக்கு அருள் செய்பவள் நீயே.

**அ.பொ:** ககனம் - ஆகாயம். **(சக)**

246. உற்றார் பெற்றார் தமைவேண்டே னூழி
வினையால் வரும்பொருளே!
யுடலம் வேண்டேன் செழித்திருக்கு மூரு
முலக மதைவேண்டேன்
சற்றா யினுமிவ் வுலகிலுள்ள தன்மா
திகளும் வரவேண்டேன்
றன்னை யறிய வறிவருளுந் தாயே!
யுன்ற னிருபதங்கள்

பெற்றா ரடியேன் சிரமதனிற் பிரியா
திருக்க வகைவேண்டிப்
பிடித்தே னெனது மனதுறுதி பிசகா
திருக்க வரமருள்வாய்
மற்றா ரையுநா னம்பவில்லை வரையின்
மகளே! யுனையடுத்தேன்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே! (சஉ)

**பொழிப்:** உற்றார், பெற்றார், பொருள், உடம்பு, ஊர், உலகம், தருமம் முதலியனவற்றையும் மற்றவர்களையும் நம்பாது உன்னையே நம்பும் என் மன உறுதி கெடாதபடி அருள்க.

247. ஒன்றோ டொன்று நெருங்கியிந்த வுடலை
விலக்கி யுயிர்நெகிழ
வுற்றகால மதனி லெனக் குனது
பதங்க ளெதிராக
நின்றே யெனக்குன் னருளளிப்பாய் நீயே
கருணைக் கடல்மயிலே!
நேரி லமைந்த பரநிதியே! நித்யா
னந்த மானவனே!
அன்றே யனைத்து மொன்றாக வரனா
ரிடத்தி லிருப்பவளே!
யடர்விற் புருவ மணிநுதலே! யமுதே!
யென்ற னகத்துயிரே!
மன்றே பொருந்து மிருபாத மறவா
திருக்க வரமருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** ஐம்பொறிகளும் நிலை தடுமாற உயிர் உடலை விடும் காலத்து நீ உன் திருவடிகளின் காட்சி தந்து அடியேனை ஆட்கொள்க.

**அ.பொ:** நித்யானந்தம் - என்றும் அழிவில்லாத மகிழ்ச்சி. (சஙு)

248. அன்பத் தோரா மக்ஷரத்தி! யகிலாண்
டத்தி! யந்தரத்தி!

யமல சுகத்தி! யருமயத்தி! யருண
நிறத்தி! யம்பரத்தி!
எண்பத் தோராம் பதங்கடந்த வேக
வெளிச்சி காரணத்தி!
யிமயா சலத்தில் வந்தருளி யிருநா
ழிகைநெற் கொண்டுலகில்
உம்ப ரடியர்க் கறம்வளர்த்த வுமையே!
யருள்வா ரிதிமாதே!
யுனது பதத்தை யடியேனு முரைத்து
மகிழ வரமருள்வாய்
மண்பூத் தலருங் கமலமதில் வளருங்
கனமே! கொடியனமே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் பல புகழ்களையும் அடியேன் உரைத்து மகிழ வரம் அருள்க.

**அ.பொ:** ஐம்பத்தோராம் அக்ஷரம் - வடமொழியிலுள்ள 'க்ஷ' என்ற எழுத்து; அமலம் - அழுக்கின்மை; அருமயத்தி - வடிவற்றவள்; வெளிச்சி - மேம்பட்ட வெளியில் இருப்பவள். **(சச)**

249. மண்ணால் கரகந் தனைப்பிடித்து வாரி
யெடுத்துத் தலைமீது
வைத்தே யாடும் பூசாரி மனம்போ
லெனது மனமுன்றன்
அண்ணாந் திருந்து குறிபார்த்தே யசையா
திருக்கி லசைந்துருகி
யமுத தாரை யொழுகிவர வதனுட்
பொழுதைச் செலுத்தவருள்
ஒண்ணாங் கனக முடிப்பொருளே! யுள்ளச்
சிவமே! நவரசமே!
யொன்றா யூக மனத்துயிரா யுயிருக்
குயிரா யிருந்தவளே!
வண்ணா லயமே! ஞானவெளி வனமே!
யெனைவந் தாண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** கரகத்தைத் தலையில் வைத்த பூசாரி மனம் போல என் மனம் உன்னையே நோக்க, என் தலையிலிருந்து அமுத தாரைகள் ஒழுகி வர, அதனுள் பொழுதைச் செலுத்துவதற்கு எனக்கு அருள்வாயாக.

**அ.பொ:** ஒண்ணாம் - ஒளி பொருந்திய; வண்ணாலயம் - வண்மைக்கு இருப்பிடம். **(சரு)**

250. **அவகா லத்தில் மனமுமெனக் கடங்கா**
**தெழுந்தே யெழுந்துவிம்மி**
**யகத்தைப் படைத்தே யுனதுதிரு வருளந்**
**தாதி தனைமறந்து**
**பவமா மயலா ருடன்சேர்ந்து பண்ணும்**
**வினைநா னென்னசொல்கேன்**
**பார்க்க வென்றா லதற்கொருவர் பகைப்பா**
**ருலகி லுள்ளவர்கள்**
**சிவமா யிருந்த சமுத்திரத்தைத் திருகாய்**
**நினைக்கு மிதின்வலுமை**
**தேய்த்தே யுனது திருவருளைத் திறமாய்த்**
**தரவே வரமளிப்பாய்**
**மவுனா தீப வலர்கொடியே! வனமூ**
**லிகையே! பூரணியே!**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** என் மனம் அடங்காது செருக்குக் கொண்டு கீழோருடன் சேர்ந்து செய்யும் தீவினைகளைப் போக்கி, உன் திருவருளைத் தருக.

**அ.பொ:** திருவருளந்தாதி - அபிராமி அந்தாதி; திருகு - வஞ்சனை; நினைக்குது- நினைக்கின்றது; மவுனா - பேசாமலிருப்பவளே.

குறிப்பு: தொல்காப்பியப் பொருளதிகாரம் 76-ஆம் சூத்திர உரையில் வலிமை (என்பது) வலுமை என வழங்கலாம் என்று நச்சினார்க்கினியர் கருத்துத் தெரிவித்துள்ளார். **(சசா)**

251. **வினையின் பயனே! பயனதனை வெறுக்கத்**
**தறிக்கப் போகாதோ**

வெய்யோ னுதயத் தெதிர்பனியும் விம்மிச்
சுரந்து வளர்ந்திடுமோ
நினையு நினைப்பு மதற்காதி நீயு
முனது பதியோனு
நிசமா யென்றன் வசமானால் நில்லா
தெந்த வெவ்வினையும்
தனையே யறிந்தா லின்பதுன்பத் தடைதான்
வந்தா லதுநிகரோ
தகைசே ரிவைகட் கஞ்சுவரோ தாயே
மிகுந்த சவுந்தரியுன்
மனையை யறியக் கருணைபுரி மணிநா
தாந்தத் திணிச்சுடரே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** சூரியன் ஒளி கண்டால் பனி வளர இயலுமா? உன் அருள் இருந்தால் வெவ்வினையின் இன்ப துன்பங்கள் அடியேனைத் தாக்க மாட்டா.

**அ.பொ:** வெய்யோன் - சூரியன். **(சஎ)**

252. கனிந்து கனிந்துன் றனைப்பாடிக் கசிந்தே
யிருகண் புனல்பெருகக்
காதுன் னுபயத் திருவருளாங் கதையைக்
கேட்ப வகைபுரிவாய்
இனந்தா னுறவாய் மனம்புதைய வெந்த
நாளும் வருந்தியிந்த
விடத்தி லிருந்தால் மயக்கமறா விரவும்
பகலு நினதருளை
நினைந்த படியே சிந்தைசெய்ய நெறியை
யுதவி! யெனைக்காப்பாய்
நித்யா னந்தப் பழம்பொருளே! நிமலி!
யமலை புகழ்விமலி!
வனத்த சடலத் தொழிலுனது மதியே!
யிதமா யருள்புரிவாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன்னைப் பாடிக்களித்து உன் கதைகளைக் கேட்கவும் உன்னையே தியானிக்கவும், அருள் செய்வாயாக. **(சஅ)**

253. குலந்தான் நலந்தான் குடியிலுள்ள குணந்தான்
கனந்தா னெமதெனவே
கொள்ளுங் கயவர்க் கதுவசனங் குலவு
முன்ற னிருபதத்தைச்
சிலந்தி யிழைபோ லறிவுருகச் செகத்திற்
கண்டு பிடித்தவர்க்குச்
செகதூ ஷணிப்பு நகைப்புமென்ன செய்யு
மவரை மலர்க்கொடியே
அலர்ந்த முளரி முகத்தாளுன் னடிமை
யான நாயேனை
யார்தா னகைத்துப் பழித்துமென்ன வாதி
கிருஷ்ணன் றன்றுணைவி
மலர்ந்த மனமா ரடியவர்பால் வளரு
மொளிசேர் நிலமாதே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** குலப்பெருமை, குடிப்பெருமை, செல்வப் பெருமை, கொள்ளும் கயவர் இனத்தை விடுத்து உன் அருளால் பெருமையும், சிறுமையும், போற்றுதலும், தூற்றுதலும் ஒன்றாகக் கருதும் உள்ளத்தை எனக்கு அருள்வாய்.

**அ.பொ:** தூஷணிப்பு - இகழ்ச்சி. **(சகூ)**

254. நீர்மேற் குமிழி யாமுடலை நிலையா
மெனவே கயவரெலாம்
நின்று புவியிற் றனந்தேடி நீள
மயக்கான் மிகவாடிப்
பார்மேற் பெரியோர் தமைப்பழித்துப் பண்ணும்
வினைகள் வெகுகோடி
பாவி யர்கள்பாற் சேராதுன் பதமே
கதியாய்ப் பொருத்திவைப்பாய்
கார்மேற் பொருது மதிக்கதிரே! கனகா
பரணி மணிப்பிறையே

கனக முடியில் வளர்ந்தெழுந்த கஞ்சா
சனத்து நிலையானே!
வார்மேற் பொருது மலர்க்கரத்தி வானில்
வளரு முகில்வேணி!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீர்க்குமிழி போன்று நிலையாத உடலை நிலை என்று கருதிப் பொருள் தேடி, மயக்கத்தால் மிகவும் வாடிப் பெரியோரைப் பழித்து, வாழும் தீவினையாளரோடு சேர்ந்து வினைகளை அடியேன் பெருக்கிக் கொள்ளாத படி உன் பாதங்களே கதி என்று கருதும் உள்ளத்தை எனக்கு வழங்குவாய்.

(ருO)

255. ஏழை யெனையே காக்கவகை யெடுத்த
வுன்றன் இதயமெலா
மிரங்கி யிரங்கிச் சலித்துமதி யெனையே
குறிக்கப் பொருந்திலையோ
சூழ வுன்றனிரு பதத்தைச்சுகமாய் மனதிற்
பொருத்தி யின்னஞ்
சொந்த வடிமை யாக்கிலையோ? சும்மா
விருப்ப தென்வகையோ?
ஆழி யமுதை யடுத்தவருக்கு அகத்திற்
பசியு முண்டாமோ?
வமுத வருஷம் பொழிந்திடிலென் னதிட்ட
மதிலோர் குடியாக
வாழப் பிடித்தா லுன்னையென்னால் வசனித்
திடவாக் கினைதருவாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் மதியில் என்னைக் குறித்து, உன் திருவடிகளை என் மனத்தில் பொருத்தி, என்னை உன் அடிமையாக்கி, அமுத மழை பொழிந்து உன்னை அடியேன் புகழுமாறு நல்ல வாக்கினை அருள்வாயாக.

**அ.பொ:** வருஷம் - மழை. (ருக)

256. கொடுங்கை தன்னா லெடுத்தசிறு குழந்தை
தனைத்தா யெறிவாளோ?

கோபங் கொண்டால் யானிகரோ? குலவுங்
கருணை நிலையாளே
அடங்கி யுனது கோபமெலா மகற்றி
யெனது பரிதாப
மறிந்து கிர்பைதா னருள்வேண்டி யாள்வாய்
வேத விழிப்பொருளே
தொடங்கும் பரம னிடப்பாகத் தொளிரு
மணியே யணித்தாயே
தொலையாச் சனன வலையகலத் தோற்று
முனது துணைப்பாதம்
மடங்கத் தெரிய மனதடங்க வாரிக்
கருணை பொழிந்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** தாய் தன் குழந்தையைத் தூக்கி எறிவாளோ? உன் கோபத்தை யான் தாங்க முடியுமா? என் பரிதாப நிலை அறிந்து என் பிறவி வலை அகல உன் திருவடிகளைத் தந்து என்னை ஆள்க. **(ருஉ)**

**257.** கான லதனைப் புனலாகக் கருதி
நினைக்கு மாறதுபோற்
கவலை யுடனே குடும்பமெனுங் கனவா
கியபொய்ம் மாய்கைதனில்
ஈனருடனே யிருந்துசொல்லி யெல்லா
மெமதென் றொயிலாக
விறுமாப் படைந்து மனம்வீணா யிருந்து
கலங்கித் திரியுதையோ
நானா னெனவே மகிழ்ந்திருந்த நடத்தை
யறியச் சிவபுரத்தில்
நாதன் கழல்க ளுணர்வினுள்ளே நடுவாழ்ந்
திருக்க வருள்புரிவாய்
வானா னந்தத் தவக்கொடியே! வனச
மதியே! வாணுதலே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** கானல் நீரைப் புனல் என்று கருதுவது போலக் குடும்பமெனும் கனவு நிலையில் இருந்து கீழ் மக்களோடு உரையாடி எல்லாம் எம்முடையது என்ற இறுமாப்போடு மனம் வீணாக அலைகின்றது. என் நடனத்தை நான் காணச் சிவபுரத்தில் சிவபெருமான் கழல்களின் தியானத்தில் நான் நிலைத்திருக்கச் செய்வாயாக. **(ருந)**

**அ.பொ:** திரியுது - திரிகின்றது.

**258.** **நிலங்கால் ககனங் கடலனலும்**
**நீளவிருந்த நெறிச்சுடரே!**
**நிரவி யுலகெங் கினுமுயிராய் நிறைந்தே**
**யிருந்த தவப்பொருளே!**
**பலகா லமுமுன் னிருபதங்கள் பாடிப்**
**பாடிக் கசிந்துருகிப்**
**பரவும் விழிகள் புனலாறாய்ப் பெருகி**
**யெனது மனதுருகக்**
**கலையோ காலைத் தெரிந்திருக்கக் கனக**
**வெளிகள் மறந்திருக்கக்**
**கபிலைப் பசுவுங் கதறிக்கத்திக் கன்றைத்**
**தேடி வருவதுபோல்**
**மலமாக் காதி யகலவென்பால் வந்துன்**
**னருட்பால் தந்தருள்வாய்**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** பலகாலும் உன் இரு திருவடிகளையும் பாடிப்பாடிக் கசிந்து உருகிக் கண்ணீர் பெருக மனமும் உருகவே, கன்றைத் தேடிக் கதறிவரும் கபிலைப் பசுப்போல் நீ என் பால் வந்து உன் அருளாகிய பாலைத் தந்தருள்வாய்.

**அ.பொ:** ககனம் - ஆகாயம்; கபிலைப் பசு - தேவ பசு; மாக்காதி - பெரிய வினைகள். **(ருச)**

**259.** **எந்த நாளு முனதருட்பே ரழகை**
**யறிவி லொருபிடியா**
**யிருத்தி மகிழ்ந்து கனககிரி யேறி**
**முடியை யீசனது**

சிந்தை மிகுந்து புகழ்ந்துவரச் செல்வ
முடனே கல்விவரச்
செகச்சா லங்கள் தமைக்கடந்து சிற்சொரூப
மனம் புணர்ந்து
வந்துன் னாத முடியருளு மௌனா
னந்தச் சுடர்விளக்கே!
மாலா கியகிருஷ் ணன்றுணைவி வனச
மலரி னிலையாளே
மைந்த னிடம்வந் தெனைக்காப்பாய் மணியே!
யோக வொளிமணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** மைந்தனாகிய என்னிடம் வந்து என்னைக் காப்பாய். (ருரு)

260. கொஞ்சுங் கிளியே! யருள்பழுத்த கொம்பே!
கதம்ப வனத்தில்வளர்
குயிலே! யிமயா சலத்தில்வருங் கொடிவான்
மதியே! பேரொளியே!
அஞ்சு தொழிலுக் கதிகாரி! யதிமோ
கனமே மாமாயை
யமுத வசனி! நான்மறைக்கு மடங்கா
தகண்ட பெருவெளியே!
விஞ்சு புகழ்சேர் திருமகளும் வேதன்
மனையா ளொடுநிதமும்
மிகுந்து பணியு மரியயனும் விபுதர்
முனிவர் மறையோர்கள்
வஞ்சி யேயுன் பதங்காண வகையு
மறியார் வளமயிலே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அரியும், அயனும், தேவரும், முனிவரும், மறையோர்களும் காண வகை அறியாத உன் திருவடிகளை அடியேனுக்குக் காட்டுவாயாக.

**அ.பொ:** அஞ்சு தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்; விஞ்சு - மிஞ்சிய, வேதன் மனையாள்- பிரமன் தேவியாம் கலைமகள்; விபுதர் - தேவர். (ருசா)

261. ஏதோ மனத்தின் விபகார மிதனா
லுயர்த்தி தாழ்த்தியென
விறந்தும் பிறந்து நரகமதி லிருந்து
மனது சஞ்சலிப்பப்
பேதா பேத மிகப்பேசிப் பெருமை
பெறுமை யிதனாலே
பெற்ற சுகந்தா னினிப்போதும், பிரியா
துன்ற னிருசரண
வேதாந் தவருட் கமலமதை விருதாப்
பிடித்துக் கருதிநிற்ப
வெட்ட வெளியோ னேகனுடன் விளங்கக்
கருணை நிலையருள்வாய்
மாதா வேமெய்ஞ் ஞானவமுதே! வரையின்
முடியில் வளர்பவளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** மனத்தின் செயற்பாட்டால் உயர்ந்தும் தாழ்ந்தும் இறந்தும் பிறந்தும் நரகத்தில் இருந்தும் மனம் தடுமாறும் அடியேனை ஏகனாகிய சிவபெருமானுடன் விளங்கக் கருணை புரிவாய்.

**அ.பொ:** விபகாரம் - கருத்து வேறுபாடுகள்; பெறுமை - பெறுதல். **(ருஎ)**

262. சோற்றுத் துருத்தி வெகுபுழுக்கள் சுகமா
யென்ற னகமெனவே
சொல்லி வளருங் கருநாடு சூளைக்
குயவ னுத்தியதால்
பார்த்துப் பிடித்த பழம்பாண்டம் பகைத்தே
யேமன் றானுடைக்கும்
பனங்காட் டிலுறை நரிநாய்கள் பருந்தும்
விருந்தா யருந்திமகிழ்
ஊற்றைப் பிணத்தை யெனதெனவே யுகந்து
நின்ற சுகம்போது
முனது பதங்க ளென்மனத்து ஞறவே
கருணை மிகவளிப்பாய்

மாற்றொன் றில்லா தருட்கனக வரையின்
முடிமேல் வளர்பவளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** தங்களுக்கு உணவு வழங்கும் துருத்தி எனப் புழுக்கள் வளரும் உடம்பாகிய பழைய பாத்திரம் காலனால் உடைக்கப்பட, அது நாய், நரி, பருந்து என்பன தமக்கு விருந்தாய் அருந்தி மகிழும் பொருளாகும். அதனை என் உடைமை என்று கருதி வாழ்ந்த சுகம் போதும். உன் திருவடிகள் என் மனத்து உறக் கருணை அளிப்பாய்.

**அ.பொ:** ஏமன் - இயமன்; கருநாடு - கருப்பையாம் இருப்பிடம். **(ருஅ)**

263. எடுத்த சனன மிறக்குமுன்னே யென்சிந்
தையுணீ வரவேண்டு
மிரவும் பகலு முனதடியை யேற்றும்
வரம்நீ தரல்வேண்டும்
அடுத்த கலக மிருவினைக ளறவே
சிவத்தி லுறவேண்டு
மனுட்டா னாதி தன்னையிழந் தமல
சுகத்தைப் பெறவேண்டும்
தொடுத்த படியே யெனைச்சார்ந்து தூக்கி
யெடுத்து நடுவணையிற்
சுகமா யிருப்ப வரமருள்வாய் துவாத
சாந்த நிலையாளே!
மடுத்த கனத்தி! நின்மயத்தி மடலே!
கருணைக் கடலாளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** இந்தப் பிறவி தீரும் முன் என் சிந்தையுள் நீ வந்து இரவும் பகலும் உனது அடிமையாக என்னை ஏற்று, இரு வினைகள் அற யான் சிவத்தில் உற வேண்டும், யான் களங்கமற்ற சுகம் பெற அருள்க.

**அ.பொ:** மடுத்த - நிறைந்த. **(ருகூ)**

264. உந்திக் கமலத் துறைவாழ்வே! யோங்கா
ரத்தி சதுர்க்கோணத்

தொளிரு மிதய நிலையாளே யுமையே!
கமலா சனமணியே!
சிந்தித் திடவே யறுகோணஞ் செறிந்த
மனையி னிலையாளே!
செயமோ கினியே! டாகினியே சிந்தா
மணியே! யோகினியே!
சந்தித் திடமே யுன்னிருதா டனையே
யருள்வாய் தற்பரையே!
சகல பகவான் றிருக்கிருஷ்ண சாமி
துணைவி பார்வதியே!
வந்தித் திடவே தேவரெலா மகிழத்
தோற்று மலர்க்கொடியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் இரு திருவடிகளையே எனக்கு அருள்வாய்.

**அ.பொ:** டாகினி - இடாகினிப் பேய்க்குத் தலைவி. **(சூO)**

265. முகம்பார்த் தொருவர் பேசாமல் முனிவாய்
ராக்ஷ தர்கள் போலே
முடியப் பழித்த பழிப்பாலே முனையு
மழுங்கி யென்றனுயிர்
அகந்தா னழுகு தினியதைத்தா னாரோ
டுரைப்ப தருட்கடலே
யதிக வினையே னற்பருக்கே யனைத்தும்
வசிய மாகுதையோ
சகந்தா னகைத்தால் ஞானியென்பர் தமியேன்
பருவம் பொருந்தாமற்
றாயே யனையாய் வேண்டுவரந் தயைசெய்
திருத்தி யெனதுளத்தில்
மகனா மெனவே யருள்புரிவாய் வடிவே!
வேத மறைமுடிவே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** ஒருவரும் என் முகத்தையும் பார்த்துப் பேசாமல், அசுரர்களைப் போல மற்றவர்கள் என்னைப் பழித்துப் பேசியதாலே என் உயிர் முனை மழுங்கி அழுகிச் சாகின்றது. உலகம் பார்த்துப் பழிக்கப் படுபவரை ஞானி என்பர். எனக்குக் கருணையோடு வரம் அளித்து உன் மகனாகக் கொண்டு ஆட்கொள்க.

**அ.பொ:** வசியமாகுது - என் வசப்படுகிறது. (சுகூ)

266. அரசே! யென்ற னகத்துயிரே! யமுதே!
கருணை மதிநுதலே!
யகண்டா காரப் பெருவெளியே! யமலச்
சுகமே யந்தரமே!
உரைசேர் மறையின் முடிமுதலே! யுணர்வே!
யுணர்வி னொளிச்சுடரே!
யோத லறியா வதிசயமே யுமையே!
யிமையோர்க் கரசான
தரைசேர் தண்டைச் சிலம்பணியுந் தாளி!
பணிதி யணிதோளி!
தருணா தருணச் சிவபுரத்தி! சர்வா
னந்த பரம்பரத்தி!
வரிசை யிமயா சலத்திலிறை மயிலே!
யெனக்குன் கிர்பைபுரிவாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** எனக்கு உன் கருணையை அருள்க.

**அ.பொ:** பணிதி - அணிகலன்கள். (சுஉ)

267. ஒன்றே கனக முடிமுதலே யொளியே!
வெளியே! யகண்டிதமே!
யுலகா சாரங் கடந்துநின்ற வுமையே!
யமலச் சுகப்பொருளே!
என்றே யுலக மனைத்துயிர்க்கு மிரவும்
பகலு மெங்கெங்கு
மிருநா ழிகைநெற் கொண்டேகை யிசைய
வளர்த்த மலர்க்கொடியே!

தன்தேம் மூலா தாரமுதற் றாவும்
பருவ நடுவணையிற்
றழைந்த பரமே நிதிமயமே! சாதாச்
சாகாப் பூரணமே!
மன்றே நடன மிடுசரண மயிலே!
குயிலே! சிவபதியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** இரு நாழி நெற் கொண்டு உலகை வளர்த்த நீ அடியேனையும் காக்க வேண்டும்.

**அ.பொ:** அகண்டிதமே- பூரணம் ஆனவளே.

**குறிப்பு:** சதா என்பது நீண்டு சாதா ஆயிற்று. (சாகூ)

268. ஆய்ந்த வுன்ற னருணூலை யடுத்தே
யிழையாத் தொடுத்தெடுத்து
மதனைக் கயிறா முறுக்கிமன ரழுக்கை
யிருத்தி யுன்றனிரு
தோய்ந்த சிவக்கால் தனைப்புகட்டித் தொண்ணூற்
றாறு கருவிமயல்
தொடுத்த சடத்தை யிகழ்ந்துனது துவாத
சாந்த நிலைதனிலே
பாய்ந்த படியே குடியாகப் பலசொற்
பனமுங் கண்டுவிடப்
பதத்தைக் கடந்தே யிதத்துடனே பரனார்
தந்த சிவபுரத்தில்
வாய்ந்த வாஞ்சை யுடன்புகழும் வானே!
வானோர் தொழுந்தேனே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** தொண்ணூற்றாறு தத்துவங்களாலாகிய இவ்வுடலை இகழ்ந்து உன் துவாத சாந்த நிலையிலே அடியேன் தோயக் காணும் கனவு நனவாக அருள்க.

**அ.பொ:** மனர் அழுக்கை - மன அறிவுடைய மக்களுடைய மாசினை.

(சாசு)

269. அருளுக் கறிவா யிருந்ததெய்வ மமர்ந்த
திருநாட் கொடியேறி
யலங்கா ரமுமாச் சித்தமெனு மமைகே
டகத்தி லெழுந்தருளி
மருவு மனதைப் பலிகொடுத்து வரிசை
யுடனே நடுவீதி
வரிசை பலவா மதிசயங்கள் வகைதா
னுரைக்க முடியாது
சுருளப் பிரியா ரதமேறிச் சோதி
வதன வொளிதாண்டிச்
சுத்த வியோம நிலையதனிற் சுகமாய்
நிறுத்திக் கொடியிறக்கி
மருளற் றிருப்ப வருள்புரிவாய் வாலாம்
பிகையே! காரணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அருளுருவான நீ, என் உள்ளத்தமர்ந்த நல்ல நாளில் கொடி ஏற்றி உன்னை என் மனம் என்னும் வாகனத்தில் எழுந்தருளச் செய்து மனத்தைப் பலிகொடுத்து, பல வரிசைகளுடனே உன்னை வீதி வலம் செய்வித்து, திருத்தேர் ஏற்றி சுத்த ஆகாய வெளியிலே தேரை நிறுத்திக் கொடி இறக்கி உலக மயக்கம் அற்று அடியேன் இருக்க அருள்வாய்.

**அ.பொ:** கேடகம் - ஒருவகை வாகனம்; வியோமம் - ஆகாய வெளி. **(௬௯)**

270. ஊசி நுனியின் மனத்தையுன்னி யுயர்ந்த
மனிதர் மயிர்பதினா
றொன்று நுழையா விடத்தில்தம ரொடுங்கி
யடங்கிக் குறிபார்க்கில்
காசிப் புனலும் நிறைந்தகங்கைக் கரையுங்
கடந்து திரைகடந்து
கனக மணியி னொளிகடந்து கருணைக்
கடலுந் தான்கடந்து
பேசும் பருவ முரைகடந்து பெருமை
சிறுமை தமைக்கடந்து
பேயி னுடனே பேயனுமாய்ப் பிரமைகொண்
டென்ற னறிவழிந்து

வாசித் தடமே கடந்துநின்ற மௌனா
னந்த மெனக்கருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** மனத்தை அடக்கிக் காசியில் கங்கையைக் கடந்து, கடலைக் கடந்து, மணியின் ஒளியைக் கடந்து, கருணைக் கடல், பேசும் பருவம், பேச்சு, பெருமை, சிறுமை இவற்றைக் கடந்து பேயோடு பேயாய் மயக்கங் கொண்ட என் அறிவு அழிந்து சுவாச நிலையைக் கடந்து நின்ற மௌன ஆனந்தத்தை எனக்கு அருள்வாயாக.

**அ.பொ:** மயிர் பதினாறொன்று - ஒரு மயிரின் நுண்மையான $^1/_{16}$ அளவு, வாசி - சுவாசம். **(௨௭௰)**

271. **செல்ல மனது மடங்கிபின் சென்றே
யூமைப் பருவமது
சேர வரவே யறிவழிந்து செகத்தோர்
நகைத்துப் பகைத்திடவே
அள்ளி முளரித் தடந்தாண்டி யருண
வுதய ரவிதாண்டி
யடங்கி யிருக்கச் சிவபுரத்தி லடியே
னடியாய் நிலைக்கவருள்
நல்ல கமல முகத்தாளே! நந்தி
விடையோ னிடத்தாளே!
நறுமா மலர்ச்செஞ் சடையாளே! நதிகள்
பெருகும் பதத்தாளே!
வல்ல பரையே பரம்பரையே மௌனா
தீப மோகனமே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** மனம் அடங்கிய பின் மௌனநிலை வரவே அறிவு அழிய உலகத்தோர் நகைத்துப் பகைக்க மனமாகிய குளம் உதயமாகும். சூரிய சந்திரர் இவற்றைத் தாண்டிச் சிவபுரத்தில் அடியேன் இருக்க அருள் செய்யவேண்டும். **(௨௭௧)**

272. **அடர்ந்த ககன முடிவினிலோ ரமுத
நதிதான் பெருகிவர**

அதனைப் புசித்துப் பணிதந்தே யடியேன்
மனதா லயமாகத்
தொடர்ந்த சிவமே யநுக்ரகித்துத் தொல்லை
வினையைப் பறக்கடித்துத்
தொலையாச் செனன வழிதொலைத்துச் சுகமா
யிருக்க வருள்புரிவாய்
படர்ந்த வருண மணிநுதலே பரம
சுகவா னந்தமதிற்
பாவ மகன்ற மனத்துள்வளர் பத்மா
சனியே வான்மணியே!
மடந்தைப் பருவ முடையாளே வளர்மின்
கொடிபோ லிடையாளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** வான உச்சியிலிருந்து அமுத தாரை பெருகி வர அதனைப் பருகி, என் மனத்தை ஆலயமாகக் கொண்டு சிவபெருமான் அருள் செய்து என் பழைய வினையைப் போக்கிப் பிறவி வழியை அழித்து யான் சுகமாய் வாழச் செய்யுமாறு நீ அருள்புரிவாயாக. **(சூஅ)**

273. அணுவுக் கணுவா யிருக்குமுனை யறிய
வசமோ வருட்கடலே
யார்தா னறிவா ரரிபிரம னவரா
லறியா வதிசயத்தாய்
குணமுற் றகன்ற நிரஞ்சனமே! குறியற்
றிருந்த பரம்பரமே!
கொள்ளைப் பிறவி தனையகற்றுங் கொடியே!
ககன மின்கொடியே!
கணுவற் றகண்ட வருட்கரும்பே! கண்ணின்
மணியே மணியினுள்ளே
கலங்கா திருந்த வொளிச்சுடரே! கருணைக்
கடலே! நவமணியே!
மணமுற் றொளிர்பூங் கமலமிசை வளருந்
திருவே! மலைமகளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அணுவுக்கு அணுவாய் இருக்கும் உன்னை அடியவர்களாகிய எங்கள் அறிவால் அறிய இயலாது. உன்னை அறிய நீயே உதவ வேண்டும்.

**அ.பொ:** நிரஞ்சனம் - குற்றமின்மை. (சாகூ)

274. நெஞ்சிற் சபலம் பொருந்தாது நின்னை
யறிவா லுணர்ந்தொன்றாய்
நினைக்கப் போகின் றதுவுமிலை நெறிமாற்று
உயரு மாறதுபோல்
பஞ்சுப் பொறிபோற் பவமகலப் பரவும்
நினைப்பு களுமகலப்
பரிந்தென் பால்வந் தருள்புரிவாய்
பரமானந்த சுகப்பொருளே!
அஞ்சு முடலா யிருப்பவளே யாறுங்
கடந்த பரம்பரையே!
யமுத வசனத் திருக்கிருஷ்ண னாதித்
துணைவி யந்தரியே!
வஞ்சி நவமோகனரூபி வதனாம் புயத்தி!
யருண் மயத்தி!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நெஞ்சில் உலகப் பற்றுக்களை விடுத்து உன்னையே நினைத்து மற்ற நினைப்புக்கள் யாவும் நீங்குமாறு அருள் செய்க. (எ0)

275. பச்சை முழுப்பொன் னிறமுடனே பளிங்கு
பவள முடனீலம்
பருத்த மேக முடனாகப் பரவி
யிருக்கும் பசுங்கிளியே
அச்ச மறவே யதன்மீதி லருண
வுதய ரவிகோடி
யகண்டா கார ரூபமதா யமர்ந்த
சிவமோ கனமாதே
செச்சை யடிமே லணிச்சிலம்புஞ் சிறுகிண்
கிணித்தண் டைகளொலிக்கச்
சிவனோ டிருக்குங் கொலுமுகத்தைச் சிறியேன்
காண வருள்புரிவாய்

வச்சவுனது பொருளெனக்கு வரத்தாற்
கருத்தி லுரைத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீ சிவனோடு இருக்கும் பேரழகை அடியேன் காண அருள்க.

**அ.பொ:** செச்சை - வெட்சிப் பூ. **(எக)**

276. அணங்கே! நவபீ டாசனியே! யருளே!
யுதய மதிச்சுடரே!
யாகாயத்தில் முளைத்தெழுந்தே யருவி
முளரி நிலையாளே!
இணங்கு மடியார் நினைந்தபடி யிசைந்த
புவன நவமணியே!
யேகா கார மாகவெனை யெடுத்துன்
னருளைக் கொடுத்தாள்வாய்
பிணக்கு மலமா யாதிகளிற் பிரியும்
இடம்நீ காட்டாதே
பேரா யிரத்தி! தவபுரத்தி! பேசா
மோனக் கொடி மடலே!
மணங்கொண் டிருக்குங் குழலாளே வந்தென்
றனையாட் கொண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** மல மாயைகளால் துன்புறுத்தப் படாதவாறு என்னை எடுத்து உன் அருளைக் கொடுத்து என்னை ஆள்வாய். **(எஉ)**

277. குடும்ப மெனுமைக் கடலதனிற் குலவு
முடலா கியதோணி
குறித்தே பிரமன் வகுத்தவகை கொள்ள
மேற்கால் கீழ்க்காலாய்த்
தடம்புக் கியதோர் நாளையிலே தடித்து
வழியோர் சுழியேகிற்
றாறுமாறா யோர்நொடியிற் றானே யொதுங்கிக்
கிடக்கு தையோ

திடம் புக்கிடவே நேர்கரத்தாய் சேர்ந்து
வரவே கரையொதுங்கிச்
செத்தே தயவாய்ப் பார்த்தருள்வாய்ச் செஞ்சொற்
கிசைந்த திருமாதே!
மடம்பார் முடிவி னடனமிடு மதிசூடிய
பேரொளி விளக்கே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** குடும்பம் என்னும் கடலில் உடலாகிய தோணி பிரமன் வகுத்த வகையிலே சென்று ஒரு சுழியில் அகப்பட்டுத் தாறுமாறாய் ஒதுங்கிக் கிடக்கின்றது. அது நல்ல முறையில் கரை சேர அருள்வாய். **(எங)**

278. கல்லாக் கயவர் முகம்பார்த்துக் காத்துக்
கிடந்து விழிப்புனலாய்க்
கரையக் கரைய விதம்பேசிக் கலங்கித்
திரியக் கடையேனும்
நல்லார் பதத்துக் கானதொழில் நடத்தை
யறிய வெனதுமதி
நம்ப வுறுதி யருள்புரிவாய் ஞானா
னந்தச் சுடர்விளக்கே!
பொல்லா வறுமை தனையகற்றிப் பொழுதை
மறைத்துச் சரமேகம்
பொழியும் வகைபோற் கவிமேகம் பொழிய
மொழிநல் வாக்களித்தே
வல்லா னாக்கி யெனையாள்வாய் வாலாம்
பிகையே! நாரணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** கயவர்களைப் பார்த்துக் காத்துக் கிடந்து கண்ணீர் வடித்து அவர் உதவி பெற முயல்வதனை விடுத்து நல்லவர் திருவடிகளுக்கான தொழில்களில் என் மனம் ஈடுபட்டு உய்யுமாறு அருள்க.

**அ.பொ:** நம்ப - விரும்புமாறு. **(எச)**

279. அரிபிர்ம் மாதி தேவரொடு மலையைக்
கண்டய விடம்பிறக்க
வதனாற் பயந்தே யபயமிட வபயங்
காத்தோன் கரியுரித்தோன்
எரியப் புரத்தை நகைத்தெரித்தோ னிறையோ
னென்ப ரறியாதா
ரிறையோ னுடலில் நீபாதி யிருந்தே
செய்த விபகாரம்
தெரியா துலக மறியாதோ சிவனார்
தமக்கோர் தொழிலேது
தேகம் நீயுன் றொழிலெனவே செப்பு
மறைக ளநுதினமும்
வரிவில் தரித்த மலர்க்கொடியே வந்தென்
றனையா தரித்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** பாற்கடல் கடைய விடம் பிறக்கத் தேவர்கள் அபயமிடச் சிவபெருமான் அவர்களைக் காத்தது போல் வந்து என்னை உலகத் துயரிலிருந்து காத்தருள்க.

**அ.பொ:** விபகாரம் - செயல்கள். **(எரு)**

280. இறையி லிருந்து வதிசயத்தை யெவரா
லறிய வசமாகு
மீசன் றனக்குட் டானறிவா னிருமா
நிலத்தோ ரறியாரே
நிறையுங் கடலுநிலம் பவன நெருப்பு
ககன மறியாதே
நின்னை யறிந்தார் பிறப்பிறப்பு நிலத்திற்
றிரும்ப முளையாரே
அறையஞ் சிலம்பு மிகவொலிக்க வமுத
கிரணச் செஞ்சரணி!
யடியே னறிவுக் கோரறிவா யமைந்தே
யிருந்த பரம்பரையே!
மறைவின் முடிவி னடனமிடும் வனச
மலர்ப்பூம் பதத்தாளே!

**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** உன் பெருமையை இறைவன் அறிவான். மற்றவர்களோ அறியார். ஐம்பூதங்களும் அறியா. உன்னை அறிந்தவர்கள் பிறப்பு இறப்பு நிகழ்கின்ற நிலத்தில் மீண்டும் தோன்றார். அடியேனுக்கு அறிவாய் அமைந்து அருள்க.

**அ.பொ:** பவனம் - காற்று; சரணி - திருவடிகளை உடையவளே. **(எசா)**

**281.** **கருத்தோ செலுத்தச் சல்லடைக்கண் களைப்போற்**
**கலங்கி மயங்குதையோ**
**கனவி லெவர்க்கு மபகாரங் கருதி**
**னாப்போற் காணலுற்றேன்**
**பருத்த விருளில் விழிக்குருடன் பாதை**
**யறிந்து நடப்பானோ**
**பதியே யெனது மதிவினையால் படும்பா**
**டிவைநா னேதுசொல்வன்**
**ஒருத்த ருதவி யதுங்காணே னுனையே**
**யடைந்தே னொளிச்சுடரே!**
**யுதித்த கதிர்முன் னிருள்போலு மோட்டி**
**வினையை வாட்டிடுவாய்**
**வருத்த மறிந்த தாயேயுன் மலர்ப்பா**
**தத்தில் வீழ்ந்தடுத்தேன்**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** இருளில் குருடன் பாதை அறியாது தடுமாறுவது போல, உதவுவார் பிறர் இன்றி உலக வாழ்வாகிய இருளில் தடுமாறும் எனக்கு ஒளிச்சுடராகிய நீ வழிகாட்டு.

**அ.பொ:** மயங்குது - மயங்குகின்றது. **(எஎ)**

**282.** **சத்த பரிச மொடுருபந் தரித்த**
**ரசமா கனக்கந்தந்**
**தாவும் பொறிகள் தாமறியுந் தனையே**
**யறியுங் கரணமது**
**உற்ற வுயிர்தா னிவையறியு முயிர்தா**
**னறியு மதுசாக்ஷி**

யுகந்த சாக்ஷி தனையறிய வொருவர்
தமையு நான்காணேன்
முத்த வறிவு முடையோர்தாம் முதர
சாக்ஷி தனையறிந்து
மோகா வேசந் தனைக்கடந்த முனிவ
ரானோ ரிருபதங்கள்
வைத்தென் சிரசிற் றியானமுடன் மகிழ்ந்தே
யிருக்கும் வகைபுகலாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** பொறி புலன்களை அறியும். அவற்றை அந்தக் கரணங்கள் அறியும். இவற்றை உயிர் அறியும். உயிரின் தன்மையை உள்ளவாறு அறிய அருளுக.

**அ.பொ:** கரணம் - ஐம்பொறி, செய்கை; சத்த பரிச ரூப ரச கந்தம் - ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம்; முதரம் - மனம், மொழி, மெய் என்ற மூவகை.

(எஅ)

283. தனதென் றிருப்ப ருலகமதிற் றந்தை
யொடுதாய் தனதாமோ
தனந்தான் றனதோ வகந்தனதோ தழுவு
மனையாள் தனதாமோ
எனதென் றிருந்த பாழுமுட லிதுதான்
றனதோ மனந்தனதோ
வெல்லாம் பிரபஞ் சவிர்த்தியினா லிதம்போற்
கரவி லிசைந்திருப்ப
உனது பதத்தை யான்பிடித்தே யுணர்ந்தொத்
திருக்கா வகையெடுத்தே
னுடலும் மனதும் வினைவசத்தா லோங்கித்
தரள வடிக்குதையோ
மனது நீங்கி யெனதுவச மாகக்
கருணை யதுபுரிவாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உலகம் எல்லாம் தனது என்று மனிதன் கருதுகிறான். உண்மையில் தனது என்பது ஒன்றுமில்லை. தந்தை, தாய், தனம், வீடு, மனைவி, இந்த உடல், மனம் இவை தனது ஆமோ? உலக நடைமுறையில் தனது போலத்

தோன்றும் மாயை இது. மனம் நம் வசமானால் உண்மை புலப்படும் அந்நிலையை எனக்கு அருள்.

**அ.பொ:** பிரபஞ்ச விருத்தி - உலகியல் வாழ்வு. **(எகூ)**

284. காண வேண்டு மிருபதத்தைக் களிக்க
வேண்டு மநுதினமுங்
கவலைக் கடலா கியவினைகள் கரைய
வேண்டு மெனையகன்று
தோண வேண்டும் ஸ்ரீகிருஷ்ணன் றுணைவி
யுனது திருக்கருணை
தோற்ற வேண்டும் நடுவணையிற் றுவாத
சாந்த வெளியில்மனம்
பூண வேண்டு மருளமுதம் புசிக்க
வேண்டு மெனதுடலம்
புகழ வேண்டு மருட்கவிதை பொழிய
வெனக்குன் னருள்புரிவாய்
வான மதியே யபரஞ்சி மனையி
லிருந்த சவுந்தரியே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நாளும் நான் உன் திருவடிகளைக் கண்டு களிக்க வேண்டும். கவலைகள் தீர உன் கருணை வேண்டும். எனது உடல் உன் அருளமுதம் புசிக்க வேண்டும். உன்னைப் புகழ வேண்டும். அருட் கவிதை பொழிய நீ அருள் செய்வாய்.

**அ.பொ:** தோண வேண்டும் - தோன்ற வேண்டும்; அபரஞ்சி - புடமிட்ட பொன். **(அ0)**

285. அத்து விதமே! சிவபுரமே! யணுவி
லணுவே! யகண்டிதமே!
யமுதச் சிவமே! யழகொழுகு மருண
நுதலே! நவநிதியே!
முத்த ரறிவே! கனகமுடி மோனப்
பதியே! வெதிரசத்தின்
முக்ய ரசமே நவமுடியில் முடித்த
பரமே! திருப்பரையே!

சுத்த வெளியே! வெளிக்குநடு சூழ்ந்த
வொளியே! வொளிக்குமுனந்
தோய்ந்த திரையே திரைக்குமப்பால் தோய்ந்த
வெளியே வளிக்கனலே!
மற்று முளப்ர பஞ்சமுறு வடிவே!
யெனது மலைமகளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீ பெருமானோடு அத்துவிதமாய் அணுவில் அணுவாய்ப் பூரணமாயுள்ளாய். **(அக)**

286. **ம**ருத நிலத்தோ னொருபாலில் வந்து
வணங்கக் கனமறலி
வருண னிருதி யருணனொடு வாய்வு
முடிவி லீசான்யன்
பொருந்தி வணங்க வமரர்முடி புனையும்
பதத்தி யருண்மயத்தி!
பூமா தொடுவா ணியுவணங்கும் பொன்னா
பரணி! பணிபூணி
கருது மடியார் நினைவிலுள்ளங் கரைந்த
வதனி! கல்யாணி!
காமக் கிரிபீ டாசனியே! கன்னி
யுமையே! தாரணியே!
வரநற் பருவ மாக்கியெனை வளர்சே
வடிக்கா ளாக்கிடுவாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** இந்திரன் அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் எண்திசை பாலகர்களும் வணங்க நீ வீற்றிருக்கிறாய்.

**அ.பொ:** மருத நிலத்தோன் - இந்திரன்; மறலி - இயமன். **(அஉ)**

287. **தக்க திரிகோ ணாசனத்தி சகல
புவன மானசத்தி!
சர்வ பூத மானசத்தி சகலா
கமங்க ளானசத்தி!**

திக்கு முடையா யமர்ந்தவளே திரிகோ
ணாதீ பப்பொருளே!
செம்பொற் கலசத் தனத்தழகி திவ்ய
சோதி மயமான
புக்குஉன் அடியார் சிந்தையினில் புகழ்ந்து
நடன மிடுஞ்சரணி!
பூத மைந்தாய் நாதாந்தப் பொருளா
யிருந்த மலர்க்கொடியே!
மக்கு மெனது மனச்சலன மறுத்துக்
கருணை மிகுந்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அலையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியவர் சிந்தையில் புகழ்ந்து நடனமிடும் நீ ஒளி குறையச் செய்யும் என் மன அலைச்சலைப் போக்கிக் கருணை மிகுந்து அருள்வாய்.

**அ.பொ:** மக்கும் - மங்கிப் போகும். **(அங)**

288. அனைத்து மகண்ட முடிவிலொன்றா யருளாய்ப்
பழுத்த தவப்பொருளே!
யகில புவனத் தனுகரண மான
சுகமே! யற்புதமே!
செனித்த பிறவித் துயரறுக்குஞ் சீர்வாள்
பிடித்த கரத்தழகி!
தினமு முனையே பணிந்தவர்கள் சிந்தை
நிலையா யிருப்பவளே
கனத்த மயிடா சுரன்சிரத்தைக் கலங்க
வுதைத்த பதத்தாளே
கருணைக் கடலே! பரநிதியே! கண்மூன்
றுடைய கற்பகமே!
மனத்துட் சலன மறக்கருதி மலர்ச்சே
வடியை யளித்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அலையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** என் மனச்சலனம் போக்க உன் திருவடிகளை அளித்து அருள்வாய்.

**அ.பொ:** அனுகரணம் - போலச் செய்தல். **(அச)**

289. தூரங்கம் பதினா றங்குலமே சுகமாய்
நடன மிடுஞ்சரணி!
தொலையா வெளியே! வெளிமுதலே! சுயம்பிர
காச நிலையானே!
இரங்கு மடியார் சிந்தையுள்ளே யினிதாய்
வளரும் வாரிதியே!
யிலகு நினைவு முடையவனோ யீன
ரகம்விட் டிருப்பவனே
அரங்க முடிவில் நடுவணையி லமுதாய்ச்
சொரியு மருள்நிதியே!
யமல சுகத்தை யடியேனு மடையு
மறிவு தரவேண்டும்
வரங்க ளினிவந் தருள்புரிவாய் வனசா
சனத்து ளிருப்பவனே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** களங்கமற்ற சுகத்தை அடியேனும் அடைய அருள் புரிக. **(அரு)**

290. உம்பர் முநிவர் முதலோர்க்கு முணர்தற்
கரிதா யிருப்பவனே
ஓதா வேத முணர்பவனே யுயிருக்
குயிரே யொளிக்கொளியே
அம்பு படர்ந்த விழிப்பொருளே யரவ
முடியி லிருப்பவனே
யரனார் தமது நினைத்தருளு மடியா
ருளத்துண் மணிவிளக்கே
கும்ப முனிக்கும் வியாசருக்குங் குலவு
நவசித் தாதிகட்குங்
குறிக்குந் திக்குட் பாலர்கட்குங் குறியே
யருளும் நிலையானே
வம்பில் பழுத்த ரசக்கனியே மதமோ
கினியே யோகினியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அகத்தியருக்கும் வியாசருக்கும் நவசித்தர்களுக்கும் திசை பாலகர்களுக்கும் அருளும் நீ அடியேனுக்கும் அருள வேண்டும்.

**அ.பொ:** வம்பு - புதுமை. **(அசா)**

291. தொந்த வினையா யிருந்தவினை தொலைக்கு
மருந்தா யிருந்தவளே!
துக்க சுகமா யிருந்ததனைத் துடைக்குங்
கதியா யிருப்பவளே!
அந்த கனுமா யிருந்துமவர்க்கு அதிகா
வலுமா யிருப்பவளே
யரியு மயனா யிருந்துமவர்க் கப்பா
லாகி யிருப்புவளே!
முந்தி நடுவா யிருந்துமதன் முதலாய்
முடிவா யிருப்பவளே
முத்தர் சிவமா யிருந்துமருள் மோனப்
பதியா யிருப்பவளே
வந்தித் திடநீ வந்தெனக்கோர் வழியைக்
காட்டி யாதரிப்பாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீ காலனாகவும், காப்பவனாகவும், அயன் அரியாகியும், அவர்களுக்கு அப்பாலாகியும், முக்தி நடுவாகவும், அதன் முடிவாகவும் உள்ளாய். அத்தகைய நீ உன்னை வழிபட எனக்கு ஒரு வழியைக்காட்டி ஆதரிப்பாய்.

**அ.பொ:** அந்தகன் - எமன். (அஎ)

292. பூதமைந்து சதுர்க்கரணம் புலனோ
ரஞ்சும் பொறிகள் பத்தும்
புகழும் வித்யா தத்துவங்கள் பொருந்தோ
ரேழுஞ் சிவமஞ்சும்
பேதா பேத மோராறிற் பிடித்த
தேகக் கோடியினிற்
பிறந்தும் பிறந்தே யிறந்திறந்து பொய்யைப்
புசித்தே பொய்பேசிக்
காத லுடைய மனத்தையுன்றன் கருணை
விழிகொண் டினிநோக்கிக்
கவலை தணிய வரமருள்வாய் கண்ணே!
யெனது கண்மணியே!
வாத மகண்ட பெருவெளியில் வளரு
நடனத் தாண்டவத்தி!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** பூதம் ஐந்து, புலன் ஐந்து, பொறிகள் பத்து, அந்தக் கரணம் நான்கு, வித்தியா தத்துவம் ஏழு, சிவ தத்துவம் ஐந்து என ஒரு தத்துவ வடிவான உடல் பிறந்து இறந்து பொய் பேசிப் பொய்யை நுகர்ந்து வீணே அழியாதபடி, என் மனத்தை உன் கருணை விழியினால் நோக்கிக் கவலை தணிய வரம் அருள்வாய்.

**அ.பொ:** சதுர் கரணம் - மனம், புத்தி, அகங்காரம, சித்தம்; வித்யா தத்துவம் ஏழு - காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை; சிவதத்துவம் ஐந்து - சுத்த வித்தை, சாதாக்கியம், ஈசுவரம், விந்து, நாதம். **(அஅ)**

293. **ஆரா ரகமு நீயானா யாரா**
**வமுது நீயானா**
**யாரா ருயிரு நீயானா யாவர்**
**பொருளு நீயானாய்**
**பேரா யிரமு முடையானே பேதா**
**பேதம் பேசியென்ன**
**பெருமை சிறுமை நீயானாய் பிரியா**
**வருளு நீயானாய்**
**நாரா யணியே பூரணியே நளினா**
**சனத்துள் நடிப்பவளே**
**நாட்ட மறியா தவருளத்தும் நடனம்**
**புரிந்தே நிற்கிலையோ?**
**வாரா கினியே! தயைபுரிவாய் வாலாம்**
**பிகையே! பலவகையே!**
**மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!**
**அவையாம் பிகைத்தாயே!**

**பொழிப்:** நீ பேர் ஆயிரம் உடையாய். பெருமை சிறுமை ஆனாய்; பிரியா அருளும் ஆனாய்; எல்லோருடைய உயிரும் பொருளும் ஆகி, எல்லோருளத்தும் நடனம் புரிகிறாய். **(அகூ)**

294. **தட்டா துனது மொழிகேட்டுத் தமியேன்**
**பிழைக்கும் வழிதேடித்**
**தயைசெய் வதுமுன் கடனலவோ தாயே**
**கருணைக் கோர்முதலே**
**கட்டா யிருக்கு முலகிலுள்ளோர் கலங்கிப்**
**பிரிய வருள்புரிவாய்**
**கமலா சனியே! மாமணியே! கருணா**
**நிதியே! கற்பகமே!**

முட்டா திருந்த சலனமிவை மூழ்க
வடிப்பாய் முழுமுதலே!
முநிவோர் புகழுந் திருக்கிருஷ்ண மூர்த்தி
துணைவி மோகனமே!
வட்டா காயத் தொளிர்சுடரே வாலாம்
பிகையே! வந்தாள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் மொழியைக் கேட்டுத் தமியேன் பிழைக்கும் வழியை அருள்வாய்.

**அ.பொ:** காயம் - ஆகாயம். **(௬௦)**

295. தத்வா தீதச் சுடர்விளக்கே தமியே
னுயிரா யிருப்பவளே!
சர்வ லோக தயாபரியே! சாக்ஷாத்
கார மானவளே!
சித்த மோனத் தடியார்தஞ் சிந்தை
யிடையிற் குடியான
சேஷா பரணி! மலர்ச்சரணி! திருவே!
யருவே! திகழுருவே!
வித்தா யடியிற் கனகசபை மேலாய்ச்
சுகமாய்க் குண்டலியாய்
விளங்கா நிற்கு மருட்கனியே! மேலோர்
கீழோர் தொழுபவளே!
வற்றா துலவு மருட்கடலே! மகிழ்ந்தென்
றனைவந் தாண்டுகொள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியார் சிந்தையிடைக் குடியான நீ மகிழ்ந்து எனை ஆட்கொள்வாய்.

**அ.பொ:** தத்துவாதீனம் - முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாற்பட்டது, சாக்ஷாத்காரம் நேரே தோன்றுதல்; குண்டலி - மூலாதாரம். **(௬௧)**

296. அம்மா வுனையே யடுத்தவர்கட் கனைத்து
முலக வசியமுண்டா
மஷ்டாங் காதி யோகமுட னடியு
முடியுங் கவனமுண்டாம்
தம்மாற் சாபா நுக்ரகமுஞ் சகல
மூர்த்தி கரமாகுஞ்

சடமே வெகுநாள் நரைதிரைக டமையே
யகற்றித் தனியிருக்கும்
சும்மா வவர்கள் விரலசைந்தால் தொடர்ந்தீ
ரெழுபார் சுழன்றுருளுந்
துக்க சுகமு மணுகாது சுகரு
பாதி! யருளமையும்
வம்மா! வதைத்தா னேதுசொல்வேன் வாக்கு
மனதுக் கடங்காதே
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன்னை அடுத்தவர்களுக்கு எல்லா உலகும் வசப்படும் எட்டு வகை யோகங்களும் நிறைவேறும். அவர்கள் ஆக்கவும் அழிக்கவும் வல்லவராவர். நரை, திரை அற்று இருப்பர். அவர் விரலசைந்தால் ஏழு உலகும் சுழலும். இன்ப, துன்பம் அவரை அணுகா. உன் அருளால் அவர்களைப் போல அடியேன் சுகமாக இருக்க அருளாய். **(௬௨)**

297. பொன்னே! நிறைந்த புதுமலரே! புகழ்சேர்
மறையின் பொருளணங்கே!
பொற்றா மரைப்பூங் கமலமதிற் புகழ்ந்தே
யிருக்கும் போதகமே!
மின்னே! பவழக் கொடிவடிவே! மேக
மனைய கருங்குழலே!
விளங்கு தவபீ டாசனியே! வித்தாய்
மரமாய் மறைமுடிவில்
முன்னே பழுத்த கதிப்பழமே! முதிர்ந்த
மொழியிற் படர்ந்தகொடி
முதலே! நுதலே! குடியாக முடிவா
யிருந்த மோகனமே!
வன்னே பொருந்த வருளளிக்கும் வாலாம்
பிகையே! வான்மணியே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** எனக்குப் பொருந்தத் தாயாகிய நீ அருள்க.

**அ.பொ:** வன் - திட நம்பிக்கை. **(௬௩)**

298. தூல சூக்ஷ்ம காரணமே! தொலையாக்
கருணை வாரிதியே!

துவாத சாந்த வெளிதனிலே சுகமா
யிருக்கும் நிரந்தரமே!
மேலாம் தவத்துக் கதிகாரி! விரிந்த
கமல நடுப்பீடம்
வியாபித் தொளியாய் வெளியதன் மேல் வெளியா
யிருந்த மெய்ப்பொருளே!
ஆல கால விடமருந்து மரனா
ரிடப்பா கத்தில்வள
ரமுதே தேக வொளிமயமே யருணாம்
புயத்திரி யம்பகியே!
வாலாம் பிகையே யுனையடுத்தேன் வந்தென்
றனைநீ காத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** நீயே தொலையாத கருணைக்கடல். தவத்துக்குத் தலைவி. எனைக் காத்தருள்வாய்.

**அ.பொ:** தூல சூஷ்மம் - பருப்பொருள், நுண்பொருள். **(கூச)**

299.. மூன்றெ யெழுத்தா யிருப்பவளே! முனைமே
லெழுத்தே பதினைந்தா
முதலா யிருபத் தெட்டாக முடிவா
யிருந்த மோகனமே!
நீண்ட சமையா சாரமுமாய் நெறியந்
தரமாய் முகமாகி
நிகழா தாரக் குண்டலியாய் நின்றே
யிருந்த நேரிழையே!
பூண்ட வடியா ரகந்தோறும் பொன்னம்
பலமாய் நடனமிடும்
பொருளே! யருளே! யெனையாளும் பொன்னே!
கண்ணி னுண்மணியே!
மாண்ட குருவாய் வந்தவளே! மருவுஞ்
சுகத்தைத் தந்தவளே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** எனக்குக் குருவாய் வந்து மருவும் சுகத்தைத் தந்தவள் நீ.

**அ.பொ:** மூன்றெழுத்து - அ, உ, ம் என்ற மூன்றெழுத்தாகிய ஓம் என்னும் பிரணவம்; மாண்ட - மாட்சியைப் பட்ட. **(கூரு)**

300. ஆறு சமயங் கடந்துநின்ற வருண
நிதியே! சுந்தரியே!
யாசா பாச மகன்றவர்பா லருளா
யிருந்த வருந்ததியே!
தேறும் பதினெண் புராணமுமாய்த் தீபி
கையுமாய் நின்றவளே!
திக்கோர் வடிவாய் நிற்பவளே! செகமே
வடிவாய் நின்றாயே!
கூறு மன்பத் தொன்றதிலுங் கோடி
கோடி மந்திரமுங்
குறிக்கு மனந்த வேதமுமாய்க் குறிப்பா
யிருந்த பரமாதே!
மாறி யெனது மலமறவே வந்தே
யடிமை கொண்டாள்வாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** ஆறு சமயமும் கடந்து புதினெண் புராணமுமாய் இருப்பவளாம் நீ ஐம்பத்தோரெழுத்துக்களிலும் கோடி மந்திரங்களிலும் இருக்கிறாய்.

**அ.பொ:** ஆசாபாசம் - பற்றும் ஆர்வமும். **(௩௱)**

301. முக்கட் பரம ரிடப்பாக முதலாய்
முளைத்துத் தழைத்தவளே!
முன்ன மவனை யீன்றவளே! முடிவி
லவனை யாண்டவளே!
செக்க ரிளமா மதிவதனத் தெளிவிற்
றெளிவே தேன்மொழியே!
தேவி யாதி பரஞ்சோதி ஸ்ரீபீ
டாதி யருளாதி!
பக்கத் துணையே! பார்வதியே! பரமேஸ்
வரியே காரணியே!
பஞ்சா க்ஷரியே யுலகேழும் படைத்த
தாயே பைங்கிளியே!
மக்கள் தமைப்போ லெனைக்காக்க வகைநீ
யருள்வாய் வளமயிலே!

மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** உன் மக்களைப் போல எனைக் காப்பாற்ற வகையை அருள்வாய்.
**(கூஎ)**

302. தில்லை யதனுள் நடனமிடுந் திருவே!
யருவே திகழுருவே!
தெளிந்த பரமே! சிவபரமே! செகசூத்
திரநான் மறையேமால்
அல்லைத் தொலைக்கு மருமருந்தே! யமுதா
னந்தக் கடற்பெருக்கே!
யறிவுக் கறிவாய் நீயிருந்தே யனைத்துந்
துதிக்க வருள்பரையே!
எல்லை கடந்த பரவெளியே! யிசைபுட்
களமே! யகண்டிதமே!
இதத்துக் கிதமா யிருப்பளே! யிரவு
பகலா யொளிர்பவளே!
வல்ல மதிசூ டியவனிடம் வளரும்
வாழ்வே! யென்கோவே!
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** தில்லை அதனுள் நடனமாடும் திருவே. உன்னை அனைவரும் துதிக்க அருள்வாய்.
**(கூஅ)**

303. அணியுங் கனக வொளிமலையே! யமுத
நதியே! யருட்கடலே!
யதிகா ராதி தேவதையே யகண்ட
முடிவி லொளிச்சுடரே!
பணியு மணியும் புயத்தாளே! பரநா
தாந்த மடத்தாளே!
பழகு மடியா ரிருதயத்துட் பரவி
யிருக்கும் பனிமொழியே!
துணியு மனதா கியயோகி தொடரும்
படியே தொடர்பவளே
தூங்கா துறக்க மானவளே தொலையாச்
சுகமுண் டானவளே
மணியங் கிரணி விளையாடி வளருங்
கொலுவீற் றிருப்பவளே!

மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே!

**பொழிப்:** அடியவர் இதயத்துள் பரவி இருக்கும் நீ தொலையாத சுகத்தை அருள்க.

**அ.பொ:** மடத்தாளே - இருப்பிடமானவளே; கிரணி - ஒளி வீசுபவள். **(கூகூ)**

304. நான்வே றெனநீ வேறானாய் நானா
வேதப் பொருளானாய்
நாயே னினியா ருடன்பேசி நண்ணுங்
குறையைப் போக்குவது
தான்வே தாந்த முடிவானால் தனக்கோர்
செயலு முண்டாமோ
சர்வா னந்தி சக்கரத்தி சட்கோ
ணத்தி சதுர்க்கரத்தி!
தேன்வே றுரிசை யுண்டாமோ தீபத்
தொளிவே றுண்டாமோ
தேக முயிரு முயிர்க்குயிராய்ச் சிவமே!
யொன்றா யானாயே!
வான்வே றுண்டோ திருக்கிருஷ்ணன் வளருந்
துணைவி நீயுரையாய்
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே!
அவையாம் பிகைத்தாயே! **(௧00)**

**பொழிப்:** நான் வேறு என நீ வேறு என ஆனாய். நாயேன் இனி யாருடன் பேசி என் குறையைப் போக்குவேன்? தேன் வேறு அதன் சுவை வேறு ஆகுமோ? தீபம் வேறு ஒளி வேறு ஆகுமோ? எல்லாப் பொருளுள்ளும் ஒன்றி இருக்கும் நீ அவற்றைப் பிரித்துக் காண இயலுமோ? அடியேனைத் தனியே பிரித்துப் பார்க்காது உன் எல்லையற்ற ஆனந்தத்தை அடியேனும் அடைய அருள் செய்க.

அவையாம்பிகை சதகம் முற்றிற்று.

உ

சிவமயம்

நேமநகரம்

அழகப்பச்செட்டியார் குமாரர்

**முத்தப்பச் செட்டியார் அவர்கள்**

இயற்றிய

# செயங்கொண்டார் சதகம்

# செயங்கொண்டார் சதகம்

இச்சதகம் மதுரைச் சீமை சிவகங்கை சமஸ்தானம் கீழைச் சேவற்பட்டு இடையாற்றங்குடி எழு நகரம் என்று சொல்லப்பட்ட நேம நகரத்தில் உதித்த அழகப்பச் செட்டியார் குமாரர் முத்தப்பச் செட்டியாரால் இயற்றப்பட்டு, அவர் பெயரர் நாராயணஞ் செட்டியார் கேட்டுக் கொண்டபடி பதிப்பித்த பதிப்பிற்கு இணங்க *1913*-இல் மீண்டும் பதிப்பிக்கப்பட்டது என்பது புலப்படுகிறது. முதல் பதிப்பு முத்தப்பச்செட்டியார் பதிப்பித்தது. அதன் பிரதிகள் கிட்டாமையால் மீண்டும் *1913*-இல் பதிப்பிக்கப்பட்டது. எனவே முதல் பதிப்பு *40* ஆண்டுகளுக்கு முற்பட்டிருக்கலாம். அதனைப் பதிப்பித்தவர் நூலாசிரியரின் பெயரர். எனவே, நூல் இயற்றிய காலம் அதனைப் பதிப்பித்ததற்குச் சுமார் *40* ஆண்டுகளுக்கு முன் இருக்கலாம். இவற்றையெல்லாம் நோக்க இந்நூலாசிரியர் தம்முடைய நேம நகரச் சிவபெருமானாகிய செயங்கொண்டாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இந்நூல் இயற்றிய காலம் *19*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தது என்று முடிவு செய்யலாம்.

இந்நூலாசிரியர் பல நூல்களையும் பயின்றவர். செவி வழிச் செய்திகள் பலவும் கேட்டறிந்தவர், சைவ சமயப் பற்றுடையவர். நூலின் காப்புப் பாடல்களில் விநாயகப் பெருமான், முருகப் பெருமான், கலைமகள் இவர்களை வழிபட்டுப்பின் அவையடக்கமும் கூறுகிறார். தண்டலையார் சதகம் இவர் காலத்தில் பிரசித்தமாக இருந்துள்ளது. அந்நூலைச் சூரி என்பவர் இயற்றினார். அந்நூலோடு தாம் இயற்றிய செயங்கொண்டார் சதகத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் மதயானைக்கு முன்னர் ஒரு சிற்றெறும்பு நடந்தது போலவே தோன்றும் என்கிறார். இந்நூல் முழுதும் உலகில் வழங்கும் பழமொழிச் செய்திகள், பல கதைகள் வாயிலாக அறுசீர் ஆசிரிய விருத்தத்தால் நூறு பாடல்களாகப் பாடப்பட்டுள்ளன.

இந்நூலில் பழமொழிகளை விளக்க இராமாயணத்திலிருந்து இராமன், சீதை, வாலி, இராவணன், வீடணன், இந்திரசித்து, அநுமன், குசலவர், முதலியவர் பற்றிய செய்திகளும், மகாபாரதத்திலிருந்து தருமன், அருச்சுனன், துரியோதனன், கர்ணன், கண்ணன் முதலியவர் பற்றிய செய்திகளும், விநாயகன், முருகன், கருடன், விஷ்ணு, முதலிய தெய்வம் பற்றிய கதைகளும், கந்த புராணம்,

திருவிளையாடற் புராணம், பற்றிய செய்திகளும், வால்மீகர், மார்க்கண்டர், விசுவாமித்திரர், மிருகண்டர், வசிட்டர், துர்வாசர், வரரிஷி, துரோணர், தக்கன், சுக்கிரன் முதலிய முனிவர் பற்றிய செய்திகளும், அரிச்சந்திரன், நளன், உருக்கு மாங்கதன், மனுநீதிச் சோழன், சீவகன், விக்கிரமாதித்தன், சகரர்கள், இரணியன், சூரபதுமன், மகாபலி, வரகுண பாண்டியன், நந்திராசன், பாண்டிய மன்னன், சேதுபதி முதலிய மன்னர் பற்றிய செய்திகளும், சுவாகா, அருந்ததி, ரேணுகா தேவி, அகலிகை, அமராவதி, பிரகற்பதி தேவி, தாரை, சீதேவி, மூதேவி முதலிய மகளிர் பற்றிய செய்திகளும், காளிதாசன், நக்கீரன், நிரம்ப அழகியர், செந்நாப் புலவர், அம்பிகாபதி, சத்திமுற்றப் புலவர் முதலிய புலவர் பற்றிய செய்திகளும், சிவனடியார் செய்திகளும், இராக்கதன், காந்தக்கற் கோட்டையை வென்றவன், அரசன் மனைவி குட்டரோகி, பொய்த்தவ ஒழுக்கத்தினர், மானமுள்ள மாபுருடன், விறகு தலையன், பஞ்ச தந்திரக்கதை, அச்சுதவாணன் சிறப்பு முதலிய செவிவழிச் செய்திகளும், ஆசிரியர் காலத்தில் அவருக்குப் பழக்கமான சூழ்நிலைகளில் பயின்ற பழமொழிகள் வாயிலாகச் சதகத்தின் ஒவ்வொரு பாடலிலும் விளக்கப்பட்டுள்ளன. இவர் குறிப்பிடும் சில செய்திகள் இக்காலத்து நமக்குப் புதுமையாக உள்ளன. சில பழமொழிகளைக் கால வேறுபாட்டால் உள்ளபடி உணர முடியவில்லை. இவர் வரைந்துள்ள 'திருமுக விலாசம்' என்ற கலிவெண்பாப் பிரபந்தத்தாலும் இவருடைய கவிதை ஆற்றலும் தெய்வ பக்தியும் புலப்படுகின்றன.

இனி, சதகச் செய்திகளைச் சுருக்கமாகக் காண்போம்.

தென் நேமம் என்ற ஊரில் கோயில் கொண்டிருக்கும் ஜெயங்கொண்ட சோழீசர் திருப்பெயரைப் பாடல்தோறும் வாழ்த்திக் குறுவிருத்தமாகிய அறுசீர் ஆசிரிய விருத்தத்தால் இச்சதகம் பாடக் கார்மேகம் போலும் துளையை உடைய கரத்தால் நீரைச் சிதறவிடும் வெயிலுகந்த கணபதியின் திருவடிகளே பாதுகாவலாகும்.

சோழீயர் மீது உலகில் வழங்கும் செய்திகளைத் தொகுத்துப் பாடுவதற்கு 'அகர முதல' என்று தொடங்குந் திருக்குறளைப் பாடிய திருவள்ளுவர் திருவடிகளைப் போற்றிக் குறிஞ்சி நிலக்கடவுளாகிய வடிவேலன் திருவடிகளை வணங்குவோம். இக்கவிதை நூல் உலகம் உள்ளவரை மக்களால் படிக்கப்படப் பிரமன் தேவியாகிய கலைமகள் இந்நூலினை ஆசீர்வதிப்பாள்.

பக்தர்கள் உள்ளத்தில் நீங்கா இடம் பெற்றுள்ள சூரி என்ற சான்றவர் தண்டலை என்ற தலத்திலுள்ள சிவபெருமான் மீது 'தண்டலையார் சதகம்' பாட அவரைப் பின்பற்றி யான் 'செயங்கொண்டார் சதகம்' பாடிய செயல், மதயானைக்கு முன்னே அதன் நடையைப் பின்பற்றிச் சிற்றெறும்பு நடக்கும் செயலை ஒக்கும் என அவையடக்கத்தில் பாடியுள்ளார்.

# செயங்கொண்டார் சதகம்

## காப்பு
## விநாயகர் துதி

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

1. சீர்பொருந்துந் தென்னேமச் செயங்கொண்ட சோழீசர்
திருப்பேர் வாழ்த்திப்
பார்பொருந்துங் குறுவிருத்தப் பாமாலை தனிலுலகப்
பழமைச் சொல்லை
யேர்பொருந்துஞ் செந்தமிழால் யான்பாடப் புவியிலுள்ளோ
ரிசைந்து கேட்கக்
கார்பொருந்துந் துதிக்கரத்தான் வெயிலுகந்த கணபதிதாள்
காப்புத் தானே.

**பொழிப்புரை:** அழகிய நேமம் என்ற ஊரிலுள்ள செயங்கொண்டாரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அடியேன் நன்மக்கன் விரும்பிக் கேட்குமாறு, பழமொழிச் சொற்களை அடியொற்றி வரலாறு கூறிப்பாடியுள்ள அறுசீர் விருத்தப் பாடல்களை அத்திருத்தலத்தில் உள்ள வெயிலுகந்த பிள்ளையார் பாதுகாப்பாராக.

**அருஞ்சொற் பொருள்:** குறுவிருத்தம் - அறுசீர் ஆசிரிய விருத்தம்; துதிக்கரம் - உள் துளையுடைய கை, துதிக்கை. **(க)**

## முருகர் துதி

2. நகரமெல்லாம் பணிந்தேத்துஞ் செயங்கொண்ட சோழீச
நாய னார்மேன்
மகரநெடுங் கடலுலக வதந்தியைச்செந் தமிழால்யான்
வழுத்து தற்கே
யகரமுத லவ்வெழுத்தென் றாதியின்முப் பாற்சொன்ன
வவன்றாள் போற்றிச்
சிகரவரை மீதெழுந்த சிறந்தவடி வேலவன்றாள்
சென்னி சேர்ப்பாம்.

**பொழிப்:** நகர மக்கள் பணிந்து ஏத்தும் செயங்கொண்ட சோழீசரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு உலகில் வழங்கும் பழமொழிகளைக்

கதைகளைக் கொண்டு தமிழால் விரித்துப் பாட திருவள்ளுவரை வழிபட்டு மலைமேலுள்ள முருகரையும் தலையால் வணங்குவோம்.

**அ.பொ:** வதந்தி - பேச்சு வழக்கு, முப்பால் - திருக்குறள். **(உ)**

## கலைவாணி துதி

3. **சிலைவேளை வென்றபிரான் றென்னேம நகரில்வளர்**
**செயங்கொண் டார்மே**
**லுலகிலுள்ளோர் வழக்கமதாய்ச் சொன்ன சொல்லைத் தமிழா**
**யுரைப்ப தற்குக்**
**கலைவாணி யாகியுல குள்ளமட்டும் படிக்கவந்த**
**கவிதை தன்னின்**
**மலர்வேதன் மனைவியென்றன் மனத்திலிருந் திவ்வுரையை**
**வழுத்து வாளே.**

**பொழிப்:** காமாரியாகிய நேம நகர செயங்கொண்டார் மேல் பழமொழியோடு கூடிய பாடல்களை உடைய இந்நூலை உரைப்பதற்கு கலைவாணியாகிய பிரமனுடைய தேவியை வழிபட்டால் அவள் என் உள்ளத்தில் இந்நூலைப் பாடுவிப்பாள்.

**அ.பொ:** சிலை வேள் - வில்லை ஏந்திய மன்மதன்; வேதன் - பிரம்மன். **(௩)**

## அவையடக்கம்

4. **பத்தருளத் தினிற்சூரி தண்டலையென் றெமக்குரைத்த**
**பரமர் மீதில்**
**வித்தகர்முன் னுலகவழக் கத்தையெடுத் தொருநூறு**
**விருத்தஞ் செய்தா**
**ரத்தைநிக ரெனச்செயங்கொண் டார்மீதின் முத்தையைன்சிற்**
**றறிவி னாலே**
**மத்தகயந் தனக்குமுன்னே சிற்றெறும்பு நடந்ததென**
**வசனித் தேனே**

**பொழிப்:** சூரி என்ற புலவர் அடியார்கள் உள்ளத்துக்கு விருந்தாகத் தண்டலையார் சதகம் பாட அந்நூலுக்கு முன்னர் யான் பாடும் இச்செயங்கொண்டார் சதகம் மதயானைக்கு முன்னர் சிற்றெறும்பு நடப்பது போலாகும்.

**அ.பொ:** சூரி - சூரி என்ற பெயருடைய கவிஞன்; தண்டலை - தண்டலையார் சதகம்; மத்த கயம் - மதம் பிடித்த யானை. **(ச)**

## பாயிரம் முற்றிற்று



# நூல்

## வான்மீகர் கதை

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

305. நல்வேட வான்மீகர் சப்தரிஷி களைச்சேர்ந்த
ராம மந்த்ரஞ்
சொல்லநா வில்லாது கற்றறியா மையின்மரா
வெனமுன் சொன்னார்
வில்விசையன் றெவ்வைவெல்லக் கணைகொடுத்த செயங்கொண்டார்
விளங்கு நாட்டிற்
கல்விதனக் கழகுகச டறமொழித லெனமுன்னோர்
கழறு வாரே.

**பொழிப்:** வான்மீகர் என்ற வேடர் சப்தரிஷிகள் உபதேசித்த 'ராம' என்ற மந்திரத்தை உள்ளபடி ஒலிக்க இயலாது 'மரா' என்று சொல்லிப் பின்பு திருத்தமாக 'ராம' என்று ஒலித்தார். கல்விக்கு அழகு கசடு அற மொழிதல் அன்றோ?

**அ.பொ:** விசயன் - அர்ச்சுனன்; தெவ் - பகைவர், கசடு - குற்றம். (க)

## மார்க்கண்டர் கதை

306. அருமறைமார்க் கண்டர்நித்தந் திருக்கடவூர் வேணியனை
யன்பாய்ப் பற்றி
வருசமன்றன் பகையடக்கித் தீர்க்காயு ளாய்ப்புவியில்
வளரா நின்றார்
தருவைநிகர் தென்னேம நகரில்வளர் செயங்கொண்டார்
தமிழ்சேர் நாட்டிற்
பெருமரத்தைச் சுற்றிநின்ற வல்லியுஞ்சா காதெனவே
பேசு வாரே.

**பொழிப்:** மார்கண்டேய முனிவர் கடலூர்ச் சிவபெருமானைப் பற்றிக் காலன் பகையை நீக்கி நிறைந்த வயதுடன் உலகில் வாழ்ந்தார். பெருமரத்தைச் சுற்றியுள்ள கொடியும் சாகாது என்பது பழமொழி.

**அ.பொ:** வேணியன் - சடைமுடியை உடைய சிவபெருமான்; சமன் - எமன்; தீர்க்காயுள் - நீண்ட வயது; தரு - கற்பகமரம்; வல்லி - கொடி. (உ)

## பாண்டவர்கள் கதை

307. அருமைசெறி பாண்டவர்கள் பங்காளி செய்கொடுமை
யாற்கா டாண்டு
முரிமையுடன் றருமர்செய்த நன்றியினாற் றிரும்பவும்வந்
துலகை யாண்டார்
பருவரைவில் லாவளைத்த செயங்கொண்டா ரேயெவரும்
பண்பாய்ச் செய்த
தருமமே தலைகாக்கு மதர்மமழித் திடுமெனவுஞ்
சாற்று வாரே.

**பொழிப்:** பாண்டவர்கள் பங்காளிகள் கொடுமையால் காட்டில் வருந்தியும் தருமர் செய்த அறச்செயலால் மீண்டும் வந்து உலகை ஆண்டனர். தருமம் தலைகாக்கும் அதர்மம் அழித்திடும் என்பது பழமொழி.

**அ.பொ:** பங்காளி - தயாதிகள் ஆன கௌரவர்; பருவரை - பெரிய மேருமலை.
**(௩)**

## இளையான்குடிமாறர் கதை

308. உழுதிளையான் குடிமாறர் முளைவாரி யன்னமன்பர்க்
குதவிப் பாரில்
வழுவாத கீர்த்தியுட னொருநாளுங் கேடில்லா
வாழ்வு பெற்றார்
மழுவேந்துங் கரதலத்தார் செயங்கொண்டார் வளநாட்டின்
மறைக ளோதித்
தொழுவாரெல் லாமுழுவார் தலைக்கடையி லென்றுலகஞ்
சொல்லு மாதோ

**பொழிப்:** இளையான்குடி மாறர் வயலில் விதைத்திருந்த நெல் முளைகளை வாரி வந்து உணவாக்கி அடியவருக்கு வழங்கிக் கேடில்லாப் புகழ் பெற்று நம் மனத்தில் வாழ்கின்றார். வேதங்கள் ஓதித் தொழுபவர் எல்லாம் உழுபவர் வாசலிலே நிற்பர் என்பது பழமொழி.

**அ.பொ:** முளை - நெல் முளைத்த முளை; மறை ஓதி - வேதங்களை ஓதி. **(௪)**

## கிரவுஞ்சம் பிளவுபட்ட கதை

309. தஞ்சமெனச் சரண்புகுந்த வமரர்களைப் புரப்பதற்காச்
சரவ ணத்தின்

மஞ்சனெனத் தோன்றியவேள் வடிவேலாற் கிரவுஞ்ச
மாய்ந்த தன்றோ
செஞ்சரணத் தால்யமனை வென்ற செயங் கொண்டாரே
தேவ ரேனும்
வஞ்சநெஞ்சைப் பிளக்குமிது பொய்யல்ல வுலகினில்
வசனந் தானே.

**பொழிப்:** தன்னைச் சரணம் என்றடைந்த தேவர்களைக் காக்கச் சரவணப் பொய்கையில் அசுரனை அழித்துத் தேவர்களைப் பாதுகாத்தான் முருகப்பெருமான். வஞ்சம் நெஞ்சைப் பிளக்கும் என்பது பழமொழி.

**அ.பொ:** புரப்பது - காப்பது; மஞ்சன் - மைந்தன்; வேள் - முருகன்; கிரவுஞ்சம் - ஒரு மலை; சரணம் - பாதம். (௫)

## இராமர் கதை

310. அரியோனைக் கௌசிகன்பால் விடமலைத்தான் றசரதன்விட்
டதற் கிலாபங்
கரியோன்றா னதிகசௌந் தரியனுக்குந் தனுவினுக்குங்
கமலத் தார்க்கு
முரியோனா கியமறைதேர் முனியன்றோ செயங்கொண்டா
ருலகந் தன்னிற்
பெரியோரைத் துணைக்கொளென்ற ஔவைவாக்கி யத்திலொன்றும்
பிசகி ராதே.

**பொழிப்:** இராமனைக் கௌசிக முனிவனுடன் அனுப்பத் தசரதன் தயங்கினான். பின் அவனுடன் அனுப்பப்பட்ட இராமன் பல அஸ்திரங்களும் திருமகளாகிய சீதையும் கிடைக்கப் பெற்றான். பெரியாரைத் துணைக்கொள் என்பது பழமொழி.

**அ.பொ:** மலைத்தான் - தடுமாறித் தாமதித்தான். (௬)

## இராமர் வனவாசஞ்சென்ற கதை

311. பானுகுல ராமனுக்குப் பட்டாபி ஷேகமெனப்
பகர்ந்த போது
கூனியொரு சூத்திரத்தைக் கொடுக்கவவ னூரைவிட்ட
கொள்கை போல

மானணியுங் கரத்தாரே செயங்கொண்டா ரேபுவியின்
மகிமை சேர்ந்த
யானைநிழல் பார்க்கையிலே தவளைவந்து கலக்கிவிடு
மதுமெய் தானே.

**பொழிப்:** சூரிய குல இளவரசனான இராமன் முடிசூடாதவாறு கூனி ஒரு சூழ்ச்சி செய்து அவனை ஊரைவிட்டுக் காட்டுக்கு அனுப்பி விட்டாள். யானை நிழல் பார்க்கையிலே தவளை வந்து குளத்தைக் கலக்கி விடும் என்பது பழமொழி.

**அ.பொ:** பானு குலம் - சூரிய குலம்; சூத்திரம் - கயிறு; முடிச்சு - சிக்கல். **(எ)**

## இராவணன் கதை

312. தொடைக்கிலங்கு மார்பனிலக் குமணன்வில் வலுவென்றான்
சொன்ன பேச்சை
யடக்கிரா வணனாளை யோரம்பால் நான்வெல்வே
னறியென் றாற்போற்
சடைக்கிதழி மாலையணி செயங்கொண்டா ரேயெதிரி
தளத்துக் கஞ்சிப்
படைக்குப்போ காதவர்கள் நல்லசே வகரெனவும்
பகரு வாரே.

**பொழிப்:** இலக்குவனோடு போரிட்டு வந்த இந்திரசித்து இலக்குவன் வில் வலிமையைப் புகழ, இராவணன் நாளை நான் இலக்குவனை ஒரே அம்பினால் வெல்வேன் என்றான். படைக்குப் போகாதவர்கள் வீரம் பேசுவது வழக்கம் என்பது பழமொழி.

**அ.பொ:** வலு - வலிமை, இதழி - கொன்றை, சேவகர் - வீரர். **(அ)**

## வாலி சுக்கிரீபர் கதை

313. பேரிலுயர் வாலிசுக்கி ரீபரிரு வரும்பகையாய்ப்
பிரிய ராமர்
காரியத்துக் காகவந்து கடலடைத்துச் சிறைமீட்ட
கணக்குப் போலே
மேருவைவில் லாய்வளைத்த செயங்கொண்டா ரேயுலகில்
விளங்குஞ் சொல்லும்

**ஊரிரண்டு பட்டதென்றாற் கூத்தாடிக் கேலாப**
**முண்டென் பாரே.**

**பொழிப்:** வாலியும் சுக்கிரீவனும் பகையாய்ப் பிரியவே, வாலியைக் கொன்று சுக்கிரீவனை அரசன் ஆக்கி அவன் உதவியால் இராமன் கடலை அடைத்துச் சீதையைச் சிறை மீட்டுத் தன் காரியத்தைச் சாதித்துக் கொண்டான். ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கே லாபம் என்பது பழமொழி.

**அ.பொ:** கணக்கு - திட்டமிட்ட செயல். **(கூ)**

## மூதேவி சீதேவி பிறந்த கதை

314. **செல்லோடே யிணங்குகடற் றிருவுடன்மூத் தாள்பிறந்த**
**செய்தி பாரில்**
**நல்லோடைச் சலத்தில்சில பாசிபடர்ந் திடலுந்த**
**னஞ்ச யன்கை**
**வில்லோடே மோதியதோட் செயங்கொண்டா ரேவயலில்**
**விளைவுண் டான**
**நெல்லோடே பதருமசந் தனிலதரும் பிறந்திருக்கு**
**நேர்மை தானே.**

**பொழிப்:** மேகம் படியும் பாற்கடலில் இலக்குமியோடு மூதேவியும் பிறந்தாள். நல்ல ஓடை நீரில் சில பாசியும் படர்ந்திருக்கும். நெல்லோடு பதரும், ஆட்டோடு தாடியும் பிறந்திருக்கும் என்பது பழமொழி.

**அ.பொ:** செல் - மேகம்; அசம் - ஆடு; அதர் - ஆட்டின் கீழ்த்தாடையில் வீணே வளர்ந்திருக்கும் தசைத் திரள் (தாடி). **(கO)**

## சரஸ்வதி கம்பரை நீங்கிய கதை

315. **நங்கைகலை வாணிகம்ப ரிடத்திருக்கத் தண்டிகையி**
**னலமாய் வாழ்ந்தார்**
**அங்கவடான் புறம்போகக் கம்பரன்றே கூலிக்கோ**
**ராளா னாரே**
**செங்கையுகி ரால்வேதன் சிரத்திலொன்றைத் துணித்துவிட்ட**
**செயங்கொண் டாரே**

சுங்கமா றியபோது சுண்ணாம்புங் கொடுக்கார்தொல்
புவியு ளோரே.

**பொழிப்:** கலைமகள் கம்பரிடத்தில் இருந்தபோது, அவர் பல்லக்கு முதலியவற்றோடு நலமாக வாழ்ந்தார். அவள் பிரிந்தபோது கூலி வேலை செய்து வாழும் ஆள் ஆனார். சுங்கம் மாறியபோது சுண்ணாம்பும் கொடார் என்பது பழமொழி.

**அ.பொ:** தண்டிகை - பல்லக்கு; உகிர் - நகம்; சுங்கம் - வரி வாங்கும் உயர்வு.

**(கக)**

## வாமனன் அரிச்சந்திரன் கதை

316. தாப்பாய்வா மனன்கையின் மாவலிதண் ணீரைவிட்டுத்
தரணி தோற்றான்
வாய்ப்பாய கோசிகன்றன் வஞ்சனையா லரிச்சந்த்ரன்
மனைவி விற்றான்
தீப்போலே விழிகாட்டி மதனுடலை யெரித்துவிட்டு
செயங்கொண் டாரே
பார்ப்பார்க்கு வாய்ப்போக்கொண் ணாதாண்டிக் கதுதானும்
பகரொ ணாதே.

**பொழிப்:** வாமனன் கையில், வஞ்சனை அறியாது தானம் என நீர் வார்த்துக் கொடுத்து மாவலி உலகை இழந்தான். கௌசிகன் வஞ்சனையால் அரிச்சந்திரன் நாடு இழந்து மனைவியையும் விற்கும் நிலை ஏற்பட்டது. பார்ப்பாருக்கு வாயை விடக் கூடாது. ஆண்டிக்கு வாயை விடுவதாகச் சொல்லவும் கூடாது என்பது பழமொழி.

வாயை விடுவது - ஒன்று தருவதாக ஒத்துக் கொள்வது.

**அ.பொ:** தாப்பு - குறித்த நேரம்.

**(கஉ)**

## திருஞானசம்பந்த சுவாமிகள் கதை

317. பண்ணாருங் கவுணியர்வி பூதியினால் வழுதிசுரம்
பாதி தீர்த்தார்
எண்ணாயி ரஞ்சமணர் திருநீற்றை மறந்துகழு
வேறி மாய்ந்தார்
பெண்ணாளைச் சடையில்வைத்த செயங்கொண்டா ரேயுலகிற்
பெருமை சேர்ந்த

**வெண்ணீறே வினையகற்றுந் தரிப்பவர்க்குச் சிவகதியு**
**மேவுந் தானே.**

**பொழிப்:** கௌண்டின்ய கோத்திரத்தில் பிறந்த திருஞானசம்பந்தர் திருநீற்றினால் பாண்டியனுடைய சுரத்தில் பாதியைப் போக்கினார். திருநீற்றை மறந்த எண்ணாயிரர் சமணர் கழு ஏறி மாய்ந்தார். வெண்ணீறே வினையகற்றிச் சிவகதியும் தரும் என்பது பழமொழி.

**அ.பொ:** கவுணியர் - கௌண்டின்ய கோத்திரத்தில் பிறந்த திருஞானசம்பந்தர்.
**(கஙு)**

## துரியோதனன் கதை

318. **புள்ளாலே பொறியரவத் துசன்மடிந்தாற் றருமருக்குப்**
**பொரும்போ ருண்டோ**
**துள்ளாடத் திருப்பிவிட்டுப் பின்பவனைச் செயிக்கமிகத்**
**தொல்லை யாச்சே**
**வெள்ளானைக் கிறைபணியுஞ் செயங்கொண்டா ரேபகையை**
**மெலிவி யாமன்**
**முள்ளாலே யெடுப்பதைக்கோ டாலியா லெடுக்கவந்த**
**முறைமை யாமே.**

**பொழிப்:** கருடனோடு போரிட்டுக் கொண்டு துரியோதனன் தடுமாற, அவனை அப்படியே அழிய விட்டிருந்தால் பின் தொல்லை இராது. கருடனிடமிருந்து அவனைக் காப்பாற்றிவிட்டுப் பின் தருமன் அவனை வெல்வதற்கு அரும்பாடு பட்டான். முள்ளாலே எடுக்க வேண்டியதைக் கோடரியால் எடுக்க முடியுமா?

**அ.பொ:** புள் - கருடன்; துள்ளாட - தப்பிக்குமாறு. **(கச)**

## அகலிகை கதை

319. **பண்டகலி கையையிந்தி ரன்களவாய்த் தழுவிவெளிப்**
**படுஞ்சா லத்தைக்**
**கண்டுமுனி சகியாம லிருவரையுஞ் சபித்ததனாற்**
**கனவீ னந்தான்**
**இண்டைபுனை சடையாரே செயங்கொண்டா ரேபுவியி**
**லில்லாள் பேச்சைக்**
**கொண்டவன்றூற் றும்போதே கூரையொக்கத் தூற்றுமெனக்**
**கூறு வாரே.**

**பொழிப்:** அகலிகை இந்திரனோடு களவாய்க் கூடியதைக் கண்ட அவள் கணவன் கௌதவ முனி இருவரையும் சபிக்க, அகலிகை சாபம் பெற்றது பலராலும் பழிக்கப்பட்டது. கொண்டவனே தூற்றும் போது கூரையும் ஒக்கத் தூற்றும் என்பது பழமொழி.

**அ.பொ:** கன ஈனம் - மிகுந்த குறைபாடு. **(கரு)**

## தாரை கதை

320. **கடலீன்ற சந்திரனைக் குருமனைவி கலந்தணையக்
கருதி வாவென்
றிடவுமதி தொடலாமோ பின்வருவ தறியாம
லிணங்கி னானே
சடையிலங்கக் கங்கையணி செயங்கொண்டா ரேமாரன்
சரந்தாங் காமல்
உடைகுலைந்த பின்புசொந்த முறைமைகள்கொண் டாடுவாரே
வுலகு ளோரே.**

**பொழிப்:** சந்திரனைக் குரு மனைவி தாரை தழுவுவதற்கு அழைக்கச் சந்திரன் பின் விளைவு அறியாமல் அவளைத் தழுவுவதற்குச் சம்மதித்தான். ஆடை நழுவி விட்டால் உலகத்தவர் சொந்தம் கொண்டாடத் தொடங்குவர் என்பது பழமொழி.

**அ.பொ:** குருமனைவி - பிரகற்பதி மனைவி தாரை. **(கசா)**

## காந்தக்கற்கோட்டை அழிந்த கதை

321. **சுற்றுமதிற் கலிங்கசிந்து சூழசிக் காந்தமெனுந்
துருவந் தன்னை
யெத்தும்விலை மாதர்களாற் பண்டுகரு ணாகரன்வென்
றிட்டா னன்றோ
கைத்திகிரி யோன்பணியுஞ் செயங்கொண்டா ரேமிகுந்த
கருத்துண் டான
புத்திமான் பலவானா மென்றுலகோர் சொல்லுவதும்
பொருந்துந் தானே.**

**பொழிப்:** கலிங்க சிந்து என்ற மன்னனுக்குச் சொந்தமான ஊசி காந்தக் கோட்டையைக் கருணாகரன் விலை மாதர் உதவியால் வென்று கைப்பற்றினார். புத்திமான் பலவான் ஆவான் என்பது பழமொழி.

**அ.பொ:** திகிரி - சக்கராயுதம். **(கஎ)**

## தருமர் கதை

322. ஆளைப்போல் வருமிருகந் தனக்கும்வீ மனுக்கும்வழக்
கான நியாய
வேளைக்கா தரவுதர்மர் வீமனுடல் பாதிமிரு
கத்துக் கென்றார்
வேழப்போர் வையைத்தரித்த செயங்கொண்டா ரேசீனி
வெல்லம் போட்டு
நாழிப்பால் வார்த்தாலு நடுச்சொல்வா ரறிவுமிகு
நடுவுள் ளோரே.

**பொழிப்:** புருஷா மிருகத்திற்கும் வீமனுக்கும் வழக்கு ஏற்பட்டபோது, தருமர் வீமன் உடலில் பாதி அம்மிருகத்திற்கு உணவாக வேண்டுவது என்று தீர்ப்பு வழங்கினார். சீனி வெல்லாம் போட்டு நாழிப்பால் தந்தாலும் சான்றோர் நடுவுநிலை தவறார் என்பது பழமொழி.

**அ.பொ:** ஆளைப்போல் வரும் மிருகம் - புருஷா மிருகம். **(கஅ)**

## வாலி மறுசனன மெடுத்த கதை

323. விழியெதிர்நில் லாதொளித்து வாலியைமா லெய்துகொன்று
விடவே வாலி
வழியுடனே மறுசனன மெடுத்தரியை யெய்துபழி
வாங்கி னானே
அழலுமழு வணிகரத்தார் செயங்கொண்டார் நன்னாட்டி
லமரர்க் கேனும்
பழிகிழம தாகிவிட்டுப் போவதில்லை யென்றுலகோர்
பகரு வாரே.

**பொழிப்:** வாலியை இராமன் மறைந்து நின்று எய்தமையால், வாலி மறுபிறப்பில் இராமன் மறுபிறப்பான கண்ணனை அம்பெய்து பழிவாங்கினான். பழி கிழமது ஆகாது என்பது பழமொழி.

**அ.பொ:** மால் - திருமால், இராமன்; அரி - திருமால், கண்ணன். **(கக)**

## அம்பிகாபதி கதை

324. அரசன்மக ளாரையம்பி காபதிசேர்ந் ததனைமன்ன
னறிந்து நாட்சென்

றுருசிபிறந் தொருநாளத் தாட்சியுட னவனுயிரை
யொழித்தா னன்றோ
பரசணியுங் கரத்தாரே செயங்கொண்டா ரேமிகுந்த
பழக்க மேனுஞ்
சரசமிஞ்சி ரவிக்கையிற்கை போடவொண்ணா தென்றுலகோர்
சாற்று வாரே.

**பொழிப்:** அரசன் மகளை அம்பிகாபதி கூடியதை அறிந்த அரசன் ஒரு நாள் தக்க சாட்சியோடு அவன் உயிரைப் போக்கினான். மிகுந்த பழக்கமானாலும் ரவிக்கையில் கைபோடக்கூடாது என்பது பழமொழி.

**அ.பொ:** அத்தாட்சி - சான்று. **(உ0)**

## விபீஷணன் கதை

325. கும்பகர்ன னுக்கிளையோன் றமையனுயிர் நிலைகாட்டிக்
கொல்லென் றேநி
கும்பலைக்குந் துறவுசொல்லி யிலங்கைமன்னன் வலுவைமுற்றுங்
குறைத்தா னன்றோ
செம்பிநன்னாட் டவர்புகழுந் தென்னேம நாட்டில்வளர்
செயங்கொண் டாரே
தம்பிபிறக் கத்தரையா மென்றிடுஞ்சொல் லரக்கனுக்கே
தகுங்கண் டீரே.

**பொழிப்:** கும்பகருணன் தம்பி வீடணன் அண்ணனுடைய உயிர் நிலை இருக்கும் இடத்தை அறிவித்து, இந்திரசித்து நிகும்பலை யாகம் செய்யச் சென்றதை அறிவித்து, இராவணன் வலிமையைக் குறைத்தான். தம்பி பிறக்கத் தரையாம் என்பது பழமொழி. **(உக)**

## கண்ணன் மலையைக் குடையாக எடுத்த கதை

326. கல்லான மாரியையிந் திரனனுப்ப வாய்ப்பாடிக்
கண்ணர்க் கம்பு
வில்லேது மின்றியொரு கற்குடையால் வந்தமழை
விலக்கி னாரே
செல்லாருங் குழலிசௌந் தரியையிடப் பாகம்வைத்த
செயங்கொண் டாரே

வல்லார்க்குப் புல்லுமோ ராயுதமா மென்றுலகோர்
வழங்கு வாரே.

**பொழிப்:** இந்திரன் கல்மழையைப் பெய்விக்கக் கண்ணன் தடுப்பதற்கு அம்போ வில்லோ இல்லை எனினும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மழையைப் போக்கினான். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது பழமொழி.

**அ.பொ:** கற்குடை - கோவர்த்தனமலை. **(உஉ)**

## சூர்ப்பணகை மூக்கு, முலை அறுபட்ட கதை

327. உறுக்குதலு நயத்தலுமார் சூர்ப்பநகை யிலக்குமண
னுயர்தோள் சேரச்
சுறுக்கிற்சென் றெடுக்கவவ னிணங்காமல் மூக்குமுலை
துணித்தா னன்றோ
மறிக்கிசைந்த கரத்தாரே செயங்கொண்டா ரேமிகுந்த
மயலுண் டாகிச்
சிறுக்கிமன தறியாமற் செடிதனைக்கை யாற்றூக்கித்
திரிந்த வாறே.

**பொழிப்:** விருப்பமும் கோபமும் கொண்ட சூர்ப்பணகை இலக்குவனை அடைய விரைந்து சென்று அவனைத் தூக்க, அவன் அவள் செயலுக்குச் சம்மதியாமல் அவள் மூக்கினையும் முலைகளையும் துண்டித்தான். சிறுக்கி மனம் அறியாமல் செடிதனைக் கையில் தூக்கலாமா என்பது பழமொழி.

**அ.பொ:** உறுக்குதல் - கோபித்தல், நயத்தல் - விரும்புதல், சுறுக்கு - விரைவு, மறி - மான். **(உ௩)**

## சீதை கதை

328. தேன்மொழிச்சீ தையையரக்கன் சிறையெடுத்து வனத்தில் வைத்த
செயலா லுந்தான்
ஆனமட்டும் பார்க்கவவள் கற்பழியா தக்கினியி
லமிழ்ந்து மீண்டாள்
மான் விழியாள் சௌந்தரிபா காசெயங்கொண் டாரேநின்
வளஞ்சேர் நாட்டிற்
றான்பதிவி ரதையானாற் றேவடியாள் வீட்டினித்தந்
தரிக்க லாமே.

**பொழிப்:** சீதையை இராவணன் சிறைப்பிடித்து அசோக வனத்தில் வைத்த போதும் அவள் கற்பு அழியாமல் அக்கினியில் முழுகி மீண்டாள். பதிவிரதையானால் தேவடியாள் வீட்டிலும் தங்கலாம் என்பது பழமொழி. **(உ௮)**

## அருச்சுனன் கதை

329. **பண்டுகிணற் றினிலெறிந்த பௌத்திரத்தைத் துரோணர்சிலை**
**பாணம் போட்டுக்**
**கொண்டுவரக் கண்டதனஞ் சயனுமந்த விற்றொழில்கைக்**
**கொண்டா னன்றோ**
**வண்டுவிழி யுமைபாகா செயங்கொண்டா ரேயுமது**
**வளஞ்சேர் நாட்டில்**
**கண்டதைக்கற் கின்றவனே பண்டிதனா வானென்றே**
**கருது வாரே.**

**பொழிப்:** கிணற்றில் விழுந்த மோதிரத்தைத் துரோணர் பாணம் போட்டுக் கொண்டு வந்ததைப் பார்த்துக் கொண்டிருந்த அருச்சுனன், மீண்டும் ஒரு முறை மோதிரம் கிணற்றில் விழ, தானே அம்பு செலுத்தி அதனை வெளிக்கொணர்ந்தான். கண்டது கற்பவன் பண்டிதன் என்பது பழமொழி.

**அ.பொ:** பௌத்ரம் - மோதிரம், தனஞ்சயன் - அருச்சுனன். **(உ௯)**

## நளனைப் பாம்பு கடித்த கதை

330. **நண்ணுகழை வனமெரிய மேற்கிடந்த பாம்புசெத்தி**
**டாமற் றாங்கி**
**மண்ணில்விட நளன்கரத்தி லரவுகடித் தவனுடலை**
**வடுச்செய் தாற்போல்**
**வெண்ணிலவைச் சடையில்வைத்த செயங்கொண்டா ரேகுடியின்**
**மெலிவு தீரப்**
**புண்ணியத்துக் குழமெருதைப் பல்பிடித்துப் பார்ப்பரெனப்**
**புகலு வாரே.**

**பொழிப்:** காட்டில் மூங்கில் புதர் பற்றி எரிய அதில் கிடந்த பாம்பு, இறவாதபடி நளன் அதனைத் தூக்கி நல்ல தரையில் விட அஃது அவன் கையில் கடித்து

உடலை வடுப்படச் செய்தது. புண்ணியத்துக்கு உழும் எருதைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பார்களா? என்பது பழமொழி.

**அ.பொ:** கழை - மூங்கில். **(உசா)**

## ஓரரசன் பெண்சாதியின் கதை

331. **நயவேந்தன் பாரியொரு துன்மார்க்க னாசைகொண்டு**
**நடந்தே யாற்றில்**
**இயல்புடனே போய்ச்சலத்தி னின்றதைச்சிந் தாமணியி**
**லியம்பி னாரே**
**கயல்விழியா ருமைபாகா செயங்கொண்டா ரேதனது**
**கணவன் போலே**
**அயல்வீட்டான் மகனவனு மாபத்துக் குதவானென்**
**றறைகு வாரே.**

**பொழிப்:** அரசன் மனைவி தூர்த்தன் ஒருவனை விரும்பிப் பின் தொடர, இருவரும் இடையே ஓர் ஆற்றைக் கடக்க நேரிட, அவன் அரசன் மனைவியின் அணிகளைக் கவர்ந்து, அவளை நட்டாற்றில் விட்டு விட்டு ஓடி விட்டான். அயல் விட்டான் மகன் ஆபத்துக்கு உதவான் என்பது பழமொழி.

**அ.பொ:** பாரி - மனைவி. **(உஎ)**

## சேதுபதிராசர் மகள் கதை

332. **பெண்ணைவாழ்க் கைப்படுத்தச் சேதுமன்னன் குறித்தவிடம்**
**பிசகி மேலாங்**
**கண்ணர்பரி சோதனைக்குந் தப்பிவிதிப் படிமுடவன்**
**கைக்கொண் டானே**
**பண்ணுலவு புகழ்மேவுஞ் செயங்கொண்டா ரேமூவர்**
**பாரித் தாலும்**
**எண்ணெய்தனைத் துடைத்திடலா மெழுத்ததனைத் துடைப்பவர்க**
**ளில்லைத் தானே.**

**பொழிப்:** சேது மன்னன் தன் மகளை வாழ்க்கைப் படுத்தக் குறித்த சாதகம் சோதிடர் கணக்குத் தப்பி விதிப்படி அவளை ஒரு முடவனுக்கு மனைவியாக்கியது.

எண்ணையைத் துடைத்திடலாம் எழுத்தைத் துடைப்பவர் இல்லை என்பது பழமொழி.

**அ.பொ:** பிசகி - தவறி. **(உஅ)**

## குஷ்டரோகியின் கதை

333. **பண்டுகுட்ட ரோகியுந்தான் பாரதங்கேட் டாநோயும்**
**பஞ்சா யோடி**
**விண்டுவரு கையிற்கதையைப் பொய்யென்றான் மறைந்த குட்ட**
**மீறிற் றன்றோ**
**தண்டமிழுக் கருள்புரியுஞ் செயங்கொண்டா ரேபூதந்**
**தழும்பா தீசன்**
**உண்டென்ற பேருக்குண் டில்லையென்ற பேர்க்கில்லை**
**யுண்மை தானே.**

**பொழிப்:** ஒரு தொழுநோயாளன் பாரதம் கேட்க நோய் மறைந்து வந்தது. பாரதக்கதையைப் பொய் என்று அவன் கூற நோய் மீண்டும் வளரத் தொடங்கியது. ஈசன் உண்டென்ற பேருக்கு நன்மை உண்டு; இல்லை என்ற பேருக்கு நன்மை இல்லை என்பது பழமொழி.

**அ.பொ:** பூதம் தழும்பாது ஈசன் - பஞ்சபூதங்களும் தம் நிலையில் தவறாதபடி பாதுகாக்கும் ஈசன். **(உகூ)**

## மனுநீதிச்சோழன் கதை

334. **முன்னொருசோ ழன்புதல்வன் றேர்க்காலில் ஆன்கன்று**
**முறியக் கண்டே**
**பின்னதற்கீ டாய்த்தனது பிள்ளையைத் தேர்க் காலிலிட்டுப்**
**பெருமை சேர்ந்தான்**
**தென்னேம நகரில்வாழ் சௌந்தரநா யகிமகிழ்ந்த**
**செயங்கொண் டாரே**
**தன்னுயிர்போன் மன்னுயிரை யெண்ணுவர்தே வர்முனிவர்**
**தமக்கொப் பாரே.**

**பொழிப்:** பசுக்கன்றைத் தேர்க்காலால் கொன்ற பாவம் தீர மனுநீதிச் சோழன் தன் மகனைத் தன் தேர்க்காலில் இட்டு இறவாப் புகழ் பெற்றான். தன்னுயிர் போல் மன்னுயிரை எண்ணுபவர் தேவருக்கும் முனிவருக்கும் ஒப்பாவார் என்பது பழமொழி.

**(௩0)**

## இந்திரசித்தன் கதை

335. கண்ணார்படை தனைச்செயிக்க விந்த்ரசித்த னிகும்பலையைக்
கருதிச் செய்தே
நண்ணியயா கமுமுடியுந் தருணத்தி லிலக்குமண
னாசஞ் செய்தான்
மண்ணையுண்டோன் விழிபதத்தார் செயங்கொண்டா ரேகோல
மத்தூ டாடி
வெண்ணெய்படும் வேளையிலே தாழியுடைந் திடுதன்முன்செய்
வினையென் பாரே.

**பொழிப்:** பகைவரை வெல்ல இந்திரசித்து நிகும்பலையில் யாகம் செய்ய யாகம் முடியும் தருணத்தில் இலக்குவன் வந்து எதிர்த்து யாகத்தை அழித்தான். வெண்ணெய் படும் வேளையில் தாழி உடைந்த கதை என்பது பழமொழி.

(௩௧)

## இராவணன் கதை

336. அற்புதரா மன்கைவலு முதனாட்சண் டையிலரக்க
னறிந்தும் புத்தி
சொற்பமகோ தரன்பேச்சைக் கேட்டலவோ குலத்தோடுந்
துஞ்சி னானே
தற்பரச தாசிவனே செயங்கொண்டா ரேநல்யோ
சனையில் லாத
துற்புத்தி மந்திரியா லரசுக்கே யீனமென்ற
சொல்மெய் தானே.

**பொழிப்:** இராமன் வில் வலிமையை முதல்நாள் போரில் அறிந்தும் இராவணன், அறிவற்ற மகோதரன் பேச்சைக் கேட்டுப் பலரையும் போருக்கு அனுப்பி இறுதியில் குலத்தோடு அழிந்தான். துற்புத்தி மந்திரியால் அரசுக்கே ஈனம் என்பது பழமொழி.

(௩௨)

## சகரர்கள் கதை

337. ஆவலாய்ப் பரிதேடிக் கபிலரிஷி யிடத்திற்போ
யகம்பா ராட்டித்
தாவியவெஞ் சினத்தாலே யறுபதினா யிரம்பேர்கள்
ச்கராண் மாண்டார்

காவடருந் தென்னேமச் செயங்கொண்டா ரேபொறுமை
கருதிச் செய்யாக்
கோபமே பெரும்பாவ மதுசண்டா ளம்மெனவுங்
கூறு வாரே.

**பொழிப்:** அசுவமேத யாகக் குதிரையைத் தேடிக் கபில முனிவர் ஆசிரமம் அடைந்து, அவரை வெகுண்ட சகரபுத்திரர் அறுபதினாயிரம் பேரும் மாண்டனர். கோபம் பாவம் சண்டாளம் என்பது பழமொழி.

**அ.பொ:** அகம் பாராட்டி - தன்மானம் பேசி, கூற்று - இயமன், எமன். **(ஙங)**

## இராக்கதன் கதை

338. ஆற்றையணி தேநோக்கி யொருநிருதன் றவஞ்செய்ய
வவனுக் கோர்வாள்
கூற்றையுதைத் தோனனுப்பக் குறுக்கிற்சென் றிலக்குமணன்
கொண்டா னன்றோ
நாற்றிசையும் பணியவருஞ் செயங்கொண்டா ரேயனந்த
நாளா யொட்டிக்
காத்திருந்தோன் பெண்டுதனை நேற்றுவந்தோன் கைக்கொண்ட
கணக்குத் தானே.

**பொழிப்:** ஆற்றுக்கருகில் அசுரன் ஒருவன் சிவனைக் குறித்துத் தவம் செய்ய, அவனுக்குச் சிவபெருமான் அனுப்பிய வாளினை இலக்குவன் குறுக்கே சென்று தான் கவர்ந்து கொண்டான். காத்திருந்தவன் பெண்டினை நேற்று வந்தோன் கைக்கொண்டான் என்பது பழமொழி. **(ஙச)**

## பாரதக் கதை

339. விதுரன்வின் முறித்தான்கன் னனும்பாம்புக் கணைதிரும்ப
விட்டா னில்லை
யெதிர்படை தனைத்துரியோ தனன்செயிக்கப் படைத்தலைவர்
இணங்கி னாரே
மதுரையிலிந் தனம்வளையல் விற்றசெயங் கொண்டாரே
மருவார் போரில்
குதிரைநட வாவிடின்மா வீரர்பறந் திடுவாரோ
கொக்காய்த் தாமே.

**பொழிப்:** விதுரர் வில்லை முரித்தான். கர்ணன் பாம்புக் கணையை இரண்டாம் முறை விடவில்லை. பாண்டவர் படையை வெல்லப் படைத்தலைவர் முயன்றும் பயனில்லை. குதிரை நடக்கவில்லை என்றால் குதிரை வீரர் கொக்காப் பறந்திடுவாரோ? என்பது பழமொழி.

**அ.பொ:** இந்தனம் - விறகு. (௩௫)

## மணியடித்த கதை

340. **சாத்திரவே தியர்வதிட்டர் தருமரது சத்திரத்திற்**
**சலச்சோ றுண்ட**
**மாத்திரமே லட்சமறை யோர்புசித்தா லாடுமணி**
**மலிந்தா டிற்றே**
**நேத்திரத்தா லனங்கனுட றனையெரித்த செயங்கொண்டார்**
**நிமலர் நாட்டிற்**
**பாத்திரத்தை யறிந்துபிச்சை யிடவேண்டு மென்றுலகோர்**
**பகரு வாரே.**

**பொழிப்:** நூறாயிரம் பேர் அறச்சாலையில் உணவு உண்டால் அங்குள்ள மணி ஆடி ஓசை எழுப்பும். ஒரு நாள் வசிட்டர் தருமனுடைய அறச்சாலையில் நீர் ஊற்றிய பழைய உணவை உண்ண அந்த மணி அடித்தது. பாத்திரம் அறிந்து பிச்சையிடுக என்பது பழமொழி. (௩௬)

## கிருட்டிணன் தருமரைப் பொய்சொல்வித்த கதை

341. **அன்பான தருமர்அசு வத்தாமா வெனும்யானை**
**யமரில் வீழ**
**வன்பான புயவசுவத் தாமர்பட்டா ரெனப்பிசகி**
**வழுத்த லாச்சே**
**முன்புஆத வன்னெயிற்றைப் பறித்தெறிந்த செயங்கொண்டார்**
**முதல்வர் நாட்டிற்**
**றன்பானை தனைச்சாயப் பிடிப்பதுண்டோ வெவருமென்று**
**சாற்று வாரே.**

**பொழிப்:** அசுவத்தாமா என்ற யானை போர்க்களத்தில் இறக்க, தருமன் அசுவத்தாமா இறந்தான் என்று சற்று மாற்றிச் சொன்ன பொய் உலகப் பிரசித்தம் ஆயிற்று. தன் பானையைச் சாய்த்துப் பிடித்தல் ஆகாது.

**அ.பொ:** எயிறு - பல், ஆதவன் - சூரியன். (௩௭)

## பஞ்சபாண்டவர்கள் போர்க்குச் சென்ற கதை

342. மன்னர்துரோ ணரையோணான் கொடுபோயிற் றென்றொரு சொல்
வழுத்தக் கேட்டே
பொன்னிரத மேறியம்பு வில்லெடுத்தை வருஞ்சமர்க்குப்
போனா ரன்றோ
நன்னயவே தன்சிரத்தி லொன்றுதுணித் திட்டசெயங்
கொண்டார் நாட்டிற்
சின்னப்பாம் பானாலும் பெரியகொம்பா லடியென்றே
செப்பு வாரே.

**பொழிப்:** துரோணரை ஒணான் கொண்டு போயிற்று என்று கேட்டுப் பாண்டவரும் கௌரவரும் அவரை மீட்கத் தேர் ஏறி வில் அம்புகளுடன் போனார்கள். சிறிய பாம்பானாலும் பெரிய தடியால் அடி என்பது பழமொழி.

(௩௮)

## அச்சுதவாணன் கதை

343. வேணியர னைப்பணியு மச்சுதவா ணக்குரிசில்
வெள்ளாண் மைச்சீர்
ஆணியவல் லமையான்மூ வேந்தரையுங் காவலில்வைத்
தவதி செய்தான்
பாணிமழு வணிசெயங்கொண்டா ரேயெத் தொழில்களுக்கும்
பழுதுண் டேபார்
காணியைநட் டுக்களத்தி னிற்பதுவே நன்மையெனக்
கருது வாரே.

**பொழிப்:** சிவபெருமானை வழிபடும் அச்சுதவாணன் என்ற வேளாளப் பிரபு மூவேந்தரையும் காவலில் வைத்தான். காணியை நட்டுக் களத்தில் நிற்பதுவே நன்மை என்பது பழமொழி. நெற்பயிரை நன்கு விளைவித்து நெல்லைக் குவித்ததால் மூவேந்தரும் அவனுக்குப் பணிந்தனர் என்பது.

**அ.பொ:** அவதி செய்தல் - துன்புறுத்தல். (௩௯)

## தக்கன் கதை

344. கயிலைத்தா னுவைப்போலே மறுசிவனை யுண்டுபண்ணக்
கருதித் தக்கன்
செயலற்றே செய்வேள்வி யுங்குலைந்து வேற்றுமுகஞ்
சேர்ந்தா னன்றோ

வயிலைப்போல் விழியுமைசேர் செயங்கொண்டா ரேயிந்த
வவனி மேலே
உயரத்தான் பறந்தாலு மூர்க்குருவி பருந்தாகா
துண்மை தானே.

**பொழிப்:** சிவபெருமானைப் போல மறு சிவபெருமானைப் படைக்கத் தக்கன் செய்த வேள்வி குலைய அவன் தன் தலையை இழந்து ஆட்டுத் தலையைப் பெற்றான். உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது என்பது பழமொழி.

**அ.பொ:** அயில் - வேல். **(சO)**

## தக்கன் மகத்தில் வந்த தேவர்கள் கதை

345. ஆணவத் தக்கன்மகத்தி லவியுணவந் திடுதேவ
ரவர்க ளெல்லா
நாணமொடு மானபங்க முற்றனரே வீரபத்திர
நாத ராலே
பாணிதனின் மழுவணிந்த செயங்கொண்டா ரேருசியும்
பசியும் பார்க்கு
மூணருந்தங் கருமமிழந் திடுவரென்ற பழமொழிதா
னுண்மை தானே.

**பொழிப்:** ஆணவம் மிக்க தக்கன் செய்த வேள்வியில் உணவு உண்ண வந்த தேவர்கள் வீரபத்திரரால் மானபங்கம் செய்யப்பட்டனர். ருசியும் பசியும் பார்க்கும் ஊணரும் தம் கருமம் இழந்திடுவர் என்பது பழமொழி.

**அ.பொ:** மகம் - வேள்வி, பாணி - கை, ஊணர் - சாப்பாட்டுச் சுவைஞர். **(சக)**

## இந்திரன் நளனைத் தூதுவிட்ட கதை

346. வனத்திறையிந் திரன்நளன்பாற் சென்றுனக்கு வருமான
மாதைத் தானென்
றனக்குவரும் படிபேசித் தமயந்தி தனையிணக்கித்
தாவென் றாற்போற்
சினக்குமர வணிந்தடியார் மனக்கவலை தீர்த்தருளுஞ்
செயங்கொண் டாரே
உனக்குமழை பெய்யுமிப்போதெனக் கிறவை நீர்தாவென்
றுரைத்த வாறே.

**பொழிப்:** இந்திரன், 'நீ மணக்க விரும்பும் தமயந்தியை எனக்கு மாலையிடுமாறு இணங்கச் செய்', என்று நளனை வேண்டினான். இது, உனக்கு மழை பெய்யும் எனக்கு இறைவை நீர் தா என்ற பழமொழியை நினைவு படுத்துகிறது.

**அ.பொ:** இறைவை நீர் - கிணற்றிலிருந்து இறைக்கும் நீர். (சஉ)

## பிரமனைச் சிவன் சபித்த கதை

347. **கஞ்சனுக்குப் புவியிற்கோ யிலுட்பூசை யில்லையெனக்**
**கடிந்தீர் மீட்டுங்**
**கெஞ்சினபின் மறையவர்செய் பூசையெல்லா முனக்கெனவே**
**கிருபை செய்தீர்**
**பஞ்சுவனுக் காய்மாறி நடித்தசெயங் கொண்டாரே**
**பகைவ ரைத்தான்**
**அஞ்சிநல்ல வார்த்தைசொன்னாற் பொல்லாப்பு வருவதில்லை**
**யவனி யோர்க்கே.**

**பொழிப்:** சிவபெருமான் பிரமனுக்குக் கோயிலுள் பூசையில்லை என்று சபித்தான். பின் அந்தணர் தம் இல்லத்தில் செய்யும் பூசை எல்லாம் பிரமனையே சேரும் என்று வரம் அளித்தான். பகைவரை அஞ்சி நல்ல வார்த்தை சொன்னால் பொல்லாப்பு வருவதில்லை என்பது பழமொழி.

**அ.பொ:** பஞ்சவன் - பாண்டியன், கஞ்சன் - பிரமன். (சஙு)

## அகலிகை சாபந்தீர்ந்த கதை

348. **முனியகலி கையைக்கல்லாச் சபித்துநிவிர்த் திக்கும்வழி**
**முறைசொன் னாற்போன்**
**மனுவேந்த னாகியரி நடந்திடுந்தாட் படப்பழைய**
**வடிவா னாளே**
**தனவானைத் தோழனென்ற செயங்கொண்டா ரெயெவர்க்குந்**
**தலைநாள் செய்த**
**வுனுபோகந் தொலைந்திடும்போ தவிழ்தமுஞ்சித் திக்குமென்ப**
**ரவனி யோரே.**

**பொழிப்:** கௌதமன் அகலிகையைக் கல்லாகுமாறு சபித்துச் சாப விமோசனம் கூற, இராமன் அங்கு வந்தபோது அவன் பாதத் தூளி பட அவள் பழைய

வடிவினள் ஆனாள். அனுபோகம் தொலைந்திடும்போது அமிர்தமும் சித்திக்கும் என்பது பழமொழி.

**அ.பொ:** தனவான் - குபேரன். **(சச)**

## விபீடணன் மகுடம்பெற்ற கதை

349. **வளமையுள்ள ராமனைவி பீஷணன்சேர்ந் திலங்கைமணி**
**மகுடம் பெற்றான்**
**தளரரக்க ருடனிருந்தே அமர்க்குவந்தா லவனையொக்கச்**
**சரிப்பா ரன்றோ**
**களபமணி தனத்திசௌந் தரிபாகர் செயங்கொண்டார்**
**கனத்த நாட்டின்**
**நிழலருமை வெய்யிலிற்போ னாற்றெரியு மென்பதுவு**
**நிசங்கண் டீரே.**

**பொழிப்:** இராமனை விபீடணன் அடைந்து இலங்கை முடியைப் பெற்றான். அவன் இராவணனுடன் இருந்தால் போரில் இராவணனைப் போல இறந்து போயிருப்பான். நிழலின் அருமை வெயிலில் போனால் தெரியும்.

**அ.பொ:** மகுடம் - முடி. **(சரு)**

## அரிச்சந்திரன் கதை

350. **செப்புமரிச் சந்திரன்றா னீசனுக்கே விலையாகிச்**
**சென்றே நெஞ்ச**
**மொப்பிமயா னமுங்காத்த நிமித்தியத்தால் இழுக்கவனுக்**
**கொருபோ துண்டோ**
**மைப்படியுங் கண்ணிசௌந் தரிபாகர் செயங்கொண்டார்**
**வளஞ்சேர் நாட்டிற்**
**குப்பையிலே கிடந்தாலுங் குன்றிமணி நிறத்திலொன்றுங்**
**குறைவு றாதே.**

**பொழிப்:** அரிச்சந்திரன் புலையனுக்கு அடிமையாகி மனம் பொருந்தி சுடுகாட்டைப் பாதுகாத்த செயலால் அவன் பெருமைக்கு ஒரு குறைவும் ஏற்படவில்லை. குப்பையிலே கிடந்தாலும் குன்றி மணி நிறம் மாறாது என்பது பழமொழி.

**அ.பொ:** இழுக்கு - இழிவு. **(சசா)**

## அமராவதி யென்பவள் கதை

351. வணக்கமுடன் சித்திரபுத் திரரையம ராவதிதான்
வணங்கிப் பொங்கல்
இணக்கமுடன் செய்யாத நியமத்தா லவட்குமெத்த
விடரெய் திற்றே
யணைக்கடலின் மேனடந்த முகில்பணியுஞ் செயங்கொண்டா
ரருள்சேர் நாட்டிற்
கணக்கனுக்குக் கைக்கூலி கட்டியன்றோ குடியிருக்கக்
கடனென் பாரே.

**பொழிப்:** சித்திரபுத்திரனை வணங்கி அமராவதி பொங்கல் படைக்காததால் அவளுக்கு மிகவும் துன்பங்கள் உண்டாயின. கணக்கனுக்குக் கைக்கூலி கட்டியன்றோ குடியிருக்க வேண்டும் என்பது பழமொழி.

**அ.பொ:** நியமம் - விரதம், கைக்கூலி - லஞ்சம். **(சஎ)**

## விடத்திற்குப்பயந்த விஷ்ணு கதை

352. கடியவிடம் பாற்கடலிற் றோன்றியபோ தருகிருந்த
காகுத் தன்றா
னெடியபயத் துடனீங்கி யுங்கருநி றம்படைத்தா
னிசம தன்றோ
கொடியிடைப்பெண் சௌந்தரியா ளிடப்பாகர் செயங்கொண்டார்
குலவு நாட்டிற்
படைதனக்கோ டிப்பிழைப்பார் பஞ்சமதற் கிருந்துபிழைப்
பாரென் பாரே.

**பொழிப்:** திருப்பாற்கடலைக் கடைந்தபோது கொடியவிடம் தோன்ற அவ்விடம் தாக்கியதால் திருமால் கருநிறத்தன் ஆயினான். படை தனக்கு ஓடிப் பிழைப்பார் பஞ்சத்தில் இருந்து பிழைப்பார் என்பது பழமொழி.

**அ.பொ:** காகுத்தன் - ககுத்தன் மரபில் தோன்றிய இரமன் ஆகும் திருமால். **(சஅ)**

## பஞ்சதந்திரக் கதை

353. திறமுளசஞ் சீவகனைத் தமரகன்கண் டழைத்துவந்து
சிங்கத் துக்கு

மிறையுளமந் திரியாக வைத்தபின்சிங் கந்தனக்கு
மிடபத் துக்குங்
குறைவில்பகை யுண்டுபண்ணி விட்டதன்றோ செயங்கொண்டார்
குலவு நாட்டில்
உறவுதனைப் போலிருந்துங் குளவியைப்போற் கொட்டுவர்க
ளுண்டென் பாரே.

**பொழிப்:** சஞ்சீவகன் என்ற எருதைத் தமரகன் என்ற நரி சிங்கத்துக்கு மந்திரியாக அமைத்துப் பின் எருதுக்கும் சிங்கத்துக்கும் பகை உண்டாக்கி விட்டது. சிலர் உறவுபோல் இருந்து குளவி போலக் கொட்டுவார் என்பது பழமொழி. **(சகூ)**

## அறிவீனன் அரசன்மேற்பாடிய கதை

354. அறம்பெற்ற சோழனைமண் ணுண்ணிமரப் பாவையென்
றதிலோர் பாட்டாய்
வெறும்பித்தன் சொல்லவந்த வேந்தர்சபை யோர்கள்பொருள்
விளங்கச் சொன்னார்
திறம்பெற்ற பரிசுகொண்டான் றென்னேம நகரில்வளர்
செயங்கொண் டாரே
யெறும்புக்குந் தன்கையா லெண்சாண்மெய் யென்றுலகோ
ரியம்பி னாரே.

**பொழிப்:** சோழ மன்னனை ஒரு முட்டாள் மண்ணுணி மாப்பிள்ளையை என்று பாட, அவையில் இருந்த புலவர்கள் அச்சொற்றொடர் மிகச் சிறந்தது என்று கூறி அதன் பொருளை விளக்கினர். எறும்புக்கும் தன் கையால் எண் சாண் என்பது பழமொழி. **(ருO)**

## கர்னமகாராஜன் கிண்ணங்கொடுத்த கதை

355. வாழிரவி சுதன்வலக்கை யாலெடுத்துக் கொடுக்குமுன்னே
மனம்வே றாமென்று
ஏறழைமறை யோர்க்கிடக்கை யாலேயெண் ணெய்க்கிண்ண
மீந்தா னன்றோ
ஆழிதனிற் பள்ளிகொள்ளு மால்பணியும் பொற்பாதச்
செயங்கொண் டாரே
நாளையென்பார் கொடைதனக்குச் சடுதியிலே யில்லையென்ற
னலம தாமே.

**பொழிப்:** கர்ணன் இடப்புறம் இருந்த பொற்கிண்ணத்தை வலைக்கையால் எடுத்துக் கொடுக்கு முன்னே மனம் மாறவும் கூடும் என்று அந்த எண்ணெய்க் கிண்ணத்தை அந்தணனுக்கு இடக்கையாலேயே ஈந்தான். நாளைத் தருவேன் என்பதை விட இல்லை என்பதே நலம் என்பது பழமொழி.

**அ.பொ:** இரவி சுதன் - சூரியன் மகனான கர்ணன். **(ருக)**

## விசுவாமித்திரன் வெற்றியடையாத கதை

**356.** **புகழரிச்சந் திரனிசவா னெனவதிஷ்டர் சொலவவனைப்**
**பொய்ய னாக்க**
**மிகவெகுண்டு சபதமிட்டே யானமட்டும் பார்த்தயர்ந்து**
**விசுவா மித்ரன்**
**செகமறிய மக்கனப்பட் டிருந்ததையா வருமறிவார்**
**செயங்கொண் டாரே**
**முகடுமுட்ட வருகோபந் துரும்புகுத்த வேலையென**
**மொழிந்த வாறே.**

**பொழிப்:** அரிச்சந்திரன் உண்மை பேசுபவன் என்று வசிட்டர் சொல்ல, அவனைப் பொய் பேச வைக்கப் பெரிதும் முயன்று விசுவாமித்திரர் அவமானப் பட்டதனை உலகம் அறியும். முகடு முட்ட வரும் கோபம் காலில் துரும்பு குத்தின நேரத்தில் நீங்கிவிடும் என்பது பழமொழி.

**அ.பொ:** மக்னம் - அவமானம்; வேலை - வேளை. **(ருஉ)**

## சுப்பிரமணியர் கதை

**357.** **அண்ணலருள் சரவணவேள் புனக்குறப்பெண் வெயிலினிற்கு**
**மவதி பார்த்துத்**
**தண்ணுலவு வேங்கைமர நிழலாலன் றவள்வருத்தந்**
**தனைத்தீர்த் தாரே**
**விண்ணவர்க்காய் விடத்தையுண்ட செயங்கொண்டா ரேகனந்தான்**
**விளங்கு நாட்டிற்**
**பெண்ணென்றாற் பேயுமொக்க விரங்குமென வுலகுள்ளோர்**
**பேசு வாரே.**

**பொழிப்:** முருகன் வள்ளி வெயிலில் நிற்பதனைப் பார்த்து அவளுக்கு நிழல் தருவதற்குத் தான் வேங்கை மரமாக மாறிவிட்டான். பெண் என்றால் பேயும் இரங்கும் என்பது பழமொழி. **(ருங)**

## கிருட்டினன் ஐவரைக்காத்த கதை

358. வள்ளல்கன்னன் கைநாகக் கணைப்புலன்மா லறிந்தவன்றன்
மாதா வைப்போய்ப்
பிள்ளைகண்மே னாகமொரு தரம்விடப்பா னிறுத்தெனவும்
பேசச் சொல்லித்
தெள்ளியபஞ் சவருயிரைக் காத்தார்தென் னேமநகர்ச்
செயங்கொண் டாரே
வெள்ளம்வரும் முன்னணையைக் கோலி வைப்போர் காரியங்கள்
மிகநன் றாமே.

**பொழிப்:** கர்ணனுடைய நாகாத்திரத்தின் வலிமையை அறிந்த கண்ணன் அவன் தாய் குந்தி என்பதனை அவனிடம் தெரிவித்து, அவனை அந்த அத்திரத்தை ஒரு தடவைக்கு மேல் மறு தடவை விடாதவாறு செய்து பாண்டவரைக் காத்தான். 'வெள்ளம் வருமுன் அணை கோலி வை' என்பது பழமொழி. **(ருச)**

## இரணியன் கதை

359. ஆச்சரிய விரணியன்அட் டாக்கரத்தை யிகழ்ந்தார்பொல்
லாப்பெண் ணாமற்
கூச்சமறத் தள்ளியிர ணியநமா வென்றதினாற்
குலைந்தான் றேகம்
பேச்சிமுலை யுண்டமுகில் பணிசெயங்கொண் டாரேநீர்
பெருகாற் றுக்கு
நீச்சறியா மைந்தரைவெள் ளங்கொண்டு போமென்ற
னிசங்கண் டீரே.

**பொழிப்:** இரணியன் எட்டெழுத்து மந்திரத்தை இகழ்ந்து 'ஹிரண்யாய நம' என்று முழங்கியதனால் அழிந்தான். நீச்சறியாத வரை வெள்ளம் கொண்டு போம் என்பது பழமொழி.

**அ.பொ:** பொல்லாப்பு - தவறு. **(ருரு)**

## உருக்குமாங்கதன் கதை

360. நன்னிலத்தி லுருக்குமாங் கதராச னொருவிரத
நடாத்தி னானென்று

அந்நகரு மவ்விரதந் தொடங்கியதால் யமனவரை
யணுகக் கூடாது
என்னயம தண்டனைசே ராதிருந்தார் செயங்கொண்டா
ரிலகு நாட்டின்
மன்னவனெப் படியோமன் னுயிருமந்தப் படியெனவும்
வழுத்து வாரே.

**பொழிப்:** உருக்குமாங்கதன் ஏகாதசி விரதம் இருந்ததனை அந்நாட்டு மக்கள் அனைவரும் பின்பற்றியதால் காலன் அவரை அணுகவில்லை. மன்னவன் எப்படியோ மன்னுயிரும் அப்படியே என்பது பழமொழி. **(ருசா)**

## நளன் கதை

361. அடவிசென்று நகரிழந்து வறுமைதங்கி யுடன்மெலிந்தே
யம்மா னூர்வந்
திடவுமம்மா னேவலினா லமைச்சரழைத் திடவருவ
திலைபோ வென்ற
திடநளனை மாமனெதிர் கொண்டழைக்கச் சம்மதித்தான்
செயங்கொண் டாரே
கடுகுசிறுத் தாலுமென்ன காரம்போ காதெனவுங்
கழறு வாரே.

**பொழிப்:** நாடு நகரங்களை இழந்து காட்டுக்குப் போய் வறுமையில் வாடி உடல் மெலிந்து மாமனார் ஊருக்கு வந்த நளன், அரசன் ஏவலால் அமைச்சர் அழைத்திடச் செல்லாமல் மாமனார் எதிர் கொண்டழைக்கவே சென்றான். கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்பது பழமொழி. **(ருஎ)**

## சூரபத்மன் கதை

362. பூதலமும் பொன்னுலகு மேவல்கொண்ட சூரனரன்
புதல்வற் கஞ்சிச்
சூதமர மாயொளித்துக் கடைசியிற்செவ் வேள்கரத்திற்
றுசமா னானே
தாதவிழ்பூங் கொன்றையணி செயங்கொண்டா ரேசெடியைத்
தாண்டித் தாவிக்
காதமோ டினுமுயற்குக் கைத்தூரக்கென் றுலகிலுள்ளோர்
கழறு வாரே.

**பொழிப்:** மண்ணுலகும் விண்ணுலகும் ஆண்ட சூரன் சிவபெருமான் புதல்வன் முருகப் பெருமானுக்கு அஞ்சி மாமரமாய் ஒளிந்து, இறுதியில் அவன் கையிலுள்ள சேவற்கொடி ஆயினான். தாண்டித் தாவிக் காதம் ஓடினும் முயலுக்குக் கைத்தூக்கு என்பது பழமொழி.

**அ.பொ:** சூதம் - மாமரம்; துசமானான் - அழிந்துவிட்டான். **(ருஅ)**

## பொய்த்தவ வொழுக்கத்தோர் கதை

363. **பூமிதனிற் சிலர்நீறிட் டிருகரமுங் குவித்திருகண்**
**பொத்திக் கொண்டே**
**காமியர்கண் மேற்பொருண்மேன் மனங்கிடக்க வாயிலர**
**கரவென் றாற்போ**
**னேமியணி வோன்றேட வரியபதச் செயங்கொண்டார்**
**நிமலர் நாட்டின்**
**மாமிதலை மேற்கையும் வேலிபுறத் தினிற்கண்ணும்**
**வைத்த வாறே.**

**பொழிப்:** பூமியில் சிலர் திருநீறு அணிந்து, கண்களை மூடி இருகரம் குவித்து அர, அர என்று கோஷமிட்டும் மனம் பொருள் மேலும் மகளிர் மேலும் ஈடுபட இருப்பது மாமி தலைமேல் கை வேலிப்புறத்தினில் கண் என்ற பழமொழியை நினைவுறுத்துகிறது.

**அ.பொ:** காமியர் - விரும்பத் தக்க மகளிர். **(ருகூ)**

## திருவிளையாடற் புராணக் கதை

364. **பெண்ணிறக்கத் தொங்கலம்பால் வில்வேட னடுத்துவரப்**
**பெண்ணுக் காளன்**
**கொன்றதுநீ யென்றிழுக்க மதுரையிற்சுந் தரர்நியாயங்**
**கொடுத்துத் தீர்த்தா**
**ரண்ணலர னேசெயங்கொண் டாரேகா தாரக்கேட்**
**டதும்பொய் யாகுங்**
**கண்ணாரக் கண்டதும்பொய் தீர்க்கவிசா ரிப்பதுமெய்**
**காணுந் தானே.**

**பொழிப்:** தொங்கிய அம்பு காற்றில் மரத்திலிருந்து விலகி விழ, அம்பு பட்டுப் பெண் இறந்து பட, பெண்ணின் கணவன் பக்கத்தில் வில்லுடனிருந்த வேடனைக்

குற்றவாளியாக்கச் சோமசுந்தரப் பெருமான் நியாயம் வழங்கினான். இதனால் கேட்டதும் பொய் கண்டதும் பொய் தீர்க்கமாக விசாரிப்பது மெய் என்ற பழமொழி மெய்ப்பிக்கப் படுகிறது. **(சுO)**

## துரியோதனன் அரசிழந்த கதை

365. **கூறுமர வக்கொடியோன் பாண்டவருக் கைந்நிலமுங்
கொடுக்கே னென்று
வீறுசொன்னான் சுடக்கொடுத்த பின்னுயிரோ டுலகமுற்றும்
விட்டா னன்றோ
நீறணிமெய்ச் செயங்கொண்டா ரேயாற்றோ டேமுடர்
நேர்போ னாலும்
போறதல்லா லோடக்கா ரனுக்கரைக்கா சுங்கொடுக்கப்
பொருந்தி டாரே.**

**பொழிப்:** ஐந்து குழி நிலமும் பாண்டவருக்குக் கொடுக்க மறுத்த துரியோதனன், போரில் சுடச்சுடத் துயரங் கொடுத்த பின் உயிரையும் நாட்டையும் விட்டான். ஆற்றோடு போனாலும் போவேன் ஓடக்காரனுக்கு அரைக்காசு கொடேன் என்பது பழமொழி. போகிறதல்லா லென்பது போறதல்லாலென வந்துள்ளது. **(சுக)**

## விநாயகர் மாங்கனி பெற்ற கதை

366. **வேய்க்குமகன் மூத்தபிள்ளை கரத்தினின்மாங் கனிகொடுக்க
வெகுண்டு வேலர்
வாய்க்கினிய கனிநமக்குத் தரவிலென்று கோபமுடன்
மலைமேற் சென்றார்
பாக்கியஞ்செந் தமிழ்க்குதவுஞ் செயங்கொண்டா ரேவிதைத்த
பழனந் தோறுந்
தாய்க்குவிளைந் தாலுமென்ன தனக்குவிளைந் திடவேண்டித்
தவஞ்செய் வாரே.**

**பொழிப்:** சிவபெருமான் மூத்த மகன் விநாயகன் கையில் மாங்**கனி**யைக் கொடுக்க முருகன் கோபம் கொண்டு மலைமேல் தங்கச் சென்று விட்டான். தாய்க்கு விளைந்தாலும் தமக்கு விளையத் தவம் செய்வாரே என்பது பழமொழி. **(சுஉ)**

## சீவகன் கதை

367. பெலமுற்ற சிங்கமொரு கன்றீனும் படியெழுதிப்
பின்னே செம்பொன்
விலைபெற்ற கரியையரிக் கன்றுதுள்ளிப் பாய்ந்தகதை
மெய்யா மென்றே
சிலைபெற்ற கூளேந்த்ரன் விறலிதனில் விளங்குதன்றோ
செயங்கொண் டாரே
குலவித்தை கல்லாமற் பாதிவரு மென்றுலகோர்
கூறு வாரே.

**பொழிப்:** கூளேந்திரன் விறலி விடு தூதில் ஓவியத்தில் சிங்கம் கன்று ஈனுவது போல வரையப் பக்கத்தில் யானையின் படம் வரைய, ஓவியத்திலிருந்த சிங்கக்குட்டி யானை மேல் பாய்ந்ததாம். குலவிச்சை கல்லாமல் பாகம் படும் என்பது பழமொழி. (சாஙு)

## கொக்கு மீன்களை மடித்துத் தானும் மடிந்த கதை

368. தண்ணார்மீன் களைச்சருவ சீவதயா பரபகந்தான்
தயவாய்ப் பேசி
யெண்ணாமற் சிதைத்தபழி தனக்கலவன் பகக்கழுத்தை
யிடறிற் றன்றே
பண்ணார்சிந் தாமணியில் விழுந்ததன்றோ செயங்கொண்டார்
பரவு நாட்டிற்
கொன்றாரைக் கொல்லுமல்லாற் கொலைவிடா தென்றுலகோர்
கூறு வாரே.

**பொழிப்:** சர்வஜீவ தயாபரக் கொக்கு மீன்களை இனிமையாகப் பேசி, ஏமாற்றிக் கொன்ற பழியால் நண்டு அதன் கழுத்தை நெரித்துக் கொன்றது. கொலை கொன்னாரைக் கொல்லாமல் விடாது என்பது பழமொழி.

**அ.பொ:** பகம் - கொக்கு, அலவன் - நண்டு. (சாசு)

## வாமனவதாரக் கதை

369. உலகமெல்லா முடல்சிறுத்துஞ் சிறியவா மனனளந்தா
னொருபா தத்தால்

அலகையின்காத் திரங்களென்ன வாலகிருஷ்ணன் பாலருந்தி
யவளை மாய்த்தான்
சிலைநுதலாள் சௌந்தரிநா யகியையிடப் பாகம்வைத்த
செயங்கொண் டாரே
மலைபெரிதா னாலுமென்ன சிற்றுளிக்குப் பயஞ்சனிக்கும்
வண்மை தானே.

**பொழிப்:** உடல் சிறுத்த வாமனன் உலகை ஓரடியால் அளந்தான். கண்ணன் பாலகனாய்ப் பூதனை என்ற பெரிய உருவமுடைய பேயைக் கொன்றான். பெரிய மலை சிற்றுளிக்கு அஞ்சும் என்பது பழமொழி.

**அ.பொ:** அலகை - பூதனை என்னும் பேய். **(௩௬௫)**

## புட்கரன் நளனை வரவழைத்த கதை

370. காவலன்புட் கரனளனைச் சூதாட வரவழைத்த
கபடங் கண்டே
மேவியசூ தாடாமற் றள்ளிவிட்டாற் சனிநளனை
வினைசெய் வானோ?
வாவிதிகழ் தென்னேமச் செயங்கொண்டா ரேமிகுந்த
வளஞ்சேர் நாட்டில்
நாவிதன்செய் தியையறிந்து குடுமியைப்பத் திரப்படுத்த
னலமென் பாரே.

**பொழிப்:** புட்கரன் நளனைச் சூதாட அழைத்த வஞ்சனையை உணர்ந்து நளன் சூதாடாமல் இருந்திருந்தால் சனி நளனை என்ன செய்திருக்க முடியும்? நாவிதன் செய்தியை அறிந்து குடுமியைப் பத்திரப்படுத்தல் நலம் என்பது பழமொழி.

**(௩௬௬)**

## குமுண ராசன் கதை

371. சிம்மாசி னன்குமுணன் சிரம்போலே விழிமூக்குச்
செவிவாய் செய்து
சம்மாரம் பண்ணிரத்தச் சோரிசிந்தக் கொடுத்ததுவுந்
தட்டா னன்றோ
பெம்மானே தென்னேமச் செயங்கொண்டா ரேமலையைப்
பிரட்டுங் கையான்

கம்மாளன் பசுவைத்தான் காதறுத்துக் கொள்ளுமெனக்
கழறு வாரே.

**பொழிப்:** அரசனாகிய இளங்குமணன் காணுமாறு குமணன் தலை போலவும், அது இரத்தம் சிந்துவது போலவும் செய்து கொடுத்தவன் ஒரு தட்டானே. கம்மாளன் பசுவையும் காதறுத்துக் கொள்ளும் என்பது பழமொழி. **(சாஎ)**

## ஆமை வாயாற் கெட்ட கதை

372. கொடியையிரண் டோதிமங்கௌ விப்பறக்க நடுக்கூர்மங்
குலவிச் செல்கா
னொடியிலொரு செய்திசொல வாய்திறந்து ஆமையும்விழுந்து
நொறுங்கிற் றன்றே
வடிவுளதந் திரக்கதையு முண்டுசெயங் கொண்டார்வாழ்
வளஞ்சேர் நாட்டி
னெடுங்கிணறும் வாயாலே தூறுமென்றே சொல்லுவர்க
ணிசங்கண் டீரே.

**பொழிப்:** ஒரு கொடியை இரண்டு அன்னங்கள் இரண்டு முனையும் கௌவிப் பறக்க, நடுவே கொடியைக் கௌவிக் கொண்டு சென்ற ஆமை ஒரு செய்தி சொல்ல வாயைத் திறக்கக் கீழே விழுந்து நொறுங்கி இறந்தது. நெடுங்கிணறும் வாயாலே தூறும் என்பது பழமொழி.

**அ.பொ:** ஓதிமம் - அன்னம், கூர்மம் - ஆமை. **(சாஅ)**

## திரிசங்கு ராசன் கதை

373. நம்புகுரு வதிஷ்டர்பகை மிகுந்திருக்கும் போதுதிரிச்
சங்கு ராசன்
வம்புரைத்த கோசிகராற் சொர்க்கமதி லேறியதான்
மகிமை யுண்டோ
சம்புமகா தேவசெயங் கொண்டாரே யெதிராளி
தனுவா லெய்த
வம்புவிழக் கையிலிழை கட்டினான் மெய்யினிற்புண்
ணாறி டாதே.

**பொழிப்:** தன் குல குருவைப் பகைத்துக் கொண்டு திரிசங்கு கோசிகர் உதவியால் சுவர்க்கத்தில் ஏறியதால் பெருமை ஏற்பட்டதா? அம்பு விழக் கையில்

இழைக்கட்டினால் உடல்புண் ஆறாது என்பது பழமொழி. மார்புப் புண்ணுக்குக் கையில் மருந்திடுவதா என்ற கருத்துடைய பழமொழி.

**அ.பொ:** வம்பு - வீண் சொல், சேஷ்டை. **(௬௯)**

## சுக்கிரன் கண்ணிழந்த கதை

374. **கூச்சமற மாவலிபூ மியைக்கொடுக்க மால்வாங்கக்**
**குறுக்கே சுக்ரன்**
**பேச்சறியா மற்பேசிக் கண்ணிழப்பா னேனொதுங்கிப்**
**பிழைக்கொண் ணாதோ**
**வாச்சரியஞ் செயங்கொண்டா ரேயிலங்கா புரிராம**
**ராண்டா லென்ன**
**வேச்சிலரக் கர்களாண்டா லென்னென்று குரங்கந்நா**
**ளிருந்த தன்றே.**

**பொழிப்:** மாவலி பூமியைத் தானம் செய்ய, வாமனன் தானம் வாங்கக் குறுக்கே சுக்கிரன் வண்டு உருவில் சென்று தாரை வார்க்கும் கிண்டியின் துவாரத்தை மூட, வாமனன் துவாரத்தைத் தருப்பையால் கிளறச் சுக்கிரன் கண் இழந்தான். ஒதுங்கியிருந்தால் ஆபத்து இல்லை. இராமன் ஆண்டாலென்ன இராவணன் ஆண்டாலென்ன என்பது பழமொழி.

**அ.பொ:** ஏச்சு இல் அரக்கர் - பிறரால் இகழ்தல் இல்லாத அரக்கர். **(௭0)**

## மானமுள்ள மகாபுருடன் கதை

375. **நீரெடுத்தோர் கலசமதிற் கவசமுஞ்செய் தொருவன்வந்தா**
**னெடுநாள் கும்பம்**
**பாரில்விழுந் துடையவின்னு மொருகலச மென்மானம்**
**பார்க்கும் போது**
**சீரலவென் றழுதானென் றொருகதைசொல் வார்நேமச்**
**செயங்கொண் டாரே**
**யாரெனினு மானமிழந் துயிர்காப்ப தென்னவென்பா**
**ரவனி யோரே.**

**பொழிப்:** நாள்தோறும் கலசத்தில் நீர் எடுத்து அதனைக் கலசம் செய்து கொண்டு வருங்காலத்தில் ஒரு நாள் கலசம் கீழே விழுந்து உடைய, வேறொரு

கலசம் வாங்கத் தன்மானம் இடம் தராததால் வருந்தி அழுதான் உத்தமன் ஒருவன். மானம் இழந்து உயிர் காப்பது என்ன என்பது பழமொழி. **(எக)**

## கருடன் கதை

376. **விருப்பமறை யோன்றனக்குப் பிறந்தநிரு தனை யுவணன்**
**விழுங்கும் வாயி**
**னெருப்பெழச்சுட் டதனாற்செங் கருடன்நிரு தனைவிடுத்தா**
**னெனவோர் பாட்டிற்**
**றிருப்பதிவேங் கடசதகந் தனிலுரைத்தார் முன்பெரியோர்**
**செயங்கொண் டாரே**
**நெருப்பிருப்ப தறியாமற் றொட்டாலுஞ் சுடுமெனவே**
**நிகழ்த்து வாரே.**

**பொழிப்:** ஓர் அந்தணனுக்குப் பிறந்த அசுரனைக் கருடன் விழுங்க முற்பட, அசுரன் நெருப்பைப் போலக் கருடன் வாயைச் சுட்டதனால் அசுரனை விழுங்காமல் விட்டு விட்டான். நெருப்பு இருப்பது அறியாமல் தொட்டாலும் சுடும் என்பது பழமொழி.

**அ.பொ:** உவணன் - கருடன், நிருதன் - அரக்கன். **(எஉ)**

## பட்டணத்துப் பிள்ளைக் கதை

377. **கையினிற்பட் டணத்தார்க்குத் தமக்கைநஞ்சு கலந்துபல**
**காரஞ் செய்தே**
**ஐயமறக் கொல்லவென்றே கொடுக்கவவண் மனைநெருப்பா**
**லழிந்த தன்றோ**
**துய்யபினா கச்சிலையீர் செயங்கொண்டா ரேபிறர்க்குத்**
**துன்பங் காணச்**
**செய்ததீ வினைதானுஞ் செய்தவர்க்கே சேருமெனச்**
**செப்பு வாரே.**

**பொழிப்:** பட்டினத்து அடிகளுக்கு அவர் தமக்கை நஞ்சு கலந்த பலகாரத்தை வழங்க, அந்தப் பாவத்தால் அவள் வீடு தீப்பற்றி அழிந்தது. செய்த வினை செய்தவரையே சேரும் என்பது பழமொழி.

**அ.பொ:** பினாகம் - சூலம் அல்லது சிவபெருமான் வில். **(எங)**

## விக்ரமாதித்தன் கதை

378. சிந்தைமகிழ் விக்ரமா தித்தனுக்கா யிரவருடந்
தேவி யீந்தாள்
புந்திவலு மந்திரிசொல் லாலிரண்டா யிரவருடம்
புவியை யாண்டான்
சுந்தரர்க்குத் தூதுசென்ற செயங்கொண்டா ரேதருமந்
துலங்கு நாட்டின்
மந்திரங்கால் மதிமுக்கா லென்றுலகந் தனிலுள்ளோர்
வழுத்து வாரே.

**பொழிப்:** விக்கிரமாதித்தனுக்கு ஆயிரம் ஆண்டு அரசாளும் வரத்தைக் காளி ஈந்தாள். மந்திரியின் ஆலோசனையால் விக்கிரமாதித்தன் இரண்டாயிரம் ஆண்டு உலகை ஆண்டான். மந்திரம் கால் மதி முக்கால் என்பது பழமொழி.

(எச)

## காளிதாசன் கதை

379. நிசகாளி தாசனரண் மனைவாயிற் புகவேண்டி
நிருபன் கீர்த்தி
சுகநாசி பல்போலென் றுரைத்ததனாற் செல்லவிட்டார்
தோன்றப் போவென்
றிசைவாங்கீர் வாணம்போ சன்றன்மேற் பகர்ந்தனன்காண்
செயங்கொண் டாரே
பசுமாட்டுத் தோலதனைப் புலிபோர்த்துக் கொண்டிருந்த
பண்பு தானே

**பொழிப்:** காளிதாசன் அரண்மனை வாயிலுக்குள் நுழைவதற்காக அரசனுடைய புகழ், கிளியின் மூக்கு, மகளிர் பல் போன்று செம்மையாகவும், வெண்மையாகவும் உள்ளது என்று கூற, அவர்கள் அவனை உள்ளே விட்டதனால் போஜ மன்னன் மீது பல வடமொழிப் பாடல்களைப் பாட முடிந்தது. பசுத்தோலைப் புலி போர்த்தது என்பது பழமொழி.

**அ.பொ:** சுகம் - கிளி, கீர்வாணம் - சமஸ்கிருதம். (எரு)

## இராவணன் போர்க்குத் துணிந்த கதை

380. யாகத்தாற் செயமுமில்லை யிறப்பதினி நிசமெனக்கொ
ளென்னைப் பெண்ணே

லோகத்தா ரிராமனென வுரைக்குமட்டு மிராவணனென்
றுரைப்பார் போர்க்குப்
போகத்தான் றுணிந்தனென்றா னரக்கனதாற் செயங்கொண்டார்
பொருந்து நாட்டிற்
சாகத்தான் றுணிந்தவர்க்குச் சமுத்ரமுழங் காலளவு
தானென் பாரே.

**பொழிப்:** நிகும்பலை யாகம் நிறைவேறவில்லை. வெற்றிக்கு வழி இல்லை இறப்பது உறுதி. எனவே, இராமன் பெயர் உள்ளவரை என் பெயர் இருக்கும். ஆதலின் அவனோடு போரிடப் புறப்பட்டு விட்டேன் என்று இராவணன் போரிடப் புறப்பட்டான். சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் அளவு என்பது பழமொழி. **(எசா)**

## நக்கீரர் கதை

381. அத்தனீ கரத்தெழுதி யடிமைக்கீந் திட்டசெய்யு
ளதனை நோக்கிச்
சற்றுந்தா மதியாம லியற்கைமணங் கூந்தலுக்குத்
தகுதி யென்றால்
குற்றமெனப் பயமின்றி யுரைத்தனர்நக் கீரர்செயங்
கொண்டா ரேசொல்
வித்துவான் மதயானை யிரண்டுமொப்பென் றுரைப்பதுவு
மெய்ய தாமே.

**பொழிப்:** சிவபெருமான் தன் அடிமை தருமிக்கு எழுதிக் கொடுத்த செய்யுளை நோக்கிச் சற்றும் தாமதியாமல் மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணம் இல்லை என்றான் நக்கீரன். வித்துவான் வாதிடுதல் மதயானை இரண்டின் போர் போலும் என்பது பழமொழி. **(எஎ)**

## துரோணர் பெண்சாதி கதை

382. உச்சிதமாய்த் துரோணர்சொன்ன மொழிப்படியே யவர்மனையா
ளுடையில் லாமற்
பிச்சையிடக் கொள்சிவனுக் கக்கணமே யிந்திரியம்
பிறந்த தன்றோ
தெட்சணமா முனிபரவுந் தென்னேம நகரில்வளர்
செயங்கொண் டாரே

இச்சையுள்ள காமுகர்க்குக் கண்கண்ட விடத்தினிலென்
றியம்பு வாரே.

**பொழிப்:** துரோணர் சொன்ன மொழிப்படியே அவர் மனைவி ஆடையில்லாமல் பிச்சையிட, அதனைப் பெற்ற சிவபெருமானுக்கு அக்கணமே இந்திரியம் பிறந்தது. இச்சை உள்ள காமுகர்க்குக் கண் கண்ட இடத்தினில் என்பது பழமொழி. **(எஅ)**

## வாதாபி கதை

383. மெத்தநாள் வாதாபி வேதியர்க ளுயிரையுண்டு
மேவிக் கும்ப
சித்தனைச்சாப் பிடநினைந்தான் சித்தனவ னுயிரைமுற்றுஞ்
சிதைத்துப் போட்டான்
மத்தகசந் தனையுரித்த செயங்கொண்டா ரேயார்க்கு
மனதுக் கேற்க
நித்தியங்கட் டப்பாலை முற்றவுந்தான் பழுத்திடுமோ
நிலத்து மீதே.

**பொழிப்:** பல நாள்கள் அந்தணரைக் கொன்று அவர்கள் உடலை உண்ட வாதாபி அகத்தியர் உடலை உண்ண நினைக்க, அகத்தியர் அவனைக் கொன்று சீரணித்து விட்டார். ஒவ்வொரு நாளும் கட்டப்பாலை இலை பழுக்குமா? என்பது பழமொழி.

**அ.பொ:** சித்தன் - அகத்தியன். **(எகூ)**

## நாரை மூக்குக் குவமை சொல்லிய கதை

384. பார்புகழும் பாண்டியர்க்குச் சங்கத்தார் பேரறிவாற்
பகர வொண்ணா
நாரைமூக் குக்குவமை பனங்கிழங்கென் றொருபுலவன்
நவின்றா னன்றோ
சீருலவுங் கங்கைதிங்க ளரவமொடு கொன்றையணி
செயங்கொண் டாரே
காருலவும் புவியிலுள்ளோ ராகாயந் தனையும்வரை
கட்டு வாரே.

**பொழிப்:** சங்கத்தார் உவமை சொல்ல முடியாமல் தடுமாறிய காலை நாரை மூக்குக்குச் சத்தி முற்றப் புலவன் பனங்கிழங்கு பிளந்ததனை உவமை கூறினான். உலகர் ஆகாயம் வரை கோட்டைக் கட்டுவர் என்பது பழமொழி.

**(அ0)**

## விறன்மிண்டநாயனார் கதை

385. **ஆரூரெல் லையின்மிதியே னென்றவிறன் மிண்டர்தனை**
**யரன்சோ தித்தப்**
**பாரிலொரு கான்மிதிக்கச் செய்ததுகண் டக்காலைப்**
**பதறி யீர்த்த**
**சீருவந்து சிவன்காட்சி கொடுத்தானன் றோநேமச்**
**செயங்கொண் டாரே**
**பேருலகின் மனங்கலங்கிப் பிரியாமற் பிடித்தவர்க்குப்**
**பேறுண் டாமே.**

**பொழிப்:** திருவாரூரின் எல்லையையே மிதிக்க மாட்டேன் என்று உறுதி பூண்ட விறல்மிண்டரைச் சிவபெருமான் திருவாரூர் எல்லையை மிதிக்கச் செய்து காட்சி கொடுத்தான். மனம் கலங்கிப் பிரியாமல் கொள்கையைக் கடைப்பிடித்தவர்க்குப் பேறு உண்டாகும் என்பது பழமொழி. **(அக)**

## செந்நாப்புலவர் கதை

386. **உற்றசெந்நாப் புலவர்மிக்க கணிகணன்மேற் கோபமதா**
**யுலகுண் டோனை**
**யிற்றையாம் புறப்படுவோ மினியுன்பாய் சுருட்டியெழுந்**
**திருமென் றோதச்**
**சித்தசன்றன் றாதைவர தப்பெருமா ளெழுந்தனரே**
**செயங்கொண் டாரே**
**பத்தருளத் தினிலீசன் குடியிருப்பா னெனச்சொல்லும்**
**பண்பு தானே.**

**பொழிப்:** திருமழிசைப் பிரான் கணிகண்ணனை அரசன் நாட்டை விட்டுப் போகுமாறு ஆணையிட்டதனால் கோபம் கொண்டு தாம் வழிபடும் திருமாலைப் பாயைச் சுருக்கிக் கொண்டு புறப்படு என்று அழைத்தார். பத்தர் உள்ளத்தில் இறைவன் குடியிருப்பான் என்பது பழமொழி.

**அ.பொ:** சித்தசன் - மன்மதன். **(அஉ)**

## குசலன் கதை

387. மிகப்பெரிய மாலசுவந் தனைப்பிடித்துக் கட்டிவந்த
வினைப்போர் தன்னைப்
பகற்பொழுதிற் பொடியாக்கித் தாதைதனை வென்றகுசலன்
பண்பு பாரீர்
செகத்தரசர் புகழவருந் தென்னேம நாடதிபச்
செயங்கொண் டாரே
தகப்பனொரு பாக்கெனவும் பிள்ளையொரு தோப்பெனவுஞ்
சாற்று வாரே.

**பொழிப்:** மிகப்பெரிய குதிரையைப் பிடித்துக் கட்டி, வந்தவரோடு போரிட்டுக் குசலன் தன் சிற்றப்பனையே போரில் வென்று விட்டான். தகப்பன் ஒரு பாக்கு. பிள்ளை ஒரு தோப்பு என்பது பழமொழி. **(அIT)**

## இரேணுகாதேவி கதை

388. தண்பரசு ராமனது தாயுடலிற் பறைச்சிதலை
தரித்த மின்னா
ணன்பரிடங் கொண்டுவர விவண்முழுதும் பறைச்சியென
நகைத்து நாதன்
றிண்புயனே யிவளையப்பாற் றுரத்தெனச்சேய்க் குரைத்தனரே
செயங்கொண் டாரே
பண்புளவெண் சாணுடம்பிற் சிரசுபிர தானமெனப்
பகரு வாரே.

**பொழிப்:** பரசுராமன் தன் தாய் உடலில் பறைச்சி தலையைப் பொருத்தி அழைத்து வர, அவள் உடலைப் பாராமல் தலையையே பார்த்து, அவளைப் பறைச்சி என்று மற்றவர் துரத்தினர். எண்சாண் உடம்பில் சிரசே பிரதானம் என்பது பழமொழி. **(அச)**

## கண்ணன் கதை

389. பார்த்தனுக்கே ரதமூர்ந்தோன் மூத்தபல பத்திரனைப்
பாரைச் சுற்றென்
றேய்த்தனுப்பித் தன்னைச்சார்ந் தோரைரட்சித் தண்ணனைச்சார்ந்
திருந்து வாழ்ந்த

நூற்றுவரை மடியவுஞ்செய் தான்செயங்கொண் டாரேநீர்
நுவலக் கேண்மோ
மூத்ததுவே மோழையென்று மிளையதுவே காளையென்று
மொழிகு வாரே.

**பொழிப்:** கண்ணன் பலராமனைத் தீர்த்த யாத்திரைக்கு அனுப்பிவிட்டுத் தன்னைச் சார்ந்த ஐவரைப் பாதுகாத்து, அண்ணனைச் சார்ந்த நூற்றுவரை மடியச் செய்தான். மூத்தது மோழை இளையது காளை என்பது பழமொழி.

**அ.பொ:** பலபத்திரன் - பலராமன். **(அரு)**

## நிரம்பவழகியர் கதை

390. பொன்னார்செல் வமுந்தமிழும் பொருந்தரசன் றருக்கதனாற்
புலவ ருக்குண்
மன்னான நிரம்பவழ கியரையண்டங் காக்கையென
வழுத்தக் கேட்டே
யன்னார்நீ யேயண்டங் காக்கையென்றார் செயங்கொண்டா
ரணிகொ ணாட்டிற்
றன்னாலே தான்மெலிந்தா லண்ணாவி யென்னசெய்வான்
றரணி மீதே.

**பொழிப்:** செல்வமும் தமிழும் பொருந்திய அரசன், நல்ல கருநிறமுடையவராய் மேம்பட்ட புலவரான நிரம்ப அழகிய தேசிகரை, நீர் அண்டங்காக்கையோ? என்ன, அவர் அரசரே அண்டங்காக்கை என்றார். தன்னாலே தான் மெலிந்தால் அண்ணாவி என்ன செய்வார் என்பது பழமொழி.

**அ.பொ:** அண்டங்காக்கை - உலகை ஆள்பவன். **(அசா)**

## நந்திராசன் கதை

391. சூத்திரப்பா வையைநிகர்மெய் யிதனைநம்பொண் ணாதெனவுந்
துணைவன் கல்விக்
காத்துமதத் தஞ்செய்துல குள்ளமட்டும் புகழ்படைத்தா
னன்றோ நந்தி
போற்றியசுந் தரர்க்காய்முன் முறிகாட்டுஞ் செயங்கொண்டார்
புனித நாட்டிற்
கீர்த்தியப கீர்த்தியிவை வந்தாற்போ காவெனவே
கிளத்து வாரே.

**பொழிப்:** கயிற்றால் இயக்கப்படும் பொம்மையைப் போன்ற இந்த உடலை விரும்பக்கூடாது என்று, என்றும் துணைபுரியும் கல்விக்காக ஆன்மாவையே தியாகம் செய்து, நந்தி மன்னன் உலகு உள்ள வரையில் அழியாத புகழைப் பெற்றார். கீர்த்தி அபகீர்த்தி இவை வந்தால் போகா என்பது பழமொழி.

**அ.பொ:** ஆத்தும தத்தம் - உயிரை வழங்குதல். **(அஎ)**

## சுவாகாள் கதை

392. **ஆறுரிஷி பத்தினிமார் பழுதுபடா திருக்கையிலே**
**யன்னோர் ரூபங்**
**கூறுசுவா காளெடுத்தக் கினிதேவைத் தழுவரிஷிக்**
**கூட்டங் கூடிச்**
**சீறியறுவ ரைத்துரத்தத் தவசுக்கே கினரன்றோ**
**செயங்கொண் டாரே**
**வாறவிதி வந்ததென்றால் வளைந்தாடும் பானையென்று**
**வழுத்து வாரே.**

**பொழிப்:** அக்கினி சப்தரிஷி பத்தினிகளை விரும்ப, அக்கினி மனைவி சுவாகா, ரிஷி பத்தினி எழுவரில் அருந்ததி நீங்கலான ஆறுபேர்களின் வடிவத்தையும் தான் எடுத்து அக்கினியைத் தழுவி அவனை மகிழ்விக்க, ரிஷிகள் அந்த அறுவரையும் அருந்ததியை ஒத்த கற்புடையார் அல்லர் என்று தவம் செய்ய அனுப்பி விட்டனர். விதி வந்ததென்றால் பானையும் வளைந்தாடும் என்பது பழமொழி.

'வாற' என்பது வருகிற என்பதன் விகாரம். **(அஅ)**

## அருந்ததி கதை

393. **நித்தியசந் யாசியென்று நித்யோப வாசியென்றும்**
**ரிஷிகள் கூற**
**வத்தைமெய்யென் றருந்ததியாள் கங்கைதனக் குரைத்துவழி**
**யன்பாய்க் கேட்கச்**
**சித்தமகி ழருந்ததிசொற் றனக்குவழி கங்கைவிட்டாள்**
**செயங்கொண் டாரே**
**பத்தினியுந் தமிவாக்குப் பலிக்குமெனத் தேவரொக்கப்**
**பணித்திட் டாரே.**

**பொழிப்:** திருமால் நித்ய சந்நியாசி என்றும் நித்தய உபவாசி என்றும் முனிவர் கூற அதனை ஐயமற உண்மை என்று கொண்டு அருந்ததி கங்கையிடம் கூற, கங்கை அருந்ததி நடந்து செல்ல வழிவிட்டாள். பத்தினி உத்தமி வாக்குப் பலிக்கும் என்பது பழமொழி. **(அகூ)**

## மிருகண்டர் கதை

394. **மதிமெதுவா லொருநூறு வியன்மதியாற் பதினாறு**
**வயது புத்ர**
**னெதுதருவோ மெனச்சிவனே நல்லபிள்ளை வயதீரெட்**
**டிருந்தாற் போது**
**மதுதருவீ ரென்றுமிரு கண்டுமுனி யன்றுரைத்தார்**
**செயங்கொண் டாரே**
**யிதசாணி யொருகூடை மிக்கசவ்வா தோர்பணத்தி**
**னிடையென் பாரே.**

**பொழிப்:** குறைந்த அறிவுடைய நூறு வயது வாழும் புதல்வனையோ நல்ல அறிவுடைய பதினாறு வயதே வாழும் புதல்வனையோ தருவதாகச் சிவபெருமான் கூறப் பதினாறாண்டு வாழும் நல்ல பிள்ளையே தமக்கு வேண்டும் என்று மிருகண்டு உரைத்தார். ஒரு கூடைசாணியை விட ஒரு பண எடை சவ்வாது சிறந்தது என்பது பழமொழி. **(கூ0)**

## அனுமான் கதை

395. **சலியாமற் கடறாண்டி மருத்துமலை கொணரனுமான்**
**றடந்தோ டன்னை**
**நலியாம லிந்த்ரசித்தன் பாசத்தாற் கட்டிவிட்டா**
**னலம தான**
**கலியாண முரசொலிக்குந் தென்னேமச் செயங்கொண்டார்**
**கனத்த நாட்டில்**
**வலியார்க்கு வலியாரு மிருப்பரென்றே யுலகிலுள்ளோர்**
**வசனிப் பாரே.**

**பொழிப்:** சஞ்சீவி பருவதத்தைத் தூக்கி வரக்கூடிய ஆற்றலுடைய அனுமனுடைய தோள்களை இந்திரசித்து பாசத்தால் கட்டிவிட்டான். வலியாருக்கும் வலியார் இருப்பர் என்பது பழமொழி. **(கூக)**

## பாண்டியராசன் கதை

396. மதுரைமன்ன னிடத்திருந்த குதிரைபற்றா தெனவிலைக்கு
மாஅு னேக
நிதமுடன்சே கரித்தநிமித் தியத்தான்முன் பரிமுழுது
மிழந்தா னன்றோ
நிதியனைத்தோ ழமைவேண்டுஞ் செயங்கொண்டா ரேயேரி
நிறைக்க வேண்டிப்
புதியவெள்ளம் வரப்போய்முன் னிருந்தவெள்ளத் தையுமிழுத்துப்
போன வாறே.

**பொழிப்:** இருக்கும் குதிரைகள் போதா என்று மிகுதியான குதிரைகளைச் சேகரிக்க விரும்பிய பாண்டிய மன்னன் முன்னர் வைத்திருந்த குதிரைகளையும் இழந்தான். புதிய வெள்ளம் பழைய வெள்ளத்தையும் இழுத்துப் போயிற்று என்பது பழமொழி. (கூஉ)

## விறகுதலையன் மனையாள் கதை

397. தெகிட்டாக்கா தலைவிறகு தலையன்மனை யாள்கூத்தன்
றிகிலிட் டேங்கப்
புகட்டியல்லோ கற்பழியா மற்கவிகேட் டாள்தனது
புருடன் பேரின்
முகட்டாலி லையிற்றுயில்வோன் பணிசெயங்கொண் டாரேசீர்
முதிர்ந்த நாட்டிற்
பகட்டாற்பங் கெடுப்பரெனப் பொரியரிசி யிடியெனவும்
பகரு வாரே.

**பொழிப்:** தெவிட்டாத அன்புடையவள் போல நடித்து விறகு தலையன் மனைவி கூத்தனிடம் தன் கணவன் பேரில் ஒரு கவிதை பாடச் சொல்லித் தன் கற்பு அழியாமலும் கூத்தன் திடுக்கிட்டு ஏங்கவும் தன் நடிப்பினால் செயற்பட்டாள். பகட்டால் பங்கு எடுப்பர் பொரியரிசி இடி என்பது பழமொழி.

**அ.பொ:** தெகிட்டா - தெவிட்டாத. (கூகூ)

## சூரியனைச் சக்கரத்தால் மறைத்த கதை

398. வாணிமா துலன்றோழ னிறவாமற் காக்கவென்ன
வகைசெய் வோமென்

றாணியிர விசைத்திகிரி யான்மறைத்துப் பார்த்தனைக்காத்
தருளி னாரே
நாணரவாற் பொன்மலையை வளைத்தசெயங் கொண்டார்வாழ்
நலஞ்சேர் நாட்டில்
வேணுமென்று நூற்றான்மெல் லியநூலாய் நூற்றிடுவர்
மெய்ய தாமே.

**பொழிப்:** சரசுவதியின் மாமனாரான திருமாலின் அவதாரமான கண்ணன் தன் தோழன் அருச்சுனன் இறக்காமல் காப்பதற்காகச் சூரியனைச் சக்கரத்தால் மறைத்து இருளை உண்டாக்கி அவனைக் காப்பாற்றினான். வேண்டுமென்று நூற்றால் மெல்லிய நூலாய் நூற்றிடலாம் என்பது பழமொழி.

வேணும் என்பது வேண்டுமென்பதன் விகாரம்.

**அ.பொ:** வாணி மாதுலன் - கலைமகள் மாமனாரான திருமால். **(௯௪)**

## மயிலிராவணன் கதை

399. அச்சமில்லாத் துராக்கதரா வணனைமயி லிராவணன்சேர்ந்
தழிந்து போனான்
பட்சமுள்ள விபீஷணன்றா னரக்கனைவிட் டொதுங்கிமிகப்
பண்பாய் வாழ்ந்தான்
கச்சணியுந் தனத்திசௌந் தரிபாகர் செயங்கொண்டார்
கனத்த நாட்டிற்
றுர்ச்சனரைக் கண்டவுடன் றூரப்போ வென்றுலகோர்
சொல்லு வாரே.

**பொழிப்:** கொடியவன் இராவணனைச் சேர்ந்து மயில் இராவணன் அழிந்து போனான். இராமனிடம் அன்புடைய வீடணன் இராவணனை விட்டு ஒதுங்கி மிகப் பணிவோடு வாழ்ந்தான். துர்ச்சனரைக் கண்டவுடன் தூரப்போ என்று உலகோர் சொல்வர் என்பது பழமொழி. **(௯௫)**

## வரகுணப் பாண்டியன் மனையாள் கதை

400. வல்லவர குணன்சோழன் மகளைமணஞ் செய்தருளி
வடிவைப் பார்த்தே

யல்லிருக்கங் குழலியிவண் மருதப்பர்க்கு ஆவள்நமக்
கன்னை யென்றே
தில்லைமன்று ளாடிமெய்யி லைக்கியமாம் படிசேர்த்தான்
செயங்கொண் டாரே
நல்லதுகண் டானாயகன் றனக்கென்றே யுலகிலுள்ளோர்
நவிலு வாரே.

**பொழிப்:** வரகுணப் பாண்டியன் சோழன் மகளை மணந்து அவள் வடிவழகைப் பார்த்து அவள் திருவிடைமருதூர் மருதவாணருக்கே ஏற்றவள் என்று அவளைச் சிவலிங்கத்தோடு ஒன்றுபடச் செய்தான். நல்லது கண்டால் நாயன் தனக்கே என்பது பழமொழி.

**அ.பொ:** மருதப்பர் - திருஇடை மருதூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்.

(௯௬௱)

## நக்கீரர் கதை

401. அரசிலையிற் பாதிபட்சி பாதிமச்ச மானவிந்தை
யனைத்தும் பார்த்து
விரவுளநிட் டையைமறந்த நக்கீரர் தமைப்பூதம்
விழுங்கத் தூக்கித்
திரண்மலையி லடைக்கவள்ளி கணவனன்றோ விலக்கிவிட்டான்
செயங்கொண் டாரே
யுரைசெய்தவ மறந்தாற்கை தவமாகு மென்றெளவை
யுரைத்த வாறே.

**பொழிப்:** யோக நிட்டையை மறந்து அரசிலையில் பாதி பறவை பாதி மீனான காட்சியில் நக்கீரர் ஈடுபட்டிருக்க, நிட்டையை மறந்த நக்கீரரை விழுங்குவதற்காகப் பூதம் அவரைத் தூக்கிச் சென்று மலையில் அடைக்க, முருகப் பெருமான் அவரைக் காப்பாற்றினார். செய்தவம் மறந்தால் கைதவம் ஆகும் என்பது பழமொழி.

**அ.பொ:** மச்சம் - மீன், கைதவம் - வீண். (௯௭)

## வேடன் கதை

402. அடவியில்வே தியர்க்கொருவே டன்றினைமாப் பகுந்தபல
னாற்கா சிக்குத்

திடமுளமன் னவன்சேயாத் தினையரியப் பொற்கலத்திற்
செனித்தா னன்றோ
வடவரையைச் சிலையாக வளைத்தசெயங் கொண்டாரே
வையந் தன்னில்
இடுவதுபிச் சைபின்பு பெறுவதுவே மோட்சமென
வியம்பு வாரே.

**பொழிப்:** காட்டில் வேதியர்களுக்கு வேடன் ஒருவன் தினைமாவினைப் பகுத்தளித்த புண்ணியப் பயனாய் மறுபிறவியில் காசி மன்னன் மகனாகப் பொற்கலத்தில் உணவு உண்ணும் பேற்றோடு பிறந்து வாழ்ந்தான். இடுவது பிச்சை பெறுவது மோட்சம் என்பது பழமொழி. **(கூஅ)**

## துர்வாசமுனி கதை

403. வாய்ச்சுதெனத் துர்வாச ருக்குமாங் கதனைமெத்த
வருத்த வாழி
பாச்சலினான் முனியைவெல்ல வரவுருக்கு மாங்கதன்றான்
பரித்தா னன்றோ
கூச்சமறச் சிலந்திப்பூச் சியைக்கதிசேர்த் திட்டசெயங்
கொண்டார் நாட்டிற்
சாட்சிக்கா ரனைப்பணியார் சண்டைக்கா ரனைப்பணியத்
தகுமென் பாரே.

**பொழிப்:** துர்வாச முனிவன் உருக்குமாங்கதன் என்ற மன்னனை அநியாயமாகத் துன்புறுத்தத் திருமாலுடைய சக்கரம் துர்வாசரை விரட்ட உருக்குமாங்கதனே முனிவரைச் சக்கரத்திலிருந்து காப்பாற்றினான். சாட்சிக்காரரைப் பணியார் சண்டைக்காரனைப் பணிவார் என்பது பழமொழி.

**(கூகூ)**

## வரரிஷி கதை

404. சிவயோகர் வெகுளியினால் வரரிஷியு மகிடமெனச்
செனித்தான் பாரிற்
பவமடியாற் கற்றவுமை லிங்கப்ரா ணியைவதைத்த
பழியின் றோஷம்
நவதீர்த்த மாடியன்றோ தொலைந்ததென்பார் செயங்கொண்டார்
நலங்சேர் நாட்டிற்

**றவமுடையோர் மனமழுங்கச் செயப்படா தென்றுலகோர்**
**சாற்று வாரே.**

**பொழிப்:** சிவயோகர் சாபத்தால் வரரிஷி என்பவர் எருமையாகப் பிறந்தார். வரரிஷியைச் சாபமிட்ட பாவம் சிவயோகர் நவதீர்த்தத்தில் நீராடிய பின்னரே தொலைந்தது. தவமுடையோர் மனம் வருந்தச் செயற்படல் கூடாது என்பது பழமொழி. **(௧00)**

**செயங்கொண்டார் சதகம் முற்றிற்று.**

உ

கடவுள் துணை

நேமம்

அழகப்பச் செட்டியார் குமாரர்

முத்தப்பச் செட்டியார்

எழுநகரத்தார் பெயரால் பாடிய

# திருமுக விலாசம்

# திருமுக விலாசம்

எழு நகரத்தார் பெயரால் பாடிய திருமுகவிலாசம் என்னும் பிரபந்தம் மதுரைச் சீமை சிவகங்கை சமஸ்தானம் கீழைச் சேவற்பட்டு இளையாற்றங்குடி எழு நகரம் என்று சொல்லப்பட்ட நேம நகரத்தில் உதித்த அழகப்பச் செட்டியார் குமாரர் முத்தப்பச் செட்டியார் பாடி அருணை நகர் வீரபண்டாரம் குமாரர் சுப்பிரமணிய பண்டாரத்துக்கு அளிக்க, முத்தப்பச் செட்டியார் பெயரர் நாராயணஞ் செட்டியார் கேட்டுக் கொண்டபடி, பதிப்பித்த பதிப்பிற்கு இணங்க *1913*-இல் பதிப்பிக்கப்பட்டது என்ற முகப்புப் பக்கச் செய்தியை நோக்க இந்நூல் *19*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பாடப்பட்டதாதல் வேண்டும். இந்நூலை முத்தப்பச் செட்டியார் இயற்றினார் எனினும் சுப்பிரமணிய பண்டாரத்தின் பெயரே இவ்விலாசத்தில் இடம் பெறுகிறது.

"விற்பனம் சேர்அருணை வீரபண்டா ரத்தின்மகன்
சுப்பிர மண்யனென்று சொன்னேனா___"

என்ற *187*-ஆம் கண்ணியை நோக்குக.

திருமுக விலாசம் என்பது *96* வகைப் பிரபந்தங்களில் கணக்கிடப்படாத பல பிரபந்தங்களுள் ஒன்று. 'திருமுகப் பாசுரம்', என்பது பதினோராம் திருமுறையில் உள்ளது. திருமுகம் என்பது செய்தி எழுதி அனுப்பப்பட்ட ஓலை. அவ்வோலைச் செய்தியோடு தொடர்புடைய பிற செய்திகளையும் அழகுற அமைத்துப் பாடப்பட்ட பிரபந்தம் திருமுக விலாசம்.

இந்நூல் முருகப் பெருமான் பிறப்பும் பெருமையும், புலவன் சிகண்டி மலையிலுள்ள முருகப் பெருமானைப் போற்றிய வண்ணம் அவனைத் தரிசிக்கச் செல்லுதல், முருகப் பெருமான் அவனை வரவேற்று வந்த காரியம் வினவுதல், புலவன் தன் வறுமை நிலையை விளக்கி அதனைப் போக்குமாறு முருகப் பெருமானை வேண்டுதல், முருகப் பெருமான் தன் தந்தை, தாய், தமயன், மாமன், இவர்கள் செய்திகளையும் தன் செய்திகளையும் கூறல், முருகப் பெருமான் தன் துயர் போக்க வேண்டும் என்று முருகப் பெருமானை வேண்டுதல், முருகப் பெருமான் எழு நகரத்தாருக்குத் திருமுகம் எழுதிப் புலவனிடம் கொடுத்து அனுப்புதல், எழு நகரத்தார் புலவனுக்குச் செய்த சிறப்புக்கள் என்பன பலவும் *237* கண்ணிகளில் அமைக்கப் பெற்ற கலிவெண்பா யாப்பில் இயம்பப் பட்டுள்ளன.

# திருமுக விலாசம்

## விநாயகர் தோத்திரம்

## காப்பு
## நேரிசை வெண்பா

இருநிதியஞ் சேருகின்ற வேழ்நகரத் தார்மேற்
றிருமுக விலாசமது செப்ப - வருளாற்
குணபதியா மீசன் குழவியென வுற்ற
கணபதிபொற் றாண்மலரே காப்பு.

**அ.பொ:** இருநிதியம் - பெரிய செல்வம்-கல்வியும், செல்வமும், குணபதி - நற்பண்புகளுக்கு இருப்பிடம், ஈசன் - அனைவரையும் அடக்கி ஆள்பவன்.

## நூல்
## கலிவெண்பா

முருகப் பெருமான் பிறப்பும் பாலப்பருவமும் 1-43

1. கங்கை நதிதரித்தோர் கண்ணுதலார் சூரனுக்குச்
சங்கையில்லா வாழ்வு தனைக்கொடுக்க - வங்கவனுந்

2. தேவாதி கட்கிடுக்கஞ் செய்ததனா லிந்திரன்பாற்
றேவாதி கள்பலருஞ் சென்றடர்ந்து - பூவாளி

3. வேளை யரனிடத்தின் மேவிச் சுரரிடுக்கண்
தூளாய்ப் பறந்திடவே சொல்லுமென்றார் - வேள்சிவன்பாற்

4. சென்றா னமரர்சொன்ன செய்தியெல்லா மீசன்முன்பு
நின்றாங் குரையா னிகரின்மதன் - மன்றன்மிகு

5. பூவாளி யச்சிவன்மேற் பொங்குமழை போனின்று
தூவினா னீசனிவன் றுஷ்டனென்றே - தாவிமதன்

6. றன்னை யெரித்திடவே தானவரும் வானவரும்
பன்னுஞ் செபதபஞ்செய் பண்ணவருந் - தந்நிலைவிட்

---

*1. சங்கை - சந்தேகம்; 2. இடுக்கம் - துயரம்; அடர்ந்து - செறிந்து, கூடி.
4. நிகர்இல் - ஒப்பில்லாத; 5. வாளி - அம்பு, தாவி - கண்களை அகல விரித்து.
* எண் - கண்ணி எண்ணைக் குறிப்பிடும்.

7. டோடினா ரந்நா ளொருகோடி சென்றபின்பு
கூடினா ரிந்திரன்பாற் கோவென்றே - கூடுமுன்னே

8. சத்தரிஷி மாதர் தமக்குஅக் கினிபகவான்
மெத்தமயல் கொண்டவன்றன் வீட்டில்வந்து - சித்தநொந்தே

9. யன்ன மருந்தா திருந்தா னவண்சுவாகா
ளென்னவென்றா ளுள்ள தியம்பினா - னன்னயமா

10. வென்றன் றிராணி யினியறிவீர் சத்தரிஷி
துன்றுமட வார்களுன்னைத் தோயவே - யொன்றுமுத்தி (கூO)

11. செய்வனென்றா ணல்லதெனச் சிந்தைமகிழ்ந் தக்கினிதான்
மெய்பொடித்துச் சத்தரிஷி மின்னாரின் - மைவிழியாள்

12. ஆறுரிஷி மாதர்வடி வாகினா ளச்சுவாகாள்
தேறவொண்ணா தாசைதனைத் தீர்ப்பையென்று - கூறியே

13. ஒவ்வொருத்தி யாய்ச்சென் றுலகத்திற் றன்மனசு
செவ்வையொத்துக் கொண்டுமய நீர்ந்தனனே - திவ்ய

14. வருந்ததியைப் போலவடி வாகமாட் டாதுள்ளம்
வருந்திக் கணவனிடம் வந்தா - டிருந்திழைமார்

15. இன்னொருத்தி யேதுவர வில்லையென்றா னுள்ளபடி
சொன்னவற்றைக் கேட்டுத் துயர்தீர்ந்தா - னிந்நிலத்திற்

16. சத்தரிஷி ஞானத்ருஷ்டி தன்னா லறிந்துகம
லத்துமட வாரை யருகழைத்துச் - சத்தி

17. யருந்ததிகற் புக்குங்க ளாறுபேர் கற்பும்
பரிந்துபற்றா தென்று பகர்ந்து - திருந்துஞ்

18. சரவணப்பொய் கைக்குட் டவசுசெய்வீ ரென்றே
அரிவையரைப் போவென் றனுப்பத் - திருநுதலார்

---

7. கோடி - எல்லை, கோ - அரசன்; 8. மயல் - காம மயக்கம்; 9. அவண் - அவ்விடம்; 10. திராணி - ஆற்றல், தோய - அனுபவிக்க, உத்தி - உபாயம்; 11. மை விழி - அஞ்சனம் தீட்டிய கண்கள்; 12. தேற ஒண்ணாது - தெளிய முடியாமல்; 14. திருந்திழை - சிறந்த அணிகலன்கள்; 16. ஞானதிருஷ்டி - அறிவுக்கண், கமலத்து மடவார் - திருமகள் போன்ற தம் பத்தினியார்; 18. சரவணம் - நாணல்.

19. சத்தரிஷி வாக்காற் சரவணப்பொய் கைக்குள்வந்து
சத்தியமே யெண்ணித் தவஞ்செய்தா - ருற்றதெய்வ

20. மன்னவனுந் தேவர்களும் வந்தக் கினிபகவான்
றன்னை யருகழைத்துச் சாற்றினா - ரென்னவென்றாற் (உ0)

21. சூரன் செயுமிடுக்கண் சோமன் றரித்தவர்பா
னீருரைத்து மீளுமென்றார் நேசமாய்ச் - சீருடனே

22. செல்லுமுன்னே மாலாய்ச் சிவனு மிடப்பாக
மெல்லியலு மொன்றான வேளையிலே - மெல்லநடந்

23. தக்கினியோன் பொற்கதவை யண்ணினான் மெய்வெளிச்ச
மிக்கசுடர் போலே விளங்கியதாற் - றிக்கெனவே

24. சங்கரரு மக்கினியோன் றன்னைக்கண் டேமனசு
சங்கோச மாய்விரைந்து தாமெழுந்தார் - அங்கவர்க்கு

25. விந்துபிர வேசிக்க வீறுமெழி லக்கினியே
வந்துகையி லேந்தென வழுத்தினா - ரந்த

26. வரன்விந்தைத் தாங்கிநின்ற வக்கினியோன் றன்னைத்
திரமாக விந்தவிந்தைச் சீரா - யுரமாகத்

27. தாட்டிகமாய்க் கொண்டு சரவணப்பொய் கைக்குளிதைப்
போட்டுவிடு மென்னப் புகன்றார்கள் - கேட்டவனு

28. மக்கணமே விந்துதன்னை யந்தச் சரவணப்பொய்
கைக்குள்விட்டு வந்தான் கருணையுடன் - மிக்கவிந்து

29. மாறு குழந்தைகளா யக்கங்கை யிற்பிறந்து
மீறி விளையாடும் வேளையிலே - கூறரிய

30. ஈஸ்வரரு மீஸ்வரியு மேகாந்த மாகமந்த
வாசமா மந்நதியில் வந்திடவே - யீஸ்வரிபார்த் (௬0)

---

*21.* இடுக்கண் - துன்பம், சோமன் தரித்தவர் - சந்திரனை அணிந்த சிவ பெருமான்; *22.* மால் - காம மயக்கம், மெல்லியல் - பார்வதி; *23.* அண்ணினான்- நெருங்கினான்; *24.* சங்கோசம் - வெட்கம்; *25.* பிரவேசிக்க - வெளிப்பட, வீறு - பெருமை; *26.* உரமாக - உறுதியாக; *27.* தாட்டிகம் - பெருமிதம், வலிமை; *30.* மந்தவாசம் - தென்றல் காற்றின் மணம்.

31. திந்தநதி யிற்குழந்தை யேதென்றாள் தேவர்பிரா
னுன்றன் குழந்தையென்றா ருண்மகிழ்ந்து - விந்தையுட

32. னாறு தலையுஞ்சேர்த் தாவ லுடனாசை
மீறி யெடுத்துமடி மீதில்வைத்தே - யாறிரண்டு

33. காலு முருவுமிரு காலாக்கிச் சேர்த்தெடுத்து
வேலுமொன்றாய் மிக்ககரம் பன்னிரண்டாய்ச் - சீலமுடன்

34. ஆறுசிர சாய்த்தேவர்க் காறுதலை யாமெனப்பே
ராறுமுக மென்றே யரனுரைக்க - வீறு

35. முமையுந் திருமுலைப்பா லூட்டிக் கொடுபோஞ்
சமையத்தி லங்கே தவஞ்செய் - யமைநிகர்தோட்

36. சத்தரிஷி மாதரரன் றாட்பணிந்து தங்களுக்குப்
புத்தியென்ன வென்று புகன்றார்க - ளத்தரும்பார்த்

37. திந்தக் குழந்தையைக்கே ளென்ன வவர்கேட்கச்
சிந்தை மகிழ்மதலை செப்புமன்று - முந்துலகிற்

38. கார்த்திகைநட் சத்ரங் கருதுவோர் தங்கள்வினை
மாற்றியவர் கேட்ட வரங்கொடுப்பேன் - கார்த்திகைநட்

39. க்ஷேத்ரப் பதவியிலே செல்லுவீ ரென்றுதுய
ர்ாற்றிமட வாரை யநுப்புவித்துச் - சூத்திரங்கள்

40. செய்தகுவா காள்தனக்குஞ் சேவித்தோர் தங்களுக்கு
மெய்யிலங்கு பீடையொடு விக்கினங்க - ளெய்துகின்ற **(50)**

41. போதிவையெல் லாந்தீர்ந்து போகச் சுவாகாளென்
றோதவுட னேபயங்கொண் டோடுமே - யாதலினா

42. லிந்தப் பெருமை யுமக்கென் றவர்சொல்லச்
சிந்தை மகிழ்ந்து சிவனுமையும் - பிந்தா

43. திடுக்கி யிருகரத்தா லேந்தியுமை யாள்பாற்
கொடுக்க வளர்ந்தகும ரேசா - மடுக்கரையில்

---

35. அமை - மூங்கில்; 36. புத்தி - உபதேசம், அத்தர் - சிவபெருமான்; 37. மதலை - மகன்; 39. சூத்திரம் - தந்திரம்; 40. விக்கினம் - இடையூறு.

முருகப் பெருமான் பெருமையை அடியவன் கூறல் 44-69

44. வண்டாடும் பூங்கமல மாதுவிளை யாடிவளர்
குன்றாக் குடியிற் குமரேசா - சென்றன்று

45. வீறு மசுரர்குலம் வேரறுத்துச் சூரனுடல்
கூறாய் பிளந்த குமரேசா - தாரணியில்

46. அற்றவர்க்குத் தாரகமா யண்டர்க ணாட்டுக்குக்
கொற்றவனாய் வந்த குமரேசா - வுற்றசுட

47. ரம்பணைய கண்ணாடெய் வானைகுற வள்ளியிரு
கொம்பனையர்க் கேற்ற குமரேசா - நம்புதலாய்த்

48. தேடுமுடி யார்தமது சிந்தைதனி லேயிருந்து
கூடிவிளை யாடுங் குமரேசா - தாடாண்மை

49. யன்றசுரர் நெஞ்ச மதிர்கனக வேல்வாங்கிக்
குன்றுருவ வெய்த குமரேசா - மன்று

50. ணலத்தை யறியாச் சமணர் நாலா யிரரைக்
கொலைக்கழுவி லிட்டகும ரேசா - பலத்தெழுந்து (ரு0)

51. நீலநிறச் சேவறன்னை நித்தங்கை யிற்பிடித்துக்
கோலமயி லேறுங் குமரேசா - சால

52. மிடிதீர்த் தமரர்தமை மிக்கதெய்வ லோகங்
குடியேற்றி வைத்தகும ரேசா - படிபுகழுஞ்

53. சந்திர சேகரர்க்குந் தையல் சௌந்தரிக்கும்
சிந்தைகளி கூரவந்த சேயனே - யந்தமுயர்

54. மான்மருகா கங்கை மகனேவேண் மைத்துனனே
வேன்முருகா யாவருக்கு மெய்ப்பொருளே - கான்சே

55. ரொருமான் மகடனுட னுற்றதெய்வ மங்கை
யிருமாத ருக்கு மிறைவா - கருணைதரு

56. மும்மூர்த் திகடமக்கு மூர்த்தியே நால்வேதச்
சிம்மா தனத்திருக்குந் தேவனே - செம்மைமிகு

---

44. கமலமாது - திருமகள்; 46. அண்டர் - தேவர்; 48. தாடாண்மை - முயற்சி; 49. அதிர் - நடுங்குதற்குக் காரணமான; 51. சேவல் - கோழி; 53. அந்தம் - அழகு; 54. மைத்துனன் - விளையாடுதற்குரியவன்.

57. மஞ்சு முகனுதவு மாறுமுக னேயேழு
மஞ்சுலவு மங்கை மலையோனே - ரஞ்சிதமா

58. யெட்டானைக் கொம்பைநெஞ்சி லேற்றிரத்னப் பந்திகளைத்
திட்டமுட னேயழுத்துஞ் சேவகத்திற் - கெட்டியெனும்

59. பத்துமுடி ராவணனைப் பட்டுருவ வாளிதொட்ட
கத்திரிகை யோன்மருகா காவலனே - யுற்றுநினை

60. தன்னந் தனித்தவர்க்குஞ் சாலப் பசித்தவர்க்கும்
அன்னங் கொடுத்தா தரிப்பவனே - யிந்நிலத்திற் (௬0)

61. கார்த்திகைநட் சத்ரங் கருதுவோர் சஞ்சலத்தைத்
தீர்த்துப் பலன்பெருகச் செய்பவனே - சாற்றரிய

62. சட்டி விரதந் தனையநுட்டிப் போர்கடமை
மட்டில்லாப் பாக்கியத்தில் வைப்பவனே - திட்டமுடன்

63. சோமவா ரத்தைத் துதிப்போர்க டம்மனதி
னேமமத னைக்கொடுக்கு நேயனே - பூமிபுகழ்

64. வெள்ளிக் கிழமை விரதமுற்ற பத்தர்கள்தம்
உள்ளத்தி லேயிருக்கு முத்தமனே - துள்ளுந்

65. தந்தி முகம்படைத்துச் சப்பாணி யாயிருக்குந்
தொந்திவயிற் றோனுக்குச் சோதரா - சந்ததமுஞ்

66. சித்தசனார்க்குந் திசைமுகனுக் குஞ்சிறந்த
மைத்துனனா வந்தமயில் வாகனா - வெத்திசைக்கும்

67. வீறுதிருச்செந்தூர் மிக்கபரங் குன்றமுத
லாறுபடை வீட்டுக் கதிகாரா - நீறணியும்

68. அக்கினிக்கண் ணான்கைலை யம்பதியா மீசனருள்
கைக்கனிக்குச் சுற்றிவருங் காங்கேயா - திக்கடவி

69. மானுக்கும் பூமிமட மானுக்குஞ் சீதையெனு
மானுக்கு மிக்க மருகனென்றே - மீனமதித்

57. அஞ்சுமுகன் - ஐம்முகனாகிய சிவபெருமான், ஏழு மஞ்சு - ஏழு வகை மேகங்கள், ரஞ்சிதம் - அழகு. 58. சேவகம் - வீரம்; 61. சஞ்சலம் - மனத்தடுமாற்றம்; 63.நேமம் - நியமம்; 65. சப்பாணி - நொண்டி, சோதரன் - சகோதரன், சந்ததமும் - எப்பொழுதும்; 68. காங்கேயன் - கங்கை மகன்.

முருகப் பெருமானைச் சந்தித்து வேண்டுதல் 70-88

70. தேரடியி னின்றிதெல்லாஞ் செப்பினேன் கேட்டு வெற்றிக்
கூரியவேற் கையார் குமரேசன் - பார (எ0)

71. இடும்பேச னைக்கூவி யிப்பொழுதே சென்றங்
கடிவாரத் தேயொருவ னாரோ - திடமாகப்

72. பன்னுதமிழ் நம்மேற் பகர்கின்றா னீவிரைந்தே
யன்னவனை யிங்கே யழையெனவே - சொன்னவுடன்

73. றாக்கிடும்பன் வந்துன்னைச் சண்முகவ ருத்தாரம்
வாக்குரைத்தார் நீயுமின்று வாவெனவே - பாக்யமெனச்

74. சென்றே னவர்பாற் சிகண்டிமலை யாதிபனைக்
கண்டேன் மனது களிகூர்ந்தேன் - கொண்டாடித்

75. தோத்திரங்கள் செய்தேன் சுகந்தங்கள் வீசுதிருக்
காத்திரத்தைக் கண்டேன் கருணையுடன் - போற்றரிய

76. செந்தா மரைத்தடமுந் திவ்யகரம் பன்னிரண்டும்
சந்த்ரோ தயம்போலச் சண்முகமும் - விந்தைபெறுஞ்

77. சேவற் கொடியுஞ் சிறந்தமயில் வாகனமு
மூவர்மன மெச்சு முனைவேலுந் - தேவர்மட

78. மாதுவள்ளி யம்மை மகிழ வினிதிருக்குங்
கோதறுதேன் வாயான் குமரனையென் - றீதறவே

79. கண்டேன் மனத்திற் கவலை வறுமையெல்லாம்
விண்டே னெனதுடலம் விம்மினே - னண்டர்பணி

80. கந்தா! கடம்பா! கதிர்வேலா! கங்கைபெற்ற
மைந்தா! மயூர கிரிவாசா! - நந்தாக் (அ0)

81. கருணைக் கடலே! கனிந்துருகிப் பாடு
மருணைகிரி நாதர்க் கருள்வோய் - திருவிருக்கும்

*73.* உத்தாரம் - அனுமதி; *74.* சிகண்டி மலை - குன்றாக்குடி மலை, ஆதிபன்- தலைவன்; *75.* காத்திரம் - உடம்பு; *79.* விம்மினேன் - பூரித்தேன்; *80.* நந்தா - குறையாத.

82. பூங்கொடியாள் வள்ளி புனத்துக் கொருநிழலாய்
வேங்கைமர மாகிநின்ற வேலோனே - பூங்கமலத்

83. தண்ணலை வன்சிறைக்குள் ளாக்கிவைத்தாய் சூரைவென்று
விண்ணவர்க்கு மிக்கசிறை மீட்டுவந்தா - யண்ணலுக்கு

84. நன்னயமா கச்செவியி னற்பிரண வப்பொருளைச்
சொன்னவனே சூழுஞ் சுடரொளியே - என்னையின்று

85. காப்பாற்ற வேண்டுமென்றேன் கந்தர்திரு வாய்மலர்ந்து
வாய்ப்பா யுரைத்ததமிழ் வாணனே - தாப்பாயுன்

86. ஊரையும்உன் றந்தை யுயர்பே ரையுமுன்றன்
பேரையுஞ்சொல் லென்றார் பிரியமுடன் - சீர்பெறவே

87. விற்பனஞ் சேருணை வீரபண்டா ரத்தின்மகன்
சுப்பிர மண்யனென்று சொன்னேனா - னப்போதி

88. லிந்தநகர்க் குன்னூ ரீரைங்கா தங்கடந்து
வந்ததென்ன வென்று வழுத்தினார் - சந்ததமும்

புலவன் தன் வறுமைநிலை பற்றி உரைத்தவை 89-109

89. போகா வறுமை புலிபோல வென்னுயிரும்
பாகாருந் தன்மைப் பசுபோல - வேகமுறும்

90. துன்பக் கருடனுடன் றோயரவ மென்னுயிரு
மின்பமணு வத்தனையு மில்லாமன் - முன்புகண்ட (கூO)

91. நச்சரவைப் பாய்ந்து நடனமிடுந் தோகைமயில்
பச்சோந்திக் கஞ்சும் பழைமையைப்போன் - மெச்சுசெல்வ

92. மில்லா வறுமையினா லில்லாண்முன் வாய்பேசச்
செல்லாம னெஞ்சந் தியங்கியே - நல்லோர்கள்

93. கூடுசபைக் கேகமனங் கூடாம லேவிரைந்தே
யோடி யொளித்தே னுறுகணால் - வாடுவதால்

94. நாடுதொறுஞ் சென்று நடந்தலுத்துப் பேர்கேட்டு
மூடர்களைப் பொல்லாத மூர்க்கர்களைப் - பாடுதமிழ்க்

---

*82-83.* பூங்கமலத்து அண்ணல் - பிரமன்; *85.* தாப்பாய் - தெளிவாக; *87.* விற்பனம் - ஆற்றல்; *88.* காதம் - *10* கல் தூரம்; *90.* அரவம் - பாம்பு.

95. கீயாரைச் சார்ந்தோர்க் கிடுக்கண்செய் வோரைமிகத்
தீயாரை மாறாச் சினத்தோரைப் - பேயான

96. சண்டாள ரைப்புரட்டுச் சல்லியரை யேழைமுகங்
கண்டிரங்கா உலுத்தக் கயவர்களைக் - கொண்டாடிக்

97. காமனென்றுஞ் சோமனென்றுங் காண்டிபனென் றும்பலத்தில்
வீமனென்று மிக்க விதுரனென்றும் - பூமிபுகழ்

98. தென்னனென்று மிக்க திருமாலென் றுங்கொடைக்குக்
கன்னனென்றுஞ் செல்வக் கனகனென்று - நன்னயஞ்சேர்

99. மேருவென்றுங் கொண்டலென்றும் வேண்டியதெல் லாங்கொடுக்குந்
தாருவென்றும் பாடிச் சலித்தலுத்துச் - சீருயர்ந்த

100. மஞ்சரியு மோர்பணமாய் வண்ணமுக் காற்பணமா
யஞ்சுபதம் பாடி யரைப்பணமாய் - மிஞ்சியகூத் **(௫OO)**

101. தாட்டுக் கிசைநா டகத்துறைக் கோர்பழைய
வேட்டியாய்ப் பத்து விருத்தமுடன் - சீட்டுக்

102. கவிக்கோவோர் நாள்வயிற்றுக் கஞ்சியாய் வெண்பா
செவிக்கினிய முத்தமிழுஞ் சேரப் - புவிக்குளொரு

103. பாக்குக்கும் வெற்றிலைக்கும் பாவிகளைச் சொற்புகலச்
சாக்குக்கும் பாடிச் சலப்பாகி - நாக்குலர்ந்து

104. ஏடும்புண் ணாகியெ ழுத்தாணி யுந்தேய்ந்து
பாடுமன மும்பரி தவித்தே - யேடெழுதிச்

105. சுண்டுவிர லுங்காய்த்துத் தொண்டைகம்மல் பாடியதாற்
கண்டதல்லா லோர்பலனுங் கண்டிலேன் - வண்டரவர்

106. செப்புமுலை வேசையர்க்குந் தீக்குந் திருடருக்குந்
தப்புமுன்னே கட்டித் தலைக்கீழாய் - மெய்ப்பூஞ்ச

107. லாட்டுவார்க் குஞ்சவுக்கோ டைந்து மணிக்கயிற்றின்
மூட்டுவார்க் குங்கொடுப்பர் மூடரவர் - பாட்டினர்க்குச்

---

*96.* சல்லியர் - கீழ் மக்கள், உலுத்தன் - மட்டமானவன்; *97.* காண்டிபன் - அருச்சுனன்; *98.* தென்னன் - பாண்டியன், கனகன் - குபேரன்; *99.* கொண்டல்-மேகம்; *100.* மஞ்சரி, வண்ணம், பதம் - பிரபந்தவகை; *104.* பரிதவித்து - வருந்தி; *106.* செப்பு - சிமிழ்.

108. செய்யா ரினியிவர்பாற் செல்வதினிற் சாரமில்லை
ஐயா வெனைநீநன் காதரித்துத் - தொய்யாமற்

109. காவென்றே னப்பொழுது கந்தர்திரு வாய்மலர்ந்து
வாவென்றென் னோடு வசனிப்பார் - மேவியநீ

110. யென்பாலுன் பாட்டை யியம்பினாய் வண்புலவா
வுன்பாலென் பாட்டை யுரைக்கக்கே - ணம்பாவென் (கக0)

முருகப் பெருமான் புலவனிடம் கூறியன 110-172
தந்தையார் பெருமை 110-123

111. தந்தையுமோர் பெண்ணைச் சடையில்வைத்தா ரச்சடையி
லந்தமிலா வூமத் திலையணிந்தார் - முந்த

112. விடுகாட் டெலும்பை யெடுத்தணிந்தா ரன்றிக்
கடுவா யரவுகழுத் திட்டார் - திடமொடுறுந்

113. தொண்டர்தமை யுண்டார் சூழ்ந்தகடல் நஞ்சையுண்டார்
கண்டிருந்தும் பிள்ளைக் கறியுண்டார் - கொண்டாடிச்

114. சீர்வேட னெச்சிலுண்டார் தின்றதெல்லாம் பற்றாமல்
ஈரேழு லகுமிரந் துண்டார் - பாரறியப்

115. பிட்டுக்கு மண்சுமந்தார் பின்னே விறகுவிற்றார்
மட்டுக் கடங்கா வளையல்விற்றார் - திட்டமுடன்

116. வில்லடியும் பட்டார் விசையனங்கை யாலொருவன்
கல்லடியும் பட்டுடம்பு கன்றினார் - நன் மதுரை

117. மாறன் பிரம்படியும் வாங்கினார் பால்தனக்காய்
வீறிடையன் கையரிவாள் வெட்டுண்டார் - கூறரிய

118. சூலாயு தம்படைத்தார் தொல்வேடன் றன்செருப்புக்
காலா லுதைக்கக் கனிந்திருந்தார் - சீலமுடன்

119. மாடெடுக்கப் பெற்றார் மருட்கொண்டார் தில்லைதனி
லாடெடுத்தா ரென்றுபெய ராயினார் - தாடாண்மை

---

*109*. வசனிப்பார் - உரையாடுவார்; *110*. பாடு - துன்பம், பாட்டை - துன்பத்தை; *112*. இடுகாடு - சுடுகாடு, கடுவாய் - விஷம் பொருந்திய வாய்; *116*. கன்றினார் - புண்பட்டார்; *117*. மாறன் - பாண்டியன்; *119*. மாடு எடுத்தல் - மாட்டு வாகனம் ஏறல், காளை வாகனத்தால் சுமக்கப்பட்டார், ஆடு எடுத்தார் - நடனமாடினார்.

120. யும்பர்தொழுங் குற்றாலத் தூரி லுயர்ந்திருக்குங்
கும்பமுனி கையாற் குறுகினார் - செம்பதும (கஉ_0)

121. வேதன் சிரசிலொன்றை வெட்டினார் மன்மதனைப்
பாதாதி கேசமெல்லாம் பார்த்தெரித்தார் - சூதாய்த்தேர்

122. வண்டிக்கா லிற்சோமன் மைந்தனையும் போட்டரைத்தார்
சண்டனெனு மேமன் றனைவதைத்தார் - சென்றெதிராய்

123. முப்புரத்தை வென்றகதை மூவுலகி லுள்ளவர்கள்
செப்புகின்றார் கேட்டாற் சிரிப்பாமே - யிப்படியென்

என் தாயார் பெருமையைக் கேள் 124-129

124. தந்தை பிரபலங்கள் தாயார் வளப்பமதை
யுன்றனுக்குச் சற்றே யுரைக்கக்கேள் - பிந்தாமல்

125. அம்பலத்தி லாடினா எம்புவிக்குந் தாயானாள்
கம்பநதி யிற்றவசு கைக்கொண்டாள் - கும்ப

126. முலைகளுமூன் றானாண் முனைப்புலித்தோல் போர்த்தாண்
மலையரைய னுக்குமக ளானாள் - பலவலைஞர்

127. சாதியிற்சேர்ந் தாள்சத்தி தானென்றா ளம்மலைமேல்
தீதறவே வீற்றிருக்குந் தேவியந்த - மோது

128. முருமாறி யேகுறத்திக் கொப்பாகச் சென்று
கருமாறி யேகைக் கொடுத்தாள் - பரிவாகச்

129. செல்லாயி ரங்கோடிச் சீவர்க் கிருநாழி
நெல்லாற் படியளந்த நீலியென்பர் - சொல்லுவதென்

என் தமயன் செய்தியைச் சொல்கிறேன் கேள் 130-133

130. தந்தைபட்ட பாடனைத்துந் தாயார்க்குண் டேபுலவா
வென்றமையன் செய்தி யியம்பக்கேண் - முந்தவன்னை (கரு_0)

131. தந்தைக்கு முன்பிறந்தார் தந்திமுக மாயினார்
விந்தைப் பெருச்சாளி மேற்கொண்டார் - முந்த

132. வாதக்கா லானார் வயிறு பெரிதானார்
பாதைகுளம் வீதி பலவிடங்கண் - மீதிருந்தே

---

*120*. கும்பமுனி - அகத்தியர்; *122*. சோமன் மைந்தன் - சந்திரனாகிய இளையவன்; *125*. அம்பலம் - சபை; *128*. கருமாறி - பிறவிப்பிணி தொலைந்து; *131*. முன்பிறந்தார் - மூத்தப் பிள்ளையாகப் பெற்றார், தந்தி - யானை.

133. யன்னையைப்போற் பெண்டேடி யாயாச மாய்மனதி
லுன்னி மரத்தூரி லுட்கார்ந்தார் - பின்னையென்றன்

என் மாமன் செய்தியைக் கேள் 134-154

134. மாமன்வர லாற்றை வழுத்தக்கே ளுந்திதனிற்
பூமனையும் பெற்றார் புவிபுரக்க - நேமி

135. பதித்தார் துளசி தனையணிந்தார் பாம்பை
மிதித்தார்பா லாழிமேன் மெள்ளக் - குதித்தோர்

136. ஆலிலையின் மேற்றுயின் றாவையுமே யோட்டிவருங்
கோலிலையும் பள்ளிகொண்டார் கூசாமற் - சால

137. மனையாளை நெஞ்சில்வைத்தார் மாமோ கினியா
யெனையீன் றவரோ டிணங்கிக் - கனமாய்

138. அரியர புத்ரனென்றே யாண்பிள்ளை பெற்றார்
தெரியாத பேர்களுண்டோ? செப்பும் - பெரியதொரு

139. ஆடகனைக் கொன்றங் கவன்குடலை மாலையிட்டுக்
கூடிருக்க ரத்தங் குடித்துவிட்டார் - கோடியெனு

140. மாய்ச்சிமுலைப் பாலையுண்டார் ஆவலடங் காமற்
பேய்ச்சிமுலைப் பாலும் பிடித்துண்டா - ராய்ச்சியர்கள் **(கசO)**

141. பாடிதனி லுள்ளோர் பாற்பொங்க லிட்டதெல்லாங்
கூடியுண்டார் பாற்றயிருங் கொள்ளையுண்டார் - நாடறிய

142. மண்ணையுண்டார் பாடி மடவா ரறியாமற்
கண்மருட்டி யாடை களவாண்டார் - வண்மைக்

143. குருந்தேறிக் கொண்டார் குதிரைகிடை யாமற்
பருந்தேறிக் கொண்டார் பகட்டாய் - வருந்தாமல்

144. காய்ச்சியபா றன்னைக் களவாண்டு தம்முடைய
வாய்ச்சிகையாற் கட்டுண் டடியுண்டார் - கூச்சமின்றி

145. ஆடவராய் மிக்கபதி னாறா யிரமாதர்க்
கூடியே மிக்க களிகூர்ந்தார் - மோடிசெய்து

*133.* தூர் - அடி; *134.* பூமன் - பிரமன்; *135.* பாம்பு - காளியன்; *136.* கோல் இல்லையும் - குறிப்பிட்ட இருப்பிடத்திலும்; *139.* ஆடகன் - இரணியன்; *143.* பகட்டாய் - பெருமையாய்.

146. மாமனையுங் கொன்றுவிட்டார் வஞ்சகமா யண்ணனையும்
பூமிப்பிர தக்ஷணமாய்ப் போகவிட்டார் - நேமி

147. பானு தனைமறைத்தார் பார்த்தனுக்குத் தேரோட்டிக்
கானிலுறை ஐவரையுங் காத்திருந்தார் - மேன்மையுடன்

148. சொல்லவொணா வஞ்சத் துரியோத னாதிகளைக்
கொல்ல வகைவிவரங் கூறினார் - சொல்லுவதென்

149. பாரினி லேபுரட்டுப் பண்ணியநிஷ் டூரமெல்லாம்
யாருமறி வார்களது வல்லாமற் - சீர்கிழவிக்

150. கூனு நிமிரக் குறித்தெய்தார் மாரீசன்
மானையெய்தார் தென்னிலங்கை வாழரக்கன் - சானகியைக்
(கருO)

151. கொண்டேக மிக்கசிறைக் கோலமுற்ற பெண்ணைநத்திச்
சென்றழைத்துக் கொண்டவகை தீராதே - வண்டரன்று

152. நாட்டிவருக் கொட்டாம னற்சிறுதா யார்வனத்தி
லோட்டிவிட்டார் கண்முன் றுலகறியப் பூட்டகமா

153. வஞ்சகப்போ ராய்மறைந்து வாலியைக்கொன் றார்காட்டிற்
றஞ்சமற்ற பெண்பிளையைச் சங்கரித்தார் - ரஞ்சிதமாய்க்

154. கல்லைப்பெண் ணாக்கிவிட்டார் காலாந் திரன்செய்தி
சொல்லத் தொலையாதே சொற்புலவா - நல்லதினி

என் செய்தியைச் சொல்கிறேன் கேள் 155-172

155. யென்றனியற் செய்தி யியம்பக்கேள் யாவருக்குங்
கந்தனென்று பேரானேன் கள்வரைப்போன் - முந்தமுந்தக்

156. கோழி பிடித்தேன் குறத்திதனை மாலையிட்டேன்
பேழை வயிற்றனுக்குப் பின்னானே - னீள்கூந்தல்

157. வேடிச்சிக் காய்வனத்தில் வேங்கைமர மாகிமயல்
வாடிக்கை மாதருக்கு மாலானே - னாடறியத்

---

*147.* பானு - சூரியன்; *149.* நிஷ்டூரம் - கொடுமை; *152.* பூட்டகமா - மதிப்பு அற்றதாக, இளப்பமான வேலை; *153.* பெண் பிள்ளை - தாடகை, சூர்ப்பணகையும் ஆம்; *156.* பேழை - பெட்டி, பின் - தம்பி.

158. தந்தைக் குபதேசஞ் சாற்றினே னப்பனுக்கு
விந்தைக் குருக்களென்றார் மேதினியோர் - தந்தைவெகுண்

159. டானாலும் பிள்ளை யதிகப்ர சங்கியென்று
மீனாக்கி யேகடலில் விட்டுவிட்டார் - நானிலத்திற்

160. றேர்பிறவி யானேன் சிவிகைதனி லேறுவர்முன்
கூர்மயின் மீதேறிக் கொண்டிருந்தேன் - சாரமாய் (கசா0)

161. வெண்ணீ றணிந்தேன் மிகுகடப்பந் தாரணிந்தேன்
கண்ணீரா றானேன் கருணையுடன் - பண்ணுகவிக்

162. காம்புலவா கேட்டிலையோ வாண்டி தனையடித்தாற்
சாம்பர் பறக்குமென்பார் தாரணியின் - மாம்பழத்துக்

163. காகவே நான்கைலை யம்பதியைச் சுற்றுமுன்னே
தாகத்தா லென்றமையன் றந்தைதனை - வேகமாய்ச்

164. சுற்றி யடிபணிந்து சூதக் கனியதனைப்
பற்றிக்கொண் டார்நான் பதறியே - மெத்த

165. வருகோபத் தாலே மாதாபி தாவைவிட்டுத்
திருவாவி னன்குடியிற் சென்றேன் - பரிவாக

166. அன்னைவந்தா ளென்னை யழைத்தா ளொருதரமே
யென்னபிள்ளாய் செய்த குறையென்ன - முன்னஞ்

167. சகிப்பா ரிலையா தமையன் புசித்தாற்
பகைப்பாரோ மாம்பழமோ பாரந் - தெகிட்டாப்

168. பழநி யெனவே பகர்ந்தா ளதனாற்
பழநியென்றும் பேரானேன் பண்பாய் - விழவார்

169. மலைவா யலைவாயில் வாழ்க்கையுற்றேன் பின்னுஞ்
சொலல்வேண்டு மென்றாற் றொலையா - நிலையிருப்பு

170. வேலொழிய வென்கையில் வேறுபொரு ளுண்டானாற்
சாலவுரைப் பாய்நான் றருகிறேன் - ஞாலமிசை (கஎ0)

---

161. கண்ணீராறானேன் - கண் + ஈர் + ஆறு ஆனேன்; 164. சூதம் - மா.

171. பங்கமில்லை நாங்கள்பட்ட பாடெல்லா முன்னிடத்தில்
சங்கதியாய்ச் சொன்னேன் றமிழ்ப்புலவா - வெங்கள் பிழைப்

172. பிப்படியெல் லாமிருக்க வென்பாலில் உன்றுயர
மெப்படிச்சொல் வாயென் றியம்பினா - ரப்போது

புலவன் முருகப் பெருமானிடம் வேண்டியது 173 - 179

173. உரல்மத் தளத்திடைப்போ யுற்றதுயர் சொன்ன
வருமைக் கிணையென் றதிசயித்துக் - கருணையுடன்

174. தாமரைசூழ் வாவி தனிற்போன வண்டுகஞ்ச
மாமதுவைத் தானுமுண்ணா மற்போமோ - நேமியினான்

175. மாலுக்கா கப்பயந்து வந்துதஞ்ச மென்றுசொல்லச்
சீலக் குருச்சேத் திரன்றனக்காய் - ஞாலமிசைத்

176. தாராரு நீள்விசயன் றாமோ தரனுடனே
போராடிக் காத்ததுவும் பொய்யலவே - சீர்முனியைக்

177. காக்கும் வகைக்கரனார் காலன் றனையுதைத்து
மார்க்கண் டனைக்காத்த வாறுபோற் - றீர்க்கமுட

178. னென்னை யடர்கலிக ளெல்லாந்தீர்த் துப்பவிஷூ
தன்னைக் கொடுப்பாய் தயாபரா! - வன்னை தெய்வம்

179. நீயே யெனக்கல்லா னீடுகதி யில்லையென்றேன்
மாயோன் மருகன் மனமகிழ்ந்து - நேயமுடன்

கவிஞனிடம் திருமுகம் தந்த வரலாறு 180-221

180. தன்மைய தாமோ தமக்குவந்த கார்யமதிற்
பின்னுக்கு வாங்குவரோ பேருலகி - னன்னயமாய் (கஅ0)

181. மிக்கசன மாய்த்தனது வீட்டில் விருந்துவந்தாற்
பக்கத்திற் றள்ளுவதும் பண்பலவே - யக்கதைபோல்

182. நம்மா லழைத்தகவி நாவலா வுன்னைநான்
சும்மா விடாமலொன்று சொல்லக்கே - ணம்மடியார்

183. பார்த்திவர் காவிரிப்பூம் பட்டினத்தின் முன்வைசியர்
கோத்திரத்தின் மிக்க குபேரனைப்போல் - வீற்றிருக்கு

174. நேமி - சக்கராயுதம்; 176. தாமோதரன் - கண்ணன்; 178. கலிகள் - வறுமைகள், பவிஷு - கௌரவம்.

184. மந்நாளிற் பாண்டிநகர்க் கானகுடி வேண்டுமென்று
தென்னாடன் றேசிகர்பாற் சென்றுரைத்து - முன்னான

185. மெத்த வுபசாரம் வேண்டுவதெல் லாமுரைத்துச்
சித்தந்தி ரும்புதற்குச் செய்திசொல்லிச் - சத்தியமாய்த்

186. திங்கள்கதி ருள்ளமட்டுந் தேசிகரே யென்னாட்டில்
உங்கண் மரபிற் கொருகாலும் - பங்கம்

187. வரவொட்டே னென்று வலதுகை யைக்கொடுத்தே
யிரவியொளி ரதத்தி லேற்றிப் - பரிவாய்

188. வளமையுட னழைக்க வந்தே நலமா
யிளைசைமா தைப்பதி யிருந்தார் - களிகூர்ந்தே

189. அஞ்செழுத்தை யுட்செபிப்போ ரல்லும் பகலுமெனை
நெஞ்சில்விட்டு நீங்காத நிண்ணயத்தார் - ரஞ்சிதமாய்த்

190. திருமாற் கடிமைசெய்வோர் தெய்வமெல்லா மொன்றென்
றுரிமையுடன் போற்றிவளர் வுற்றோ - ரிருநிதியம் (கக௯0)

191. வேண்டினா ருக்குதவி மிக்ககனத் தைப்பெற்றோர்
பாண்டிநா டாள்வோன் பதம்பணிவோர் - நீண்டபுகழ்த்

192. தேசாதிபர் புகழுஞ் செய்ய திருப்புனவை
யாசானழக ரடிபணிவோர் - நேசமுடன்

193. அன்னைதந்தை தெய்வமுத லாசானைப் போற்றுதலாய்
மன்னவரைக் கூட வணங்காதார் - முன்னுயர்ந்த

194. மேருகிரி யுரைத்தும் வேழந் தனைநிறுத்தும்
பேருலகின் மிக்கான பேரானார் - யாரு

195. மதிசயிக்கக் காவேரி யாறுதனைப் பஞ்சுப்
பொதியா லடைத்தபுக ழாளர் - மதியாற்

196. கடலி லெறிந்தபொன்னைக் காசினியோர் தாமெச்
சிடவழைத்த வேலேல சிங்க னெடுங்கிணற்றில்

---

189. நிண்ணயம் - உறுதி.

197. வீம்புக்குத் தம்வீட்டில் வெள்ளாட்டி பாற்சவடி
தாம்பிட்டு நீரிறைத்த தாஷ்டியர்க - டேம்பவே

198. கல்யாண வாயிலிலே காவணக்கா லுக்குயர்ந்த
நல்பவளக் காலதனை நாட்டினோர் - வல்லிரவில்

199. மற்கதவு வெள்ளிதனை வாங்கிவிட வக்கணமே
பொற்கதவு நாட்டிப் புகழ்படைத்தோ - ரிப்புவியில்

200. சீரகப்பூந் தாரணிந்தோர் சிங்கக் கொடிபடைத்தோர்
காரிணையாச் செம்பொன் கவிக்கீவோர் - பார்புகழுங் **(உ00)**

201. கத்த னிளைசைக் கைலாய நாதரையும்
நித்தியக்கல் யாணியையு நெஞ்சில்வைப்போர் - நத்தினரை

202. யாட்கொண்ட நாதருட னாஞ்சிவபு ரத்தேவி
தாட்கமலம் போற்றிவளர் தாட்டிகர்கள் - வேட்காம்

203. வடிவாரும் பேட்டை வளரொளியோர் மிக்க
வடிவுடையா ளைப்பணியு மாண்பார் - படிபுகழுந்

204. தெள்ளூ தமிழ்சேர் திருவேளூர்க் கற்பகமாம்
பிள்ளை யாரைப்பணியும் பேராளர் - அள்ளிநிதி

205. செய்யு நியமச் செயங்கொண்ட சோழீசர்
தையல் சௌந்தரியைத் தாள்பணிவோர் - வையமகிழ்

206. பூவுடைய வூரிற் புகழ்தே சிகரடியோர்
பாவுடைய மாதி னடிபணிவோர் - தேவர்புகழ்

207. வேலி னமரின் மிகுத்தகண் டீசரொடு
சாலவுங்கா மாட்சியிரு தாள்பணிவோர் - மேலிப்பை

208. தான்றோன்றி யீசரையுஞ் சங்கரியை யும்போற்று
மான்மதஞ்சே ருந்துளவ மார்மார்பர் - தேன்சிறந்த

209. மாதைப் பதியில் வளருமைஞ்நூற் றீசர்மகிழ்
காதல் பெரியவளைக் கைதொழுவோர் - சாதகமாய்

208. மான்மதம் - கஸ்தூரி.

210 ராசசிங்கம் வாழ்பூமி நாதர்சிவ காமியையும்
நேசமுடன் போற்றி நிறைந்திருப்போர் - வாசனையாய் (உ௲0)

211. நானிலத்தோர் கொண்டாட நம்மிடத்தின் மிக்கவன்ன
தானமடங் கட்டிவைத்த தாளாளர் - மேன்மைத்

212. திருவாவி னன்குடியிற் சென்றெதிர்த்த பேர்க்குத்
தருவாய்க் கொடுக்குமன்ன தான - ரிருநிதிய

213. நாடறியப் பூவிலகி னான்முந் திரிதேடிக்
கோடியளிக்குங் கொடையாளர் - தேடிநிதி

214. மாயேஸ் வரர்பூசை மாறா தரிபூசை
சேயார்மும் மூர்த்தி பிரதிஷ்டை - மாயாத

215. வூருணிகள் கூபமிவை யுண்டுபண்ணி மிக்கதர்மந்
தாரணியிற் செய்திட்ட சற்புருஷர் - வாரஞ்

216. சிகரத்தி லேற்றிவைத்த தீபம்போ லேழு
நகரத்தார் யாரு நமதடியார் - மிகவவர்கள்

217. வீர ருனைக்காக்க வேண்டித் திருமுகமுந்
தாரே னவரிடத்திற் றான்சென்று - பூரணமாய்க்

218. கனகவணி கேசரிரு கையிற் றிருமுகத்தை
மனமகிழ வீவாய் வணிகேச - ரனைவர்களுங்

219. குன்றாக் குடியிற் குமரர் திருமுகத்தைக்
கண்ட வுடனே களிகூர்ந்து - கொண்டாடி

220. உன்னை யடர்கலிக ளோடக் கனகநிதி
தன்னைக் கொடுத்தா தரிப்பார்க - ளிந்நேரஞ் (உஉ0)

221. செல்லுவா யென்று திருமுகந்தந் தென்னை
யல்ல லறவிங் கனுப்பினார் - நல்லதென்றே

திருமுகம் பெற்ற புலவன் நிலை 222-237

222. யிங்கிதமாய் மெய்கூர்ந் தினிதாய் நடந்துகொற்ற
மங்கலத்திற் சென்றேன் வணிகேசர் - சங்கதியாய்க்

---

*211.* தாளாளர் - உழைப்பாளர், ஊக்கமுள்ளோர், வைசியர்; *213.* முந்திரி - சிறு நாணயங்கள், முந்திரி தேடிக் கோடி - நான்கு சின்ன நாணயங்களைக் கூட முயன்று தேடிக் கோடி கொடுப்பார்; *215.* ஊருணி - பெரிய கிணறு, கூபம் - கிணறு.

223. கூடி யுலகாயி கோயிலுக்கு நேர்வடக்காய்
நாடி விடுதிக்கு ணன்னயமாய் - நீடிவளர்

224. மாவுக்கு மேற்காய் வணிகேச ரெல்லாருங்
காவணத்துக் குள்ளிருந்தார் கண்டேனான் - பூவணத்த

225. இந்திரனைப் போலிருந்த வேழுநக ராதிபர்க்குக்
கந்தர் திருமுகங்கை யிற்கொடுத்தே - னந்தமுடன்

226. வித்தாரக் கைவாங்கி வேலர் திருமுகத்தை
வைத்தார் சிரசில் வணிகேச - ருற்றுநான்

227. குன்றாக் குடியிற் குமரர்பா லென்றுயரை
விண்டதுவு மென்னிடத்தில் வேலவரும் - பண்பாய்ச்

228. சலிப்பை யுரைத்ததுவுஞ் சாகரந்தான் சுட்டாற்
கலக்கச் சலமுண்டோ கந்தா - நலத்துடனே

229. யென்கவலை தீரவகை யென்னவென்று கேட்டதுவும்
வன்மைக் குபேர வணிகருக்கா - யன்பாந்

230. திருமுகத்தைத் தந்ததுவுஞ் செப்பினே னப்போ
மருவுநிதி மிக்கவணி கேச - ரொருமையுடன் **(உ௩0)**

231. வந்த திருமுகத்தை வாசித்தா ரப்போது
சிந்தைமகிழ்ந் தேயஞ்சல் செப்பினார் - கந்தமலர்

232. வேணு நிதியீந்தார் மிக்கவஸ்தி ரங்கொடுத்தார்
பூணுமெனத் தங்கநகை பூட்டினா - ரூணுறவா

233. யுண்டிருக்க நெற்கொடுத்தா ரூரும் பலவாகக்
கண்டிருக்க மெத்தக் கனஞ்செய்தார் - கொண்டாடித்

234. திட்டமுட னேவணிகர் செய்யுங்கல் யாணமதிற்
கட்டளையா யோர்பணமுங் கண்டெழுதிச் - சட்டமுடன்

235. சாதனமுந் தந்தார் சஞ்சலமெல் லாந்தீர்த்தார்
மாதனவா னாகவென்னை வாழ்வித்தா - ராதலினாற்

228. சாகரம் - கடல்; 231. அஞ்சல் - அபயம்; 232. வேணும் - தேவையான, பூணும் - அணியத்தக்க.

236. றுங்கமலை யான்வாழி! துய்யதமி ழோர்வாழி!
யெங்கும் படியா ளிறைவாழி! - மங்களமாய்

237. வாழுகும ரேசர் மகராசர் தென்னிளைசை
யேழுநக ரார்வாழி யே. (உ௩௭)

### முருகப் பெருமான் பிறப்பும் பாலப்பருவமும் 1-43

கங்காதரனான சிவபெருமான் சூரபதுமனுக்கு ஐயுறவு இல்லாத நல்வாழ்வினை அளிக்கவே, அவன் தேவர் முதலியவர்களுக்குத் துன்பம் செய்ததனால் இந்திரனிடம் தேவர் முதலியவர் பலரும் சென்று கூடி, பூக்களை அம்புகளாகச் சொரியும் மன்மதனைச் சிவபெருமானிடத்தில் சென்று தேவர்களின் துயரம் தூளாய்ப் பறந்து ஒழியுமாறு எம் வேண்டுகோளைத் தெரிவிப்பாய் என்றனர். மன்மதன் சிவபெருமான்பால் சென்றான். தேவர்கள் சொல்லிய செய்திகளை எல்லாம் சிவபெருமான் திருமன்னர் நின்று மன்மதன் சொல்லவில்லை. தன்னிகரில்லா மன்மதன் மலர் அம்புகளைச் சிவபெருமான் மீது மழை போலத் தூவினான். சிவபெருமான் மன்மதனைத் தீய செயலோன் என்று கருதி மன்மதனை எரித்திடவே, தனு மரபினரும் தேவரும் முனிவர்களும் தம் இருப்பிடம் விட்டு ஓடி ஓர் எல்லை வரைச் சென்று அனைவரும் கூடித் தம் அரசனான இந்திரனைக் கூடும் முன்பு, அக்கினியின் செயலை நோக்குவோம். அக்கினி சப்தரிஷிகள் மனைவியர் பால் காம மயக்கம் கொண்டு தன் இருப்பிடம் அடைந்து உணவு உண்ணாது வருந்தியிருக்க, அவன் மனைவி சுவாகாள் அவன் வருத்தத்தின் காரணத்தை வினவ, அவன் தன் மனநிலையை அவளிடம் கூறினான். அவள் இனிமையாகத் 'தாங்கள் என்னுடைய ஆற்றலை இப்பொழுது அறிவீர்கள். சப்தரிஷி மனைவியர் உம்மைத் தழுவுவதற்கு ஏற்பாடு செய்கிறேன்.' என்று கூற, அக்கினி நல்லது என்றான். சுவாகாள் சப்தரிஷிகள் ஒவ்வொருவரின் மனைவியின் வடிவை எடுத்துக் கொண்டு அவனை அடைய அவனும் அவர்களைத் தழுவிக் காம மயக்கம் தீரப் பெற்றான். சுவாகாள் அருந்ததியைப் போன்று வடிவு எடுக்க முடியாமல் மனம் வருந்திக் கணவனிடம் வர, 'அவன் ஏன் இன்னொருந்தி வரவில்லை?' என்று வினவ, அவள் நடந்ததைக் கூற அக்கினி தன் துயரம் நீங்கினான். இச்செயலைச் சப்தரிஷிகளில் அறுவர்தம் அறிவுக் கண்ணால் அறிந்து, தம் மனைவியரை அருகு அழைத்து, அவர்கள் கற்பு அருந்ததியின் கற்புக்கு நிகர் ஆகவில்லை என்று கூறி, அவளை ஒத்த ஆற்றலைப் பெறச் சரவணப்பொய்கைக் கரையில் தவம் செய்யுமாறு பணிப்ப, அவர்கள் அங்குச் சென்று உண்மையை நினைத்துத் தவம் செய்தனர்.

ஒன்று கூடிய தேவர்களும் இந்திரனும் வந்து அக்கினி பகவானை அருகில் அழைத்து, 'சூரன் செய்யும் துன்பத்தைச் சோமன் தரித்தவரிடம் கூறி மீள்க' என்றார். அக்கினி அன்போடு செல்லும் முன் சிவபெருமான் காம மயக்கத்தால் பார்வதியோடு கூடியிருந்த நேரத்தில் மெதுவாக நடந்து சென்று அவர்கள் இருந்த இடத்தின் பொற்கதவினை நெருங்க அக்கினியின் உடல் பிரகாசம் விளங்கியதால் சங்கரர் திடுக்கிட்டு வெட்கப்பட்டு எழவே, அவர் விந்து வெளிப்பட, அதனை அக்கினியைத் தன் கையில் ஏந்துமாறு சிவபெருமான் பணித்தார். பின் அதனைச் சிறப்புறுமாறு சரவணப்பொய்கைக்குள் போட்டு விடுமாறு கூறினார். அவ்வாறே அக்கினியும் செய்தான். அந்த விந்து ஆறு குழந்தைகளாகச் சரவணப் பொய்கை நீரில் பிறந்து, உலகியலுக்கு மீறி விளையாடும் நேரத்தில், சிவபெருமானும் உமையும் அங்குவர, உமை அக்குழந்தைகளைப் பற்றி வினவ, அவை உமையின் குழந்தைகள் என்று கூற, உமை விருப்புடன் ஆறுதலைகளையும் சேர்த்து ஆவலுடன் மடி மீது இருத்தி, பன்னிரு கால்களையும் இரு கால்களாகச் சேர்த்து எடுத்துக் கையில் வேலைக் கொடுக்க, ஆறு தலையையும் பன்னிரு கரங்களையும் கொண்டுள்ள குழந்தை தேவர்களுக்கு ஆறுதலைச் செய்யும் ஆறுமுகன் என்று சிவபெருமான் பெயரிட, உமை குழந்தைக்குப் பாலூட்டி அதனைக் கொண்டு போன சமயத்தில் சப்தரிஷி மனைவியர் உமையைப் பணிந்து தங்களுக்கு உபதேசம் வேண்ட, குழந்தை முருகன் அவர்களைக் கார்த்திகை நட்சத்திரப் பதவி பெறுமாறு கூறி அவர்களைத் தியானிப்பவர் கேட்ட வரங்களைத் தருவதாகக் கூற, பின் 'சுவாகாளின் பெயரைச் சொல்லிய அளவில் தீவினைகள் தீரும்' என்று குறிப்பிட்டான். சிவபெருமான் ஆறுமுகனை உமையிடம் கொடுக்க அவளால் வளர்க்கப்பட்டுக் குமரேசன் ஆனான்.

### முருகப் பெருமான் பெருமையை அடியவன் கூறல் 44-69

திருமகள் மடுக்கரையில் விளையாடும் குன்றக்குடி குமரேசா அசுரர் குலம் வேரறுத்துச் சூரன் உடல் பிளந்தோய்! தேவர் நாட்டுக்கு வெற்றி தரும் கொற்றவ! தெய்வானை வள்ளி என்ற இரு கொம்புக்கு ஏற்றவனே! அடியவர் உள்ளத்தில் விளையாடுபவனே! கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேலவனே சமணரைக் கழுவேற்றியவனே சேவலைக் கையில் பிடித்து மயிலை ஏறுபவனே அமரர் மிடி தீர்த்துச் சுவர்க்கத்தில் குடியேற்றியவனே! அம்மையப்பர் மகனே! திருமால் மருகா! கங்கை மகனே! மன்மதன் மைத்துனனே! மெய்ப்பொருளே! மும்மூர்த்திக்கும் தலைவனே! நால்வேத அரியணையில் அமர்ந்தோய்! அஞ்சுமுகன் பெற்ற ஆறுமுகனே! மலைமங்கை மகனே! இராவணன்

தலைகளைத் தறித்த திருமால் மருகனே! தனியருக்கும், பசியருக்கும் உணவு தந்து ஆதரிப்பவனே! கார்த்திகை, சட்டி, சோமவாரம் சுக்கிரவார விரதங்கள் உடையவரை ஆதரிப்பவனே! தொந்தி வயிற்றோன் தம்பியே! திருச்செந்தூர் திருப்பரங்குன்றம் அமர்ந்தோய்! மாங்கனிக்கு உலகை வலம் வந்தவனே! திருமகள், மண்மகள் சீதை இவர்களின் மருமகனே! என்று முருகப் பெருமானைப் போற்றியவாறு அவன் சிகண்டிமலையை அடைந்தேன்.

### முருகப் பெருமானைச் சந்தித்து வேண்டுதல் 70-88

தன்புகழ் பாடும் புலவனை அழைத்து வருமாறு முருகப் பெருமான் இடும்பனைப் பணிக்க, இடும்பன் அழைக்க, முருகப் பெருமான் திருமுன் சென்று, அவன் வடிவம், பன்னிருகரம், உதய சந்திரன் போன்ற ஆறுமுகம், சேவல், மயில், வேல் முதலியவற்றை வள்ளி தெய்வானையுடன் வீற்றிருக்கும் நிலையில் கண்டு உடல் பூரித்து, கந்தா! கடம்பா! கதிர்வேலா! காங்கேயா! மயூரகிரிவாசா! கருணைக்கடலே! அருணகிரிநாதருக்கு அருள்வாய்! வள்ளிக்கு நிழல்தர வேங்கை மரம் ஆயினவனே! தேவர்கள் சிறை மீட்க வந்தவனே! தந்தைக்குப் பிரணவம் உபதேசித்தவனே - என்னைக் காப்பாற்ற வேண்டும் என வேண்டினேன். அவர் வினவ அருணை வீரபண்டாரத்தின் மகன் சுப்பிரமணியன் என்று கூறினேன், உன் ஊரிலிருந்து இவ்வூர் பத்துக் காத தூரமாயிற்றே? வந்த காரியம் யாது? என்று வினவினார்.

### புலவன் தன் வறுமைநிலை பற்றி உரைத்தவை 89-109

வறுமையாகிய புலியைக் கண்டு பசுப்போல என் உடலும் உயிரும் நடுங்குகின்றன. கருடனைக் கண்ட பாம்பு போல என் உயிர் வருந்துகிறது. பாம்பைக் கிழிக்கும் மயில் பச்சோந்தியைப் பார்த்து நடுங்குவது போல என் உடல் துன்புறுகின்றது. மனைவி முன் பேசவும் கூசுகின்றது. நல்லவர் சபைக்குச் செல்லக் கால்கள் மறுக்கின்றன. கீழ்மக்களாகிய கயவர்களைப் பொய்யாகக் காமன், சோமன், காண்டிபன், வீமன், விதுரன், திருமால், கர்ணன், குபேரன், மேரு, கொண்டல் எனப் பலவாறு போற்றி அவர்கள் மேல் சிறு கூலிக்குப் பல பிரபந்தங்கள் பாடிக் கை ஓய்ந்து, பாடியதால் தொண்டைக் கட்டிப் போய், வருந்துவது தவிர வேறு பயனில்லை. அவர்கள் வேசைக்கும், தீக்கும், திருடருக்கும், தம்மை வருத்தும் முரடருக்கும் பணத்தை வாரி வழங்குவர். அவர்களை அணுகுவதால் எனக்கு ஒரு பயனும் இல்லை. ஐயா! நீ என்னை ஆதரித்து நான் வருந்தாமல் காப்பாற்ற வேண்டும் - என்று புலவன் வேண்டினான்.

## முருகப்பெருமான் புலவனிடம் கூறியன 110-172.

### என் தந்தையார் பெருமையைக் கேள் - 110-123

உன் துயரமெல்லாம் என்னிடம் ஓதினாய். என் துன்பங்களை உன்னிடம் கூறுகிறேன். முதலில் என் தந்தையாரைப் பற்றிப் பேசுகிறேன். எந்தையார் தம் தலையில் ஒரு பெண்ணை வைத்து, அவளைப் பயித்தியமாக்கும் ஊமத்தம் பூவையும் சடையில் கொண்டுள்ளார். சுடுகாட்டு எலும்பை அணிந்து பாம்பை மாலையாக் கொண்டார். உறுதியான மனமுடைய தொண்டர்களைத் துன்புறுத்தினார். கடல் நஞ்சு, பிள்ளைக் கறி, வேடன் எச்சில், பிச்சை எடுத்த உணவு இவற்றை உண்டார். பிட்டுக்கு மண் சுமந்து, விறகும் வளையலும் விற்று, வில் அடி, கல் அடி, மாறன் பிரம்பு அடி, இடையன் அரிவாள் வெட்டு, வேடன் செருப்புக்கால் உதை இவற்றைப் பெற்றார். சூலாயுதம் படைத்தார். மாடு எடுக்கப் பெற்றார். தில்லையில் ஆடு எடுத்தார். குற்றாலத்தில் அகத்தியன் கையில் குறுகினார். பிரமன் தலை ஒன்றை வெட்டினார். மன்மதன் உடலை எரித்தார். சந்திரனை வண்டிக்காலில் தேய்த்தார். காலனை வதைத்தார். முப்புரத்தைச் சிரித்து அழித்தார். என் தந்தை பெருமை இப்படி உள்ளது.

### என் தாயார் பெருமையைக் கேள் 124 - 129

அம்பலத்தில் ஆடினார். அம்புவிக்குத் தாயானார், கம்பநதிக் கரையில் தவம் செய்தாள், மூன்று முலை கொண்டாள். புலித்தோல் போர்த்தாள், மலை அரசன் மகளானாள். வலைஞர் குடியைச் சேர்ந்தாள். தானே சக்தி என்றாள். மலையில் வீற்றிருக்கும் தேவி உருவம் மாறிக் குறத்திக்கு ஒப்பானாள். இரு நாழி நெல்லால் எல்லாருக்கும் படி அளந்தாள். என் தந்தை பட்டபாடு அனைத்தும் என் தாயாருக்கும் உண்டு.

### என் தமயன் செய்தியைச் சொல்கிறேன் கேள் 130 - 133

என் அண்ணன் யானை முகத்தன், பெருச்சாளி வாகனன், வாதக் காலானான், வயிறு பெரிதானான், தன் அன்னையைப் போல் தனக்குப் பெண் தேடப் பாதை, குளம், வீதி முதலிய இடங்களில் இருந்து பின் மரத்தடியில் அமர்ந்து விட்டான்.

### என் மாமன் செய்தியைக் கேள் 134 - 154

கொப்பூழில் இருந்து பிரமனைப் பெற்றார். துளசியை அணிந்தார். பாம்பை (காளியனை) மிதித்தார். பாற்கடலில் மெள்ளக் குதித்து ஓர் ஆலிலை

மேல் துயின்றார். கோயிலினும் பள்ளி கொண்டார். மனைவியை நெஞ்சில் வைத்தார். மோகினி வடிவெடுத்துச் சிவபெருமானைக் கூடி ஐயனாரைப் பயந்தார். இரணியனைக் கொன்று அவன் குடலை மாலையாக அணிந்து, அவன் குருதியைக் குடித்தார். ஆய்ச்சி முலைப்பால் உண்டார். ஆவல் அடங்காமல் பேய்ச்சி முலைப்பாலையும் பிடித்து உண்டார். ஆயர்கள் இந்திரனுக்கு இட்ட பொங்கலெல்லாம் தாமே உண்டார். பாலும் தயிரும் கொள்ளையிட்டு உண்டார். மண்ணும் உண்டார். மகளிர் ஆடையைத் திருடினார். குருந்த மரத்தில் ஏறிக்கொண்டார். குதிரை கிட்டாமையால் பருந்தேறிக் கொண்டார். காய்ச்சிய பாலைத் திருடி ஆய்ச்சி கையால் கட்டுண்டார். அடியும் உண்டார். கூச்சமில்லாமல் பதினாறாயிரம் மகளிரைக் கூடி மகிழ்வுற்றார். மாமனைக் கொன்று விட்டார். அண்ணனைப் பூமிப்பிரதட்சிணம் செய்யச் செய்து பாண்டவரைக் காத்துத் துரியோதனனாதியரை அழித்தார். அருச்சுனனுக்குத் தேரோட்டினார். சூரியனை மறைத்தார். கிழவி கூனை நிமிர்த்தார். மாரீசன் மானைக் கொன்றார். சிறையிருந்த சீதையை அழைத்துக் கொண்டார். இவர் செயல் பிடிக்காமல் சிறு தாயார் இவரைக் காட்டிற்கு அனுப்பி விட்டார். வாலியை வஞ்சனையாகக் கொன்றார். காட்டில் பற்றுக் கோடற்ற சூர்ப்பனகையை உறுப்புக் குறைத்தார். தாடகையைக் கொன்றார். கல்லைப் பெண் ஆக்கினார். அவர் புரட்டுப் பண்ணிய செயல்கள் சொல்லுக்கு அடங்கா.

### என் செய்தியைச் சொல்கிறேன் கேள் 155 - 172

கந்தன் என்ற பேர் பெற்றேன். கோழி பிடித்தேன், குறத்தியை மணந்தேன். பேழை வயிற்றனுக்குப் பின் ஆனேன். வேடிச்சிக்காக வேங்கை மரமானேன். தந்தைக்கு உபதேசம் செய்தேன். மக்கள் என்னைக் அப்பனுக்குக் குரு என்றார்கள். என் தந்தையார் என்னை அதிகப் பிரசங்கி என்று மீனாகச் சபித்து விட்டார். பூமியில் பிறப்பெடுத்தேன். எல்லோரும் பல்லக்கில் ஏற யான் மயில் மீது ஏறினேன். வெண்ணீறு அணிந்தேன், கடப்பமாலை அணிந்தேன். கண்ணீராறு (கண் + ஈராறு) ஆனேன். மாம்பழத்துக்காக நான் கயிலையிலிருந்து உலகைச் சுற்றி வரும் முன் என் அண்ணன் தந்தையாரைப் பணிந்து மாங்கனியைப் பெற்றான். நான் கோபத்தால் பெற்றோரை விடுத்து ஆவினன் குடிக்குப் போனேன். என் தாய் என்னைச் சமாதானம் பண்ண வந்து பழம் நீ என்றார். அதனால் பழநி என்ற பெயர் பெற்றேன். அலைவாயில் (திருச்செந்தூர்) வாழ்க்கை பெற்றேன். என் நிலைமைச் சொல்லத் தொலையாது. என் கையில் வேலைத் தவிர வேறொன்றுமில்லை. இருந்தால் சொல்லு. தருகிறேன். நாங்கள் பட்டபாடெல்லாம் உன்னிடம் சொல்லிவிட்டேன்.

எங்கள் பிழைப்பு இவ்வாறு இருக்க நீ என்னிடத்தில் உன் துயரம் போக்குமாறு எப்படிச் சொல்வாய் என்று குறிப்பிட்டார்.

**புலவன் முருகப்பெருமானிடம் வேண்டியது 173 - 179**

உரலுக்கு ஒரு பக்கம் இடி மத்தளத்துக்கு இரு பக்கம் இடி என்று முருகப் பெருமான் கூறியன கேட்டு அதிசயித்து, 'தாமரைக் குளம் சென்று வண்டு தேனை உண்ணாது போகுமா?' தன்னை அபயம் என்று அடைந்தவனைக் காக்க அருச்சுனன் கண்ணனோடு கூடப் போராடிக் காக்கவில்லையா? காலனை உதைத்துச் சிவன் மார்க்கண்டேயனைக் காக்கவில்லையா? என்னை வருத்தும் வறுமையை எல்லாம் நீக்கி எனக்குச் செல்வம் தர வேண்டும். எனக்கு அன்னையும் தெய்வமும் ஆகிய உன்னைத் தவிர வேறு கதியில்லை என்று புலவன் கூற, முருகப் பெருமான் மகிழ்ந்து

**கவிஞனிடம் கூறித் திருமுகம் தந்த வரலாறு 180 -221**

உன் நிலைமை அதுவானால் நான் உனக்கு உதவுவதில் பின்னிட மாட்டேன். வந்த விருந்தினைப் புறக்கணித்தல் கூடாது. உன்னை நான் சும்மா அனுப்ப மாட்டேன் நான் சொல்வதனைக் கேள்.

'என் அடியவர்களாகிய வைசியர் காவிரிப்பூம்பட்டினத்தில் செல்வத்தால் குபேரனைப் போல் முன்னாளில் வீற்றிருந்தனர். அப்போது பாண்டிய மன்னன் தன் நாட்டிற்கும் வைசியர் குடி வேண்டும் என்று புகார் நகர் வந்து வணிகர் குலத் தலைவரைச் சந்தித்துப் பாண்டிய நாட்டில் வைசியரை ஒரு குறைவும் வாராமல் பாதுகாப்பதாக உறுதியளித்து அன்போடு தேரில் ஏற்றி வந்து இளைசை, மாதை முதலிய பகுதிகளில் குடியேற்றினான் அந்த வைசியர் யாவரும் மகிழ்வோடு ஐந்தெழுத்து ஓதுபவர்கள். என்னை என்றும் மறவாதவர்கள். திருமாலையும் வழிபடுபவர்கள். தெய்வமெல்லாம் ஒன்று என்று எல்லாத் தெய்வங்களுக்கும் தொண்டு செய்பவர்கள்.வேண்டி வந்தவர்களுக்கு மிக்க செல்வம் வழங்குபவர்கள். பாண்டிய மன்னன் திருவடிகளை வணங்குபவர்கள். திருப்புனவாயில் ஆசிரியர் அழகரை அடிபணிபவர். பெற்றோர், தெய்வம், குரு இவர்களை வழிபடுவதில் தவறாதவர்கள். அரசனை அதற்கு அப்புறமே வழிபடுவார்கள் - மேருமலையை உரைத்துப் பார்ப்பார்கள். யானையை நிறுத்துப் பார்ப்பார்கள். காவிரியாற்றைப் பஞ்சு மூட்டையால் அடைத்தவர்கள். கடலில் எறிந்த பொன்னைத் தம் இருப்பிடத்தில் மீண்டு வரச் செய்தவர்கள். ஏலேல சிங்கர் நெடுங்கிணற்றிலிருந்து தங்கச் சங்கிலியிட்டு நீர் இறைத்தவர்கள். கல்யாண வீட்டில் பந்தற்காலுக்காகப் பவளக்காலை நாட்டியவர். இரவில் கதவின்

வெள்ளிக் கவசம் திருடப்பட, அடுத்தகணமே கதவுக்குப் பொற்கவசம் அணிவித்தவர். சீரகப்பூ மாலை உடையவர். சிங்கக்கொடி உடையவர். கவிகளுக்குக் கார்மேகம் போலப் பொருள் வழங்குவர். இளைசைக் கயிலாயநாதர் நித்திய கல்யாணி, ஆட்கொண்ட நாதர். சிவபுரத்தேவி, வேட்டை வடிவுடையாள், திருவேளூர்ப் பிள்ளையார், நியமம் செயங்கொண்ட சோழீசர் சௌந்தர நாயகி, பூவுடைய ஊர் நாயகி, கண்டீசர் காமாட்சி, இப்பை தான் தோன்றி ஈசர் சங்கரி, மாதைப்பதி ஐந்நூற்றீசர், காதல் பெரிய அம்மை, பூமிநாதர் சிவகாமி ஆகிய இறைவன் இறைவியரைப் பணியும் இயல்பினர். சிகண்டி மலையில் அன்னதான மடம் கட்டி வைத்தவர்கள். ஆவினன் குடியில் அன்னதானம் வழங்குவோர். பெருஞ்செல்வத்தை வறியவர்களைத் தேடி அளிப்பவர்கள், சிவபூசை, சிவனடியார் பூசை, விஷ்ணு பூசை, முருகன் பூசை, மும்மூர்த்தி பிரதிட்டை இவை தவறாதவர்கள். ஊருணி, கிணறு அமைத்து நீர் வழங்குபவர்கள். அத்தகைய வைசியராம் நகரத்தார் யாவரும் நம் அடியார்கள். அவர்களுக்கு உனக்கு உதவுமாறு திருமுகம் தருகிறேன். நீ இத்திருமுகத்தை அவ்வணிகேசர் கைகளில் கொடு. அவர்கள் குன்றக்குடி முருகப் பெருமான் திருமுகம் என்று கூறியவுடன் களிகூர்ந்து கொண்டாடி, உன் வறுமைதீரச் செல்வம் கொடுத்து ஆதரிப்பார்கள். இப்பொழுதே செல்க, என்று முருகப் பெருமான் புலவரிடம் திருமுகம் தந்து அனுப்பினான்.

**திருமுகம் பெற்ற புலவன் நிலை 222 - 237.**

கொற்ற மங்கலம் சென்று உலகாயி கோயிலுக்கு வடக்கே மாமரத்தின் மேற்கே வணிகர்கள் பந்தல் ஒன்றில் கூடியிருந்த நிலையில் திருமுகத்தை அவர்கள் தலைவனிடம் கொடுத்துக் குன்றக்குடி குமரனைத் தசிரித்தது முதலியவற்றைக் கூற, வணிகர்கள் திருமுகத்தைத் தலைமேல் ஏற்று வணங்கி, அதனை வாசித்து எனக்கு அபயம் அளித்து, வேண்டிய பணம், ஆடைகள், தங்க நகைகள், நெல் மூட்டைகள், கல்யாணங்கள் ஒவ்வொன்றிலும் எனக்கு ஒரு பணம் காணிக்கை என்று எழுதிய சீட்டு யாவும் தந்து என்னை அருணை நகருக்கு அனுப்பி வைத்தனர். ஆதலினால் துங்க மனையான் வாழி! தூய தமிழோர் வாழி! உலகை யாளும் இறைவன் முருகப் பெருமான் வாழி! தென் இளசை நகர் எழு நகரார் வாழி! என்று திருமுக விலாசம் *237* கண்ணிகளை உடைய கலிவெண்பாவால் நிறைவுறுகிறது.

**திருமுக விலாசம் முற்றிற்று.**

# செய்யுள் முதல் குறிப்பு அகர வரிசை

(எண் - பாடல் எண்ணைக் குறிக்கும்)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| Indian Epistemology | 125.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| தமிழர் சமூகவியல் | 35.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| தமிழ் கற்பித்தலில் உன்னதம் | 20.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| எழுத்திலக்கணக் கோட்பாடு | 70.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |

**Pub.No. 407** **சதகத் திரட்டு** தொகுதி-1 **80.00**